## இந்நூலைப் பற்றிய குறிப்புரை...

புதுமைப் புலவர் புதினப் புலவரானார். 'பூத்துத் தோன்றும் புதினக் கலைகளைப் புலவர்கள் கூர்ந்து கண்டு நூல்களைப் படைக்க வேண்டும்' என்று அறிவுறுத்தும் அடிகளார் தாமே முன்னோடியாகி இப்புதினக்கலையில் புகுந்தார்.

தமிழ்மண்ணில் கதை வடிப்புகள் இருந்தாலும் இஃதொரு தனிக்கலையாகப் பிறப்பெடுத்தது மேலை நாட்டில்தான். 'நாவல்' என்னும் இத்தாலியச் சொல்லிற்குப் 'புதுமை' என்று பொருள். 17-ஆம் நூற்றாண்டின் இத்தாலி நாட்டு அறிஞர் தானியேல் தீபோ என்பார் இப்புதுமையை முதலில் படைத்தார். இவரை இக்கலையின் தந்தை என்பர். இக்கலையையே நாம் புதினம் என்று தமிழில் இப்போது வழங்குகின்றோம்.

அடிகளார் இப்படைப்பை வடிக்கவேண்டுமென்று முனைந்து இரண்டு நூல்களைப் படைத்துள்ளார். ஒன்று 'குமுதவல்லி அல்லது நாகநாட்டரசி' என்ற ஆங்கிலப் புதினத்தின் தழுவல். இரெயினால்டுஎழுதிய ஆங்கில நாவல் இது. இது தம் கோட்பாடு கொள்கைகளைக் காட்டி எழுத வாய்ப்பாக இருந்ததை உணர்ந்து வடித்தார். தமிழர்மதம் நீண்டகாலத் துயில் நீக்க இக்கலையின் எழுதுவதாகக் குறித்துள்ளார்.

''நல்லோர் துன்புற்று இன்புறுவர்; துன்பம் இழைப் போர் துன்புறுவர்; உயிர்ப்பலி அதிலும் மாந்தப்பலி கூடாது; காதலர் கூடுவர்; காதல் பூண்டோர் கடவுள் நிலையையும் பெறுவர்; நல்லாட்சி கண்டோர் வேற்றுக் கட்சியை விரும்பார்' என்னும் கருத்துகளின் பொதிவு இப்புதினம். இடையிடையே தம் கோட்பாடுகளாகிய சிவம், சித்தாந்தம், தமிழர் பண்பாடு, தனித்தமிழ் வளர்த்தல் முதலியவற்றையும் விவரமாக வைத்துள்ளார். இதனைத் தமிழ் மரபில் கொண்டுசெல்வதை நூலின் பெயரே அறிவிக்கிறது. இதனை ஓர் 'அறநெறிப் புதினம்' எனலாம்.

**- கோவை இளஞ்சேரனார்**
தமிழ் மாமலை

# PREFACE

The art of fiction has, in modern times. become a potent means in the hands of educated men to awaken the finer instincts of man, so that this awakening of one's own better part might itself serve to correct his mistakes and render him a useful and helping member of society. Within his mind exist in latency capabilities of various kinds and degrees of which one class is evoked by one particular set of outward facts and another by another set of facts. With such peculiar occurances of outer world corresponds the manifestation of evil or good character of man. Generally speaking, the eveil part of human mind finds itself readily and easily called forth into activity by most of the surrounding objects while its better part, for want of fitting means, rarely gains access into the world outside. Now the most desirable function of a learned man should, as far as his innate abilities permit, have been to touch upon the inmost spring of man's delicate nature and open the doorway to the region of love and virtue. But to go deep down the softest and most fertile part of human nature is not within the power of those unwary scholars who adopt improper means without discrimination. It is only those who are cautious and shrewd, those who spend apparently a greater part of their time in the selection of efficient means, in the making of it more attractive than it usually seems to be, that accomplish this very significant and well-meaning task. Take any branch of knowledge: philosophy or science, religion or literature, in their hands it becomes a very effective weapon.

Now, of all these instruments of knowledge, the fiction as an interesting branch of art appeals to all classes of people without efort

and aggressiveness, and hence its place is daily becoming more and more prominent amidst them all. In almost all civilised countries but of India, especially southern India, the art of fiction has made a rapid and nearly a perfect development. But here it is still in its infancy. The host of novel writers are primarily led by mercinary and other motives. No genius has as yet arisen and no novel breathes the atmosphere of true art. In most of the Tamil novels that I have come across. I find neither plot nor character delineation, neither a true representation of life nor a chaste and felicitious diction of language. The story chiefly turns only upon love passion--the love in its most degraded type and gross earthly form. Although the Tamil language is pliant and rich in vocabulary capable of conveying the finest shades of meanings, yet in all the Tamil Novels published in a decade or two the diction is rendered very unwholesome by the introduction of unassimilated foreign words from Sanskrit and other languages and by the unhappy combination of words and phrases. In the matter of happy diction and choicest expression of thought a real and fastidious scholarship is the only necesary requirement; but of this not a single Tamil novel of recent times bears a notable mark. Even the Tamil renderings of some English Novels have been done by inelegant hands in so tasteless a manner that the beauty of the original appears in the new drees transformed into ugliness. Except a few who look upon themselves as civilised and up-to date, the main portion of the Tamils brought up in a simple and pure life do not like these novels at all. They like to read novels written in a pure and simple. Tamil style depicting the nature and human life as found in their experience but agreeably ennobled by the moral eelevation of the novelist's ideal thought. Having keenly felt their want I ventured to produce this adapted Tamil translation of an eminent English novel in the hope that the pure and simple Tamil into which the ideas of the original are cast would please the Tamils very much leading them further and further into an appreciation of the art and study of fiction coupled with their own progress of life.

To the Tamilians of yore and their descendants the art of fiction was not an unknown thing before the introduction of modern novel. How carefully this art was studied by them would become manifest from a glance at the critical commentary of Nakkirar on Iraiyanar Agapporul written about the first century of the Christian era. And another poetic work of considerable literary merit like that of Chaucer, I mean Udayanankadai, was already in existence some six centuries before Christ, in which many a tale of Tamil antiquity appears in a collected form each of which, of course, incorporated into the main story with so profound a sense of unity that every one of them looks like to many inseparable limbs in a whole body. Besides this interweaving of one story into the other, the entire poem drawing faithful portraits from real life and tracing the distinctive features of individual character, combine them all to one complex whole so as to impress the mind of the reader with a sense of the strong unifying power of the poet. But it was a poetic age. Even story-telling went on in verse. From the domain of poetry fiction was slowly emerging to breathe the freer atmosphere of prose, when the pernicious influence of Sanscrit broke in upon the mind of the Tamil scholars and vitiated their taste for simplicity of life. A whole series of Puranic legends and obscene myths found their way into Tamil. And the Tamil people of mediaeval period having come under the influence of priests began to pay unlimited respect to mythical accounts of Gods and lost all their study of real life and with it the art of fiction also. But fortunately for us the study of English has once more opened our eyes to the real grandeur pertaining to the art of fiction; and once again has the unwholesome contact of Sanscrit begun stealthily to sap up the vitality of the Tamil language.I need, therefore, hardly say that it is obligatory on every son of the Tamil country to wake up from his long indifference and do his utmost to render his services in the cause of his own mother tongue Tamil which is, in fact, one of the few highly cultivated ancient languages of the world. I have great pleasure in saying that

the following Tamil adaptation of a famous English novel was done by me to my greatest satisfaction and it is for the readers to judge how for I have succeeded in preserving the profound artistic skill of the English author in chaste, easy and elegant diction of Tamil.

**THE SACRED ORDER OF LOVE,**

**PALLAVARAM,** VEDACHALAM

**1st of May 1911**

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

*இவ்விரண்டாம் பதிப்பின்கட் செய்திருக்கும் சீர்திருத்தங்கள் சில: முதற்பதிப்பின் இடையிடையே கலந்திருந்த வடசொற்கள் அத்தனையுங் களைந்தெடுக்கப்பட்டு இது தனித் தமிழாக்கப் பட்டிருப்பதும், இடையிடையே சில சொற்களுஞ் சொற்றொடர்களும் முன்னையிலும் இப்போது சுவை மிகுந்தனவாக மாற்றப்பட்டிருப்பதும் பிறவும் அங்ஙனஞ் செய்யப்பட்ட சீர்திருத்தங்கள் ஆகும். இப்பதிப்பையும் முதற் பதிப்பையும் ஒத்துநோக்கிப் படிப்பவர்க்கு வடசொற்களுக்கு நேரான தமிழ்ச்சொற்கள் இவையென்னும் அறிவுஞ் செந்தமிழ் உரைநடையை மேன்மேல் அழகுஞ் சுவையும் முதிர எழுதும் வகையும் நன்கு விளங்கா நிற்கும்.*

- ***மறைமலையடிகள்***

*1942*

# பொருளடக்கம்

## அதிகாரம் - 1

# வழி நடந்து போகும் இளைஞன்

உலகத்தில் மிகச்சிறந்த மலை நாட்டைப் பற்றி வருணித்துச் சொல்லப் போகின்றோம். தெற்கேயுள்ள **குமரிமுனை**யிலிருந்து மேற்குக் கடற்கரைப் பக்கமாய் வடக்கு நோக்கிச் செல்லுகின்ற **மேற்கணவாய்** மலைத் தொடர் என்பது ஒன்றுண்டு. இம்மலைத் தொடரில் **நீலகிரி** மலைக்கு அருகாமையில் உள்ள **மலைநாடு** இயற்கையமைப்பிற் காணப்படும் வளங்கள் நிரம்பி மிகப் பொலிந்து விளங்குகின்றது. வளைந்து வளைந்து ஓடுங் கான் யாறுகளாலும் தெளிந்த அருவியோட்டங்களாலும் நீர் ஊட்டப்படும் பூக்கள் நிறைந்த வெளிநிலங்களும், இனிப்பான பழங்கள் நிறைந்த தோப்புகளால் மூடப்பட்ட மேட்டு நிலங்களும், காட்சிக்கு இனிய பசும்புல் செழிப்பாய் வளர்ந் திருக்கும் பள்ளத்தாக்கான நிலங்களும். வழிநடைப்பயணம் போகின்றவர் களுக்குப் பெரு மகிழ்ச்சி தருகின்ற மலைகளின் இடையிலுள்ள வழிகளும் வானில் மீன்கள் விளங்குதல் போலப் பல்லாயிரம் பூக்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் மென்புல் வளர்ந்து உயர்ந்த பொற்றைகளும். **பஞ்சு, சணல், நார்ப்பட்டு** முதலியன மண்டி வளர்ந்து காற்றால் அலையுங் கொல்லைகளும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. இன்னும் அங்குள்ள தோப்புகளின் உள்ளே நுழைந்து காண்பேமாயின் **மாதுளம்பழம், பலாப்பழம், மாம்பழம், நாரத்தம்பழம்** முதலியவற்றைச் சுமைசுமையாய்த் தாங்கி நிற்கின்ற மரங்கள் அடர்ந்து இருப்பது காணலாம். அங்குள்ள மலைகளினிடையிற் சந்து வெளிகளிலே உள்ளுருவிப் போய்க் காண்பேமாயின் இரண்டு பக்கங்களிலுங் குலை குலையாய்ப் பழங்கள் தொங்குகின்ற தீவிய திராட்சைக் கொடிகள் பின்னல் பின்னலாய்ப் பிணைந்திருத்தல் காணலாம். அகன்ற இலைகளை விலக்கிக் கொண்டு புறந்தோன்றிக் கிடக்குங் **கொம்மட்டிப்** பழங்கள் பழுத்த கொடிகள் தாமே எப்பக்கத்

தினும் பெருவிளைச்சலாயிருந்தலால் அவ்விடங்களில் இருக்கும் ஏழைக் குடித்தனகாரரும் அப்பழங்களை ஒரு பொருட் படுத்துவதில்லை. .இவையேயன்றிப் **பறங்கிப்பழம், பூசனிப் பழங்** கும்பு கும்பாய்ப் பழுத்துத் தொங்கும் கொல்லைகளைக் காண்பவர் இவை இயற்கையிலேயே இவ்வாறு கொழுமையாய் விளைந் திருக்கின்றன என்று அறியாமல் குடிகளால் நன்றாகத் திருத்திப் பயிரிடப்பட்டன வென்றே நினைப்பர். இக்கொல்லை களைச் சூழ்ந்து வேலி போலிருக்கும் புதர்களின் மேற் சிவக்கப் பழுத்த கொழுங்கனிகளுடைய கொவ்வைக் கொடிகளும், **குன்றிமணிக்** கொடிகளும் படர்ந்திருக்கின்றன. மரப் பொந்துகள் தோறும் மலைவெடிப்புகள் தோறுந் தேனீக்கள் பலமலர் களினின்றுந் திரட்டித் தொகுத்த தித்திப்பான தேன் அடைகள் நிரம்பி யிருக்கின்றன.

இனி இங்கேயுள்ள காடுகளின் பக்கத்தில் **காட்டுத் தாராக்கள்** தலையை அசைத்து அசைத்துச் செல்வது காணலாம்; அரவம் அடங்கியுள்ள அவ்விடத்தில் பறவைத் தொகுதிகள் பறக்கும் போது உண்டாகும் இறக்கையின் ஓசைதான் ஒவ்வொருசமயங் கேட்கப்படும். நீர் ஓடைகளில் **கரிய** அன்னப்பறவைகளும் **வெளிய** அன்னப்பறவைகளும் மொழு மொழுவென்று ஓடும் நீரில் சறுவலாய் மிதந்து செல்கின்றன; **வரகங்கொல்லைகளில்** மடப்பமான **புள்ளி மான்**களும் கலைமான்களும் மிகவும் விரைவாய்த் துள்ளித் துள்ளிக் களிப்பாய் ஓடுகின்றன; யாரும் வருத்துவார் இன்மையால் **முயல்கள்** கூட்டங் கூட்டமாய்ப் புல்நிலங்களில் அச்சமின்றி மேய்ந்து திரிகின்றன; சிலவேளைகளில் இரு மருங்கும் பழுத்த மரங்கள் வரிசையாய் அமைந்த காட்டு நெறியை மெதுவாய்க் கடந்து செல்கின்றன. சிலவேளைகளில் மிகவும் பருமனான கழுகு இங்குமங்கும் பறந்து போவது காணலாம்; ஆயினும் அவை அருகாமையில் உள்ள மலை உச்சிகளில் தாம் கூடுகட்டி வசிக்கின்றன. அம்மலைகளின் கரிய முழைஞ்சுகளிலிருந்து பல்லாயிரக்கணக்கான அருவிகள் உண்டாகிக் கீழ் அடிவாரத் திலுள்ள நிலத்திற் பாய்ந்து அதனை வளம்படுத்துகின்றன.

இங்ஙனம் அடிவாரத்திலுள்ள வளப்பமான நிலமும், அதனை அடுத்து உயர்ந்த மலைத்தொடரும் தம்மில் இருவேறு வகைப்பட்ட இயற்கையுடையனவாய் விளங்குதலை வேறெங் குங்

காண்பது அரிது. அத்தனித்த மலைத் தொடர் பாகங்களில் மலைகள் ஒன்றன் மேலொன்றாய் உயர்ந்தும், குன்றுகள் மேற் குன்றுகள் செறிந்தும், உயரத்தின் மேல் உயரமாய்க் கற்பாறை களும், அச்சம் வாய்ந்த செங்குத்தான கொடிகளும் இருண்ட வழி களும், அருவி விழுந்து குடைந்த பெரும் பள்ளங்களும், பனிப் பாறைகளும் நிறைந்தும் ஒருங்குபட்டுத் தோன்றும் மிக உன்னதத் தோற்றமானது மிக உயர்ச்சியுடையதாயும், கண்டார்க்கு உள்ள மேம்பாட்டை விளைவிக்கும் பெருந்தகைமை யுடையதாயும் இருக்கின்றது. ஆ! இங்ஙனம் நாம் வருணித்துக் கூறிய அடிவாரத் தினையும் வியக்கற்பாலதாம் அவ்வுன்னத மலைத் தொடரி னையும் மேற்குவிந்துள்ள வானம் மேகமின்றி நீலநிறஞ் சிறந்து தெளிவுடையதாய் விரிந்து எவ்வளவு பரிசுத்தமாய் விளங்கு கின்றது!

கொச்சிமுதலான தென்னாடுகளிலிருந்து மேற்பக்கமாய் வடதேசஞ் செல்லுவோர் தம் இடக்கைப்புறத்தில் விரிந்து கிடக்கும் இம் மலையநாடு இங்ஙனம் பேரழகுடையதாய்ச் சிறந்து விளங்குதல் கண்டு கொள்க. **நீலகிரி** மலைச்சாரலிலுள்ள இம்மலைநாடு சேர வமிசத்தார்க்கு உரிமையுடையதாயினும் அக்காலத்தில் அரசாண்ட **நரசிங்கவரும சோழன்** என்னும் வேந்தர்வேந்தன் சாளுக்கிய நாட்டு அரசர் முதலாயினாரைப் புறங்கண்டு பேராற்றலுடையனாய் விளங்கினமையால், மற்றைத் தமிழ்நாட்டு வேந்தரான சேர பாண்டியர் இவனோடு எதிர்க்க அஞ்சி அமைந்திருப்ப மலைநாட்டுக் கோடியிலுள்ள நீலகிரி மலைச்சாரல் அதனை யடுத்துள்ள சோழ நாட்டோடு ஒருங்கு சேர்ந்து சோழ வமிசத்தார்க்கு உரியது போல் தோன்றிற்று. **நரசிங்கவரும சோழனும்** அந்நாடு தனக்கு உரிமை யுடைய தன்றாதல் நன்குஉணர்ந்து அதனை முற்றுந் தன்வயப்படுத்த நினையாமல் தன்படையில் ஒரு பாகத்தை அங்கு நிலைப்பித்து அங்கு நடத்தப்படும் வாணிகம் செவ்வையாக நடைபெறும் பொருட்டு அதனைக் காப்பது போல் அவிநயித்துவந்தான். அந்நீலகிரி நாட்டில் உள்ளோரும் 'வேற்றரசன் ஒருவனுக்கு நாம் அடங்கி ஒழுகக் கடமைப்பட்டுள்ளோம்' என்பதை நினை யாமல், தாம் விரும்பியவாறு தம்முடைய சிற்றரசன் கீழ் இனிது காலங்கழித்து வந்தார்கள். இம் மலைய நாட்டிலுள்ள மக்கள் அழகாய் இருப்பர், ஆண்மக்கள் எல்லாரும் நீண்டுயர்ந்து ஒடிந்து விழுவது போன்ற அழகிய உடம்பும் பார்வைக்கு நல்ல

தோற்றமும் உடையராய் இருப்பர்; பெண்மக்கள் எல்லாரும் தம் உடம்பின் தெளிவான சாயலானும், உறுப்புக்களின் மிகத் திருந்திய அமைப்பானும், அவ்வுறுப்புக்களெல்லாம் ஒரே ஒழுங்காய்க் கனிந்த அழகுடைமையானும், உலகமெங்கும் பிரசித்தி பெற்றுச் சிறக்கின்றார்கள்.

கி.பி, 625-வது வருடம் இளவேனிற் காலத்திடையில் ஒருநாள் ஓர் இளைஞன் மிகவும் அழகான ஒரு குதிரை மேல் ஏறிக் கொண்டு நாம் முன்னே வருணித்துச் சொல்லிய மலைய நாட்டில் வந்து கொண்டிருந்தான். இவனுக்குப் பதினெட்டு வயது இருக்கலாம். இவன் பார்வைக்கு நல்ல தோற்றம் உடையனாயும் இருந்தான் இவன் விழிகளிற் காணப்படுகின்ற ஒருவகையான சுறுசுறுப்பு, இவன் உருவமெங்கும் கள்ளத் தன்மையுடையதோர் தோற்றத்தை விளை வித்துத் திடுக்கிடச் செய்தலால் இவனை அழகுடையவன் என்று சொல்லக்கூட வில்லை. மற்று, இவன் உறுப்புகள் மிகச் செவ்வையான அமைப்புடையனவாய் இருந்தன. சிலவேளைகளில் இவன் கண்ணின் தோற்றத்தை நோக்குகின்றவர்க்கு இவன் **வைரம், வஞ்சங், கொடுமை** முதலான தீய குணங்களு டையவன் போல் கடுமையாய்த் தோன்றும். ஆயினும், மலை நாட்டில் வாழ்கின்ற வர்க்கு இத்தகைய பார்வை பொதுவாக இருத்தலால், இது கொண்டே அவர் குணங்களை அளந்தறிதல் ஒரு சிறிதும் பொருந்தாது. இங்ஙனம் நாம் வருணிக்கின்ற இவ்விளைஞனுடைய உடம்பின் சாயல் பெண்களுக்கு இருப்பது போல் தெளிவாய்த் திகழ்ந்தது; ஆயினும் மகளிர்க்கு உள்ள மென்மையில்லை; அவன் கன்னங்களில் கடற்சிப்பியிற்போற் சிவந்த வண்ணத் தோய்ச்சல் இல்லையாயினும் இளம் பருவத்திற்கு உரிய சிவந்த நிறஞ் செழுமையாய் இருந்தது, மோவாயில் மயிர் இல்லை, மீசைமயிர் தலைமயிரை விட மிகக் கறுகறுத்து அரும்பியிருந்தது, தலை மயிர் பழுப்பு நிறமாய்ப் பட்டுப் போல் வழுவழுப்பாய் இருந்தது; இம்மயிரைப் பிடரிவரையில் நறுக்கித் தொங்க விட்டுத் தலையிற் பொற்சரிகை விளிம்புகோத்த சிறுபாகை சூடியிருந் தான், உடம்பினோடு ஒட்டி இறுகப் பிடித்திருக்கும் **காற் சட்டை, கைச்சட்டை** யிட்டிருப்பதனால் பூங்கொம்பு போல் ஒடிந்துவிழும் இயல்பினையுடைய அவன் உடம்பின் அங்கங்கள் திருத்தமான அழகுடன் பொருத்தமுற்றிருத்தல் நன்கு தோன்

றிற்று. அவன் இடுப்பில் இறுகப் பிணித்திருக்கும் **அரைக்கச்சில்** இலேசான **கொடுவாள்** ஒன்று தொங்கினது, மெல்லிய தோலினால் தைத்த **அடிச்சட்டை** முழங்கால் அளவும் மாட்டி யிருந்தான். அவன் ஏறிச் செல்லுங் குதிரையின் **சேணங் கலினம்** முதலியன எல்லாம் நடுத்தரமான சிறப்புடையன; சுருங்கச் சொல்லு மிடத்து, இவ்விளைஞன் பெரிய பிரபு வீட்டிலுள்ள ஏவலாளி களில் உயர்ந்த நிலையில் உள்ளவனாகத் தோன் றினான்.

இனி ஒருவகையான குறிப்புள்ள இவன் கண்கள் பெருத்து நீல நிறமுடையனவாயிருந்தன. அவற்றின் குறிப்பை நோக்காமல் அவை தெளிவாக இருத்தலை மாத்திரம் பார்ப்பவர்க்கு அவை மிகவும் அழகாகத் தோன்றும், நல்ல குணங்களுக்கு ஓர் உறை விடம் போலத் தோன்றி அகன்று உயர்ந்த நெற்றி பொன்னிறமாய் மழமழவென்று விளங்குதலால் அவன் கண்களில் உள்ள கொடுங்குறிப்பு அவ்வளவாகத் தெரித லில்லை. அவன் முகத்தின் கீழ்ப்பாகங்களெல்லாம் அவன் நல்லன் என்றறியும்படியாக அமைந்திருந்தன. மிகச் செழுமை யாக அவன் இதழ்கள் அவனிடத்துக் கள்ளங்கவடு இல்லாமை காட்டுவன போல் இருந்தன. அவ்விதழ்கள் விரியுந்தோறும் இடையே மயக்குந் தன்மையுடைய நகையொளி தோன்றுதல் போல மற்றை ஆண் மக்களிடத்தில் பார்த்தலரிது. அங்ஙனம் நகைதோன்றும் போதெல்லாம், நெய்ப்பான பவளத் துண்டின்மேல் ஞாயிற்றின் கதிர் விரிதல் போலவும், இங்குலிகச் செப்பின் வடிம்பில் விழுமிய முத்துக்கள் பதித்ததுபோலவும் இரண்டு வரிசையாகப் பற்கள் தோன்றும்.

இனி இவ்வாறு வருணித்துச் சொல்லப்பட்ட இளைஞன் குடகிலிருந்தாயினும், இன்னும் அதற்குந் தொலைவிலுள்ள நாகநாட்டிலிருந்தாயினும் வந்தவன்போல்மேல் கடற்கரையைச் சார்ந்த மேற்கணவாய் மலையநாட்டில் வந்து கொண்டிருந்தான். இவன் நீலகிரி நகரத்திற்கு நேரே போகும் வழியிற் செல்லாமல் இடையே மேற்கண்வாய் மலைச்சாரலிற் கொண்டுபோய்விடுங் குறுகலான ஒரு சந்து வழியில் இப்போது திரும்பிச் சென்றான். இவன் சில நாட்களாக வழிநடந்து வந்திருக்கவேண்டும்; ஏனெனில், சிறிது தூரமாத்திரம் பயணம் பண்ணியிருந்தால் தன்குதிரையைப் பற்றி இப்போது கவலை கொண்டு பார்ப்பது

போல் பார்க்கவேண்டுவ தில்லையாம்; இப்போது அதனைச் சிறிது நேரத்திற்கு ஒரு தரம் நிறுத்திக் கீழ் இறங்கி நிலத்திற் கொழுமையாய் வளர்ந்திருக்கும் இனியபுல் மேயவிட்டுத் தான் தீவிதிராட்சக் கொடி படர்ந்த மரநிழலில் இருந்து சாய்ந்து கொண்டு தலைக்குமேலே குடும்புகுடும்பாய்த் தொங்கும்பழக் குலையில் ஒன்றுபறித்துத் தின்னுவான்; திரும்பவுஞ் சிறிது நேரங்கழித்துப் பயணம் பண்ணுவான்; இவ்வாறு சில நாழிகையாக அவன் வந்து கொண்டிருந்தான்.

இனி இவன்போகுஞ் சந்துவழி மிக நீண்டதா யிருந்தாலும் மெத்தென்ற புற்கற்றை நெடுக விருத்தலாற் குதிரைக்கு வழியிற் சிறிதும் வருந்தமில்லை. அதுவேயுமின்றி அவ்வழியி லிடை யிடையே பல சிற்றருவிகள் ஓடிவருவதால் குதிரை தன் கால்களைக் குளிரச் செய்துகொண்டு தண்ணீர் அருந்தித் தாகத்தையுந் தணித்துக் கொள்வதாயிற்று. இனி ஞாயிறு மறைகின்ற சமயத்தில் இவ்விளைஞன் அச்சந்துவழியின் முடிவிற்போய்ச் சேர்ந்தான்; நடுவில் இடைவெளி யாயுள்ள மேட்டுப்பாங்கான நிலத்திற்கு இருபக்கத்தும் செங்குத்தாய் ஆழ்ந்துகிடக்கும் பள்ளத்தாக்குள்ள மலைச்சாரல் தொடர் புற்று இருக்கின்றது. இம் மேட்டுப்பாங்கான மலைத் தொடர்பி னுள் அவன் நுழைந்து போவானாயினான்; இங்ஙனம் போகப் போக இருளோவென்று கருகித்தோன்றும் மலைத் தோற்றம் அவன் சிலநாழிகை முன்னே வழிநடந்துவந்த வளவிய நிலத்தின் றன்மையோடு எவ்வளவு மாறுபட்டுக் காணப் படுகின்றது! மாலைப்பொழுது முற்றும் வந்து இருண்டவுடனே, கரடு முருடான இம்மலைப்பாங்கில் விரிந்து கிடக்கும் ஒரு காட்டுக்கு அருகேவந்து சேர்ந்தான். அவன் அங்குள்ள வழித்துறைக ளெல்லாம் முற்றுந் தெரிந்தவன் போலவும், அங்கு எதற்கும் அஞ்சாதவன் போலவுங் காணப்பட்டான். மரங்கள் ஒன்றோ டொன்று பிணைந்து வழிதுறையின்றி எல்லாம் குழம்பலாய்க் கிடக்கும் அவ்விருண்டகாட்டின் இடையே புதிதாக வழிச்செல்வோர் யார்க்கும் அறியக்கூடாத வழியை இவன் கூர்மையான கண்கள் தெரிந்தெடுத்தன; பின்னும் ஓர் அரை நாழிகையில் தழைக் கும்பின் இடையிடையே வெளிச்சந் தோன்றுதலுங் கண்டுகொண்டான்; மற்றுஞ் சில நிமிஷங் களுள், மரங்களின் நடுவில் குறுக்கு உத்திரங் கட்டி அதன்மேல்

வெள்ளாட்டுத் தோலானும் மான்றோலானுந் தைத்த போர்வை யிட்டுச் சமைத்த ஆறு கூடாரங்களுள்ள ஒரு பாசறையினை அடைந்தனன்.

இனி இப்பாசறை வீட்டு முற்றத்தின் இரண்டிடத்தில் நெருப்புக் கொழுந்துவிட்டு எரிந்தது; இந் நெருப்பண்டையில் சிலர் மாலைக் காலத்திற்கு வேண்டும் உணவு சமைத்துக்கொண் டிருந்தார்கள். அவர்கள் எல்லாரும் நீண்டுயர்ந்து வலியராயும் அழகாயும் இருந்தனர். தலையில் சிவப்புக்குஞ்சந் தொங்கும் ஆட்டுத்தோற்குல்லா அணிந்திருந்தார்கள். அவர்கள் அடியி-லிட்டிருக்கும் தோற்சட்டை காலுக்குப் பாதுகாவலா யிருப்ப தன்றி நடைவிரைவுக்குத் தடை செய்வதில்லை. அது வல்லாமல், கைத்துப்பாக்கியும் சிற்றுடைவாளுஞ் செருகிய அரைப் பட்டி கையில் கூரியகத்தியும் தொங்கவிட்டிருந்தார்கள். கூடாரங் களுள் எட்டிப்பார்த்தால் எவ்வளவு ஆட்கள் இருந்தார்களோ அவ்வளவு துப்பாக்கிகளும் இருந்தன. சுருங்கச் சொல்லுங்கால், இம்மலையநாட்டில் நெடுங்காலம் வழிப்பறி கொள்ளை செய்துகொண்டு வருபவராயும், இந்நாட்டிற் புகுந்த நரசிங்க வரும சோழன்படைக்குக் கொடும்பகைவராயுமுள்ள கள்வர் கூட்டத்தினருள் ஒரு பகுதியினராக இங்குள்ள இச் சிறுகூட்டத் தார் காணப்பட்டனர்.

இனி இப்பாசறை வீட்டண்டை வந்துகொண்டிருக்கும் இளைஞன் தன்குதிரைக் குளம்படியின் ஓசை அச்சிறு கூட்டத்தார் காதிற் படுமென்பது தெரிந்தவுடனே அவன் தன் இதழ்களைக் குவித்துப் பளீரென்று ஒரு சீழ்கை யடித்தான். அச்சீழ்க்கை ஓசை அக்காடெங்கும் உருவிச் சென்றது. அக்கள்வர் கூட்டத்தார் தங்கள் நண்பன் வரவை அறிவதற்கு இச்சீழ்க்கை யோசை ஓர் அடையாளம் போலும்! மிகவும் திணிந்து பின்னிக்கிடத்தல்பற்றி அந்நாட்டின் வழியே நடத்திக்கொண்டு வந்த தன் குதிரையோடு அவ்விளைஞன் அவர் எதிரிற் புகும்பொழுது நெருப்பின் வெளிச்சம் அவன் முகத்திற்படவே அவரெல்லாரும் உடனே அவனைத் தெரிந்துகொண்டனர். அவனோ அவர்களையும் அவ்விடத்தையும் புதிதுகண்டவனாய் இல்லை; அவர்களும் அவ்வாறே அவனோடு நன்கு பழகினவர் களைப்போல் இருந்தனர். நண்பர்க்குரிய முகமனுரைகள் ஒருவர்க்கொருவர் வழங்கினர்; அவர்களுள் ஒருவன் அவ்

விளைஞனுடன் வந்த குதிரையைக் கொண்டுபோய்த் தீனி முதலியன அளித்தான்.

"உண்மையாகவே இது நேர்த்தியான குதிரை" என்று ஒருவன் அதன் கழுத்திற் றட்டிக்கொடுத்து "உனக்கு இது நல்ல உதவி செய்தது" எனக் கூறினான்.

"ஆம்" என்று அவ்விளைஞன் மறுமொழி தந்து "எனக்கு இன்னும் நெடுநேரம் இருந்தது பற்றி இந்நாள் முழுமையும் மிகமெதுவாய் அதனை நடத்திக்கொண்டுவந்தேன். உங்கள் தலைவனைத் தவறாமற்காணுஞ்சமயம் நன்கு அறிவேனாதலால் இராப்பொழுதிற்குமுன் இங்குவர முயன்றிலேன்" எனச் சொன்னான்.

"வேலையிருந்தால் ஒழிய" என்று அக்கள்வன் அருகி லுள்ள தீ வெளிச்சத்தில் ஒரு குறிப்புத் தோன்றநகைத்து "எங்கள் தலைவனுக்கு எல்லாநேரமும் ஒன்றுதான். அது நிற்க, உன் குதிரையைப்பற்றிப் பேசுமிடத்து" என்று தொடர்ந்து குதிரை மாமிசத்திற் பழக்கப்பட்டவர்போல் அதன் உடம்பின் ஒழுங்கை யும் ஒவ்வோர் உறுப்பின் அமைவையும் மெதுவாக அளந்து நோக்கி "ஆ இது மிக உயர்ந்த பிராணி" என மொழிந்தான்.

"இந்தச் சாதிக்கு உரிய அடையாளம் இங்கே இருக் கின்றது." என்று அவ்விளைஞன் அதன் பின் றொடையில் தீய்க்கப்பட்ட ஒரு சிறிய தழும்பைக் குறித்துக் காட்டி அவனோடு ஒத்துப் பேசினான்; ஏனெனில், அம்மலைநாட்டிலுள்ள குதிரைகளின் சாதிப் பகுப்பினை வழுவாது நெறிப்படப் போற்றி வைப்பதற்கு அவர்கள் அங்ஙனம் அடையாளம் இடுதல் வழக்கம்.

"உண்மை! இந்தச் சாதி நல்லது தான்" என்று அதனைப் பார்த்துக் கொண்டிருந்த மற்றொருவன் வியந்தான். "ஆயினும், எங்கள் தலைவன் ஏறிச் செலுத்துகின்ற குதிரையினும் இது தாழ்ந்ததுதான். ஏனென்றால், அதன்பின் தொடையில் இலாடக் குறி யிருப்பதனை நான் சொல்லும்போது இளையோய், நீயே அறிவாய்" என்றான்.

"நண்பனே, நின் தலைவன் குதிரையினை நான் அறியேன் போலவும், குதிரைச்சாதிகளுள் அதுமிக அருமை யான தென்பதைக் குறிக்கும் இலாட அடையாளத்தை நான் காணேன் போலவும் நீ பேசுகின்றாய். அது நிற்கட்டும், எனக்காக என்

குதிரையினைப் பார்த்துக்கொள்; உங்கள் தலைவனோடு நான் உடனே பேசல்வேண்டும்" என்று அவ்விளைஞன் மொழிந்தான்.

இரண்டாவது பேசின கள்வன் அப்படியே அவனைத் தன்பின்னே வரும்படி அழைத்துக் கொண்டு போவானா யினான். வழிதுறையில்லாத அக்காட்டின் இடையிலே இருவரும் புகுந்து கூடார முற்றத்தில் எரிந்து கொண்டிருந்த நெருப்பு வெளிச்சத் திற்கு அப்புறம் போய் விட்டார்கள்; எங்கும் ஒரே இருளாய் இருந்தது. ஆனாற் கள்வனோ தான் செல்லும் வழியினை மிகவும் நன்றாய் அறிந்தவன்போல் விரைவாக நேரே சென்றான். இளைஞனோ அவன்பின்னே ஒட்டிக் கொண்டு போயினான். ஓசையின்றி எங்கும் இருண்டுகிடக்கும் அவ்விடத்தில் சடுதியிலே யாரோ காவலாளன் அறைகூவும் ஓர் ஒலி கேட்டது. உடனே அதற்குக், கூடப்போகுங் கள்வன் எதோ விடை சொன்னான், சிறிது தூரத்தில் மரங்களின் நடுவில் மற்றொரு வெளிச்சந் தோன்றச் சில நிமிஷங்களில் ஒரு கூடாரத்திற்கு முன்னே தீ எரியும் முற்றத்தில் இருவரும் போய்ச் சேர்ந்தார்கள்.

முன்னேகண்ட பாசறை வீட்டைக் காட்டினும் இக் கூடாரம் பெரியதாயும் உயர்ந்த தன்மையுடையதாயும் இருந்தது; இதன்படாத்திலுள்ள தோலின் ஓரங்களில் நீலப்பட்டுத் தைக்கப்பட்டிருந்தது; இதன் நுழைவாயிலும், நீலப்பட்டினாற் செழுமையான பூத்தொழில் செய்யப்பட்ட திரை இடப்பட் டிருந்தது. தீயில் மணங்கமழ உணவு சமைக்கும் மட்பாண்டத் தைப் பார்த்துக் கொண்டே ஓர் ஏவற்காரன் உட்கார்ந்திருந்தான். இளைஞனை அழைத்துக் கொண்டு வந்த கள்வன் கூடாரத் துள்ளே அவனை நுழைந்து போகும்படி சொல்லி விட்டுத் தான் வெளியே நின்றுவிட்டான்.

அக்கூடாரத்தினுள்ளே நிலத்தில் விரிக்கப்பட்ட பாயின் மேல் இருபத்துமூன்று அல்லது இருபத்துநான்கு வயதிற்கு மேற்படாத ஒருவன் சாய்ந்து கொண்டிருந்தான்; அவன் முகத்தில் பிறரை அடக்கியாளும் பொருட்டு இயற்கையிலேயே அமைந்துள்ள ஒருகளை தோன்றிற்று. அவன் உயரமாகவும் மெல்லிதாகவும் இருந்தானாயினும். ஒத்துச் சமைந்த அவன் உடம்பும், செவ்வையாகப் பொருத்தப்பட்ட உறுப்புகளும் அவன் மெய் வலியின் மிகுதியினை இனிது விளக்கின. அவன் தலைமயிர் கரியதாய் மிக அடர்ந்திருந்தது. அவ்வாறே மிகவும் கரியவான

அவன் கண்கள் பெரும் பிரகாசமுடையனவா யிருந்தன. அவன் முகத்திலுள்ள மற்றை உறுப்புக்களெல்லாம் கடைத்தெடுத்தன போல் இனிதமைந் திருப்பவாயின; அவன் முகத்தை ஒரு பக்கச் சாய்வாய்ப் பார்த்தால் மாத்திரம் மூக்கு கழுகுபோற் சிறிது வளைவாயிருத்தல் தோன்றும். கன்ன மீசையும் மீசையுங் காணப்பட்டன. மோவாய் மயிரின்றி நன்றாய்ச் சிரைக்கப் பட்டிருந்தது. கள்வர் கூட்டத்திற்கு உரிய வண்ணம் அவன் அணிந்திருந்த ஆடை தன் ஆட்கள் அணிந்திருந்தவற்றைக் காட்டிலும் உயர்ந்ததாயும். அரைக் கச்சுப் பூத்தொழில் செய்யப்பட்டதாயும் கைத்துலக்கும், சுரிகையும் வெள்ளிப்பிடி யுடையனவாயும், குற்றுடைவாளும் அவ்வாறே மணிகள் அழுத்திய பிடியுள்ளதாயும். பாயின்மேல் அவன் அருகிற் கிடந்த சுழல் துப்பாக்கி திறமையான தொழிற்பாடு உடையதாயும் விளங்கின. கூடாரத்திற் றொங்கவிட்டிருந்த வெள்ளி விளக்கு இவன் முகத்தில் ஒளிபரப்பினமையால் இவன் முகக்குறிப்பை நன்கு அளந்து பார்த்து இவன் மாட்டு யார்க்கும் அஞ்சாத ஒரு வன்கண்மையும், மன ஊக்கமும், எவற்றையும் பொருள் செய்யாது முடிக்கும் பேராற்றலும் பெருந்திறமையும் அமைந்து கிடத்தலை எளிதிலே அறிந்துகொள்ளலாம். அவன் மற்றையோரைக் காட்டிலுந் தனக்குள்ள உயர்ச்சியினையும் நன்றாய் அறிந்திருந் தான். இங்ஙனம் அவன் எல்லாவகையானுந் தன் கீழ் உள்ளார். தன்சொற்படி அடங்கி நடந்து தன் இடத்து அன்புடையவராய் நடந்து கொள்ளவும், தான்வேண்டும் பொழுது அவரைவலிந்து ஒன்று செய்யும்படி வற்புறுத்தி முடிக்கக்கூடிய ஆற்றலும் உயர்ச்சியும் உள்ளவனாயிருந்தனன்.

அவ்விளைஞனுக்கு இக்கள்வர் தலைவன் புதியன் அல்லன். கூடாரத்தினுள் நுழைந்தவுடனே அவ்விளைஞன் இவனை மிகவும் மரியாதையுடன் வணங்க அத்தலைவனுஞ் சிலசமயங்களில் உயர்ந்தோர் தம்மினும் தாழ்ந்தோரை நண்புடன் அன்பாய் நடத்து முறைப்படி நேயர்க்குரிய இனிய மொழிகள் சொல்லி அழைத்தான்.

“சந்திரா, நின்வருகை நன்றாகுக. என்னசெய்தி கொண்டு வந்தாய்?” என்று அக்கள்வர் தலைவன் கேட்பானா யினன்.

“அதற்கு எல்லாஞ் செவ்வையாக நிகழ்கின்றன” என்று அவ்விளைஞன் மறுமொழி தந்திட்டான்.

".இதனால், **நாகநாட்டரசி** யிடத்தும் **நீலலோசனன்** என்னும் பௌத்த இளைஞனிடத்துங் கருதிய வண்ணம் காரியத்தை முடித்து வந்தாயென்று நினைக்கின்றேன்" என்றான் அத்தலைவன்.

"**மேற்கரை** என்னுந் தன் நகரத்திலிருந்து பயணம் போவதற்கு மிகவும் இசைந்தவழியினை **நீலலோசன**னுக்குக் காட்டியது போலவே, **நாகநாட்டி**லிருந்து வரும் **குமுத வல்லிக்குங்** காட்டியிருக்கின்றேன்" என்று அவ் விளைஞன் ஒத்துக்கூறினான்.

"சந்திரா, நன்கு செய்தாய்" என்று தன்முகத்தில் மகிழ்ச்சி தோன்றச் சொன்ன அத்தலைவன் மீண்டும் "முன்னொருமுறை நீ எனக்கு மிகவும் நுட்பமாய் எடுத்துச்சொன்ன வரலாற்றில் உனக்கு நம்பிக்கை உண்டோ என்பதனைத் திரும்பவும் அறிய விரும்புகின்றேன். ஏனெனில் பெறப்படுகின்ற அப்பொருளின் உயர்ச்சியை நோக்கினல்லது, அவ்வளவு பெரியதோர் அபாயகரமான காரியத்திற்புகுவதற்கு நான் நினைக்க மாட்டேன்" என்று சொன்னான்.

"நான் நுணுக்கமாய் விரித்துச்சொல்லிய ஒவ்வொன்றும் உண்மையாமென்றே நம்புகின்றேன். **தாமரைவேலி** என்று சொல்லுதற்குப் பெரிதும் வாய்ப்புடைய **மலையவேலி**யின்கண் அப்பெரும் பொருள் **புதையலாய்** இருக்கின்றது" என்றான் சந்திரன்.

"புதுமை! புதுமை! இம்மேற்கணவாய் மலைத்தொடர் முழுவதும் எனக்குத் தெரியாத சந்து, பொந்து, மூலை,முடுக்கு ஒன்றும் இல்லையென்று என்னைப் பெரிதாக எண்ணியிருந்த எனக்குந்தட்டுப்படாமல் **தாமரைவேலி** என்பதொன்று இருத்தல் பெரிதும் வியப்பாயிருக்கின்றது! அங்ஙனம் ஒன்றிருக்குமென இதுவரையில் நான் ஐயப்பட்டது மில்லையே! ஆயினும், அப்படியொன்று இருக்கலாம்:- அப்படியொன்று இருக்கத்தான் வேண்டும்" என்று காதிற்கேட்கும் படியாகவே அத்தலைவன் முனகினான்.

"அஃதப்படித்தான்! உயர்ந்தோய். மலை நாடர்க்குள் வழங்கும் இச் செய்தியாவது உமக்கு எட்டியிருக்கவேண்டுமே" என்று சந்திரன் அழுத்திப் பேசினான்.

"ஆம்! அதனாலேதான் நீ முதன்முதல் அக்கதையினை எனக்குச் சொன்னபோது நான் அவ்வளவு கவனமாய்க் கேட்டேன். நான் குழந்தையாயிருந்தபோது என் பெற்றோர்" - என்று சொல்லும் போதே அத்தலைவன் முகம்வேறுபடப் பெருமூச்சுவிட்டு "ஆம் நான் குழந்தையாயிருந்தபோது இறந்துபோன என்பெற்றோர், தமிழர்க்கு முதற்றந்தையுந்தாயும் இறைவனாற் படைக்கப்பட்ட காலத்தில் இம்மலைத்தொடர் இடையில் உள்ள **தாமரைவேலி**யில் அவ்விறைவன் கட்டளை யால் தங்கியிருந்தனரெனவும், அவருக்குப்பின் மக்கள் யாரும் அதற்குட் புகுத இடம் பெறுவதில்லை எனவும், ஆயினும் ஒரோ வொருகால் நெடுங்காலம் இடையிட்டுத் திருவருளாணையாற் செலுத்தப்படுகின்ற பரிசுத்தனானதுறவி பரிசுத்தமான அவ் விடத்தைக் குறுகி ஆண்டுச் சுற்றிலும் உயர்ந்து விளங்கும் மலைகளின் நடுவிற் கீழே பொலிந்துதோன்றும் இன்பமான இளங்காவினை காண்பன் எனவும் சொல்வது வழக்கம்" என்றான்.

"என்னுடைய கதையானும் நீங்கள் சொல்லியவற்றானுங் குறிப்பிக்கப்பட்ட அவ்விடந்தான் நந்தமிழர்க்கு முதற்றந்தையுந் தாயும் உறைந்த இன்பநிலமென்று நான் சொல்லவில்லை. என் அறிவுக்குப் புலப்பட்டபடி கேட்டால், அஃது அவ்விடம் அன்றென்பதே என் கருத்து. நம்முதற்றந்தை தாயார்க்குப்பின் அவ்விடம் அழிந்து போயிற்றெனல் தான் உண்மை; ஆயினும் இம்மேற்கணவாய் மலைத்தொடரில் எங்கோ ஓரிடத்தில் அவர் இருந்த அம்**மலையவேலிப்** பெயர்கொண்ட ஓரின்ப இளங்கா விளங்குதல் வேண்டுமென்பது மாத்திரம் நான் உறுதியாகச் சொல்வேன்." இனி நான் சொன்ன மற்றை வரலாறுகளைக் கொண்டு, அங்குப் பொற்குவியல் உண்டோ இல்லையோ என்பதனை நீங்களே அறிந்துகொள்ளல் வேண்டும். ஆனால், நான் சொன்னது மலையநாட்டில் வழங்கும் வரலாற்றுடன் மிகவும் பொருந்தியிருக்கின்றது என்று சந்திரன் சொன்னான்.

"அவ்வரலாற்றினால், அது போன்ற இன்பமான இடங்கள் இம்மலைத்தொடரிற் பல இருக்கின்றன என்றும், அவ்விடங் களில் மிகச் சிறந்த மலர்கள் மாத்திரம் பூக்கின்றன, அருமையான இளமரங்கள் மாத்திரங்கொழுக்கின்றன என்றும், பாம்பு முதலான ஊர்வனவற்றிற்கு உணவாகுந்தழைகள் அங்கில்லை என்றும், அமிழ்தமயமாயுள்ள அத் தனித்த இடங்களில், புலிக

ளேனும் நரிகளேனும் நுழைய மாட்டா என்றும், அவ்விடத்தைச் சுற்றி அரைப்பட்டிகைபோல் உள்ள செங்குத்தான மலைகள் புறத்தேயிருந்து பார்ப்பவர்க்குத் திரை போல் அவர் பார்வையினைத் தடைசெய்தலே யன்றி வெளியிலி ருந்து போம் மக்கள் அடிச்சுவடு தோயாவண்ணம் எழுப்பிய வரம்புபோலவும் குளிர்காலத்துக் கொடுங்குளிர் காற்றும் வேனிற்காலத்து வெங்கதிர்வெப்பமும் நுழையாவாறு கட்டிய அரண்போலவும் பயன்படுகின்றன என்றும், கடைசியாகப் பொற்குவியலும் வெள்ளிக்குவியலும் புதையலாயுள்ள கனிகளும் உயர்ந்த முழுமணிகள் குவிந்த முழைஞ்சுகளும் உள்ளன என்றும் நாம் விளங்க அறிகின்றோம்." என்று பெருகியெழுந்த மகிழ்ச்சி தணிந்தாற்போலத் தாழ்ந்த குரலிற் பேசினான் அத்தலைவன்.

"பரம்பரை பரம்பரையாகச் சொல்லப்பட்டு இம்மலை நாடர்க்குள் வழங்கிவரும் அவ்வரலாற்றினை நீர் நும் உள்ளத்திற்பொதிந்து வைத்திருந்தும், நான்சொன்ன அக்கதை யினை நீர் ஒரு கணமாவது ஐயமுறத்தலைப்பட்டது எனக்கு மிகவும் வியப்பாயிருக்கின்றது" எனச் சந்திரன் சொன்னான்.

"நான் அதனை ஐயப்படவில்லை; முதலிலிருந்தே நான் அதைப் பற்றி ஐயப்படாவிட்டாலும், நீ சொன்னவற்றை எல்லாம் உண்மையாகவே நம்பிச் சொன்னாயோ என்றறி யத்தான் பலகேள்விகள் கேட்டேன் என்று எதற்கும் அஞ்சாத தன் இயல்புக்கு இசையைப் பொறுமையான குரலோடு அத்தலைவன் பேசினான்."

"நான் சொன்னவற்றில் நீர் ஏன்தான் ஐயப்படல் வேண்டும்" என்று சந்திரன் கேட்டான்.

அவன் என் நிலைமையில் உள்ள ஒருவன் தன் ஆள் சொல்வதை ஐயப்படாவிட்டாலும் ஒரு தரத்திற்கு இரண்டு தரம் ஓர் உண்மையை ஆய்ந்தறியவேண்டாமா? என்று விரைந்து கேட்டுச் சந்திரா! நான் சொல்வதைக்கேள். உன்னைக் கடைசியாக நான் கண்டதுமுதல் நான் நினைத்தது இது! நீ சொன்ன கலவரமான உபாயத்தில் தலைகீழாய் விழுந்து வருந்து தலைகாட்டினும், அவன் மேற்பாய்ந்து விழுந்து அவ்விரகசியம் தெரிந்த அவனைக்கொண்டே அதனைத்தெரிந்து கொள்ளல் நல்லதன்றோ! என்னை நம்பு; உன் தலைவனை ஒருமுறை

இங்குபிடித்துக்கொண்டு வந்து வைத்துக்கொள்வேனாயின் - என்பதற்குள்;

“அவன் செத்தாலுஞ் சாவான் ஒழிய இவ்விரகசியத்தை மாத்திரஞ் சொல்லான்” என்று சந்திரன் இடையிற்கூறி “இக் காரியங்களெல்லாம் எனக்குத்தெரிந்தபின், அவன் கடைசியாகப் பயணப்பட்டுப் போனபோது அவன் கூடவே போவதற்கு நான் சமயம் பார்த்துக் கொண்டிருக்கவில்லையா-” என்று சொல் வதற்குள்;

“நல்லது நல்லது” என்று அத்தலைவன் அவசரமாய் இடைமடக்கிச் “சந்திரா, நீ சொன்னவாறே ஆகட்டும்! அதைக் குறித்து நான் ஆராயும்போது, நீ செய்த உபாயப்படி செய்தலைவிட வேறுவழியில்லை, அவ்வுபாயம் சிறந்ததென்று உரைப்பதற்கும் நான் பின்வாங்கேன். பெரியநன்மை கிடைப்ப தாயின், அது மிகவுங்கலவரமான உபாயமென்று சொன்ன தனால் உண்டாகும் இடைஞ்சல்களை நினைந்து பின் வாங்குவேன் என்று நினையாதே, நண்பா சந்திரனே, செய்து முடிக்கக்கூடிய காரியத்திற்கு எளிதான வழியெதுவென்று காண்பதே எனக்கு வழக்கம். இலேசிலே செய்து முடிக்கக்கூடாத காரியமாயிருந்தால் மாத்திரம் சிறிது சுற்றான வழியிற் செல்ல முயல்வேன். இனிவிரித்துச் சொல்லவேண்டுவதில்லை; போதும்! இப்போது மாலைக்கு உணவு சித்தமாயிருக்கும் நாம் அதனை உண்பேம். உண்டபின் நீ என்பக்கத்திற் படுத்து அயர்வு தீர்த்துக்கொண்டு விடியற்காலையில் நீலகிரி நகரத்தில் உன் தலைவனிடம் போய்ச்சேர்” என்று மொழிந்தான்.

## அதிகாரம் - 2

# வழி மறித்தல்

இப்போது சொல்லப்படும் விஷயங்கள் முன்னதிகாரத்திற் கூறிய கருமங்கள் நடந்த மூன்றுநான்கு நாட்களின் பின் நேர்ந்தனவாகும்.

ஞாயிறு கீழ்த்திசையிற் றோன்றுகின்ற சமயத்தில் ஆறுபேர் குடகிலுருந்து நீலகிரி நகரத்திற்குச் செல்லும் பாதையை அடுத்து அடர்ந்திருக்குங் குறுங்காட்டின் நீழலில் தங்கி யிருந்தனர். அவர்கள் ஏறி வந்த குதிரைகளின் நிலைமையைப் பார்க்கும் போது அவர்கள் இரவிற் சில நாழிகைகளாக வழி நடந்து வந்திருக்க வேண்டுமென்பது விளங்கிற்று. இவர்கள் தங்கிய இடம் நீலகிரி நகரத்திற்கு நாற்பதுமைல் தூரத்திற்கு இப்பால், மேற்கணவாய் மலைத்தொடருக்கு அருகாமையில் உள்ளது. ஒருயாண்டில் முக்காற் பங்குபருவம் மிக இனியதாய் விளங்கு வதான அம்மலைநாட்டில், இவ்விடியற் காலமானது மிகவும் அழகிதாகப் பொலிவுற்றது. பறவைக்குழாங்கள் மரங்களின்மேற் பாடிக் கொண்டிருந்தன; அன்னப்புட்கள் கால்வாய்களிற் செருக்குடனே மிதந்து கொண்டிருந்தன; கொழுவிய மலர்கள் இதழ்விரிந்து காற்று வாட்டத்தில் நறு மணம் பரப்பின; அளவிறந்தனவாய் முழுமுழுப் பருமனுடைய வான நவமணி களுங் குலைகுலையாய்த் தழைகளின் இடையே தொங்கிக் கொண் டிருப்பதுபோலத் தோன்றும். **மாதுளம் பழம், எலுமிச்சம்பழம், கொடிமுந்திரிப்பழம்** முதலியவற்றின் அறத்திணிந்து விளங்கும் வண்ணங்களின் மேல் ஞாயிற்றின் இளங்கதிர்கள் தோய்ந்து மினுமினுவென்று மிளிர்ந்தன; வானமென்னும் நீலவிதானத்தின் மேல் மேகக்கறை ஒருசிறிதும் இல்லாமையால் அதுதெளிந்து காணப்படுவ தாயிற்று. மாற்றுயர்ந்த பொற் கோளம்போற் பிரகாசிக்கும் இளஞாயிறு தன் கதிர்களைச் சூழவிரித்து நீலநிறத்தோடு விரசும் இடந்தவிர,

அவ்வானின் தெளிநீலவண்ணம் இடை யறுந்து போகாமல் ஒரேஒழுங்காய்த் தொடர்புற்று வளைவாய்த் திகழ்ந்தது.

இப்போது இக்குறுங் காட்டிலிருந்த ஆட்கள் அறுவரும், முன்னதிகாரத்தில் நாங்காட்டிய கள்வர் கூட்டத்திற் சேர்ந்த வர்கள் என்றறிய வேண்டும். நாம் முன்சொல்லியவாறே உடை உடுத்துப் படைக்கலங்கள் அணிந்திருந்தனர். ஆயினும், இப்போது சுழல் துப்பாக்கிகளைத் தாம் வேண்டியபோது கையாளத் தக்கவகையாய் முதுகின் மேற்றொங்க விட்டிருப்பது ஒன்று தான் வேறுபாடாகத் தோன்றுகின்றது.

அவர்களுக்குத் தலைவன்போற் காணப்பட்ட ஒருவன் "இவ்விடந்தான். நாம் தெரிந்து கொண்டபடி நாம் விரும்பிய காரியம் இப்போது சென்று கொண்டிருக்கும் நாழிகைக்குள் முடிந்துவிடும். வாருங்கள். நம்முடைய குதிரைகளை இக்காட்டுக் குள்ளே கொண்டுபோய் விட்டு மிகுந்த நேரமுங் கொழும்புல் மேயச் செய்விப்போம்." என்று அழைத்தான்.

"**இருளா,** இப்போது நீ சொல்லிய கட்டளைகள்?" என்று மற்றொருவன் வினவினான்.

"அவை சுருக்கமாயிருந்தாலும், நம்முடைய தலைவன் எப்போதும் நமக்கு இடுங்கட்டளைகளைப் போலவே கடுமையாக இருக்கின்றன" என்று இருளன் விடை பகர்ந்தனன்.

"அதுவேயுமன்றி, அவை மேயப்படுவதற்கும் இடஞ் செய்கின்றன. நம்முடைய தலைவனாகிய அப்பெரிய பயங்கர மான **நல்லான்** தன் கருத்தையும் தான் முடிக்குங் காரியங் களையும் எனக்குங்கூடச் சொல்லுவதில்லை. இங்கே நம்மை யனுப்பி விட்டதுபோலவே தானும் மற்றோர் இடத்திற்குப் போயிருப்பதை ஊகிக்கும்போது, **சந்திரனாற்** சொல்லப்பட்ட ஒரு செய்தி அல்லது ஓர் உபாயத்திற்கும் இதற்கும் எதோ சம்பந்தம் இருப்பதாகத் தெரிகின்றது" என்று **இருளன்** சொன்னான்.

"சிலகாலமாய் மூன்று நான்கு தரம் நம்முடைய தலைவனிடம் வந்து கொண்டிருக்கும் **சந்திரன்** என்கின்ற அவ்விளைஞன் யார்" என்று அவர்களில் மற்றொருவன் வினவினான்.

அதற்கு இருளன் "நீலகிரிப் பட்டினத்திலிருக்கும் பணக்காரன் ஒருவன் வீட்டிற்கு அவன் உரியவன் என்பதற்குமேல் அவனைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. இது நிற்க. நாம் இங்ஙனம் வீண்பேச்சுப் பேசிக்கொண்டு காலத்தைக் கழிப்பதை விட, நல்லான் என்னிடத்துச் சொல்லிய ஏற்பாடுகளை உங்களுக்குச் சொல்லுகின்றேன் கேளுங்கள்! நாம் ஆறுபேர் இருக்கின்றோம்; நாம் எதிர்க்கவேண்டியது மூன்றுபேரைத்தான் என்பது தெரியும். இந்த மூவரில் ஒருவன் அதிகாரத்தானும் பொருளானும் உயர்ந்த **பௌத்த** வாலிபன் என்றும், மற்றை இருவரும் அவனுக்குச் **சேவகர்** என்றும் அறிவீர்களாக. அவர்கள் செவ்வையான குதிரைகளின்மேல் ஆயுதங்களைத் தரித்து வருவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை; அதன்மேலும் அவர்களுடைய மனோ தைரியம் வேறேயாக இருக்கின்றது. கூடுமாயின் அவர்கள்மேல் இரத்தஞ் சொட்டாமல் மூவரையுஞ் சிறையாகப் பிடிக்கவேண்டுவது நம்முடைய கடமை" என்று கூறினான்.

"ஆ! நாம் துப்பாக்கிளை உபயோகிக்க நேருமாயின் அங்ஙனம் இரத்தஞ் சிந்தாமற் பிடிப்பது மிகவும் வருத்தமாயிருக்குமே" என்று அவர்களில் மற்றொருவன் வினவினான்.

அதற்கு **இருளன்** "இதற்கு மாறாகத்தான் உங்களுக்கு இது சொல்லப் போகின்றேன். அம்மூவரையும் நம்முடைய மலைக்கோட்டைக்கு உயிருடன் கொண்டு போய்விட்டால், நாம் எடுத்த காரியமும் நந் தலைவன் இட்ட கட்டளையும் மிகவுஞ் செம்மையாக முடிந்தனவாகும். ஆதலால், உங்களால் ஆன மட்டும் பார்த்துக் கூடாத விடத்து மாத்திரம் உங்களைக் காத்துக்கொள்ளும் பொருட்டுத் துப்பாக்கிகளை உபயோகப் படுத்துங்கள். இதுதான் நல்லான் இட்ட கட்டளையும்" என்று கூறினான்.

"மிகவும் வலிமையுடைய மலைநாடர்களான நாம் அறுவரும் ஓர் இமைப்பொழுதில் அந்தப் பௌத்தர்கள் மூவரையும் பிடியாவிட்டால், அப்புறம் என்ன இருக்கின்றது?" என்று மற்றொருவன் சொன்னான்.

அதன்மேல் வழிமறிக்கப்படும் பிரயாணிகள் வருகின்ற பாதையை இருளன் பரிசோதித்துக்கொண்டு செல்வானா

யினான்; அங்ஙனம் போகையில், பாதையின் .இருபக்கங் களினுமுள்ள குறுங்காடு ஒன்று சேர்ந்து மேலே கவிந்திருக்கும் ஓர் இடத்தைத் தெரிந்துகொண்டு அங்கிருந்து நம்முடைய காரியத்தை நிறைவேற்ற விரும்பி, அதற்கு அருகாமையில் உள்ள ஓரிடத்திற் குதிரைகளை நடத்திக்கொண்டுபோய்ப் புல்மேய விடுத்து, ஒவ்வொருவரும் ஒரு நொடியில் ஏறி எதிர்ப்பதற்கு வேண்டும் ஒழுங்குகளெல்லாம் செய்து வைத்துத் தானும் சித்தமாய் பதுங்கியிருந்தான்.

இங்ஙனம் ஒருமணிநேரங் கழிந்தது; கழிந்தவுடன் நெடுந் தூரத்தில் மூன்று பிரயாணிகள் காணப்பட்டனர். அவர்கள் துவர்க் காவியூட்டிய தலைச்சீரா அணிந் திருந்தமை யானும், குறிப்பிட்ட காலத்தில் மூன்று பேராய் நீலகிரிப் பட்டினத்திற்குச் செல்லும்பாதையில் வந்து கொண்டிருந்தமையானும், தாம் எதிர்பார்த்த பிரயாணிகள் இவர்கள் தாமென்று அக்கள்வர் உறுதிசெய்தனர். குதிரைமேற் சவாரிசெய்துவரும் மூவரில் ஒருவன் மற்றிருவர்க்குச் சிறிது முன்னேறி வந்தனன்; இவன் தன் மார்பில் இறுக முடிந்து அணிந்திருக்குங் குப்பாயத்தின் பொற்சரிகைமேலும், பொன் மினுக்குச் செய்த வாளுறை மேலும், குதிரையின் உயர்ந்த சேணங்கலினம் முதலியவற்றின் மேலும் ஞாயிற்றின் கதிர்கள் தோய்ந்து ஒளிர்ந்தன. ஆகையாற் குடகிலிருந்து நீலகிரி நகருக்குப் போகும் செல்வத்தானும், அதிகாரத்தானும் உயர்ந்த பௌத்த இளைஞன் இவன்தான் என்பதிற் சிறிதும் ஐயம்உற இடமில்லை. இங்ஙனம் ஏதும் சமுசயமின்றி முன்னேவந்து கொண்டிருக்கு மிளைஞன் கட்டிள மையோனாய் மிகவும் அழகுடையனாய் இருப்பதும், அவன் பின்னே வரும் மனிதர் இருவரும் இளமைகழிந்து திண்ணிய உடம்புடையோ ராயிருத்தலும் அங்குப் பதுங்கியிருந்த கள்வர் கண்டுகொண்டனர்.

உடனே **இருளன்** ஒரு குறி செய்தலுங் கள்வரெல்லாரும் மரங்களின் நடுவிற் குதிரைமேல் ஏறிக்கொண்டு, முந்திரிக் கொடிகள் பின்னல் பின்னலாய் நெருங்கித் திரை மறைப்புப் போற் படர்ந்திருக்குங் குறுங்காட்டோரத்தில், பிரயாணிகள் கண்களுக்குத் தென்படாமல் எதிர்ப்பதற்குச் சித்தமாய் வந்து நின்றனர். வந்துநிற்றலும், இரண்டாம் தரமும் ஒருகுறி செய்யப் பட்டது. உடனே மான் மந்தையாயினுங் காட்டு விலங்கினங்

களாயினுஞ் சடுதியில் தழைகளானும் பழங்களானும் மறைக்கப் பட்ட திரையைக் கீறிக் கிழித்துப் புகுந்தது போல மேல் வந்து விழுந்து, இருவர் **நீலலோசனனையும்** மற்றை நால்வர் அவன்பின் வந்த மற்றிருவரையும் வளைத்துக் கொண்டனர்.

இவ்வாறு அக்கள்வர் எவ்வளவு சுருக்கெனப் புகுந்த னரோ அவ்வளவு விரைவில் அப்பௌத்தர் மூவர் வலதுகை யினும் வாள் உறை கழிக்கப்பட்டு மின்னின; அதே சமயத்திற் சேணத்திற் செருகியிருந்த கைத் துப்பாக்கியினை இடது கையால் ஒவ்வொரு வரும் உருவி யிழுத்தனர். ஆகவே அக்கள்வர் எதிர்பார்த்த வண்ணம் அவர்கள் காரியம் நிறைவேறுவது அரிதாய்க்காணப் பட்டது; **இருளனும்** மற்றொரு கள்வனும் நீலலோசனன் மேற் குதித்து விழவே, அவன் ஒருகையாற் சுழற்றி வீசிய வாள் ஒருவன் மேற் படும்பொழுது, அவன் மற்றைக் கையிற் பிடித்த துப்பாக்கி மற்றொருவனைச் சுட்டு கீழே வீழ்த்தியது. **இருளனோ** அவ்வாள்வீச்சுக்குத் தப்பிக்கொண்டு ஒரு கையில் வாளேந்தி மற்றொரு கையால் அவனைப் பிடிக்க முயன்றான். **நீலலோசனன்** தன் பகைவனைப்போலவே தன் குதிரையைத் திறம்பட நடத்துஞ் சாதுரியம் நன்கு வாய்ந்தவ னாதலால் குதிரையின் கடிவாளத்தைப் பின்னுக்கு பிடித்து இழுத்துத் தன் பகைவன் தன்னைக் காத்துக்கொள்ளுதற்கு இடஞ்செய்தான். இவ்வாறு சிலநேரம் இருவர்க்கும் போர் மூண்டு நடக்கையில், திடீரென்று **இருளன்** தன் குதிரை மேனின்றும் வழுவி மறைந்து போயினான்; அப்படி மறைகையில் நீலலோசனன் தான் அவன்மேல் எறிந்த படைவீச்சு அவனை கொல்லமாட்டாமையால் அவன் மறைந்து போனது ஏதோ ஓர் உபாயமாக இருக்கின்றதென உடனே தெரிந்து கொண்டான். தெரியவே அவன் தன் குதிரையினின்றும் பாய்ந்து பகைவனைப் பிடித்துக் கொள்ள முயலாமல் இச்சண்டையின் முடிபை யறியும்பொருட்டு ஒரு கணநேரம் வாளாவிருந்தனன்.

உண்மையாகவே **இருளன்** அவ்வாறு மறைந்துபோனது ஒரு தந்திரம். மலைநாட்டுக்கள்வர் போர்முகத்தில் இத்தகைய தந்திரங்கள் செய்து வெற்றியடைவதில் மிகவுந் திறமையு டையவர்களாய் இருந்தனர்; போர் நடந்துகொண்டிருக்கையில் சடுதியிலே குதிரை முதுகின் மேலிருந்து வழுவி அதன் வயிற்றின் கீழ்ப்புகுந்து கால் உதையும் வளையத்திற் கால்விரல் மாட்டி இரண்டு கைகளானும் பிடரியைப் பிடித்த வண்ணமாய்

தொற்றிக் கொண்டிருப்பர். இந்தச் சூழ்ச்சி யினையறியாத எதிரி தன் குதிரையினின்றும் பாய்ந்து இக்குதிரை மேல் ஏறுவா னாயினும்., அன்றி எதிரியோடிப் போயினான் என்று நினைந்து தன் குதிரையை விட்டுக் கீழ் இறங்குவானா யினும் உடனே அவன் மேற் புலிபோற் பாய்ந்து பற்றிக் கொள்ளுவர். இதே வகையாய் நீலலோசனனைத் தன் குதிரையினின்றும் இறக்கும் பொருட்டு **இருளன்** இவ்வாறு ஓர் உபாயஞ் செய்தான்.

ஓர் இமைகொட்டில் **நீலலோசனன்** தான் ஐயப்பட்டது உண்மையென்று கண்டு குதிரை சேணத்திநின்றும் உருவின தன்கைத் துப்பாக்கியை **இருளன்** மண்டைக்கு நேராய்க் குறிகாட்டித் தனக்குக் கீழ்ப்படியும்படி கேட்டனன். இதற் கிடையிற் போர்புரிந்து கொண்டிருப்போர்க்குப் பின்னேயிருந்து குண்டுகள் வந்து விழுந்தன; இச்சமயத்திற் கள்வர் இருவர் முன்னே காற்றினுங் கடுகி வந்து இருளனை நோக்கி "உன்னைக் காப்பாற்றிக் கொள்" என்றனர்.

மின்னல் தோன்றுவதுபோல இருளன் குதிரை அப்புறந் துள்ளிப்பாய்ந்து போயிற்று; அதே சமயத்தில் **நீலலோசனன்** துப்பாக்கியினின்று புறப்பட்ட குண்டுகள் முறிபட்டுப் பறந்தோடுங்கள்வன் காதோரமாய்க் கிறுகிறு வென்று சுழன்று போயின. பறந்தோடின **இருளன்** நூற்றைம்பது முழந்தூரம் போனவுடனே தன் குதிரையை நிறுத்தி இப்புறந் திருப்பி முதுகிற் றொங்கவிட்டிருந்த கைத்துப்பாக் கியினை அவிழ்க்கத் தொடங்கினான். **நீலலோசனன்** கூரிய கண்களுக்கு இது தெரிந்தவுடனே, மலைநாட்டுக்கள்வர் குறி பிழையாமற் சுடுவதில் வல்லவர்களென்பதனை உணர்ந்து, தான் அதற்கு இலக்காய் அகப்படாமல், தன் குதிரையை முடுக்கிக் குறுங்காட்டினுள்ளே புகுந்துப்போய்த் தப்பினான். இவன் இதற்குள் நுழைந்த பிற்கணத்தே துப்பாக்கிக் குண்டுகள் கிறுகிறுவென்று சுழன்று சென்றன. **இருளன்** தன் எதிரி தப்பிப்போய்விட்டதை அறிந்து குதிரையைத் திருப்பிக்கொண்டு விரைந்து போயினான்.

இதற்கு முன்னமே **நீலலோசனன்** தன்பின்வந்த காவலாளர் எங்ஙனமாயினார் என்பதனை ஒரு நொடிப் பொழுதிலே அறிந்துகொண்டனன்; இப்போது அதனைச் செவ்வையாக அளந்தறிவதற்குச் சமயம் வாய்த்தது. கள்வர் அறுவரில் இருவர் அப்பௌத்த இளைஞனை மறித்தனர். இவ்விருவரில் ஒருவன்

சுடப்பட்டு விழுந்திறந்தான்; மற்றை யோன் பிழைத்தோடிப் போயினான். காவலாளர் இருவரையும் வளைத்துக்கொண்ட கள்வர் நால்வரில், இருவர் தலையிற் சுடப்பட்டு உயிர் ஒழிந்து நிலத்திற் கிடந்தனர். மற்றிருவரில், ஒருவன் கத்திவெட்டினால் வாளேந்தியதோள் அறுபட்டும், மற்றொருவன் கழுத்து முள்ளெலும்பு ஒடிந்தும் எதிர்நிற்க லாற்றாது முன்னே சொன்னவாறாய் ஓடிப்போயினர். ஆகையால் நீலலோசனன் காவலாளரும் தந் தலைவனைப் போலவே வெற்றிமறஞ்சிறந்து விளங்கினர். ஆயினும் இவர் களில் ஒருவனுக்கு மாத்திரம் இடது தோட்புறத்துச் சதையில் வாள் அழுந்து வெட்டுக்காயமிருந்தது; இதுபற்றி அவர் சிறிதும் மனந்தளர்தலின்றி தம்முடைய தலைவனுடன் கூடி மகிழ்ந்தனர்.

கொல்லப்பட்ட கள்வர் மூவருடைய குதிரைகளும் இவர்கள் கட்பார்வைக்கு அகப்படாமல் அவ்விடத்தை அகன்று ஓடிப்போய் விட்டன. நீலலோசனனும் அவன் காவலாளரும் வழி நடுவிற் கிடந்த அப்பிணங்களை அகற்றிக் கொடிமுந்திரிப் பந்தர் நிழற்கீழ் கிடத்தி விட்டுத் தாம் போம் வழியிற் செல்வ ராயினர். செல்லும் போது இங்ஙனம் வந்து வழிமறித்தவர்கள் வேறார் நோக்கமுமின்றிக் கொள்ளையிடுதலே குறிப்பாக வுடைய ஆறலைக் கள்வர் கூட்டத்திற் சேர்ந்தவர்கள் என்று எண்ணினர்.

அப்போது நீலலோசனன் அவரைப்பார்த்து அக்கொடிய வர்கள் குறுங்காட்டில் மறைந்திருந்தபடியே நம்மைச்சுடாமல் எதிரேறிவந்து போரிட்டது எனக்கு மிகவும் புதுமையாய் இருக்கின்றது. அப்படி அவர்கள் சுட்டிருந்தால் நாம் எல்லாம் உயிரிழந்திருப்போம். மலைநாட்டுக் கள்வர் குறிதவறாமற் சுடுவதில் மிகவும் வல்லவராயிற்றே என்று கூறினான்.

அதைக்கேட்டதும், அடர்ந்து பழுத்துப்போன **தாடியும், மனவுறுதி, ஊக்கம், பொறை** முதலிய உயர்குணங்கள் நன்கு விளங்குகின்ற முகமும், தடித்துத் திணிந்த உடம்பும் உடைய வனான மூத்தகாவலாளன் "எங்கள் அரசின் செல்வமே, நம்மிடத்துக் கொள்ளை கொள்வதுடன் நம்மைச் சிறையாகப் பிடித்துக் கொண்டுபோய்த் தம் மலை அரணில் வைத்திருந்து விடுதலை பெறும்பொருட்டுப் பெருந்தொகையான பொருளும் அடையலாம் என்கின்ற நோக்கத்தோடு அவர்கள் நம்மை எதிர்த்தவர்களாக எனக்குத் தோன்றுகின்றது" என்றனன்.

அதற்கு நீலலோசனன் "என் நம்பகமுள்ள **கேசரிவீர** நீ ஊகித்துச் சொல்லியது எனக்குப் பொருத்தமாகத் தோன்று கின்றது. அம் மறவர்கருத்து அதுவாயின். அவர் தோல்வி யடைந்ததும் நாம் வெற்றியடைந்ததும் அவர்களுடைய நல்ல ஏற்பாட்டினால் அல்லவா? அவர்கள் முதற்கணத்திலேயே நம்மைச் சுட்டுக் கொல்லாமற் கிட்ட வந்து எதிர்த்து **நீலகிரி நாட்டார்க்குரிய வலிமையினையும் குடகுநாட்டார்க்குரிய வலிமையினையும் பரிசோதித்து அறிந்து கொண்டனர்**" என்று கூறினான்.

அது கேட்ட இளையகாவலாளனான **வியாக்கிரவீரன்** "எங்கள் அரசுரிமைச் செல்வமே, முதன்முதற் பின்முதுகு காட்டியோடின பழிகாரர் இருவருந் தங்களால் ஒன்றுஞ் சாயாது என்று கண்டவுடனே துப்பாக்கியை எடுத்துச் சுட்டனர்; என் சொற்படியெல்லாம் வட்டமாய்த்திரிந்தும் முன்னோடியும் பின்னோடியும் நடக்கின்ற என் குதிரையின் இலாகவத்தி னாலன்றோ தங்களை விசுவசிக்கும் ஊழியக்கார னான அடியேன் தப்பிப் பிழைத்துத் தங்களோடு இப்போது பேசிக் கொண்டிருக்கின்றேன்!" என்றனன்.

என்றதுங் **கேசரி வீரன்** "என் காதருகிலும் விசைக்காற்று விறுவிறுவென்று வீசுதல் போலக் குண்டுகள் சுழன்று போயின. அதுகிடக்க நாம் கௌதமசாக்கியரை வணங்குவேமாக! வெற்றி நம்பக்கமாயிற்று. வியாக்கிர வீரன் தோளில் வாள் வெட்டுப் பட்டது ஒன்று தவிர, நாம் வேறோர் இடையூறு மின்றி வந்து சேர்ந்தமை வியப்பேயாம்." என்று மொழிந்தான்.

இங்ஙனம் பேசிக்கொண்டே நீலலோசனனும் அவன் காவலாளரும் வழி பிடித்துப் போயினர்; அரசிளைஞனும் இப்போது தன் காவலாளருடன் சேர்ந்து போயினான்; மற்றொரு முறையும் வழிமறித்தல் நேரிடுவதாயின் அதற்குச் சித்தமாய் உபயோகித்தற்பொருட்டு மூவருந் துப்பாக்கியைக் கையில் ஏந்திய வண்ணமாய்ச் சென்றனர்.

செல்லும்போது சிறிது நேரங்கழித்துக் கேசரிவீரன் "எங்கள் அரசே நம்மை வழிமறித்தவர்கள், சோழ நாட் டார்க்கும் மலைநாட்டார்க்கும் சிலகாலமாய் பெரியதோர் அச்சத்தினை யுண்டுபண்ணிவருங் கள்வர் தலைவனைச் சேர்ந்த

வர்களாயிருக்கலாம் என்பது தங்களுக்குத் தோன்றவில்லையா?” என்று கேட்டனன்.

“அதற்கு நீலலோசனன் நல்லானைக் குறிப்பிக்கின்றனையோ? ஆம், அவனைப்பற்றிப் புதுப்புதுக் கதைகள் இந்நீலகிரி மலைச்சாரல் எல்லையைத் தாண்டிக் குடகிலிருக்கும் நம்முடைய செவிகளுக்கும் எட்டுகின்றன; உனக்கு உண்மையைச் சொல்லுகின்றேன், நான் அந்தக் கதைகளை ஒருசிறிதும் நம்புவதேயில்லை. **நல்லான்** என்னும் ஓர் ஆளே உண்டென்பது பெருங்கட்டு, அவன் ஒரு மனப்பேய் தான்” என்றனன்.

“எங்கள் தலைவ, **நல்லான்** என்பது கட்டாயிருக்கலாம், மெய்காப்பான சில துருப்புக்களுடன் நீங்கள் பத்திரமாய்ப் போகலாமென்று சிலர் கூறிய உறுதிமொழிக்கும் மாறாகச் சென்ற இரண்டொரு நாழிகை யனுபவத்தினாலேயே இப்பக்கங்களில் ஆயுதபாணிகளான ஆறலைகள்வர் கூட்டம் உண்டென்பது நமக்குப் புலப்படவில்லையா?” என்று **கேசரி** வீரன் வினவினான்.

அதற்கு **நீலலோசனன்** “ இப்பிராயணஞ் செய்யும்படி என்னைத் தூண்டுதல் செய்தவோர் திருமுகங் கொண்டு வந்தவனான அந்த நீலகிரி நகரத்திளைஞன்றான் அங்ஙனம் உறுதியுரை மொழிந்தான். அவன் தான் மெய்யென்று நம்பினதையே கூறினான், அதுவேயுமன்றி நாம் போவதைப் பிறர் கவனியாத வண்ணமாய் அன்றோ பிராயணஞ் செய்யும்படி கற்பிக்கப்பட்டோம்--ஆ! அதோ எதிரே ஒரு குடிசை தோன்று கின்றது! அங்கே நாம் கடுகச் சென்று, அங்குள்ளோர்க்கு இங்கே நிகழ்ந்தனயாவும் தெரிவிப்போம். அவர்கள் நாம் வழியிலே போட்டு வந்த பிணங்களை அப்புறப் படுத்துவதற்கு வேண்டுவது ஏதேனுஞ்செய்வர்.

அப்படியே அம்மூவருங் குடிசையண்டைபோய்ச் சேர்ந்தனர்; அங்கிருந்த முதியோன் ஒருவனுக்கு நிகழ்ந்த வெல்லாஞ் சொல்லப் பட்டன. நல்லான் நடத்தும் ஆறலை தொழில்கள் இனிது நடைபெறுகின்ற மேற்கணவாய் மலைச்சாரலுக்கு நெடுந் தூரத்தேயுள்ள இடங்களில் இங்ஙனம் வழிமறிப்பு நேர்ந்ததைப் பற்றி அவன் மிகவும் வியப்படைந்தவன் போற் காணப்பட்டான். அதனோடு மூன்று பௌத்தரால் மிக

வலியரான ஆறுகள்வர் முறியடிக்கப் பட்டதனைப்பற்றி அவன் பின்னும் மிகுந்த வியப்படைந்து அவர்கள் சொற்களில் அவநம்பிக்கைப்படவே, அவர்கள், “கொல்லப்பட்ட அக் கொடிய கள்வர் மூவர் உடம்பும் பிணமாய்ப் பாதையிற் கிடத்தல் காணலாம்” என்று உறுதியுரைத்தனர்.

இங்ஙனம் மலைநாட்டுக் காவலதிகாரிகளுக்குத் தாஞ் சொல்ல வேண்டிய கடமையைச் செய்து விட்டுச், சிலநேரம் அக் குடிசையில் விடுதிகொண்ட பின் **நீலலோசனன்** தன் காவலாளர் இருவருடன் பயணம் பண்ணப் புகுந்தனன். இக் காவலாளர் இருவரும் வெறும் ஊழியக்காரர் அல்லர். நீலலோசனன் சிறந்த மன்னன் ஆகையால், அவனுடன் வந்த இவர்கள் பிரபுக்கள் என்று அறிய வேண்டும்.

இங்கு இவ்வர**சிளைஞன், சேகரி வீரன், வியாக்கிர வீரன்** என்னும் இருவருடனும் போய்க் கொண்டிருக்கும் போது, நமக்குநல்ல சமயம் வாய்த்தமையால் அவன் உடம்பின் அழகிய தோற்றத்தைப் பற்றி வருணித்துச் சொல்ல விரும்புகின்றோம். இவன் மிகவும் அழகாயிருந்தான் என்று முன்னமே பொதுவாகச் சொன்னோம், இவனுக்குக் கரிய அளகமுங் கரிய பெரிய விழிகளும் இருந்தன; இவன் மீசையானது கைவல் ஓவியன் துகிலிகையால் வனைந்தவாறு போலப் பளபளவென்று மேலுதட்டின் மேற் சுருண்டிருந்தது. இவன் மூக்குக் கழுகு போற் சிறிதே நுனியில் வளைந்திருந்தது, இதுவும் முகத்தில் உள்ள மற்றை உறுப்புகளும் மிக மெல்லியதன்மை யுடையவாயிருந்தன. இவன் உடம்பின் நிறம் பெரும்பாலார்க்கு உள்ளது போலக் கரியதாயில்லை ஆயினும் ஞாயிற்றின் வெப்பத்தாற் சிறிது பழுப்பு வண்ணமாய்த் தோன்றுதலின் இவனுடைய நிறம் இளமையுருவிற் சிறிதுபருவமுதிர்ச்சிக் காட்டிற்று. இல்லா விட்டால், இவன் நிறம் இன்னுந் தெளிவாய் இளமைப் பருவத்திற்கு இசைந்ததாய் விளங்கும். இவ்வாறு உடம்பின் நிறம் பழுப்பாய்த் தோன்றுதற்குக் காரணம் ஆண்பாலர்க்குரிய வேட்டையாடுதலில் இவன் மிகுந்த விருப்பமுடையோனாய்ப் பகற்காலங்களில் திரிவதொன்றே என்று தோன்றுகின்றது. வேட்டையாடுவதிலுங் குதிரையேற்றத்திலும் இவன் நிரம்பிய திறமை வாய்ந்திருந்தனன். சிறிது நேரத்திற்கு முன்னே வந்து வழிமறித்த கள்வர்களை அஞ்சாது இவன் புறங்கண்டு வெற்றி

சிறந்து விளங்கினதைப்போலவே, இன்னுங் கடுமையான போர்முகங் களிலெல்லாம் அங்ஙனமே மறஞ்சிறந்து திகழ்ந் தனன், இவனிடத்துப் பொறுமையும் தயாளகுணமுங் குடி கொண்டிருந்தன; இன்னும் அவன் ஒழுக்கங்களினெல்லாம் ஆண்டன்மையோடு கூடிய ஒரு பெருந்தன்மை சிறந்து காட்டுவதாயிற்று. அச்சம் என்பதனை இவன் அறியவே மாட்டான். அபாயம் என்கின்ற சொல்லைக் கேட்பினும் நகையாடுவான். இவ்வியல் பினனாயினும், ஒரு பிராணி வருந்துதலைக் காணினும் பிறசீவர் துன்புறுதலைக் கேட்பினும் இவன் கண்களில் நீர் முத்து முத்தாய்த் துளிக்கும்

இவனுக்கு இப்போது வயது இருபத்தொன்று, இவனுடம்பு உயர்ந்த பூங்கொம்புபோல் மெல்லியதாயும், திருந்திய அமைப்புடையதாயும் மதனவேள் போலக் கைகால் முதலான உறுப்புக்கள் நீளமாயும் துவண்டன. வழுவழுப்பான வெள்ளைச் சலவைக்கல்லில் இவன் உடம்பின் அங்கங்களை நன் மாதிரியாக வைத்து உளியாற் செதுக்கி இழைத்து ஒரு பதுமை அமைக்கப்படுமாயின் அது வழுவற்ற ஆண்டன்மையினைக் குறிக்கும் வடிவமாய்ப் பிரசித்தி யடையுமென்பது திண்ண மேயாம். ஆகவே அவன் அங்கங்களின் அமைப்பின் அழகை யாம் எங்ஙனம் வருணிக்க மாட்டுவேம்! அவன் நெற்றி அகன்று அமைந்து கிடந்தது; தடிப்பின்றி மிக முரிந்து வளைந்த இவனுடைய புருவங்கள் மிகவும் கரியவாய் இருந்தன; கண்ணிறைப்பை செவ்வையாகத் திறந்திருந்தன; விழிகள் பருமனாய் இமைகளிற் பெண்களுக் கிருப்பதுபோற் கருகி யடர்ந்த மயிர்வரிசையும் இருந்தன; தன்னை உயர்த்திப் பிறரைத் தாழ்த்துதல், செருக்கடைதல், தறுகண்மை முதலான தீயகுணங்கள் இவனிடத்து ஒருசிறிதும் இல்லை. ஆயினும் ஆண்டன்மையும் போர்முகத்து அஞ்சாமையும் என்கின்ற உயர்குணங்கள் வாய்க்கப்பெற்ற இளைஞர்க்குத் தம்உயர்வு தாமேயறியும் ஓர் உணர்ச்சி இயற்கையாக உண்டாதல்போல இவனிடத்தும் இப்பெற்றிப் பட்டதோர் உணர்ச்சி தோன்றுதல் உண்டு. இவன் கன்னமீசை வைத்திராவிடினும், மேல் இதழில் உள்ள கரியமீசையும், எலுமிச்சம்பழத்தைவிடச் சிறிது பழுப்பாகத் தோன்றும் மேனியின் நிறமும், எதற்கும் அஞ்சாத கண்கள் நோக்கமும் இவன் முகத்தில் ஓர் ஆண்டன்மை விளங்கத் தோற்றுவித்தன.

இளைஞனான **நீலலோசனன்** இங்ஙனம் பேரழகு டையனாய்த் திகழ்ந்தனன். அவன் உடுத்திருந்த உடைகளை நோக்குமிடத்து அக்காலத்து அரசர் வழக்கப்படியே அணிந் திருந்தனன் என்பது தோன்றிற்று. இருண்ட பச்சை நிறமுடைய சட்டையின் ஓரங்களினும், மார்புப்புறத்தினும் பூத்தொழில் செய்யப்பட்ட பொற்சரிகை பின்னப்பட்டு மினுமினுவென்று மிளிர்ந்தன. இவன் அரையின் கீழ்த் தரித்திருந்த காற்சட்டையில் நீளத் தைத்திருந்த பொற்பட்டையினால் அரைக்கீழுள்ள உறுப்பு கள் குதிரையை நடாத்தும் போது மிகவுந்திருந்திய இலக்கணம் வாய்ந்து தோன்றின. இவ்வாறு இவன் அணிந்திருந்த உடை இவன் அங்கங்களில் இறுகப்பொருந்தி இவன் உருவவழகினை நிரம்பவுஞ் சிறப் பித்துக் காட்டிற்று. இவன் தொங்கவிட்டிருந்த கொடுவாளுறை நாம் முன்மொழிந்தபடியே பொன் மினுக்குப் பூசப்பட்டிருந்தது. அதன் பிடியில் உயர்ந்த முழு மணிகள் அழுத்தப்பட்டிருந்தன. குதிரை மேற்போர்வையில் பொற்சரிகை யினால் அழகிய உருக்கள் பின்னப்பட்டு விளங்கின. எல்லா வற்றானும் ஆண்டன்மை இனிதுதோன்றக் குதிரைமேல் வரும் **நீலலோசனன்** அழகிய உருவமானது அம்மலைநாட்டு மகளிர் அவன் செல்வதைப் பார்க்கும்பொருட்டுத் தங்குடிசைகளி னின்றும் புறம்வந்து நோக்குகையில் அவர்க்கு அவன்மாட்டு மிகுந்த விருப்பத்தையும் பெருங்காதலினையும் விளைவித்தது; இவனைப்பார்த்த அம்மலைநாட்டு ஆடவரோ இவ்விளைஞன் குதிரைமேல் அமர்ந்துவரும் இலேசான நிலையினையும் ஆண்ட கைமையினையும் வியந்து நோக்கி அவனைத்தாங்கிய குதிரை யின் அங்க அமைப்பையும் உற்றுப்பார்த்து மகிழ்ந்தனர். இங்ஙனம், இவன் வருகையில் இவனுடன் பின்வருவோர் இருவரேயாயினும், இவன் உருவத்தோற்றமானது அங்குள்ளார் கருத்தையெல்லாம் இவன் வயப்படுத்து இழுத்தது.

அவனும் வழிதொடர்ந்துபோன வண்ணமாய் இருந்தனன்; இவ்வாறு பலநாழிகை கடந்தன; தானுந் தன்காவலரும் இடையிடையே தங்கி இளைப்பாறிக் குதிரைக்குந் தீனி கொடுத்துக்கொண்டு கடைசியாக மூன்றுவழிகள் பிரியும் ஓரிடத்தில்வந்து சேர்ந்தனன். இப்போது அவர்கள் எந்தவழியிற் செல்வதென்று தெரியாமல் திகைத்தனர்; இம்மூன்றில் எது நேராக நீலகிரி நகரத்திற்குச் செல்லுகின்ற தென்பதைக் கேட்டு

அறியும்பொருட்டு அருகாமையில் ஏதேனுங்குடிசைவீடு இருக்கின்றதாவெனத் தேடினர். அச்சமயத்தில் தனக்குச் சிறிது தூரத்தில் ஒருகரை மேல் கிழவனொருவனிருப்பதை **நீலலோசனன்** கண்டான். இக்கிழவன் அம்மலைநாட்டில் தாழ்ந்தகுடியிற் பிறந்தவர்க்குரிய முறைப்பான உடை கட்டியிருந்தான்; பணிசெய்யப்போம்பொழுது இளைப்பாறுதற் பொருட்டு அங்கேசிறிது நேரம் இருந்தவனாகக் காணப் பட்டான். இவனைப் பார்த்து வழி எதுவென்றுகேட்ப, அவனுந் தானிருந்த வழியே நேராக நீலகிரி நகரத்திற்குச் செல்லுகின்ற தென்று உரைத்தான். உடனே **நீலலோசனன்** அவன் முகமாய் ஒரு பொற்காசு வீசினன். அந்நாட்டிலுள்ளோர் வறியரா தலால் இப்பொற்காசினைக் கண்டவுடன் மிகப் பணிந்து அன்பு தோன்ற அஃதீந்தோனை வாழ்த்துவர், மற்று இக்கிழவனோ அக்காசினை மிகவும் அலட்சியமாய் எடுத்துக் கொண்டு அக் காசு தந்த இளைஞனை நோக்கி வெறுப்புடன் சுருக்கமாகச் சிலநன்றியுரை கூறியபின், அரசிளைஞனுக்குத் தான் காட்டிய வழிக்கு எதிர் முகமாய்ப்போயினான்.

போனவன் அப்பக்கத்துள்ள அடர்ந்த காட்டினுள்ளே புகுந்து மரத்தொகுதிகளின் நடுவே மறைத்து அமைக்கப்பட்ட தன்குடிசையினுள் நுழைத்து,. தான் எடுத்துவந்த பொற் காசினைத் தரைமேல் வீசியெறிந்து மிகவும் வெறுப்போடு "ஒருகணமாத்திரமாவது என் பகைவன் கையினின்றும் இக்காசினைப் பெறும்படி நேர்ந்ததே! அவன் என்னைத் தோற்க அடித்தனனே! நான் அவனால் தாழ்வடைந்தேனே" என மிக வருந்திக் கூறினான்.

அப்போது அக்குடிசையிலிருந்த நடுத்தர வயதுடைய வனான ஒருவன் அக்காசை எடுக்க விரைந்து போய் "என் நண்பனே உனக்கு யாது நேர்ந்தது? ஏன் இங்ஙனம் உரக்கக்கூவி வருந்துகின்றாய்?" என்று வினவினான்.

அதற்கவன் "அது கிடக்கட்டும். நீ கொடுத்த இவ் வேடத்தை நீயே எடுத்துக்கொண்டு, எனக்குரிய உடையினை என்னிடங் கொடுத்துவிடு! கூலித்தொழிலாளிக்குரிய இவ்வேடத் தினால் யான் ஒரு தொழுத்தைபோல் நடத்தப்பட்டேன். ஆயினும் அச்செருக்குடைய பௌத்த இளைஞன் அக்காசினை வீசியபோதே, அவனை வஞ்சித்தேன்! என் முகத்திற் குழப்பித்

தடவின இவ்வழுக்கைக் கழுவுவதற்கும், என் கரியமயிரை வெளுக்கச்செய்த இவ்வெள்ளைப்பொடியைப் போக்குவதற்கும் எனக்குத் தண்ணீர் கொண்டுவா" என்றான்.

அக்குடிசை வீட்டிற்கு உரியனான அம்மற்றையோன், தான் முன்னறியாத அப்புதியோனைத் தான் "நண்பனே" என்றழைப் பினும், இப்போது வெருக்கொண்டு நோக்கிப் பின் அவன் அலட்சியமாய் வீசிய பொற்காசைக் கையில் எடுத்துக் கொண்டு "எதுவாயிருப்பினும் நீ நினைந்த கருமத்தை முடித்தற்கு மேற்கொண்ட இவ்வேடம் உனக்குப் பயன் பட்டதா?" என்று கேட்டான்.

கேட்டதும் "அது கிடக்கட்டும், எனக்குத் தண்ணீர்கொடு; என் உடைகளையும் படைக்கலங்களையும் கொண்டு வந்து வை! என் குதிரையைப் பிடித்துவா! என் சொந்த மலை நாட்டிற்குப் போய்த் திரும்பவும் நான் இளைப்பாறுதற்கு மிக விரும்பு கின்றேன்" என்று அவன் மறுமொழி புகன்றான்.

அவ்வாறு அவன் விரும்பியபடியே அக்குடிசைக்காரன் யாவுஞ் செய்தானாக, அம்மற்றையோன் தன்முகம் மயிர் முதலியவற்றைக் கழுவிக்கொண்டு, தான் முன்மேலிட்ட ஏவலாளன் உடுப்புகளைக் களைந்து கொடுத்துத், தன்னுடை களை யுடுத்துக் குதிரைமேலேறி விரைந்துபோயினான். இவன் யாரோவெனின் கள்வனான **இருளனே**யன்றிப் பிறன் அல்லன்.

இனி இங்ஙனம் பொய் வேடக்காரனால் வழிதவறிச் செல்லுகின்ற **நீலலோசனனையும்** அவன் மெய்க் காப்பாளர் இருவரையும்பற்றிக் கவனிப்போம்.

"அம்மனிதனிடத்தில் அவமரியாதை தவிர இன்னும் ஏதோ சில தீயகுணங்கள் இருப்பது மாட்சிமை நிறைந்த தங்கட்குத் தோன்றுகின்றதா? நான் அவன் முகத்தில் ஒரு தீக்குறிதோன்றிய தென்று நினைத்தேன். அவன் தங்கள் திருமுன்பு பேசுகையில் தங்கள் முகத்தை நோக்காமல் தன் கைக்கோலால் கீழே கிடந்த கற்களைத் தட்டிக்கொண்டு இருந்தனனே" என்று நுட்பவறி வினனும் மிக்க சாக்கிரதையு டையனுமான **கேசரிவீரன்** கூறினான்.

அதற்கு நீலலோசனன் தன் கரிய மீசைமயிரோடு இகலிமுத்துவரிசை போன்ற அழகிய பற்கள் துலங்க நகைத்து

"அரண்மனையில் நடைபெறும் மரியாதை ஒழுக்கங்களை மலைநாட்டு ஏவலன்பாற் காண்டற்கு விரும்புதல், என் அன்புள்ள கேசரிவீர, பொருந்துமா? அவன் நம்மை ஒழுங்கான வழியில் செலுத்தியிருந்தானாயின், அவனது நன்றியில் வொழுக்கத்தைப் பற்றிச் சிறிதும் நாம் கவலல் வேண்டாம்" என்றனன்.

அதற்குக் கேசரிவீரன் "நல்லது, அவன் நமக்குச் செவ் வையான வழிகாட்டி யிருந்தானாயினன்றோ? அஃதின்னுஞ் சில நாழிகைக்குள் தெரிந்துவிடும். தங்கள் மாட்சிமை நிறைந்த சமூகத்திற் பெரிதும் வணக்கமுடையேனாய் நான் நினைத்துக் கூறுவது இது. போகப்போகக் குறுகிச் சந்துவழியாய்ப்போகும் இந்நெறி நீலகிரி நகரத்திற்கு நேரே செல்லும் இராச பாட்டை யாகச் சிறிதும் தோன்றவில்லை" என்று விடை பகர்ந்தான்.

பாதையும் உண்மையாகவே குறுகலாய்த்தான் இருந்தது; அது குறுகிச் செல்லச்செல்ல அவ்விடம் நிரம்பவும் பேரழகு டையதாய் விளங்கிற்று. தலைக்குமேலே ஒன்றோடு ஒன்று பின்னலாய் வளர்ந்திருக்கும் மரங்கள் தண்ணிய நிழலைப்பயந்து வழிச்செல்வோர்க்கு ஞாயிற்றின் வெம்மையை மாற்றின. கோடிக்கணக்கான நறுமலர்கள் அக்கரையைக் கவிந்திருந்தன. அவ்வியல்பை நுணுகி நோக்கும்போது, உலகமங்கை தன் மலர்ச்சுமையைத் தாங்கிப்போவதற்கு ஏலாமல் அயர்ச்சி யடைந்து அவற்றை அங்கே சொரிந்துவிட்டாற் போலத் தோன்றிற்று; முந்திரிக்கொடிகள் மிகத் தித்திப்பான பழக் குலைகளைச் சுமந்து கிடந்தன; இன்னும் பலவேறுவகைப்பட்ட இனிய பழங்களும் வழிச்செல்வோர் கைக்கு எட்டிய தூரத்தில் தொங்கிக்கொண்டிருந்தன.

"இந்த நெறிதான் நீலகிரி நகரத்திற்கு நேரே செல்வ தாயிருக்க வேண்டுமென உறுதியாக நம்புகின்றேன். இது போகப்போக இவ்வாறே அழகிற் சிறந்து தோன்றுமென்று புலப்படுகின்றது. எல்லாவற்றிற்கும் நாம் போம்வழியில் யாரேனும் எதிரேவந்தால் அவரைக்கேட்போம், அல்லது ஏதேனுங் குடிசைவீடு அருகாமையிலிருந்தாலும் தெரிந்து கொள்வோம் - அதோ ஒரு சிறிய ஓடை ஓடும் சிற்றொலி கேட்கின்றது! நான் மிகவுந்தாகங் கொண்டிருத்தலால் அவ் வோசை எனக்குப் பண் இசைத்தாற்போல இருக்கின்றது; இங்குள்ள கொடிமுந்திரிப் பழக்குலைகளை நெருக்கிப் பிழிந்

தெடுத்த இரசத்தை அருந்துதலைக்காட்டினும், தாகத்தினால் வறண்டு உலர்ந்து போயிருக்கும் என் நாவிற்கு இதன் நீரில் ஒரு குடங்கையளவு முகந்து உண்ணுவது மிகவும் ஆரோக்கிய மாயிருக்கும். வாருங்கள்! நாம் முன்னேபோய், மொழுமொழு வென்று ஓடும் இவ்வாய்க்காலுக்கு வழிதெரிந்து கொள்வோம்” என்று **நீலலோசனன்** மொழிந்தான்.

இவ்வாறு சொல்லிக்கொண்டே **நீலலோசனன்** தன் குதிரையை விரைந்தகதியிற் செலுத்தச் சில நிமிஷங்களுள் எல்லாம் அவ்வழி ஓர் அகன்ற இடத்திற்கொண்டுபோய் விட்டது. அதற்குமேல் வேறு வழியும் அங்கே காணப்பட வில்லை.

உடனே **நீலலோசனன்** மிகநெருங்கிய மரஅடர்ப்பின்கீழ்ச் சணலாடையாற் சமைந்த ஒரு கூடாரத்தைக்கண்டு “நாம் வழி தெரிந்துகொள்ளுதற்கு இங்கு யாரேனும் இருப்பர். அதோ ஒரு கூடாரம் பார்!” என்று தன் காவலாளரை நோக்கிக் கூறினான்.

முன்னிலும் இப்போது அவ்வாய்க்காலின் ஓசை மிகவுந்தெளி வாய்க்கேட்டது; நீர் பளிங்குபோல் ஒழுகும் அவ்வருவியின் பக்கத்தேயுள்ள ஓரிடத்தில் **நீலலோசனன்** சென்றவுடனே, அங்குப் பேரழகாற் சிறந்த ஓர் இளம்பெண் தன்முகமாய்வருங் குதிரைக்குளம்படியின் ஓசையும் அறியாமல் மிகவும் ஆழ்ந்து நினைந்த சிந்தையினளாய் அமர்ந்திருப்பக் கண்டான்.

## அதிகாரம் - 3

# தெளிநீர்வேலி

***நீலலோசனன்*** *குதிரைக் கடிவாளத்தைப் பிடித்து இழுத்தவாறே அவ்விளம்பெண் முகத்தை விளங்கப் பார்த்துக் கொண்டு நெருங்கிப்போய் அவள்பக்கத்தே சென்று நிறுத்தி னான். அவள் உருவத்தின் பேரழகைப்பார்த்துப் பெரிதும் வியப்படைந்தனன். முதற் கணத்தே அவன் அறிவைக் கலக்கி விட்ட அப்பேரெழில் இப்போது அவன் உள்ளத்தே பையப்பைய நுழைந்து மயக்கிற்று. அவள் அவ்வாய்க்கால் ஓரத்தில் இருந்தமையால் தன் அடிகளை அதன்நீரிற் கழுவிக் கொண்டிருந்தனள் போலும்! அவள்பக்கத்தே யாழ் என்னும் ஓர் இசைக்கருவியிருந்தது. அவள் மிகவும் ஆழ்ந்த சிந்தனை யிலிருந்தமையால், தன்னைச்சூழவிருந்த அக்கருவியினையும் பிறவற்றையும் தான் சிறிதுங் கவனித்திலள்.*

*மிகவுங்கரிய அவள் கூந்தல் தனக்கு இயற்கையிலேயுள்ள வழுவழுப்பினால் விளக்கமுடையதாய் இப்போது ஞாயிற்றின் கதிர்கள் தோய்தலால் மிகமிளிர்ந்து கற்றை கற்றையாய் அவிழ்ந்து விரிந்து கிடந்தது. பால்நுரைபோன் மிகமெல்லிய தான வெள்ளிய சல்லா மேல் விலகித் தோட்புறத்திற் றொகுக்கப் பட்டுப் பசிய புல்நிலத்தில் தாழவீழ்ந்திருந்தது. மற்றை அங்கங் களின் அமைப்புக்கு இசையப் பொருந்தித் திருத்தமாகக் கடைந் தெடுத்தனபோல் நீள ஒழுகிக்கிடக்கும் அத்தோள்களின் சரிவில் கொழுமையான அம்மயிர்க்கற்றைகள் அலைந்தன. அத்தோள் களின் மணிக்கட்டுகளில் மாற்றுயர்ந்த பொன்னாற் செய்யப் பட்ட தொடியணிந்து விளங்கின. இவ்விளம்பெண் சிறிது உயரமான வடிவுடையளாயிருந்தனள். மங்கைப்பருவத் தினளா கலின், இவள் அங்கங்களெல்லாம் வளர்ந்து நிரம்ப வேண்டும் நிலையை எய்தித் திரண்டு உருண்டு மறுவின்றிச் செவ்விதின் விளங்குவவாயின. இவள் மேனிநிறம் கரியதா தலின்றித்*

தளுதளுப்பாக வெளிறிய வண்ணமுடையதாய் மிகவுந்தெளிந்து இலங்கிற்று. செழுங்குருதி கன்னங்களிற்பரவிச் செவ்விய வண்ணத்தோய்ச்சல் உண்டாக்கிற்று. அவள்முகம் கோழி முட்டை வடிவினதாய் வயங்கிற்று. அன்னப்பறவைபோல இயற்கைநலங் கனிந்து நீண்டு அடங்குங் கழுத்தின்மேல் இவள் தலை நிறையொக்கப் பொருத்தப்பட்டிருந்தது. முதலிலே **நீலலோசனன்** கண்ட சில நிமிஷங்களாக, இவள் பரிய விழிகளைப் பொதிந்துகொண்ட மூடிகளின் இறைப்பைமயிர் கன்னத்திற்படிந்திருந்தன. இப்போது இவள் தன் விழிகளைத் திறந்தவுடனே கரியபுட்டிலினின்றும் புறப்பட்ட இருபெரிய கனவுகள் அவன் உயிரின் ஆழ்ந்த அறைகளினுட் புகுந்து அறிவை மயக்குதல்போல இரண்டு ஒளிகள் அவன்மேற் பாய்ந்தன. அவள் அணிந்திருந்த ஆடை மிக உயர்ந்ததென்று முன்னரே கூறினோம். மேல் இட்டிருந்த உடை பொற்கொட்டை களுடையனவாய் வெறுங்கரியபட்டினாற் சமைக்கப்பட்டி ருந்தது; இடையிற் பூட்டியிருந்தமேகலை கொளுத்துவாயில் உயர்ந்தவயிரமணிகள் அழுத்தப்பட்டு அவிர்ந்தன;ஆடையின் ஓரங்கள் வண்ணத் தோய்ச்சல் சிறிதாயுள்ள பட்டில் பூத் தொழில் செய்யப் பட்டிருந்தன. இப்பெண்ணின் முதற்றோற்றத் தினாலேயே இவள்யாரோ ஒரு பிரபுவின் குடியிற்பிறந்த அருமை மகளாதல் வேண்டுமென்பது நன்கு அறியக்கிடந்தது. இப்பெண் இருந்த இடத்திற்குச் சிறிது தூரத்தில் அமைக்கப் பட்ட கூடாரவாயிலின் கீழ்ப் பூச்சிதறிய பசும்புல் நிலத்தில் நன்கு அணிந்த இருமகளிர் சாய்ந்து கொண்டிருந் தமையினை **நீலலோசனன்** கண்டபோதும் இக்கருத்து வலியுறுவதாயிற்று.

இனி யிவற்றையெல்லாம் பார்த்த பௌத்த இளைஞனான நீலலோசனன் அறிவு மயங்கிப் பரவயமாகினான் என்பது ஒரு வியப்பன்று; ஏனெனில் அக்காட்சி முழுவதும் ஒருவன் அறிவைமயக்கி அவனுக்கு உவகையினை மிகுவிப்பது திண்ண மேயாகலின் என்க. ஆழத்தில் கிடக்கும் கூழாங்கற்படைகளும் கண்ணுக்குப் புலனாகும்படி பளிங்குபோல் தெளிந்து ஓடும் அந்த நீர் ஓடையும், ஞாயிற்றின் கதிர்களையெல்லாந் தன்னிடத்துச் சிறைப்படுத்திப் பொதிந்து வைத்து இப்போது அவற்றை மேல் எல்லாம் வார்த்துக்கொண்டாற் போலப் பசிய தழைகளெல்லாம் பொன்னென மிளிரக் கிளைநெருங்கித் தண்ணிழல்பயந்து

தோன்றும் மரங்களும், பலவேறு வகைப் பட்ட அழகும் நிறனும் உடையவாய்; பசும்புற்கற்றை மேல் இறைந்து கிடக்கும் பல்லாயிரம் பூக்களும், அவை முகை விரித்தலாற் காற்றிற் பரந்து உலவுங் குளிர்ந்த நறுமணமும், மேலே கவிந்து திகழும் நீலவானும் என்ற இவையெல்லாம் இவ்விடம் அரம்பைமாது போல்வாளான இப்பெண்மணி தனியளாய் இருத்தற்குப் பெரிதுந் தகுதியுடைய கற்பக இளங்காவேயென விளங்கச்செய்தன. மேலும், இங்ஙனம் வழி நடந்துவரும் இம்மலைநாடுளைப்பற்றித் தான்கற்ற கட்டுக்கதை களானும் அற்புத வரலாறுகளானும் உணர்ந்த படியே நற்குண முடையளான ஓர் சூர்மகள் வசிக்கும் மாயா நிலத்திற்றான் வந்து சேர்ந்தனமோ என்று **நீலலோசனன்** தன் இளம்பருவத் தியற்கையாற் பலவாறு சிந்திப்பானாயினான்.

இம்மாது, அவ்விளைஞன் வருதலை முன்னுணர்ந்து குதிரையடி யோசையையும் அறியாமல் அவ்வளவு ஆழ்ந்ததோர் சிந்தனையில் தன் அறிவை ஒருங்கச்செய்து அவனைப்பாராது உண்மையாகவே இருந்தனளோ? அல்லது, தான் அவனைப் பார்க்குமுன்னே அவன் பேரழகாற் சிறந்த தனது உருவத்தைக் கண்டு கண்களுக்கு விருந்து செய்கவென்று எண்ணி அறியா தாள்போன்று வாளாது இருந்தனளோ? நாம் அறியோம். ஆயினும், இங்ஙனம் ஆழ்ந்ததோர் சிந்தனையிற் றன்னை யிருத்திப் பல நிமிஷங்கள்மாத்திரம் கழிந்தனவென்பது நிச்சயம். கழிய, உடனே தம் கண்களை ஏறிட்டு அவனை நோக்குதலும், அவள் மாட்டு ஒரு தடுமாற்றமும் வியப்புங் குறிப்பாய்த் தோன்றி மறுகணத்தே மறைந்தன. திரும்பவும் அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தனள். உடனே தான் அச்சமயத் திற் செய்தற்குரிய ஒரு விதியினை மறந்துவிட்டாற் போலத் திடுக்கிட்டுத் தன் முதுகின் புறத்தே குவிந்து கிடந்த சல்லாவினை யிழுத்து முகத்தை மூடிக்கொண்டனள். அவ்வாறு மூடிக் கொள்ளுகையில் தன் கண்ணுறை மணியினுள்ளே சென்றடங்கு வதான ஒருவகைக் குளிர்ந்த ஒளிநோக்கத்தோடும் **நீலலோசனன்** மேற் றன் பார்வையை ஊன்றினாள்.

**நீலலோசனன்** அப்பெண்மணியைப்பார்த்துப் பணிவாய் வணங்கி வாழ்த்தும்போது, பின்றாங்கிவந்த இவன் காவலாளர் இருவரும் இவனுக்குப்பின்னேவந்து சேர்ந்து மரியாதையின் பொருட்டுச் சிறிது அகன்று குதிரையை நிறுத்திக்கொண்டனர்.

உண்மையிலேயே **கேசரிவீரன்** அப்பெண்ணைப் பார்த்த விடத்துத் தான்செல்லவேண்டிய வழிதெரிவதற்குச் சமயம் நேர்ந்தது என்பதைத்தவிர பிறிதொன்றும் நினைந்திலன். **வியாக்கிரவீரனோ** சிறிது இளம்பருவ முடையனாதலால் பெண்மக்கள் அழகின் நலத்தைக்கண்டு மயங்குதற்கு இடம் பெற்று, அவள் முகத்தின்மேற் சல்லாவை இழுக்கும் அக்கணத்தே அவள் வடிவழகைக் கண்டு வியந்து "பௌத்தன் அறிய இவள் நிரம்ப அழகுடையளாய் இருக்கின்றனள்!" என்றான்.

அவ்வுரைக்கு ஒத்து நீலலோசனனும் "அழகா! துறக்க நாட்டிற்குரியரான அரம்பைமாதர்களில் இவர் ஒருவராக இருத்தல் வேண்டும்! இவர் இந்நிலமகள் அல்லர்" என்று கூறினன்.

இளைஞனான தன் எசமானன் இங்ஙனங் காதல் வயப்பட்டுக் கூறியதைக்கேட்டுக் **கேசரிவீரன்** முகத்தில் ஒரு வெறுப்புக்குறி தோன்றிற்றாயினும், தனக்குயர்ந் தோனிடத்துப் பாராட்டு மரியாதையினால் வாய் பேசாதிருந்தனன். இப்போது நீலலோசனன் தன் குதிரையைச் சிலவடி முன்னேறச் செலுத்தி அம்மங்கையிருக்கும் இடத்திற்குப் பதினைந்துஅடி தூரத்தே நிறுத்தி மரியாதையோடு தாழ்ந்து "மாதரீர், நீலகிரி நகரத்திற்குச் செல்லும் வழியிதுவோ என்று அறியும்பொருட்டு, நுங்கள் ஆழ்ந்த சிந்தனையினிடையே நான் புகுந்து வினவுதலைப் பொறுக்கும்படி வேண்டுகின்றேன்" என்றான்.

அதற்கு அம்மாது, "நீங்கள் வருவதாகத்தோன்றும் வழிமுகமாய்ப் பார்த்தால், இது வழியன்று" என்று கரும்பினு மினிய சொற்களான் மொழிந்தாள்.

இதனைக் கேட்டதுங் **கேசரிவீரன்** மற்றையோனை நோக்கி "அவலட்சணமுள்ள அக்குடியானவனைப் பார்த்து நான் முன்னமே ஐயப்பட்டேன்" என்று மெல்லச் சொன்னான்.

இதற்குள் அம்மங்கை நீலலோசனனைத் திரும்பவும் பார்த்து "இந்நாடுகளில் திரிந்து பழக்கம் இல்லாதவர்கள் காணக்கூடாததாயினும், இராசபாட்டைக்கு இங்கேயிருந்து போகும் ஒரு சந்து வழியிருக்கின்றது. நானும் நீலகிரி நகரத்திற்குத்தான் போகிறேன்" என்றனள். இவ்வாறு சொல்லி இப்படிச்சொல்லியதே மிகுதியென்று எண்ணினாற் போலவும்,

இங்ஙனஞ் சொன்னமையால் தானுங் கூடப்போக விரும்பு கின்றனள் என்று நினைக்கப்படுமே என அஞ்சினாற் போலவுஞ் சடுதியில் மேலும் பேசுவதை நிறுத்திவிட்டாள்.

உடனே **நீலலோசனன்** "நங்கைமீர் நுங்கட்கு வேறு நல்ல துணையில்லாமல் எங்கள் துணையை ஏற்றுக்கொள்வீர் களாயின், நீங்கள் செல்லும் வழியில் நுங்களைப் பாதுகாத்துச் செல்லும் சமயம் எனக்கு வாய்த்ததைப்பற்றி மகிழ்ச்சியும் இறுமாப்பும் எய்துகின்றேன்!" என்று கூறினான்.

இதற்கு அந்த நங்கை ஏதும் உடனே மறுமொழி சொல்ல வில்லை; அவள் அணிந்திருந்த முக்காட்டின் மடிப்புகளின் வழியே அவள் முகம் சிறிது தோன்றியபோது அவள் திரும்பவும் ஆழ்ந்து சிந்திப்பதாகக் காணப்பட்டாள். கடைசியாகத் தான் அனுசரிக்க வேண்டும் ஓர் ஏற்பாட்டை முடிவு செய்தாள் போலச் சடுதியில் நீலலோசனனைப் பார்த்து "இப்படிப்பட்ட துணையோடு செல்வதில் அனுசிதமானது ஒன்றுமில்லை, முக்கியமாய் உண்மையைச் சொல்லுமிடத்து, இந்நேரம், என்னிடம் வந்து சேர்ந்திருக்க வேண்டியதக்க ஆண் துணை இன்னும் வராமையால் நான் மோசம்போனேன்; அல்லது இவ்விடங்களில் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கும் அவர்களை நானாவது போய்க் கண்டுபிடிக்கவேண்டும். என் கூடவந்த பணிப்பெண்கள் அருகாமையில் இருக்கின்றார்கள்; அவர்கள் உங்களுடன் வந்தவர்களை மரியாதையோடும் ஏற்றுக்கொள்வார்கள். யான் தங்கட்கு முன்னே ஏதோ கொண்டுவந்து வைக்கும் உணவை ஏற்றுக் கொள்ளத் தயை செய்வீர்களானால், தாங்கள் பயணப்படுவதற்கு முன்னே சிறிதாகாரம் செய்வது நல்லதாகும்." என்று முன்னிலும் இனிமைமிக்க குரலோடும் பேசினாள்.

உடனே **நீலலோசனன்** குதிரையை விட்டுக் கீழேகுதித்துப், பெற்றுக்கொள்ளுவதற்குத் தயாராய் நின்ற **வியாக்கிரவீரன்** கையிற் கடிவாளத்தை விட்டெறிந்தான். இவ்வாறு நேர்ந்த இச்சம்பவத்தைக்குறித்து விசாரமடைந்தவன் போலக் **கேசரிவீரன்** காணப்பட்டான்; ஆயினும், வாலிபப்பருவத்தி னனான தன் எசமானனைக் கண்டித்து ஒரு சொல்லேனுஞ் சொல்ல அவன் துணிந்திலன்; ஆகவே, அவன் வியாக்கிர வீரனுடன் சென்று கூடாரத்துக்கு எதிரிலே சாய்ந்த

நிலையிலிருந்த அப்பணிப்பெண்கள் இப்போதுதான் எழுந் திருந்த இடத்திற் சேர்ந்தான். அக்கூடாரத்திற்குச் சிறிது அருகாமையிலே அழகான மூன்று குதிரைகள் கொழுமையான புல் மேய்ந்து கொண்டிருந்தன. அவற்றின் அழகிய கல்லணை, அங்கவடி முதலியனவெல்லாம் அக்கூடாரத்தினுள்ளேயே வைக்கப்பட்டிருந்தன. அப்பணிப்பெண்களில் ஒருத்தி கன்னங் கறேல் என்று இருந்தாள். மற்றொருத்தி நீலகிரி நாட்டுக்குரிய பெண்கள் வகுப்பைச் சேர்ந்தவளாய் அழகாய் இளம் பருவத்தோடுங் கூடினவளாயிருந்தாள்.

பௌத்த இளைஞனுடன் வந்த இவர்கள் அந்நங்கையின் பணிப் பெண்களோடு உறவாடிக் கொண்டிருக்கையில், நீலலோசனனும் அந்நங்கையும் எவ்வாறிருந்தனர் என்பதைப் பற்றிக் கூறப்புகுவோம். அந்நங்கை மிகவும் அழகிய தாய் அமைந்த தனது கையை நயமாகச் சிறிது அசைத்து அழைத்து நீலலோசனனைத் தனக்கு அருகாமையில் புல்லின்மேல் இருக்கும்படி சொன்னாள். நீலகிரிக்குப்போகும் பயணத்தில் தானும் அவனோடு செல்ல இசைந்தமையால், இதற்குமுன் அவனை அன்னியனைப்போற் பாவித்து மரியாதை காட்டிய நடக்கையின் எல்லையை மீறினாள்போலவும், இப்போது நேசம்மிகுந்து பழக்கமானதைத் தெரிவிப்பாள்போலவும், அந்நங்கை தன்முகத்தை மறைத்திருந்த முக்காட்டை எடுத்துவிட்டாள். அருகாமையிலிருந்து அவன் முகத்தின் பேரழகை இங்ஙனம் **நீலலோசனன்** கண்டபோது, நான் முன்னே தூரத்தில் அவளைக் கண்டு எண்ணியது உண்மையென்று சிந்தித்தான். அவள் சிறிதேறக்குறைய இருபது வயதுள்ளவள் போற் காணப்பட்டாள், மடந்தைப் பருவங்கடந்து அரிவைப் பருவம் அடையும்பொழுது முகிழ்க்கின்ற பெருநலங் கனியப் பெற்றிருந்தாள்; ஆனாலும் மடந்தைப் பருவத்தின் புத்திளமை இன்னும் சிறிதேனும் மாறப்பெற்றிலள். அவளது முக அமைப்பானது மிகவுந் திருத்தமாயிருந்தது. அவள் கண்கள் பெரியனவாயும், அடிக்கடிமாறுங் குறிப்புடையனவாயும் இருந்தன. அவைகள் சில சமயம் பேரொளிகாட்டி விளங்கின; வேறுசிலசமயம் மென்மையாயும் மங்கலுடனும் தோன்றின; சில சமயம் ஒரு நொடிக்குள் தமது ஒளிவன்மை முழுதும் அப் பௌத்த இளைஞன் மேல் வீசி, அதன்பின் கருகி நீண்ட மயிர் நிறைந்த இறைகளாகிய திரைகளின் உள்ளே தம்மை மறைத்து

ஒளிந்தன. குறுகிச் சிறிதாயிருந்தாலும். செந்நிறம் மிகுந்து திரண்ட இதழ்களோடுங் கூடின அவள்வாயானது பேசும் போதெல்லாம், அவள்தன் கழுத்தில் அணிந்திருந்த மாலையின் முத்துக்களைப் போல வெண்மையான பற்களைத் தோற்று வித்தது. அவள் விடும் மூச்சோ அமிர்த வாசனையிற் சிறிது தோய்ந்து வந்தாற்போலத் தோன்றியது. இங்ஙனங் கிட்டக் கண்ட பார்வையானது நீலலோசனன் அந்நங்கையின் அழகைப்பற்றிக் கொண்ட அபிப்பிராயத்தை உறுதி செய்தது. ஆயினும், உற்சாகத்தான் எழுந்த வியப்பும்., அதிசயத்தான் எழுந்த மயக்கமும் தம்முதல் மும்முரம்மாறித் தணிந்தவுடனே, **நீலலோசனன்** பெண்கட்குரிய மென்மைக் குணத்தில் ஏதோ சிறிது அவளிடத்திற் குறை பட்டிருப்பதைக் கண்டான்; ஒரு பெண்ணை எப்பொழுதும் வசீகரமுடையளாகச் செய்வதும், ஒருவன் உள்ளத்தில் அவள் அழகின் வலிமையால் ஒரு நொடிக்குள் உண்டான மதிமயக்கத்தை அங்கே என்றும் நிலைபெறச்செய்வதுமான நாணத்தோடுங் கூடிய இயற்கை மடப்பம் ஏதோ சிறிது அவள் பால் இல்லாமையை அவன் கண்டுணர்ந்தான்.

**நீலலோசனன்** அந்நங்கையின் அருகாமையிற் புன்மேல் உட்கார்ந்தபோது "சுடுசுடுப்பான ஒரு குடியானவன் எனக்குப் பிசகான வழிகாட்டினமையாலன்றோ உங்களுடைய பழக்கத் தைப் பெறும் பாக்கியம் உடையனானேன்?" என்று கூறினான்.

ஒருவகையில் எவ்வளவோ அர்த்தத்தைத் தரக்கூடியதும், மற்றொரு வகையில் தான் நினையாமலும் அறியாமலும் உண்டான பழக்கத்தால் தோன்றியதை ஒப்பதுமான ஒரு பார்வையை அவன்மேற் செலுத்தி அவள் "வாக்களித்த துணையானது வந்து சேராமையாலன்றோ நானும் தங்கள் சமூகத்தாலும் தங்களுடன் வந்தோராலும் உண்டான நல்ல துணையைப் பெறுவேனாயினேன்?" என்று தானும் எதிர் மொழிந்தாள்.

உடனே **நீலலோசனன்** "இந்த நீலகிரிப்பிரதேசங்கள் வழிச் செல்வோர் அபாயமின்றிச் செல்வதற்கு ஏற்றன அல்ல, இதற்கு நான் சமீபத்தில் அடைந்த அனுபவமேபோதும்" என்றான்.

அதற்கு அவள் "மெய்தான்!" என்று சொல்லி, அப்பௌத்த இளைஞன்மேல் இரக்கமும் கவனமும் உடையாள் போல

அவனை நோக்கினாள். "எங்கே அவர்களிடத்தில் அகப்பட்டுக் கொள்கின்றேனோ என்று நான் நினைக்கும் போதெல்லாம் நடுக்கம் அடையும்படியான அக்கள்வரில் எவரையேனும் நீங்கள் எதிர்க்கப்பட்டிருக்கக் கூடுமோ?"

"நங்கையீர், **நல்லான்** என்னுங் கள்வர் தலைவனது ஆறலை கூட்டத்தைப்பற்றி நீங்கள் குறிப்பாய்ச் சொல்லு கிறீர்கள் போலும். அஞ்சாவீரனான இக்கொள்ளைத் தலைவன் மெய்யாகவேயிருக்கின்றான். இளைப்படைந்தோரை உற்சாகப் படுத்த வேண்டியேனும், பிள்ளைகளைப் பயப்படுத்த வேண்டி யேனும் வீடுகளிற் பொய்க்கதையாய்ப் பேசப்படுவதில் அவன் சேர்ந்தனன் அல்லன் என்றுநான் சொல்லல் பிழையன்று என்பதற்கு என் அனுபவமே போதும்." என **நீலலோசனன்** மறுமொழி கூறினான்.

இங்ஙனம் நீலலோசனன் பேசியபோது அந்நங்கையின் முகம் மிக்க பயங்கரம் அடைந்து காட்டிற்று; அவள் நடுக்கமுற்ற குரலோடும் "நீங்கள் அக்கொள்ளைக் காரரிடம் அகப்பட்டீர் களோ?" என்றாள்.

உடனே **நீலலோசனன்** "இன்று காலையிலேதான்" என்று அதற்கு விடைகூறினான். "ஆனால், எங்களை எதிர்த்துச் சண்டை யிட்டதில் அவர்கள் சந்தோஷிப்பதற்குச் சிறிதும் இடமில்லை. அப்படி யில்லாவிட்டால் நங்கைமீர், உங்களுக்கு இக்கதையைச் சொல்ல இங்கு வந்திருக்கமாட்டேன்."

பிறகு, **நீலலோசனன்** கள்வர் கூட்டத்தை எதிர்த்த விவரங்களெல்லாம் முற்றும் எடுத்துக் கூறினான், இவ்வாறு இவற்றை இவன் சொல்லிவருகையில் மிகவும் அழகியதான அந்நங்கையின் முகத்தில் **நடுக்கம், அச்சம், சந்தேகம், அதிசயம்** முதலிய குறிப்புகள் அடுத்தடுத்துத் தோன்றின. மிகவும் ஆராமையான குரலோடு அவள் அப்பௌத்த இளைஞன் அவ்வபாயத்தினின்றுந் தப்பியதைப் பற்றியும், அவனதும் அவன்பின் வந்தோரதும் வலிமையைப் பற்றியும் வாழ்த்திச் சொல்லுகையில் அவள் முகத்தில் அதிசயக்குறிப்பு அழுந்தி விளங்கிற்று. அதன்பின் அவள் தன்பெயர் **மீனாம்பாள்** என்றும், தான் நீலகிரி நகரத்திற்றான் வழக்கமாய் வசிப்ப தென்றும், பணக்கார வியாபாரியான தன்தந்தை பன்னிரண்டு மாதங்

கட்குமுன் திடீரென இறந்து போனமையால் தான் தொலைவி லுள்ள ஒரு நகரத்திற்குப் பயணம்போக வேண்டியதாயிற் றென்றும், அங்கே சென்று தன்காரியத்தை முடித்தபின்னர்த் திரும்பவும் தன்வீடு நோக்கிப் புறப்பட்டு வரலாயிற்றென்றுங் கூறினாள்.

**மீனாம்பாள்** மறுபடியும் அவனை நோக்கி "என்னோடு தங்கியிருந்தவரான என் நண்பர்கள் என் பயணத்தில் நான் முதற்றங்குமிடம் வரையில் ஒரு தக்க துணையை அனுப்பியிருந் தார்கள்; அதன் பின் என்னுடன் வழிச்செல்வதற்கு வழிகாட்டி களும் காவற்காரரும் வரும்படி ஏற்பாடுகள் செய்யப் பட்டன. காலைப்பொழுது மிகவும் இனிதாயிருந்தமையால், தக்க துணையின்றிச் செல்வதால் நேரும் அபாயங்களையும் மறந்து, புதியதுணை விரைவில் எம்முடன் வந்துசேரும் என நினைத்து, நல்லவெயில் நேரத்தில் **தெளி நீர் வேலி** எனப்படு வதாகிய இந்த இடத்திற்றான் நான் தங்குவேன் என்று சொல்லி விட்டு, என்பணிப் பெண்களோடு பயணம் புறப்பட்டு வந்தேன்; ஆனால், ஏதோகாரணத்தால் அந்தத்துணை இன்னும் வந்து சேர்ந்திலது; இதனால், மனம்துணுக்குற்றும், இங்ஙனம் மோசம் போனமை யால் சலிப்புற்றும் மிக்க துயரத்தோடு யான் சிந்தித்துக் கொண்டிருக்கையில், பெருமானே, தாங்களும் தங்கள் பின் வந்தோரும் இவ்விடம் வந்து சேர்ந்தீர்கள்" என்று சொன்னாள்.

உடனே **நீலலோசனன்** "அழகிற்சிறந்த அம்மை மீனாம் பாள், துணையில்லாமற் செல்வது உங்கட்கு அபாயகரமேயா யினும், இப்போது யான் உங்கள் துணையாய்வரும்படி நேர்ந்த மையால் நீங்கள் இனி மனங்கலங்கி அஞ்சவேண்டிய அவசிய மில்லை. நீங்கள் முன்னமே தெரிந்துகொண்டபடி யானும் நீலகிரிக்குத்தான் செல்ல வேண்டியவனாக இருக்கிறேன். அங்கே நான் முடித்துக் கொள்ள வேண்டிய சில அவசிய மான காரிய முண்டு." என்று மறுமொழி சொன்னான்.

இதற்குமேல், நீலலோசனன் தனது இலெளகீக நிலை யின்னதென்றேனும், தன் காரியங்கள் இத்தகையன என்றேனும், தான் நீலகிரிக்குச் செல்லுங் காரியம் இனைத்தென்றேனும் தானே ஏதும் விவரித்து மொழிந்திலன்; அந்தநங்கையும் நற்குடியிற் பிறந்து நன்கு வளர்க்கப்பட்டு நாகரீகமுடையவள் போற்றோன் றினமையால் தானும் அவ்விஷயங்களைப்பற்றி அவனை ஏதும்

உசாவிற்றிலள். அப்படியாயினும், அவன் தன்பெயர் **நீலலோசனன்** என்று அவளுக்கு அறிவித்தான்; அவளோ அவனது தோற்றத்தையும் அவன்பின்னே இருவர் ஏவலராய் வருவதையுங்கண்டு அவன் ஒரு செல்வமகனா யிருக்க வேண்டுமென்று எண்ணினாள்.

அழகிற் சிறந்த **மீனாம்பாள்** இப்போது தன்கைகளை மெதுவாகத் தட்டித் தன்பணிப்பெண்களை அழைத்தாள்; அவர்களுங் கடுகவந்து புல்லின்மேல் நேர்த்தியான சிற்றுண் டியும், திராட்சப்பழ இரசமும், இனியபானகமும் பரப்பி வைத்தார்கள்; சுற்றிலும் மரக் கொம்புகளில் நெருங்கித் தொங்கிய பலவகையான இனிய பழங்களும் அங்கே கொண்டுவந்து வைக்கப்பட்டன. மீனாம்பாள் அங்கு வைக்கப் பட்ட திராட்சப்பழ இரசத்தைப்பருகுதற்கு மனம் உவந்தவளே யாயினும், அவள் அதனைவிட்டு இனிய பானகத்தையே அருந்தி னாள்; நீலலோசனன் பௌத்த மதத்தைத் தழுவினவனாயினும், பௌத்த சந்நியாசியான பிக்ஷுக்கள் போல் திராட்சப்பழ இரசத்தை வெறுப்பவன் அல்லனாயினும், மதிமயக்கும் பொருள்களில் தனக்கு இயற்கையாகவே உள்ள ஓர் அருவருப்பி னால் அவனும் அதனைத்தொடாது ஒழிந்தான். இங்ஙனம், அப்பெருமானும் பெருமாட்டியுமான இருவரும் உண்டு முடியும்வரையில் திராட்சப்பழ இரசம் நிறைத்திருந்த குடுவை யைத் தொடவேயில்லை; வேறு பானகங்ளையே பருகினார்கள். அப்போது அவர்கள் இடையிடையே அங்குள்ள இயற்கைத் தோற்றங்களின் பொலிவையேவியந்து பேசிக் கொண்டிருந் தார்கள். நீலலோசனன் புதுப்பழக்கமாய்வாய்த்த இப்பெண் ணின் அறிவையும், நாகரிக விழைவையும் கண்டு விரும்புதற்குக் காரணம் வாய்த்தாற் போலவே, அவளும் அவனிடத்திலியற் கையாகத் தோன்றிய மனஅறிவின் உயர்ச்சியை வியக்கலானாள்.

அவர்கள் குதிரைகளின் மேல் ஏறிப் பயணம் புறப்பட் டார்கள். **நீலலோசனன்** எழில் கனிந்த **மீனாம்பாள்** பக்கத்திலே சவாரி செய்தான்; அவன் பின் வந்த ஆண்களிருவரும் அவள் பின் வந்த பணிப் பெண்கள் இருவருடன் சென்றார்கள். தன் பக்கத்தே வந்த கரிய பணிப்பெண் தன்னைப் பேச்சிலிழுக்க மிக முயன்றும் அதற்கு அகப்படாமல் விசனகரமான சிந்தனை யோடும் மௌனமாய்ச் சென்றதனால், தாடி மயிர் நீண்ட **கேசரிவீரன்**

*அவள் பக்கத்திற் சென்றவனாகவே சொல்லக் கூடவில்லை; மற்று வியாக்கிர வீரனோ அழகியாளான மற்றொரு பணிப் பெண்ணோடு மகிழ்ச்சியாகப் பேச்சாடிக் கொண்டு சென்றான். ஏவலர் பகுதியிரண்டிற்கும் அறுபதடி முன்னே சவாரி செய்து கொண்டு போன நீலலோசனனோ, மீனாம்பாள் தன் குதிரை மேல் உட்கார்ந்திருக்கும் அழகையும், நேர்த்தியையும், இலாகவத்தையும் கண்டு வியவாமலிருக்கக் கூடவில்லை, அவள் குதிரையேற்றத்தில் மிகப் பழகினவ ளென்பது தெளிவாயிற்று; அவள் ஏறியிருந்த குதிரை கூடிய வரையில் நல்ல சுபாவமுள்ள பிராணியாகவே யிருந்தாலும், அது சுறுசுறுப்பு மிகுதியுமுடைய தாயிருந்தமையால், தைரிய மாக ஏறி நடத்த வல்லவரன்றிப் பிறர் அதன் மேலிருக்கத் துணியார். அஃது இன்ன சாதியைச் சேர்ந்ததென்று தெரிய அக்குதிரையின் பின்னே சகனத்தின் மேல் சுட்ட தழும்பு ஒன்று இருந்தது, இஃது எவ்வளவு அருமையான சிறந்த வகுப்பைச் சேர்ந்ததென்று அறிந்து கொள்ள நீலலோசனனுக்குத் தன்றேசத்திலேயே இவைகளில் ஒன்றுந் தெரியாது.*

*அவனும் மீனாம்பாளும் பலவேறு விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே செல்வாராயினர், தான் பெருந்திரளான திரவியத்திற்குச் சுதந்தரமுடைய வளாதலால் தானே தனக்கு எசமானி என்பதும், உறவினர் யாருடைய அதிகாரத்திற்கும் தான் உட்பட்டவள் அல்லள் என்பதும், உலக வாழ்க்கையில் எந்தக் காரியத்திலும் தான் தன் மனப்போக்கின்படி செல்லச் சிறிதும் தடையில்லை என்பதும் ஏதோ மிருதுவாகவும் தற்செயலாகவும் அவள் வாயினின்றும் பிறந்த சொற்களைக் கொண்டு அவன் அனுமித்து அறியும்படியாகப் பேசினாள். இவ்விருவரையும் ஒன்று சேர்த்த இந்தப் பிரயாணமுடிவில் கழிவதாயிருந்தாலும் இப்போதுண்டான நிலையற்ற இச் சினேகிதத்தில் இயல்பாக விளைவதான நம்பிக்கையினால் சிறிதுங் கள்ளங் கவடு இல்லாத தோற்றத்தோடும் இவள் அங்ஙனம் பேசினாளாயினும், இவளிடத்தில் அடக்கம் சிறிது மில்லையென்றும் அதி சீக்கிரத்திற் பழக்கமாய்ப் பேசுவதுண் டென்றும் நீலலோசனன் நினையாம லிருக்கக்கூடவில்லை. ஆகவே, அவன் கண்கள் இவள் அழகை வியந்து பாராட்டி னாலும், அவன் கொஞ்சம் முதலிற் சந்தித்த போது சில நிமிஷம் உண்டான அதன் வசியத்தில் அகப்படாது*

வேறாய் நின்றது. இங்ஙனம் அவன் இதனை உணர்ந்து அறிந்த போது, இந்தக் காரணம் பற்றியே இவளிடத்தில் அவன் பின்னும் மிகுதியாய் மரியாதை பாராட்டி வந்ததன்றியும், அழகிற் சிறந்த நங்கை ஒருத்தியோடு பிரயாணஞ் செய்ய நேர்ந்த வாலிப வீரன் அனுசரிக்க வேண்டிய வினயத்தில் தான் எங்கே தவறிப் போவதாகக் காணப்படுமோ என்றும் அஞ்சினான்,

வெயிலும் உழைப்பும் மிக்க பகற்காலத்தின் கிளர்ச்சி தணிந்து மசங்கின மாலைப்பொழுது நாற்புறமும் வளைய, அப்போது தோன்றும் மங்கலான வெளிச்சம் மென்மையாய் ஓசையின்றி அமைதி செய்யுந் தன்மையோடும் வரவர **மீனாம்பாளின்** குரலொலியும் மெல்லிதாயிற்று--அவள் சொற்கள் உருக்கம் மிகுந்து வந்தன--அவள் அந்த மாலைப் பொழுதின் செயலை உணர்வது போற்றோன்றினாள், **நீலலோசனன்** தான் அறியாமலே, இவர்கள் சம்பாஷனை எந்த வழியாகவோ **காதலைப்** பற்றி நடைபெறுவதாயிற்று; **மீனாம்பாள்** மெல்லெனப் பெருமூச்செறிந்து அதனைத்தான் சிறிது உணர்ந்ததேயல்லாமல், அதன் சுவையைத்தான் அனுபவித்து அறிந்ததே யில்லையென்று கூறினாள், பொருள் மிகுதியும் உடையளாய்த் தானே எசமானியாயிருந்தும், பொருளைப் பற்றித் தன்னிடம் கூட்டங் கூடினவர்களையன்றித் தனக்கு வேறு நேசர்கள் இல்லாமையும், தான் இதுகாறும் இல்லற வாழ்க்கையில் நிலைபெறாமையும் புதுமையாய்த் தோன்று மெனச் சொல்லி, ஆடவர் தன்னை வந்து மணங் கேட்பதில் தனக்கு விருப்பமில்லையென்றும், தான் சுகமடை தற்கு ஒத்த ஆடவனெவனையும் தான் இதுகாறும் எதிர்ப்பட்ட தில்லை என்றும் தன் கருத்தை எடுத்துரைத்தாள்.

“ஏனென்றால், என் தேசத்தில் எழுதப்பட்ட அற்புதக் கதைகளையும் உங்கள் தேசத்தில் உள்ளாரால் எழுதப்பட்ட அழகிய கதைகள் எல்லாவற்றையும் படித்ததனாலும், எழுத்திலில்லாமல் வாய் மொழியாக மாத்திரம் வழங்கிவரும் காதற்கதைகள் பலவற்றையும் கேட்டிருத்தலினாலும், என் மனத்திற்கு அல்லது என் பாவனைக்கு இசைந்தது இன்னது தான் என்று தெரியப் பெற்றேன்.” என்று அவள் பின்னும் மொழிந்தாள்.

“அங்ஙனம் மனத்திற்கு இசைந்தது?” என்று நீலலோசனன் வினவினான். இங்ஙனம் இவன் வினவியது சம்பாஷணையை

*நீளச் செய்வதற்கேயல்லாமல், சில நாழிகைகட்கு முன்னே தான் பழக்கமாகித் தம் ஏவலர் கூப்பிடு தூரத்திற்கு அப்பால் வர, மங்கல் மாலைப் பொழுதில் பந்தலிட்டாற் போன்ற மரங்களின் நீழலிலே தனிமையில் வரும் இளைஞனும் நங்கையுமான தமக்கு இவ்விஷயம் தக்கதென எண்ணியதனால் அன்று.*

*அதன் பின் மீனாம்பாள் தன் மனோபாவனைக்கு இசைந்த விழுப் பொருள் இத் தன்மையதாக இருத்தல் வேண்டுமென்று சுருங்கச் சொல்வாளாயினள்; எப்போதாயினும் தன்னாற் காதலிக்கப்படுவானும், அல்லது தன் உள்ளத்தை வசப்படுத்தித் தன் சொத்தையும் கையையும் பற்றுதற்கு உரியானும் இன்ன இயல்புடையனாயிருக்க வேண்டுமென்று கூறினாள். தன்றோழி மார்களுள் ஒருத்தியோடாயினும் இவ்வுலகத்தில் இதிற் கவலையேயில்லாத ஒருவனோடாயினும் எங்ஙனம் பேசு வாளோ அங்ஙனமே அவள் தன்னெதிரே யாரிடத்தில் இப்படிப்பட்ட விஷயங்களைச் சொல்லுகின்றோம் என்பத னையும் மறந்தாள் போல ஒருவகையான குரலோடும் மாதிரி யோடும் அரைவாசியாழ்ந்த சிந்தனையோடும் பேசிக் கொண்டே சென்றாள். ஆனால், நீலலோசனன் தான் கேட்டதை நம்பக் கூடா விட்டாலும், தன்னிடத்துப் பிள்ளை மைக் குணமான தற்பெருமையும் மனச் செருக்கும் இல்லாமையால் அவன் தன் மனத்தில் வலுப்பட்டுவரும் சந்தேகத்தை உண்மை யென்று துணிவதற்கு விருப்பமற்ற வனாயிருந்தாலும் கடைசி யாக அவன் தன்னையே மீனாம்பாள் சுட்டிப் பேசுகிறாள் என்பதை உணராமலிருக்கக் கூடவில்லை. அவளோ அவன் உடம்பின் அழகையும் வலிமையையும் அவனுடைய வெள்ளை யுள்ளத்தையும் மனத்தேர்ச்சியையும் அவன்றன் உபகார சிந்தையையும் அஞ்சா வீரத்தையும் விரித்துப் பேசினாள்; இவ்வாறு பேசியபோது இவள் தனக்கு அவ்வுயர்ந்த ஒழுக்கங் களை நுணுக்கமாய் ஆழ்ந்தறியும் வல்லமை உண்டென்று காட்டாநிற்ப, அவன் தனது உருவப் படத்தையே இவள் இங்ஙனம் எழுதிக் காட்டுகின்றாளெனத் தன் அகத்தே வலுவில் தோன்றிய துணிவினால் தன்னைப் பற்றித் தான் முன் அறியாததனையும் அறிந்து கொண்டான்.*

*“அப்படிப்பட்ட என் மனத்தாற் பாவிக்கப்பட்ட விழுப் பொருள், ஐய! நீலலோசன, இவ்வுலகத்தில் அதற்கிசைந்த தோர்*

உயிர் இருக்கின்றதென நினைக்கிறீரா? இருக்குமானால் அத்தன்மையதான அதன் உள்ளத்தை யான் வசப்படுத்திக் கொள்ள ஆவலித்திருக்கின்றேன்" என்று மீனாம்பாள் முடித்துக் கூறினாள்.

ஒரு நிமிஷம் அப்பௌத்த இளைஞன் எக்கச்செக்கமான தன் நிலைமையை உணர்ந்தான்: ஆயினும் மறுநிமிஷத்தில் அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு, "மீனாம்பாள் பெருமாட்டியின் வசீகரமும் உள்ளத் தேர்ச்சியும் தன்னால் தெரிந்து கொள்ளப் பட்ட எப்படிப்பட்ட நெஞ்சத்தையும் வசப்படுத்துவது திண்ணம்" என்று சந்தோஷகரமான உபசார மொழி சொன்னான்.

மீனாம்பாள், நடுங்கிய மகிழ்ச்சியும் வெற்றிக்குறிப்பும் சந்தேகமும் ஐயுறவுங் கலந்த ஒரு பார்வையை **நீலலோசனன்** மேல் வீசிய போது, அதனை அவன் தெரிந்து கொள்ளுதற்குப் போதுமான வெளிச்சம் இன்னும் இருந்தது; அதன்பிற் சில நிமிஷம் கழித்து அவள், தன் ஆவலின் முதிர்ச்சியைத் தெரிவிப்பதாய் ஆழமும் செழுமையும் வாய்ந்த குரலோடும், "அவ்வளவு இனிமையான நினைவிலே யான் மகிழ்ச்சியடையத் துணியலாமா? யான் நினைத்த பொருள் அகப்பட்டால் என்னைப் போலவே அதுவும் என்பால் அன்பு பாராட்டுமென யான் மனப்பால் குடிக்கலாமா?" என்று பேசியபோது அவளது சொல்லின் ஓசை மிகவும் குறைந்து போனமையால் அச்சொற் களே நன்றாகப் புலப்படவில்லை.

"பெருமாட்டி, நீங்கள் கொண்ட நினைவு ஒப்புயர் வில்லாததாய் இருத்தலின், அதைப் போல்வது உண்மையிற் கிடைத்தல் இலேசானது அன்று," என்று நீலலோசனன் களிப்புடன் சிரித்துக் கொண்டே மறுமொழி புகன்றான், இவ்வாறு அவன் களிப்போடு பேசியது அந்நங்கையின் நினைவைத் தான் தெரிந்து கொண்டதாக எண்ணக்கூடிய குற்றம் தன்னை விட்டு விலகுதற்காகவேயன்றி வேறில்லை.

உடனே மீனாம்பாள் "இந்த நினைவு உண்மையில் அகப்பட்டிருக்கிறது" என்று மொழிந்தாள்; அப்போது அவள் ஏறியிருந்த குதிரை **நீலலோசனன்** குதிரையின் பக்கத்தே நெருங்கி வந்தமையால், மிக உருக்கத்தோடும் மெதுவாய்ப் பேசிய அவள் சொற்கள் நன்கு புலப்பட்டன.

*"நல்லது! அதோ எதிரே விளக்கு வெளிச்சம் தோன்று கிறது! நாம் இன்றிரவு தங்குவதற்கென்று நீங்கள் முன்னமே தெரிவித்த கோபுரம் அது தான் என்பதிற் சந்தேகம் இல்லையே? நம் குதிரைகளை முன்னே செலுத்துவாமாக, ஏனென்றால் சென்ற இரண்டு மூன்று நாழிகையாக நாம் வழியில் தங்கித் தங்கி வந்தாம் என நினைக்கின்றேன்." என்று சடுதியிற் கூறினான்.*

*இருண்டு கொண்டு வரும் அப்பொழுதின் இடையே மின்னல் தோன்றுவதை யொப்பப் பார்வை ஒன்று வீசியது-- சுறுசுறுப்பாக அசைந்து தோன்றிய அப்பார்வையானது* ***மீனாம்பாள்*** *கண்களினின்றும் புறப்பட்டு* ***நீலலோசனன்*** *முகத்தின் மேற்பட்டது; தன் சொற்களால் அவன் உள்ளத்திற் றோன்றியது இன்னதென்று அறியவும், தான் அவனால் அலட்சியமாக எண்ணப்பட்டாளோ அல்லது தான் பேசியதெல்லாம் அவனைக்சுட்டியே என்பதை அவன் தெரிந்து கொள்ளத் தன் சொற்கள் தெளிவாயிருந்தனவோ என்று தெரியவுமே அப்படி நோக்கினாள். ஆனால் அவனோ அப்பார்வையைக் கவனிக்க வில்லை; அதே நிமிஷத்தில் தான் சொல்லியதற்கு ஏற்பவே தன் குதிரையைக் காலால் நெரித்து முன்னுக்கு நடத்தினான். அப்பொழுது* ***மீனாம்பாள்,*** *"நான் சொல்லிய கோபுரம் அதுவன்று; அதற்கு நாம் இன்னும் இரண்டு நாழிகை அளவு சவாரி போக வேண்டும். அந்த விளக்கு வெளிச்சம் ஓர் ஏழைக்குடிசையில் உள்ளது; இதற்கு முன் ஒருமுறை நான் இவ்வழியில் எதிர் முகமாய்ப் பிரயாணம் செய்திருக்கின்றே னாகையால், இங்குள்ள ஒவ்வோரிடமும் என் ஞாபகத்திலிருக் கின்றன" என்றாள்.*

*அதற்கு* ***நீலலோசனன்,*** *"ஆயினும் இந்தக் குடிசையில் நாம் சில நிமிஷங்களாவது தங்க வேண்டும்: அதனால் நம்முடைய குதிரைகளை உணவூட்டி இளைப்பாற்றுவிக்கலாம்: ஏனெனில், அத்தகைய உணவில்லாமல் நம் குதிரைகள் இந்நாள் முழுதும் அடைந்த உழைப்பின் மிகுதியால் இன்னும் இரண்டுநாழிகை தூரங்கூடப் போவதற்கு ஏலாதனவாயிருக்கின்றன." என்று மறுமொழி தந்தான்.*

*அதற்கு* **மீனாம்பாள்** *"ஐய!* **நீலலோசன**, *நீங்கள் விரும்புகிற படியே ஆகட்டும்." என்று கூறிப் பின்னும் புன் சிரிப்போடு நீங்கள் என் வழித்துணையாக இருப்பதால், நாம் செல்ல வேண்டிய வகைகளைப் பற்றி நீங்கள் தாமே கட்டளை இட வேண்டும்" என்றாள்.*

## அதிகாரம் - 4

# கோபுரம்

*சீக்கிரத்தில் அந்தச் சிறிய குடிசையண்டை எல்லாரும் போய்ச் சேர்ந்தார்கள்; அவ்விடத்தில் கிடைக்கக் கூடியதான ஒரே ஒரு விடுதியில் பயணக்காரரான இவர்கள் எல்லாரும் தங்கினார்கள். அவர்கள் குதிரைகளை விட்டுக் கீழே இறங்கின வுடன் **வியாக்கிரவீரன்** தன் எசமானன் பின்னே அவ்விடுதியினுள் நுழைந்தான். அவ்வாறே அப்பணிப் பெண்கள் இருவரும் தன் எசமானியின்பிற் சென்றார்கள். **கேசரி வீரனோ** குதிரைகளுக்குத் தீனி செவ்வையாக வைக்கப்படுகிறதா என்று பார்க்க வெளியிலேயே தங்கியிருந்தான். ஏனென்றால் அவ்விடுதியில் இந்த ஆறு குதிரைகளுக்குத் தீனி தர ஓராளுக்கு மேல் இல்லை.*

*அவ்விடுதியிலிருந்த அக்குதிரைக்காரன் நுண்ணிய பார்வையும், தந்திரமான முகமும், சுருங்கின தோலுமுடைய கிழவனாயிருந்தாலும் தன் உணர்ச்சி குறையாதவனாயும் தன்றொழிலுக்குரிய எல்லாவற்றையும் செய்வதற்குப் போது மான அளவு உடம்பிற் சுறுசுறுப்பு உடையவனாயும் இருந்தான். அவன் தன் கையில் ஒரு தீப்பந்தம் பிடித்துக் கொண்டு சென்றான். குதிரை நோட்டத்தில் தேர்ந்தவன் போலவும், குதிரைகளில் மிகவும் நேர்த்தியான தொன்றைப் பார்க்க விரும்பினவன் போலவும் அவன் முதலில் அந்த ஆறுகுதிரை களையும் உற்றுப் பிடித்துப் பார்த்தான். அவற்றில் ஒரு குதிரையைப் பரிசோதித்துப் பார்க்கையில் அவன் வாயினின்றும் திடீரென ஓர் அதிசயச் சொற் பிறந்தது, கேசரிவீரன் அவ்வதிசயச் சொல்லைக் கவனித்ததும் குதிரைக் காரனைச் சில கேள்விகள் கேட்டான். அவர்களின் சம்பாஷணை இன்ன தென்று நாம் இங்கே சொல்லல் வேண்டாம்: அந்தச் சம்பாஷணை முடிவில் கேசரி வீரன் "இவ்விஷயங்களை என் அரிய நண்பனே, உயிரோடிருக்கும்*

வேறு எந்த ஆன்மாவுக்கும் சொல்லாதே! மௌனமாயிரு-நல்ல பானகத்தில் நீ விரும்பியது எதுவாயினும் ஒரு சாடி வாங்கி வருதற்கு இதோ காசு இருக்கிறது எடுத்துக் கொள்." என்று கூறினான் என்பது மாத்திரம் இங்கே சொல்லுதல் போதும்.

குதிரைக்காரன், **கேசரி வீரன்** அவ்வளவு தாராளமாய்த் தன் கையில் வைத்த பணத்தை எடுத்துக் கொண்டான்; பிறகு, குதிரைகள் தீனியூட்டப்பட்ட மிச்சம் ஒரு நாழிகை வரையிலும், இலௌகிகமறிந்த **கேசரிவீரன்** அக்கிழவன் பக்கத்திலேயே யிருந்தான். திரும்பவும் குதிரைகள் பயணத்திற்குச் சித்தமான வுடனே நம்முடைய பிரயாணிகள் அவற்றின் சேணத்தின் மேலெறிப் புறப்பட்டார்கள். இப்படி இவர்கள் முன்னே செல்லுகையில் **கேசரிவீரன்** இரகசியப் பொருள் அடங்கியதான ஒரு பார்வையைக் குதிரைக்காரக் கிழவன் மேற் செலுத்தினான்.

இங்ஙனம் வழி நடந்து போகையில், **கேசரிவீரன்** தன் வாலிப எசமானனிடம் அந்தரங்கமாகப் பேசப் பலகால் முயன்றும், அவனது முயற்சி பயன்படவில்லை. மற்றையோர் கவனியாதபடி இவன் அவனிடம் பேசக்கூடவில்லை, ஏனென் றால், நீலலோசனன் மீனாம்பாளிடம் இன்னும் உபசாரம் காட்டிக் கொண்டு கூடவே சென்றான். இப்போது இவனே முழுமையும் பேசிக் கொண்டு சென்றான்--அக் குடிசையண்டை வருதற்குமுன் அவன் புகுவித்துப் பேசிய விஷயத்தையே திரும்பவும் பேசா திருக்கும் பொருட்டு அவன் பலவகைப்பட்ட விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே போயினான். அவ்விரவு தாம் தங்க வேண்டிய கோபுரத்திற்குச் செல்லும் சிறியவழி இவ்வாறு தொலைந்தது.

இனி அந்தக் கோபுரமோ நாற்சதுரமாகக் கல்லினாற் கட்டப்பட்டிருந்தது; அதன்கட் சிறியசாளரங்கள் அமைக்கப் பட்டிருந்தாலும் அது மங்கலாய் ஓவென்று தோன்றியது, ஆயினும், அதன் தோற்றம் அதிசயமாகவேனும் பொல்லாங்கு டையதாகவேனும் காணப்படவில்லை; நாட்டுப்புறங்களில் வசிக்கும் மலைநாட்டுக் கள்வர் தலைவர்களும், குடியானவர் களும் இருக்கும் சாதாரண இருப்பிடத்தையே ஒத்திருந்தது. இந்தக் கோபுரத்திற்கு உடையவன் நிலங்கள் வைத்திருக்கும் ஒரு செல்வவான் என்றும்; இறந்து போன தன் றந்தைக்கு நேசன் என்றும், அவனுக்குப் பிள்ளையுமில்லை மனைவியும் இறந்தனள்

என்றும், அவன் விருந்தினரை உபசரிக்கும் குண முடையவனா கையால் நமது வருகையை உவந்து ஏற்றுக் கொள்வான் என்றும் **மீனாம்பாள்** நீலலோசனனுக்குத் தெரிவித்தாள். ஆயினும், ஒரு சாளரத்தில் ஒரு விளக்கு மாத்திரந்தான் எரிந்து கொண்டிருந்தது; அதனால் அங்கே விசேஷமான உண்டாட்டு இருந்ததாகப் புலப்படவில்லை. தானும் அம்மங்கையும் தம்முடன் வந்தோரும் அக்கோபுரத் தண்டையிற் போனபோது நீலலோசனன் இதைக் குறித்துப் பேசினான்; அதன் மேல் மீனாம்பாள் தன் நேசரான முதியோர் அங்கேயில்லாமல் வெளியே போயிருக்கலா மென்றும், அவர் இல்லாதது பற்றி வீட்டிலுள்ளவர்கள் நம்மை விருந்தேற்று உபசரிப்பதற்குச் சிறிதும் தடையுண்டாக மாட்டா தென்றும் நீலலோசனனுக்குக் கூறினாள்.

அழகிற் சிறந்த அந்நங்கை முன்னறிந்து சொல்லியபடியே ஒவ்வொன்றும் செவ்வையாக நடந்தன. அக்கோபுரத் தண்டை யிற் சென்றவுடனே, நன்றாக உடை தரித்துப் பார்வைக்கு நல்லனாய்த் தோன்றிய ஓர் ஏவற்காரனாற் கதவு திறக்கப் பட்டது; அவன் மீனாம்பாளைத் தெரிந்து கொண்ட வுடனே மிக்க மரியாதையோடு அவளை வணங்கி வாழ்த்தி னான்; பின் அவள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் மறுமொழி சொல்வா னாகித், தன் எசமானன் வெளியே போயிருக்கிறார் என்றும், என்றாலும் அவளும் அவள் தோழரும் கூட வந்தோருங் கூடியவரையில் உபசரிக்கப்படுவர் என்றும் புகன்றான்.

அதன் பின் அவர்கள் கோபுரத்தினுள்ளே புகுந்தார்கள்; முற்றத்தின் நடுவிலே ஒரு குதிரைக்காரன் குதிரைகளை யெல்லாம் நிறுத்திக் கொண்டான்; பார்வைக்கு நல்ல தோற்றமுடையனாய் வந்த ஏவற்காரன் அவனுக்குக் கூடவிருந்து உதவி செய்தமையால் அவ்விடத்திற்கு இரண்டு ஆண் மக்களே இருந்தாரென்பது தோன்றிற்று என்றாலும், விருந்தினரை உபசரிக்கிறதற்கு அங்கே வேறு இரண்டு பெண் மக்களும் இருந்தார்கள். மீனாம்பாளும் நீலலோசனனும் வசதியான ஓர் அறைக்கு அழைத்துச் கொள்ளப்பட்டார்கள்; மற்றும் கேசரி வீரனும் வியாக்கிர வீரனும் அம்மங்கையின் பணிப்பெண்கள் இருவரும் வேறோர் அறைக்கு அழைத்துக் கொள்ளப் பட்டார்கள்.

அந்த பௌத்த இளைஞனும் மீனாம்பாளும் புகுந்த அறையிலே மிகவுஞ் சிறந்த உணவு அதி சீக்கிரத்திற் கொண்டு

வந்து வைக்கப்பட்டது. பலவகையான பாகமாய்ச் சமைத்த மான் இறைச்சியும். சிறந்த காட்டுக் கோழிக்கறியும், மிகச் சுவைப்பதான தாராக்கறியும், மீனும் வேட்டையாடிக் கொணர்ந்தவற்றின் இறைச்சியும் அங்கே தட்டுகளில் வைக்கப்பட்டிருந்தன. இனிய தின்பண்டங்களும் வைக்கப்பட்டிருந்தன. பருகுவதற்குப் பானகங்களும் **கொடி முந்திரி பழ இரசமும்** இருந்தன. மேசையின் நடுவிலே காட்டுத் தேன் நிரப்பிய பீங்கான் தட்டு ஒன்று இருந்தது. மீனாம்பாள் உள்ளக்களிப்போடும் மரியாதை யோடும் விருந்து பரிமாறுதற்குத் தலைப்பட்டாள்; தானே மிக்க உபசாரத்தோடும் வசீகரத்தன்மையோடும் உபசரித்தற்கு முயன்றாள். இவள் இப்போது பேசிய சாதுரிய மதுர மொழிகளாலும் காட்டிய மாயங்களாலும், இவளுடைய சில முரட்டுத்தன தைரிய சுபாவத்தைப் பற்றி முன் தான் கொண்ட நினைவையும் **நீலலோசனன்** மறந்து போனான். தான் மயக்கந் தருவதில்லாப் பானகங்களையே அருந்துவது வழக்கமாயிருந் தாலும், அன்று வழிவந்த களைப்பினைப் போக்குவதற்கு மது அருந்துதல் அவசியமாயிருக்கின்றதெனப் புன்சிரிப்போடு சொல்லிக் கொண்டே தன் கிண்ணத்தில் அதனை நிரப்பினாள்; மேலும், தன் நண்பரான அவ்வீட்டின் தலைவர் இல்லாத சமயத்தில் தானே அவனுக்கு விருந்து உபசரிப்பாளாய் நேர்ந்தமையால் விருந்தூட்டலின் பொருட்டுத் தானே அவனுக்கு அதனை முன் செய்து காட்டல் வேண்டும் என்றும் சொல்லி, முத்துப் போன்ற தன் அழகிய பற்கள் குற்றமற்று விளங்க நகைத்தாள். இவ்வளவு உள்ளக்களிப்போடும் விருந்து உண்ண உபசரித்ததை மறுத்தால் அது தன்பால் மரியாதை யீனமும் அநாகரிக ஒழுக்கமுகமாய்க் காணப்படும்என்று நீலலோசனன் உணர்ந்தான்; உடனே அவள் சொற்படியே தன் கிண்ணத்தையும் எடுத்து மதுவை நிரப்பினான். பிறகு, அக்கிண்ணத்திலுள்ள அதனைப் பருகினான்; பருகியவுடன் அவன் மிகவுங்களிப்போடு சிரிக்கத் தொடங்கினான்--

அவனது பேச்சு மிக்க சுறுசுறுப்படையதாயிற்று; தானே மீனாம்பாளுக்கு உபசார மொழிகள் புகலக் கணடான்--அவன் தன்னைத் தடுக்க முயன்றான்; ஏனென்றால், அவள் தன் உள்ளத்தைச் சிறிதா யினும் வசப்படுத்தற்கு உரிய சுபாவம் உடையவளாய் இல்லாத தனால், தான் இங்ஙனம் நடப்பது மடமையும் பிழையுமாகு மென்று உணர்ந்தான். ஆனால், அவன்

அறிவு குழம்பியது; தன் வாழ்நாளில் இம்முதல்முறை தான், தானே பொருளறியக் கூடாமற் பேசும் தன் சொற் கூட்டத்திற் கிடந்து தடுமாறினான்; இவ்வாறு நிகழ்ந்ததை விட்டு வேறு போக்கிடம் இல்லாமையால், கடைசியாக நடந்தது நடக்கட்டுமென்று ஒருவகையாய்த் துணிவு கொண்டிருந்தான். அவன் மூளையில் மயக்கமேறியது; பொன்னிறமான மூடுபனி தன்னை வந்து கவிவது போற்றோன்றியது; ஆயினும் மேசையின் எதிர்ப்பக்கத்தே யிருந்த மீனாம்பாளின் ஒளி மிகுந்த கண்கள் காதல் நிரம்பினவாய்த் தன்னை அதன் ஊடு உற்று நோக்குவதைப் பார்த்தான். தான் விருந்தேற்று உபசரிக்கும் நிலையிலுள்ள தனால் அவ்வுபசாரங்கள் முற்றுஞ் செய்வாள் போல, அங்கே பலகை மேற் செவ்வையாகப் பரப்பி வைத்த பொறுக்கான செழுந் தின்பண்டங்கள் அத்தனையும் அவன் உண்ணும்படி அவள் வற்புறுத்தினாள்; கடைசியாக அங்கு இருந்த காட்டுத் தேனையும் மிகுதியாகக் குடிக்கும்படி தானே அதனை அவனுக்கு எடுத்துக் கொடுத்தாள். இதற்கு முன் **நீலலோசனன்** இதனைச் சுவைத்துப் பார்த்ததே இல்லை. அது நாவுக்கு மிகவும் சுவையுடைத் தாயிருந்ததனாலும், அவ்வீட்டு எசமானனுக்கு மாறாக விருந்தேற்று உபசரிக்கும் நிலையிலுள்ள அழகிய நங்கையின் கட்டாயத்தை மறுத்திடாமல் அதற்கு இணங்க வேண்டியிருந்த தனாலும் அவன் இக்காட்டு தேனைப் பருகினான்; தனக்கு முன் மூடுபனிபோற் றோன்றிய மயங்கிய தோற்றமானது வரவர அவனை மிகுதியாகச் சூழுவது போற் காணப்பட்டது-- அதன்ஊடே அம்மங்கையின் விழிகள் அவனை உற்றுப் பார்த்த போது, அவை மிகுதியும் விளக்கமுற்று வந்தன--அவன் அவளைப் பார்க்கப் பார்க்க அவள் சொல்லுக்கடங்காத அழகு உடைய வளாய்த் தோன்றினாள்; அவள் தன் இனிமை வாய்ந்த குரலோடும் "**நீலலோசன**, நீரே என் மனத்தாற் பாவிக்கப்பட்ட விழுப்பொருள்--நான் உம்மைக் காதலிக் கின்றேன்" என்று திடீரெனச் சொல்லியபோது, அவனை ஒருவகையான மயக்கம் வந்து பற்றியது.

அதற்குத் தான் ஏதுமறுமொழி சொன்னானென்பதை அவன் அறிந்திலன்: இதற்குப் பின்னும் அவன் அதனை நினைவுக்கு கொண்டு வரக்கூடவில்லை--ஆயினும் மீனாம்பாள் நோக்கத்திற்கும் விருப்பத்திற்கும் இசைந்ததாகத் தான் ஏதாவது சொல்லியிருக்க வேண்டும் என்னும் கலங்கிய மங்கலுணர்ச்சி

உடையனானான்; ஏனென்றால் "என் அன்புள்ள காதலனே, உமது சொல்லுறுதிக்கு ஈடாக இன்னும் ஒரு கிண்ணம் திராட்சப் பழரசம் அருந்தும், அருந்தும்." என்று அவள் உரத்துக் கூவியதை அவன் தெளிவாக நினைவு கூர்ந்தான்.

அதன் பிறகு அவள் மேசையைச் சுற்றிப் போனாள்; திரும்பவும் அவன் கிட்ட வந்தாள்--அதன் பின் அவனது கிண்ணத்தில் திராட்சப் பழரசத்தை நிரப்பினாள்; அப்பால் கீழே குனிந்து அவன் தொடைப் புறத்தில் தொங்கவிட்டிருந்த கத்தியைத் தொட்டு, " இதோ உமது பக்கத்திலிருக்கும் இந்தக் கொடுவாளானது, நீர் சண்டை முகத்தில் வெற்றி பெறும்படி கடவுளை வேண்டுபவளும், நீர் வெற்றி பெற்றுப் பெருஞ் சிறப்போடு மீண்டுவருங்கால் நும்மை தன் வீட்டிலே இறுமாப் போடு எதிர் சென்று அழைப்பவளுமான நும் காதலியின் பொருட்டு உறையினின்றும் கழிக்கப்படுவதாக, பெருந்தகைமை யுள்ள **நீலலோசன!** நீர் அணிந்திருக்கும் இந்தப் போர்ப் படையை என்னுடைய வாய்முத்தங்களாற் பரிசுத்தப் படுத்து கின்றேன்." என்று சொல்லிக் கொண்டே காதல் நிறைந்த தன் கண்களால் அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

இங்ஙனம் பேசிக்கொண்டே மீனாம்பாள் இளைஞனான நீலலோசனன் பக்கத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் கொடு வாள் மேல் தன் அழகிய தலை குனிந்தாள்; அதனைத் தன் மார்பில் அணைத்துக் கொண்டு தான் ஒரு சிறு பெண் போலவும் அதுதான் விளையாடுங் கருவிபோலவும் சில நிமிஷ நேரம் அதனோடு விளையாடுவது போற் காணப் பட்டாள். அதன்பின் சடுதியிலே எழுந்து நின்று "இப்போது, என் **நீலலோசன,** இக் கிண்ணத்திலுள்ள இரசத்தைப் பருகுவதால் நுமது சொல்லை உறுதிப்படுத்தும்." என்று உரத்துக் கூவினாள்.

இளைஞனான அப்பௌத்தன் தன் அறிவு தன் வசத்தில் இல்லாதவனாயினான்: மதிமயக்கும் பல்வகை மந்திர வசியத்தில் அகப்பட்டவனானான்; அவன் தலையிலும் நெஞ்சிலும் மயக்கம் ஏறியது; ஓர் இராக்கதன் கையில் அகப் பட்ட பிள்ளையானது எப்படி வலிவிழந்து கிடக்குமோ, அப்படியே அவன் முழுவதும் அந்த நங்கையின் வசத்திற் கிடந்தான். அவள் குரலொலி அவன் காதுகளுக்குச் சங்கீத ஓசை போன்றிருந்தது; அவள் கண்கள் தன் கண்களை நோக்கியபோது அவை இயற்கையில்லாத மருட்டும்

ஒளி உடையவாய்த் தோன்றின; அவன் தான் மாய வித்தை களாற் சூழப்பட்டிருப்பது போல உணர்ந்தான்; உடனே அவன் தன் கையை நீட்டி அவள் தந்த கிண்ணத்தை வாங்கிக் கொண்டான். அப்படி வாங்கின அதே நொடியில் தாமிருக்கும் அறைக்கதவு திடீரெனத் திறந்தது: உடனே மீனாம்பாள் சில அடிகள் பின் வைத்துக்குதித்தாள்--நீலலோசனன் தான் இன்னுங்குடியாத அக்கிண்ணத்தை மேசையின் மேல் வைத்தான்--விசுவாசமுள்ள வனான கேசரிவீரன் அவன் எதிரே வந்தான்.

அந்தப் பௌத்த இளைஞன் உடனே தன்னிருக்கையில் நின்றும் எழுந்தான்--இங்ஙனம் தான் எழுந்தது என்ன எண்ணத் தினாலென்பதைத் தானே அறிந்திலன்--நடுவில் இவ்வாறு வந்ததற்காகத் தன் ஏவற்காரனைக் கடிந்து கொள்கிறதா அல்லது தன்னை அபாயத்தில் உட்படுத்துவதாகத் தன் அறிவுக்குத் தென்பட்டு வருகின்ற இம்மாய வித்தை யினின்றும் தன்னை மீட்கவந்த அவனது வருகையை நல்லது என்று எற்றுக் கொள்ளுகிறதா இன்னதென்று அவனுக்கு ஒன்றும் தெரிய வில்லை. அவன் எழுந்து எதிரே தள்ளாடினான்; **கேசரி வீரன்** தன்றோள்களில் அணைத்துக் கொள்ளாதிருந்தால் அவன் கீழே வீழ்ந்திருப்பான். **நீலலோசனன்** தன் உணர்வை இழந்தான்; சுற்றிலும் உள்ள பொருள்கள் எல்லாம் அவனுக்கு வெறுஞ் சூனியமாய்த் தோன்றின--திரும்பவும் அவனுக்கு அறிவு தோன்றி ஏதோ ஒரு புதிய சம்பவம் நடப்பதாக அறிவிக்கும் வரையில் அவனுக்கு அவையெல்லாம் வெறும் பாழாய்க் கிடந்தன.

அவன் ஒரு கட்டிலின் மேற் படுத்துக் கிடந்தான்; அவனிருந்த அறையில் ஒரு விளக்கு மினுக்கு மினுக்கென்று எரிந்து கொண்டிருந்தது; மேலும், அவன்மேற் குனிந்து கொண்டிருந்த ஒரு மனிதன் சாயையால் அஃது இன்னும் இருளோவென்றிருந்தது. இந்த ஆள் தன் கையை நீலலோசனன் தோள் மீது வைத்து அவனை எழுப்புவதற்காக அவசரமான குரலோடு அன்புள்ள பெருமானே எழுந்திருங்கள்! பெருமானே நீங்கள் எழுந்திரும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகின்றேன்!" என்று சொல்லி அவற்றை மெதுவாக அசைத்தான்.

நீலலோசனனும் கட்டிலினின்று எழுந்திருப்பதற்கு முயன்றான்: ஆனால் தன் தலை ஈயக்கட்டிபோற் கனமாயிருத் தலை உணர்ந்தான்: திரும்பவும் தலையணைமேற் சாய்த்து, அபின்

தின்ற ஒருவனைப் போல மந்தமாய் அரைவாசி மூடப்பட்ட கண்களோடும் பார்த்தான். தன்னை எழுப்ப முயல்வோன் இன்னனென்று கூட அவன் தெரிந்து கொள்ள முடியவில்லை.

"பௌத்தன் மேல் ஆணை, எழுந்திருங்கள்!" என்று அந்த ஆள் கூவினான்; இன்னும் அவசரமான குரலோடு "தயை செய்து எழுந்திருங்கள்! நீங்கள் பல்வகை ஆபத்துக்களாற் சூழப்பட்டிருக் கிறீர்கள்!" என்று கூவினான்.

நீலலோசனன் மூளையில் உண்டான குழப்பத்திற்கும் திகைப்பிற்கும் நடுவிலே, ஏதோ இன்னதென்று அறியப்படாத ஆபத்து வரப் போகிறதென்னும் ஓர் உணர்ச்சி மாத்திரம் மெதுவாகத் தோன்றிற்று; ஆகவே, பெரும்பிரயாசையோடு தன்னையே தான் எழுப்பிக் கொண்டான்.

"என்ன! என் நன்றியுள்ள கேசரி வீரன் நீதானோ?" என்று கடைசியாகத் தன் மூத்த துணைவனைத் தெரிந்து கொண்டவன் போல வினவினான்.

"ஆ! இதோ தண்ணீர்" என்று கேசரி வீரன் சொல்லிக் கொண்டே கிட்ட இருந்த ஒரு மேசையண்டை விரைந்து போய் ஒருகைக் குட்டையைத் தண்ணீரில் தோய்த்துக் கொண்டு வந்து தன் வாலிப எசமானின் கொதிக்கும் நெற்றிமேல் கட்டினான்.

அதன் பிறகு ஒரு கிண்ணத்தில் தெளிவான தண்ணீரை நிரப்பி, அதனை **நீலலோசனன்** பருகும்படி வாயிற் கொடுத்தான் **கேசரிவீரன்** எதிர்பார்த்ததற்கு மேலாகவே அதனைப் பருகின தனால் விளைந்த நன்மைகள் மிகவிரைவில் வலிவு பெற்றுத் தோன்றின; சில நிமிஷங்களில் நீலலோசனன் தன் முழு உணர்வுந் தனக்கு வரப்பெற்றான். அவன் சுற்றிலும் நோக்கினான்; விருந்தூட்டு நடந்த அறையில் இப்போது தானிருப்பது ஒரு படுக்கையறை என்றும் தெரிந்து கொண்டான்.

"இன்னும் பொழுதிருக்கும் போதே நாம் இவ்விடத்தை விட்டு விரைந்து புறப்படுவோம், ஏனெனில், எம்பெருமானே, நாம் ஆபத்துக்களாற் சூழப்பட்டிருக்கின்றோம் என்பதனை யான் திரும்பவும் சொல்லுகின்றேன்" என்று **கேசரி வீரன்** கூறினான்.

"ஆ! உண்மையில் இங்கே இரண்டகம் நடந்திருக் கின்றதா?" என்று சடுதியிற்கூறி, விருந்தாட்டு மேசையின்

பக்கத்தே நிகழ்ந்தவெல்லாம் தன் மனத்திற் றிடீரென நினைவுக்கு வரவே "ஆம்-இங்கே அது நடந்திருக்கத்தான் வேண்டும்" என்று **நீலலோசனன்** சொல்லுகையில் அவன்கை இயற்கை யாகவே தன் கொடுவாட் பிடியை நாடியது.

ஆ! நாடியும் என்னை! அதனை அவன் உறையினின்றும் இழுக்கக் கூடவேயில்லை. மிகுந்த பலத்தோடும் அதனைப் பிடித்து இழுத்தான்: ஆனாற் பயனில்லை! கத்தியின் இலையும் உறையும் உருகி ஒன்றாய்ப் போனது போல, அஃது அவ்வளவு அழுத்தமாக அதனுள் வைத்து இறுக்கப்பட்டிருந்தது, இப்படிச் செய்ததன் கருத்து என்னை? ஒரு தரம் பார்த்த பார்வையே அவ்விரகசியம் இன்னதெனத் தெரிவிப்பதாயிற்று. அக் கத்தியின் பிடியிலும் உறையின் மேற்பாகத்திலும் தந்திரமாய்ச் சேர்க்கப் பட்டிருந்த ஓர் இரும்புக் கம்பியானது, அக்கத்தியை அசைய வொட்டாதபடி இறுக்கி வைப்பதாயிற்று.

"அதனை நான் அவிழ்த்து விடுகின்றேன். நாம் இந்தக் கோபுரத்தைவிட்டுப் புறப்படும் முன்னமே, நாம் மூவரும் இப்படைக்கலங்களைக் கையாள வேண்டியிருக்கும்." என்று கேசரிவீரன் கூறினான்.

"வியாக்கிரவீரன் எங்கே?" என்று நீலலோசனன் வினவினான்.

இக்கேள்வி கேட்டு முடிவதற்குள் அங்கே கதவு திறந்தது, வியாக்கிரவீரனே நேரில் தோன்றினான்.

அவள் பத்திரமாக வைக்கப்பட் டிருக்கின்றாளா? என்று கேசரி வீரன் கேட்டான்; இப்படிக் கேட்ட போது இவன் நடத்தையும் பேச்சும் அவன் தான் நன்றாய் அறிந்த அச் சமயத்தின் அவசரத்தின் எல்லைக்குத் தக்கபடி சுறுசுறுப்பும் துரிதமும் வாய்ந்திருந்தன.

"ஆம், அவள் பத்திரமாக வைக்கப்பட்டி ருக்கின்றாள்--அந்தத் துரோகியான பெண்பிள்ளை!" என்று வியாக்கிய வீரன் மறுமொழி புகன்றான். "சாந்த நோக்கமுள்ளவனான வீட்டுக் காரனும் மேற் கொண்டு ஏதும் குறும்பு செய்யா வண்ணம் அவ்வாறே காலுங்கையும் கட்டப்பட்டு வலிவிழந்து கிடக்கின்றான். இனி நாம் குதிரைக்காரனைத் தான் ஒருகை பார்க்க வேண்டியிருக்கின்றது."

உடனே கேசரிவீரன் துரிதமாய் "நாம் இந்தக் கோபுரத்தின் எல்லையைத் தாண்டிப் போவதற்கு முன்னே, **நல்லான்** தன் கொள்ளைக் கூட்டங்களோடும் மேற்பாய்ந்து வந்து விழாமலி ருந்தால் மாத்திரம்" என்று சேர்ந்து பேசினான்.

"ஆ! நல்லானா?" என நீலலோசனன் திடீரெனக் கூறினான். "இது கூடுமானதா? அந்த நங்கை அழகிய மீனாம்பாள் -"

"வாருங்கள் பெருமானே" என்று கேசரிவீரன் உரத்துக்கூவி "இப்போது இவற்றையெல்லாம் விவரித்துச் சொல்லப் பொழுது இல்லை! உங்கள் கொடுவாள் இப்போது கையாளத் தக்க தாயிருக்கிறது! சமயத்தில் வேண்டியபோது அதனை எடுத்தாள உங்களுக்குப் பௌத்தன் வலிமை தரக்கடவன்!" என்று சொன்னான்.

"ஓ! நல்லது! எனக்குப் பலமிருக்கிறது. இப்போது நான் முன் போலவே ஆய்விட்டேன்!" என்று அப்பௌத்த இளைஞன் கூறினான்.

வியாக்கிரவீரன் கையில் வெளிச்சம் ஏந்திவர அவனும் அவன் உடன் வந்த உண்மையாளர் இருவரும் அறையைவிட்டு வெளிப்புறப்பட்டார்கள். விருந்தாட்டு நடந்தேறிய அறைக்குச் செல்லும் வழியின் எதிரே இவ்வறைக்கதவுந் திறப்பதாக நீலலோசனனுக்கு நினைவு வந்தது; அவ்விருந் தாட்டறையின் கதவு திறக்கப்பட்டபடியே யிருந்தது; அங்கேவிளக்குகள் எரிந்து கொண்டிருந்தன; தின்பண்டங்கள் இனிதாக வைக்கப்பட்டிருந்த பலகையானது முன் நீலலோசனன் அதன் பக்கத்தில் உட்கார்ந்த போது இருந்தபடியே இருந்தது; இப்போது அவ்வறை யினுள்ளே அவன்பார்வை நுழைந்தபோது மீனாம்பாள் காலுங்கையும் கட்டப்பட்டுச் சாய்மானமெத்தைக் கட்டில் மேற் படுத்துக் கிடக்கவும், அங்கே அவளைச் சிறைப்படுத்துதற்கு வாய்ப்பாக அதனைச்சுற்றிலும் ஒரு கயிறு கட்டியிருக்கவுங் கண்டான்.

உடனே நீலலோசனன் தன்துணைவரைநோக்கி "நீங்கள் ஏதோ பயங்கரமான பிழை எண்ணத்தில் வருந்துவதாகத் தெரிகின்றதே" இந் நங்கைக்குச் செய்த மானபங்கம் பெருந் திகிலை உண்டாக்குகின்றதே! என்று கூறினான்.

“நீலலோசன! - பெருமான் நீலலோசன!” என்றுபுலம்பற் குரலோடுங்கூவி “நான் இவ்வாறு நடத்தப்படுதலைக் காண உமக்கு மனம் வந்ததா-” என்று மீனாம்பாள் உரத்துச் சொன்னாள்.

“வந்துவிடுங்கள் பெருமானே! சாரணர்கள்மேல் ஆணை வந்து விடுங்கள்! நாங்கள் செய்வது இன்னதென்று எங்கட்குத் தெரியும்.” என்று கேசரிவீரன் சடுதியிற் கூறினான்.

இச்சொற்களைக்கேட்டதும் விவரம் தெரிந்து கொள்ளு வதற்கு இப்போது நேரமில்லையென்பது உண்மை யென அந்தப் பௌத்த இளைஞன் மனத்திற்பட்டது; உடனே அதிவேகமாக அவன் தன் துணைவர் பின்னே படிக்கட்டின் கீழ் இறங்கினான். அவர்கள் வீட்டு முற்றத்திற்குப்போய்,, அங்கிருந்து குதிரை லாயத்திற்குச் சென்று. அங்கே அதனை அடுத்த ஓர் அறையில் வைக்கோற்படுக்கை மேற் கிடந்து உறங்கின குதிரைக்காரனைப் பார்த்தார்கள்.

“இப்படிச் செய்வதைவிட இம்மனிதனிடத்தில் நாம் வேறொன்றுஞ் செய்யவேண்டுவதில்லை” என்று கேசரிவீரன் சொல்லிக் கொண்டே அவ்வறைக்கதவை இழுத்துச்சாத்தித் தாழ்க்கோல் இட்டான்.

அந்த மூன்று குதிரைகளும் விரைவிற் சேண முதலியன இடப்பட்டன, அதன்பின்பு அவைகள் வீட்டு முற்றத் திற்குச் செலுத்தப்பட்டன; உடனே வியாக்கிரவீரன் கனமான ஒரு சாவியைக் கொண்டுவந்து பூட்டைத் திறந்து பெரிய வாயிற் கதவுகளையும் மலரத்திறந்தான். அடுத்த நிமிஷத்தில் அந்த மூன்று பிராயாணிகளும் அந்தக்கோபுர எல்லையைத் தாண்டிப் போனார்கள்.

“இப்போது நாம் நம்மிச்சைப்படி சவாரி செய்ய வேண்டியதுதான், ஏனென்றால், ஏமாற்றிக்கொண்டு வரப்பட்ட நாம் இந்தப் பிரதேசத்தைப் பற்றிச் சிறிதும் அறியோமாகலின் என்று கேசரி வீரன் சொன்னான்.”

அவ்விடத்தைவிட்டு அவர்கள் மிக வேகமாய்ச் சென்றார் கள்; அவர்கள் அவ்வாறு குதிரைகளைக் கடுவேக மாய்ச் செலுத்திக்கொண்டு சென்றமையால், நீலலோசனன் தான் தெரிந்துகொள்வதற்கு மிக்க ஆவலோடும் எதிர்பார்த்திருந்த

விவரங்களைத் தெரிந்து கொள்ள இடமில் லாமற் போயிற்று. ஆயினும் அவன் இன்னும் தன் சிந்தனையின் வழிப்பட்டே யிருந்தான். தான் வருங்கால் கோபுரத்தின்மேல் விருந்தாட்ட றையின் கதவுகள் திறக்கப் பட்டிருந்தபோது தன் துணைவர்கள் ஏதோபிசகான எண்ணத்தால் தவறு செய்து விட்டார்கள் என்று நடுங்கினானாயினும், அக்கோபுரத்திற்கு நல்லான் தன் கள்வர் கூட்டத்தோடும் வரப்போகிறா னென்பதைத் தன்னவர் எப்படி யறிந்தார்கள் என்று தான் தெரிந்திலனாயினும், பின்னர்ச் சில நிமிஷம் எழுந்தஆழ்ந்த சிந்தனையினால் அவர்கள் செய்தது நியாயமாகத்தா னிருக்கவேண்டு மென்றும், அங்கே ஏதோ துரோகம் நடந்திருக்க வேண்டுமென்றும் அவன் இனிதுணர்ந் தான். இன்னும் அந்நங்கை ஏதோ மோசமான கருத்துக் கொண்டிருந்தா ளென்பது, உறையினுள்ளே கொடுவாளானது இறுகப் பிணிக்கப் பட்டிருந்தமையினாலேயே நன்கு விளங்கிற்று. பின்னும் அவள் எவ்வளவு தந்திரமாகத் தன்படைக் கலத்தைப் பயனற்றதாகச் செய்யும் இசைவான சமயத்தை நாடித், தன்பக்கத்தே உணாப்பொருள் நன்றாகப்பரப்பிய மேசையின் கீழேகுனிந்து, தன்கொடுவாளைமுத்தமிட்டு விளையாடுவாள் போல மாயங்காட்டிய செய்கை முழுதும் நீலலோசனன் நினைவுகூர்ந்தான்.

அதுமிகவும் இனியதோர் இராப்பொழு தாயிருந்தது; ஆகாயம் எங்கும் வான்மீன்கள் தொகுதி தொகுதியாக நிறைந்து, வெள்ளியசந்திரனை இனிது பின்பற்றி நின்றன. அஃது ஏறக்குறைய பகற்காலத்தைப்போல் அவ்வளவு வெளிச்ச முள்ளதாக இருந்தது; நீலலோசனனும் அவன் துணைவரும் குதிரைகளை அதிவேகமாகச் செலுத்திக் கொண்டுபோகும் அங்குள்ள நிலத்தோற்றம் எல்லாம் வெண்மையான ஒளி வெள்ளத்தின்கண் முழுகினாற்போலத் தோன்றின. இங்ஙனம் ஒரு நாழிகை நேரம் வரையில் இவர்கள் கடிவாளத்தை இழுத்துப்பிடியாமலேசவாரி போனார்கள். - கடைசியாக ஒரு பட்டினத்தின் கட்டடிடங்கள் அவர்கள் காட்சிக்குத் தென் பட்டன. இன்னும் அவர்கள் அப்பட்டின எல்லையில் வரும் வரையில் சவாரியின் வேகத்தைக் குறைக்கவேயில்லை; அவ் வெல்லைக்கு வந்தபிறகு தான் தாம்பத்திரமாய் வந்து சேர்ந்ததாக உணர்ந்தார்கள். சீக்கிரத்தில் வசதியான ஒருசத்திரத் தண்டை

வந்து சேர்ந்தார்கள்; அச்சத்திரத்தி லுள்ளவர் களெல்லாம் நெடு நேரத்திற்கு முன்னே உறங்கப் போனார் களாயினும், புதிதாய் வந்த பிரயாணிகள் கூப்பிட்டவுடனே எழுந்து வந்து உதவி னார்கள். குதிரைகள் இலாயத்திற் சேர்ப்பிக்கப்பட்டன; நீலலோசன னுக்கும் அவன் துணைவர் களுக்கும் இசைவான தக்க அறைகள் சித்தஞ்செய்து தரப்பட்டன.

இப்போது கடைசியாக நீலலோசனன் தான் அறிந்து கொள்ளுவதற்கு மிக விழைந்த விவரங்களைத் தெரியப் பெறுதற்குச் சமயம் வாய்த்தமையால், அவை தம்மைத் தெரிந்து கொள்ளாமல் அவன் படுக்கைக்குக் செல்லக்கூட வில்லை. இராக்காலத் திடையிலே அதிவேகமாய்ச் சவாரி செய்து கொண்டு வந்தமையால், நீலலோசனனிடம் சிறிது தங்கியிருந்த தூக்க மயக்கமும் பறந்து போயிற்று; இழைந்தாற் போன்ற சிறியதலைவலியைத் தவிர மதுபான மயக்கத்தால் விளையுந் தீங்கு பிறிதொன்றும் அவன் அனுபவிக்கவில்லை. கேசரிவீரனும் வியாக்கிரவீரனும் அவ்விவரங்களைத் தெரிவிப்பதற்கு விருப்பம் அற்றவரல்லர்; பிறகு, அச்சத்திரத்திற் றம் இளைய எசமானனுக் கென்று விடப்பட்ட அறையின் கண்ணே அவ்விருவரும் உறங்கச்செல்வதற்கு முன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந் தனர்.

"அஃதெப்படியோ நான் அறியேன்,. முதலிலிருந்தே அந்த நங்கையை நாம் சந்தித்ததில் எனக்கு விருப்பமே இல்லை. ஒருகால் நீலகிரி நகரத்திற்குச்செல்லும் பாட்டையில் நம்மை விடுவதாக அவினயித்த அச்சுடுமூஞ்சிக் குடியானவனைப் பற்றி யான் கொண்ட அவநம்பிக்கை யாலும் ஐயுறவாலும் எனக்கு அஃது அப்படித் தோன்றியதோ, மாட்சிமை தாங்கிய தாங்கள் யான் சொல்வதை மன்னிக்கவேண்டும். தாங்கள் துணை வருவ தானால், தான் அதற்கு இசைவதாக அந்த நங்கை இலேசாக இணங்கிக் குறிப்புக் காட்டியதில் எதோ ஒரு புதுமை யிருப்பதாக எனக்குத் தோன்றியது. மேலும், பெருமானே., தங்களை வசியப் படுத்துவதற்காக அவ்வம்மை தங்களைப் பார்த்த பார்வையும் என் கவனத்தை விட்டு அகன்றிலது. என்றாலும், துணியப்படாத ஒருவித சஞ்சலத்தைத் தவிர வேறு ஒன்றும் என் மனத்தில் தோன்றவில்லை- உண்மை சொல்லுமிடத்து, அதற்காக என்னையேநான் நொந்து கொள்ள வேண்டிய வனாயிருக் கிறேன்; ஏனென்றால், மாட்சிமை நிறைந்த தாங்கள் உலகத்தில்

அதிசாக்கிரதையுள்ள மனிதவகுப்பில் என்னைச் சேர்த்திருக் கிறீர்களன்றோ?'' என்று கேசரி வீரன் கூறினான்.

நீலலோசனன் புன்சிரிப்போடு, "என் நல்லகேசரிவீர, பின்னுஞ் சொல்லவேண்டுவ தெல்லாஞ்சொல், நான் இது வரையிற் செய்ததைவிட இனிமேல் உன்னுடைய சாக்கிரதைக் குணத்தை மிகவுங் கவனித்துச்செல்வேன்.'' என்றான்.

வியாக்கிரவீரன் தன்எசமானன் கூறிய உபசாரவுரையைப் பணிவோடு ஏற்றுப் பின்வருமாறு சொல்லப்புகுந்தான்:-

"கோபுரத்திற்கு இரண்டரைநாழிகை சவாரி தூரத்தி லிருந்த சிறிய ஒரு குடிசையின் கண்ணே நாம் நம்முடைய குதிரைகளுக்குத் தீனி தருவதற்காகத் தங்கியதை மாட்சிமை நிறைந்த தாங்கள் நினைவு கூர்ந்திருக்கின்றீர்கள். அங்கிருந்த குதிரைப் பாகன் குதிரை நோட்டத்தில் கைதேர்ந்தவனும், நேர்த்தியான பிராணியைப் பாராட்டுகின்றவனும் ஆன தந்திரமுள்ள ஒரு கிழவன். அவன் தன்கையிற் கொண்டுவந்த வெளிச்சத்தினாலே குதிரைகளைப் பரிசோதித்து வருகையில், அந்த நங்கை ஏறிவந்த அழகிய பிராணியின் சந்திலே வைக்கப்பட்ட சுடுதழும்பைப் பார்த்தான்; உடனே, அவன் வாயில் ஆச்சரியத்தோடுங் கூடிய சில சொற்கள் சடுதியிற் பிறந்தன. உடனே யானும் அவனை என்னவென்று வினவினேன். முதன் முதல் அவன் என்மேற் சந்தேகப்பட்டான். மாட்சி நிறைந்த தாங்கள் இப்போது தெரிந்து கொள்ளப்போகும் விவரங்களால், அப்படிப்பட்ட நிலைமையில் அவன் ஐயுறவு கொண்டது. இயற்கையே யாகும் என்பது விளங்கும். ஆயினும், நான் அக்குதிரைக்காரக் கிழவனுக்கு நாங்கள் உண்மையுள்ள சனங்கள் என்று மெய்ப்பித்துக் காட்டினேன். அவனுக்குக் கைக்கூலி கொடுப்பதாகப் பின்னும் வாக்குறுதி செய்து, அவன் வாயினின்றே எல்லா விவரங்களும் தெரிந்து கொண்டேன். சுருங்கச் சொல்லுங்கால் எம்பெருமானே, அந்த நங்கை ஏறிவந்த அழகிய குதிரை திருடர் தலைவனான நல்லானுக்கே உரியது.''

உடனே நீலலோசனன் "ஆ'' என்று ஆச்சரியம் உற்று, "அப்படியானால் அந்த நங்கை யார்?'' என்று வினாவினான்.

"பெருமானே, எனக்கு அது தெரியாது. அவள் அவன் மனைவியாகவாவது, உடன்பிறந்தாளாகவாவது அல்லது

*வைப்பாட்டியாகவாவது இருக்கலாம்; எனக்குத் தோன்றிய மட்டில் அவள் கடைசியிற் சொன்னபடியாகத் தான் இருக்க வேண்டும்; ஏனெனில், அவவ்ளவு இரண்டகமாக நடப்பவள் நல்லொழுக் கத் துறைகளைக் கடைப்பிடிப்பாள் என்று எண்ண இடமில்லையே. அஃதப்படி யானாலும், அக்குதிரை பிரசித்தி பெற்ற கள்வர் தலைவன் நல்லானுக்கே உரிய தென்பதை அக்குதிரைக் காரக் கிழவன் தெரிந்து கொண்டது நிச்சயம். ஆனால், அவன் அப்பிராணியைத் தான் எவ்வாறு தெரிந்து கொண்டானென் பதைத் தானும் எனக்கு அறிவிக்கவில்லை யானும் அதனைத் தெரிந்து கொள்ளக் கவலைப்படவில்லை. தனக்கும் நல்லானுக்கும் ஒருகால் உண்டான சம்பந்தம் பிறரறியாமல் தன் மட்டில் வைத்திருக்க எண்ணினான் என்பதிற் சந்தேகமில்லை." என்றான் கேசரி வீரன்.*

*"நல்லது, அவ்விரகசியத்தை நீ தெரிந்து கொண்ட வுடனே; நீ எனக்கு அதனை அறிவியாதது ஏது காரணத்தால்?" என்று நீலலோசனன் கேட்டான்.*

*"ஆ! பெருமானே, தாங்கள் அந்நங்கை மீது அறிவுமயங்கி யிருந்தீர்கள் என்பதனை யான் காணவில்லையா?" அவள் அழகியாயும் நீங்கள் இளைஞராயும் இருந்தமையால் அது இயற்கையேயாம் - என்று கேசரிவீரன் மறுமொழி கூறுதற்குள்;*

*நீலலோசனன் பதைப்போடும் "புத்தன் அறிய நீ என்னைப் பிழைத்தறிந்தாய்! முதலிற் சில நிமிஷம் யான் மயங்கிய துண்டு - அல்லது யான் கலக்க முற்றதுண்டு; ஆனால் அவள் பார்வை யையும் மாதிரியையும் யான் நோக்கிய அளவில் அவ்வுணர்ச்சி மறைந்து போயிற்று" என்றான்.*

*கேசரிவீரன் இடைமறித்து "நல்லது நல்லது பெருமானே, ஏதோ யான் தங்களைத் தவறுதலாய் எண்ணினேன் - ஆயினும், ஒரு பாதி யான் சொல்லியதுண்மை என்பதைத் தாங்களும் ஒப்புக்கொள்ள வேண்டியதே; ஏனென்றால், விருந்தாட்டு மேசையின் பக்கத்திலே தாங்கள் அவள் மாயத்தில் முழுதும் வசப்பட்டிருந்தீர்களே!" என்றான்.*

*அதற்கு நீலலோசனன் "நாணயத்தோடும் நான் அதனை ஒப்புக்கொள்ளுகின்றேன்!" என்று வெட்கமுற்று "ஒரு கிண்ணந் திராட்சப்பழ ரசத்தை யான் பருகினேன்; அந்நங்கையும் அதனை*

அவ்வாறே பருகினாள்; எனினும், அக்காட்டுமதுவை யான் பருகிய பின்னரேதான் என் பகுத்தறிவு குழம்பலாயிற் றென்ப தனை இப்போது நினைவு கூர்கின்றேன்.'' என்று மறுமொழி புகன்றான்.

“இம்மேற்கணவாய் மலைப்பக்கங்களில் தேனீக்கள் மயக்கந் தரும் தேனையே பூக்களினின்றும் உறிஞ்சுதலால், அத்தகைய தேனானது மனிதருடைய மூளையை மயங்கச் செய்வது ஒரு வியப்பன்று!'' என்று கேசரிவீரன் கூறினான்.

“இவ்விரகசியத்தின் அந்தப்பாகம் இப்போது விளங்கியது. கபடமுள்ள அந்தப் பெண்ணானவள் இம்மதுவை மிகுதியாக உண்ணும்படி என்னைக் கட்டாயப்படுத்தினாள். விருந்தோம்பு வாள் போல என்னை அவ்வளவு தந்திரமாகத்தான் செய்யுங் காரியங்களுக்கு உடம்படுத்தினாள். தயைசெய்து கேசரி வீர மற்றுஞ் சொல்ல வேண்டுவதைச் சொல்'' என்றான் **நீலலோசனன்.**

நன்றியுள்ள அத்துணைவன் முன்விட்டதிலிருந்து திரும்பவும் சொல்லப்புகுந்து “மாட்சிமை நிறைந்ததாங்கள் அந்தப்பெண்மேல் நிரம்பவுங் காமுற்றதாக எண்ணினே னாயினும், குதிரைகள் தீனியூட்டப்பட்ட குடிசையினின்றும் நாம் வந்த பிறகு தங்களுடன் அந்தரங்கமாகப் பேசுவதற்குப் பலமுறை முயன்றேன்.. அஃதொன்றும் பயன்படாமற் போயிற்று. உண்மை சொல்லு மிடத்துத் தங்களுடன் பேசுவதற்கு இடம் வாய்த் தாலுங்கூட, அதனால் ஏதும் பயன்விளையா தென்றே அஞ்சி னேன்; ஏனென்றால், யான் சந்தேகப்படுதலைப் பற்றித் தாங்கள் தங்கட்கு வழக்கமாயுள்ளபடி உல்லாசமாக நகையாடி விடுவீர் களென்றும், நல்லானுடைய குதிரை அம்மாதரிடம் வந்த தற்குப் பலவகையான காரணங்கள் கற்பித்துக் கூறுவீர் களென்றும் கருதினேன். எப்படியாயினும், ஒவ்வொன்றையும் கவனித்துச் சாக்கிரதையா யிருப்பதற்குந் தீர்மானித்தேன். நாமும் அந்தக் கோபுரத்தில் வந்து சேர்ந்தோம். தாங்களும் அந்த மாதும் அங்கே விருந்தாட்டறைக்குப் போயினீர்கள். வியாக்கிர வீரனும் யானும் அம்மாதின் தோழிமார்களோடு விருந்துண்டு இருந் தோம். நாங்கள் உணவருந்தும்போது திராட்சப்பழரசமும் காட்டுத்தேனும் எங்கட்கும் கொண்டு வந்து வைக்கப்பட்டன. ஆயினும், யான் சமயம் வாய்த்தது கண்டு அவ்விரண்டையுந்

தொடவேண்டாமென்று வியாக்கிர வீரன் காதிற்கு குசுகுசு வென்று சொல்லிவிட்டேன். அந்தப் பெண்களோ வென்றால் அவற்றைப்பருகும்படி எங்களைக் கட்டாயப் படுத்தினார்கள். நாங்கள் அவற்றை உண்ணோம் என்று மறுத்துவிட்ட போது, அப்பெண்கள் ஏதுகாரணத்தால் என்று வினவுவது போலத் தம்மில் ஒருவரை ஒருவர் விரைந்து நோக்கியதை யான் கண்டு கொண்டேன். இங்ஙனம், ஏதோ இரண்டகம் நடக்கப்போகிற தென்று கொண்ட என் சந்தேகம் வலுப்படுவ தாயிற்று. கடைசி யாக அந்தப் பெண்கள் தங்கள் தங்கள் அறையிற்படுக்கப் போனார்கள்; அவர்கள் அப்படிப் போன பிறகு வியாக்கிர வீரனிடம் என் சந்தேகங்களையும் அவற்றின் காரணங்களையும் எடுத்துக் கூறினேன். அதன்மேல், நாங்கள் காவலாய் விழித்திருக்க இசைந்தோம்; அப்பால் குதிரையைப் பார்க்கிறதற் கென்று சாக்குக்காட்டிக் கோபுரத்துள் நடக்கப் போவதை யெல்லாம் கண்டறிய அங்கேயுள்ள முற்றத்திற்குப் போனேன். குதிரை லாயத்தில் ஒருவிளக்கு எரிந்து கொண்டிருந்தது; அதன் கிட்டப்போனபோது சிலர் பேசிய சத்தங்கேட்டது. யான் அஃதென்னவென்று உற்றுக் கேட்டேன். சாந்த நோக்கமுள்ள அவ்விடத்துவேலைக்காரன் குதிரைக்காரனிடம் பேசிக் கொண்டிருந்தான். அவர்கள் பேசுவதிலிருந்து போது மான அளவுக்கு யான் ஒன்றுந்தெரிந்துகொள்ளக் கூடவில்லை. ஆயினும், யாங்கள் ஒரு சூழ்ச்சியில் அகப்படுத்தப்பட்டே. மென்றும், இருளன் என்னும் பெயருள்ள யாரோ ஒருவன் மிகவும் விரைவாகக் குதிரைஏறி **நல்லான்** இருப்பிடங்களில் ஒன்றை நோக்கிப் போயினானென்றும், அவனுடைய கொள்ளைக் கூட்டத்தாரின் ஒரு பிரிவு சிறிது நேரத்தில் அந்தக் கோபுரத்திற்கு வருமென்றும் மாத்திரம் யான் தெரிந்து கொள்ளக்கூடிய அளவு அதனினின்று கிரகித்தேன். உடனே யான் வியாக்கிரவீரனிடம் திரும்பி வந்ததும் யாங்கள் விரைவிற் செய்யவேண்டுவன இவையென்று தீர்மானித்தேம் வரப் போகும் மோசத்தைப்பற்றித் தாங்கள் உடனே அறிவிக்கப்படுதல் வேண்டும். யான் விருந் தாட்டறைக்கு ஏறிவந்து, பெருமானே, தாங்கள் அந்தமாய வித்தை யினுள் அகப்பட்டிருத்தலைக் கண்டேன்." யானே எல்லா வற்றையுஞ் சந்தேகித்தேன் என்னும் படியாய்ச் செல்வேனானால் அங்கே உள்ளார்க்குச்சந்தேகம் பிறந்து தீப்பந்தம் முதலான குறிகளாலே கள்வர் கூட்டத்தைச் சடுதியில் வருவித்து நாம்

தப்பிப்போகா வண்ணஞ் செய்து விடுவார்கள் என்னும் அச்சத்தினால், அம்மாதரிடத்தில் மரியாதையுள்ளேன் போல நடித்துக்காட்டித் தாங்கள் அளவுக்கு மிஞ்சி மதுபானம் பண்ணி விட்டீர்க ளென்று யான் கருதினேனாகமாத்திரம் அவள் நம்பச்செய்தேன். அவள் ஒரு படுக்கையறையைக் காட்டினாள். நான் படுக்கப்போகும் வரையில் அவள் அங்குதானே நின்று கொண் டிருந்தாள். மறுபடியும் யான் வியாக்கிர வீரனிடஞ் சென்று, அவன் செய்ய வேண்டுவன இவையென்று தெரிவித் தேன் என்றான்.

இதன்தொடர்பாக உடனே வியாக்கிரவீரனும் சில சொல்லப் புகுந்து "நானும் உடனே சாந்த நோக்கமுள்ளவனான வீட்டுவேலைக்காரனிடம்போய், அவன் ஓரிடத்தில் தனிமையாக வேலைசெய்து கொண்டிருக்கக் கண்டேன். உடனே அவனைப் பிடித்து அமுக்கிக் காலையுங், கையையுங் கட்டிப்போட்டு விட்டு, அவனது இடுப்புக் கச்சையிலிருந்த வாசற்கதவின் சாவிகளை எடுத்துக் கொண்டு வந்தேன்" என்றான்.

அதைத்தொடர்ந்து கேசரிவீரன்: "யான்செய்ய வேண்டு வன இவையென்று வியாக்கிரவீரனிடம் சொல்லிய பின் "சிறிதுநேரத்திற் கெல்லாம், யான் தாங்கள் இருந்த அறைக்கு மெதுவாகப் பதுங்கிக்கொண்டு வந்தேன்; வழியில் அந்தப் பெண்ணைச் சந்தித்தேன். என்னைப்போலவே அவளும் தங்களறைக்கு வந்து கொண்டிருந்தாள் என்று தோன்றியது. ஒருநொடிப்பொழுது அவள் தடுமாற்றம் உடையளாய்க் காணப்பட்டாள்; வியாக்கிரவீரன் கோபுரக் கதவுகளின் திறவுகோல்களை அகப்படுத்திக் கொண்டான் என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரிந்தமையால், என்னுடைய உபாயம் செய்து முடித்ததற்குப் பக்குவமுடையதெனக் கண்டேன். அதன்மேல் அப்பெண் எனது சிறையிலகப்பட்டாள் என்பதனை அவள் அறியச்செய்தேன். உடனே அவள்தன் வாயால் உரத்துக் கூவத்தொடங்கியபோது, என் கையால் அவள் வாயைப் புதைத்தேன். அதே சமயத்தில் வியாக்கிர வீரனும் அங்குவந்து சேர்ந்தான்; உடனே அவளை அவன் வசம் ஒப்பித்தேன்; அதன்பிறகு தாங்களிருந்த அறையினுட் புகுந்து, தாங்கள் அமிழ்ந்திக்கிடந்த பெருமயக்கத் தினின்றுந் தங்களை எழுப்பி னேன். அப்பால் நடந்தனவெல்லாம் தாங்கள் அறிவீர்கள் என்று கூறினான்.

இளைஞனான **நீலலோசனன்** தனக்கு அவர்கள் புரிந்த பேருதவிக்காகத் தன் துணைவர் இருவர்க்கும் உளங்கனிந்து வந்தனங்கூறினான். முக்கியமாய் நுண்ணறிவும் எச்சரிக்கையும் பொருந்திய **கேசரிவீரன்** நடத்தையை அவன் மிகவியந்து கூறினான். அப்பால் தன் கட்டிலின்மேற் துயில்கொள்ளப் போயினான் - சுறுக்காக அவனை வந்து கவிந்த உறக்கத்தில் கொள்ளைக்காரர் உருவங்கள் முதன்மை பெற்றுத் தோன்றின; பொன்மயமான மூடுபனியின் ஊடே வஞ்சகியான மீனாம் பாளின் அழகிற் சிறந்த முகமானது தோன்றிக் கரியஇறைக ளோடுங் கூடின பெரிய வாள் விழிகளைத் திறந்து அவனைத் திரும்பவும் நோக்குவன போல் தோன்றின.

## அதிகாரம் - 5

# நல்லான்

*பிற்பகற்காலம், நேரமோ மிகவும் ஆயிற்று; நிழல்படர்ந்த ஓரிடத்தில் இரண்டுபேர் புல்லின்மேற் சாய்ந்துகொண்டிருந் தார்கள். அவர்களிருவரும் ஒருவரையொருவர் விலகிச் சிறிது தூரத்தில் இருந்தமையால், ஒருவன் மற்றையோனை விடத் தாழ்ந்த நிலையிலுள்ளான் என்பது குறிப்பிக்கப்பட்டதாயிற்று. இருவரும் கள்வர்க்குரிய உடை அணிந்திருந்தனர்; என்றாலும்,. ஒருவன் அணிந்திருந்தது மற்றையோனதைவிட மிக்க விலைபெற்ற தாயிருந்தது. இங்கே இரகசியமாய் வைக்கத்தக்கது ஒன்று மில்லையாதலால், உயர்ந்தவன் என்று சொல்லப் பட்டோன்* ***நல்லானே****யன்றிப் பிறர் அல்லர் என்றும், தாழ்ந்தவன் என்று சொல்லப்பட்டோன்* ***இருளனை****யன்றிப் பிறரல்லர் என்றும் அறிவிக்கின்றோம். மேற்கணவாய் மலைச் சரிவில் இருக்கும் காடுகளின் நடுவே உள்ளே கூடாரத்தில்* ***சந்திரன்*** *என்னும் இளைஞன் ஒருவன் போய்க் கள்வர் தலைவன் ஒருவனைக் கண்டான் என்று முன்னே யாம் கூறியதை இதுபடிப்போர் மறந்திருக்கமாட்டார்கள்; அந்தக் கள்வர் தலைவனே இந்தப் பயங்கரமான நல்லான் என்று அவர்கள் அறிவார்களாக.*

***இருளன்*** *என்பவனோடு சேர்ந்து* ***நல்லான்*** *இப்போது புல்லின் மேற்சாய்ந்துகொண்டிருக்கும் இந்த இடமானது, மேற்சொல்லிய காட்டுக்கு மிகநெடுந்தூரத்தில் உள்ளது. இவர்களுடைய சுற்று குழற்றுபாக்கிகள் இவர்கள்பக்கத்திற் கிடந்தன; இவர்களுடைய குதிரைகள் அருகாமையிற் புல் மேய்ந்து கொண்டிருந்தன; இவர்கள் இங்கே தனிமையாக இருப்பதுபோற் காணப்பட்டனர். அடுத்தாற் போல் உள்ள மரங்களின் நடுவிற் கூடாரம் ஏதும் அமைக்கப் படாமையால், இவர்கள் இவ்விடத்தில் நெடுநேரம் தங்கியிருக்கும் கருத்தில்லா தவர்போற் காணப்பட்டார்கள்.*

எண்ணியகாரியங்கள் தன் விருப்பப்படி நடந்தேறாமைப் பற்றி நல்லானுடைய அழகிய முகத்தில் ஒருவகையான விசனக்குறிதோன்றியது; இவன் ஏவல்ஆளான இருளனோ தன் எசமானன் எப்போதும் போல இப்போது தன்னைப் பற்றி உயர்வாக நினைக்கவில்லை என்பதனை உணர்ந்தான்போல மனத்தளர்வுங் கலக்கமும் உள்ளவனாய்க் காணப்பட்டான். இவர்கட்குள் இதற்குமுன் எத்தகைய சம்பாஷணை நடந்ததோ, இப்போது இவர்கள் நெடுநேரம் வாய்பேசாது சும்மா இருந்தார்கள்; கடைசியாக நல்லான் தானே வாய்திறந்து பேசுவானாயினான்; இவன் முதலிற்பேசும்போது வெடுவெடுப் பான குறியோடும், பொறுமையில்லாத உடம்பாட்டத்தோடும் பேசினான்.

இருளா! நீயும் உன் கூடவந்ததோர் ஐவரும் பௌத்தர் மூவரால் முழுத்தோல்வி பெற்ற கதையை நீ சொல்லக் கேட்கும்போது யான் விழித்திருக்கின்றேன் என்று என்னையே நான் இப்போதும் நம்பக் கூடவில்லை; ஈதெல்லாம் எனக்கு ஒருகனவுபோற் றோன்றுகின்றது எனத் திரும்பத் திரும்ப யான் சொல்லவேண்டுமா? என்று நல்லான் என்னுங் கொள்ளைக் கூட்டத்தலைவன் கூறினான்.

“எங்கள் துப்பாக்கிகளைக் கையாளவேண்டிய வழியைப் பற்றி நீங்கள் இட்டகட்டளை முதலிலிருந்தே மரணத்திற் கேதுவாயி ற்றென்பதை தங்கட்கு விவரமாய்ச் சொன்னேனே” என்று இருளன் விடைபகர்ந்தான்.

“அப்படியானால் அந்தத் துப்பாக்கிகளை நீ உபயோகப் படுத்தியிருக்க வேண்டும் உயிராகவோ, பிணமாகவோ நீலலோசனன் என்னும் அரசிளைஞனைக் கொண்டுவரும்படி கேட்டேனே. அவனைச் சிறைப்படுத்தி என் கைவசப்படுத்து வதையே யான் மேலாக எண்ணினேன் என்பதும் உனக்குச் சொன்னேன்; ஏனென்றால், அவன் எனக்கு ஏதொரு தீங்கும் செய்யாமையானும், என் ஆயுசில் அவனை யான் கண்டதில்லா மையானும் நான் பச்சை ரத்தம் ஒழுகக் கொல்லும் கொலை காரன் அல்லனாகலானும், தக்க காரணம் இன்றி ஒருமனிதனு யிரைப் பலியிடுவதில் எனக்கு விருப்பமில்லா மையானும் என்பது. ஆயினும் அப்படிப்பட்ட இடரான நிலையில் முக்கியமாய்த் தன்னைக் காக்க வேண்டி நேர்ந்த சமயத்தில் - என்று கொடுங்

கோபத்தோடும் நல்லான் சொல்லி முடிப்பதற்குள்; இருளன் சிறிது கோபத்தோடும் பதறித் “தலைவனே யான் சொல்வதைக் கேளுங்கள்! என் ஆட்களிற்சிலர் துப்பாக்கி களை எடுத்துச் சுட்டார்கள்: ஆனால், அது கொஞ்சம் பிந்திப் போயிற்று. அவர்கள் மிகவுங் கொடுமையாய் காயப் படுத்தப் பட்டுப் புறப்பட்டு ஓடிப்போகும்படி கட்டாயப்படுத்தப் பட்டார்கள். சண்டை நடந்த இடத்திற்குமிக்க தூரம் அல்லாத நிலவறை யொன்றிலே அவர்கள் கிடக்கிறார்கள்- அவ்விடத் திற்கு உதவிக்காகச் சிலரை யனுப்பி யிருக்கின்றே னென்பது தாங்கள் முன்னம் அறிந்ததே. என்னைப் பற்றியோ வென்றால் இதற்கு முன் என் அனுபவத்திற் கண்டறியாதவிதமாய் நடந்த அச் சண்டையில் எனக்குக்கஷ்டமாக முடிந்ததென்பதைத் தெரிவித்துக் கொள்ளுவதற்கு யான் தாமதிக்கவில்லை. மிக்க பிரயாசத்தோடு யான் தப்பிப்பிழைத்தேன். ஆனாலும் போது மான தூரத்திலிருந்து கொண்டு என் துப்பாக்கியினாற் சுட்டு அவ்விளைய நீலலோசனனைப் பிடித்துக் கொண்டாவது வரக்கூடுமென்று யான் எண்ணியும் அதிலும் யான் தவறிப் போனேன். தகுதியுடையீர்! தங்களின்கீழ் யான் படைத்தலைவ னாயிருக்கக் கிடைத்த நாள் முதல் இம்முறைதான் அபசெய மடை யலானேன். இதற்காகத் தாங்கள் போதுமான அளவுக்கு என்மேல் நிந்தைமொழிகளை நிரப்பி விட்டீர்கள்” என்று கூறினான்.

நல்லான் ஆழச்சிந்தித்துப் பார்த்து ஏதும் மறுமொழி சொல்லாதிருந்தான்.

மறுபடியும் **இருளன்** “புகழ்நிறைந்த தலைவனே! யான் இந்தத் தோல்வியினால் வந்த தாழ்வுகளை அனுபவிப்பதற்கு ஆளாகி விட்டேன் என்பதையும், அவனைப்பற்றி உங்கள் உத்தேசம் எதுவாயிருந்தாலும் நீங்கள் நீலலோசனனைச் செவ்வையாய்ப் பார்த்து விட்ட பிறகு அவன் என்னோடு படுசண்டை செய்யும்படி தூண்டத்தக்க சமயத்தை விரைந்து எதிர்பார்த் திருக்கின்றேன் என்பதையும் உணர்ந்து மனம் ஆறுதல் அடையுங்கள். ஏனென்றால், எனது பெயருக்கு வந்த களங்கத்தை அவ்விளம் பௌத்தனுடைய இரத்தத்தாற் கழுவினாலன்றித் திரும்பவும் யான் ஒரு துணிந்த கள்வனென்று தலையெடுக்க மாட்டேன். பெருமானே! கடைசியாகத் தங்கள்

ஏற்பாட்டின்படி நடப்பதற்கு ஏதும் தீங்கு உண்டாகவில்லை; ஏனெனில் இந்நேரம் இளைய நீலலோசனன் பிரித்து அனுப்பபட்ட நம் ஆட்களின் கையிற் சிறையாய் அகப்பட்டிருப் பான் என்பதில் ஐயமில்லை.'' என்று சொன்னான்.

“என்றாலும், இதிலுங்கூட எனக்கு ஐயுறவாகத்தான் இருக்கின்றது: ஏனென்றால் நீ எண்ணுகிறபடியுஞ் சொல்லுகிற படியும் நடந்திருந்தால், அச்செய்தி சில நாழிகைகட்கு முன்னேயே நம்மிடம் எட்டாதது ஏன்? **மீனாம்பாள்** பெருமாட்டி அனுகூலமான செய்தியைத் தெரிவிப்பதில் காலந்தாழ்ப்பவள் அல்லளே...'' என்று **நல்லான்** இணைந்து பேசினான்.

“அச்செய்தியைத் தெரிவிப்பதில் காலந்தாழ்ந்தமைக்குத் தக்க காரணம் இப்போதே தெரியவரும் என்பதற்குச் சந்தேக மில்லை; ஏனெனில், நம் உபாயம் முழுதும் மிகவுந் திருத்தமாக ஒழுங்கு செய்யப்பட்டமையால் அது தவறு மென்பது கூடாத காரியம்.'' என **இருளன்** மறுமொழி பகர்ந்தான்.

“ஆ! நாம் சுழற் றுப்பாக்கியினையும் வாளினையும் கீழ் எறிந்து விட்டுத் தந்திரவகைகளிலும் நுண்ணிய உபாயங் களிலும் நுழைந்ததே, நாம் நமக்குரிய இயற்கையைக் கடந்த தாகும் என்று நினைக்கின்றேன். இப்படிப்பட்ட சண்டை யிடுவதில் எனக்குச் சிறிதும் திறமை இல்லை.'' என்று **நல்லான்** திடுமென மொழிந்தான்.

“என்றாலும், தலைவனே நம்முடைய உபாயவகைகள் மிகவும் நன்றாக யோசனை செய்து அமைக்கப்பட்டன வேயாகும் என்பதைத் திரும்பவுஞ் சொல்லுகின்றேன். ஆனால் அவ்வுபாய வகைகளை யான் தங்களுக்கு முதலிற் சொல்லிய போது நீங்கள் அவற்றைப் பொறுமையோடு கேட்கவில்லை; ஆகவே. இப்போதும் அவற்றை நீங்கள் அறிந்து கொள்ளா விட்டால் அதற்காக நான் ஆச்சரியப்பட வேண்டியதில்லை.'' என்று **இருளன்** உறுத்திச் சொன்னான்.

அதற்கு அத்தலைவன் ஏளனமாய் “அப்படியானால் நீ எங்ஙனம் இவ்வளவு உயர்ந்த ஏற்பாட்டைச் செய்தனை என்பதும், நீ அடைந்த தோல்வியை இஃது எவ்வாறு மாற்று மென்பதும் உன் வழக்கப்படியே விவரமாக எடுத்துச்சொல். ஒரு வேளை நீ சொல்லுவது எனக்கு நன்மைதருமென்று நம்புகின்றேன்--

என்றாலும் இச்சமயம் நீ சொல்லுவ தொன்றும் எனக்கு விருப்பமாய் இராது என்று ஒளியாமற் சொல்லு கிறேன்." என்றான்.

"அவ்விவரங்களை எடுத்துச் சொல்வதென்றால் நான் தோல்வி அடைந்தது முதற்கொண்டு சொல்லவேண்டும்,-- பெருமை மிக்க தலைவனே! இத்தோல்வியைப் பற்றித் தாங்கள் ஏதோ தயாளமின்றி அடிக்கடி குறிப்பிட்டுக் குத்திச் சொல்லு கின்றீர்களே." என்று **இருளன்** எதிர்மொழி புகன்றான்.

தன் கீழவனான இவன் கொழுப்பேறிப் பேசுவதாக நல்லான் எண்ணமுற்று இருளன் மேல் இறுமாப்புடன் பார்த்த அதிகாரப் பார்வையின் கொடுமையை இங்கே எடுத்துச் சொல்லுவதென்றால் முடியாது.

உடனே அந்தப்படைத் தலைவன் தாழ்மை காட்டின வனாய்த் "தங்களுக்கு வருத்தம் உண்டு பண்ணினேனாயின் அதனை மன்னிக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகின்றேன். இப்போது அவ்விவரங்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். சண்டை முடிந்து போனதும், காயப்பட்ட என் ஆட்கள் இருவரோடும் ஓடிப்போனேன்; அவர்களை அக்குகையினுட் பத்திரமாகக் கிடத்தியபின், யான் பின்னும் விரைந்து செல்வதானேன். எனது குதிரையின் விரைந்த ஓட்டத்தைக் கொண்டு, யாரும் பின்றொடர்தற்கு ஆகாத அத்தனை தூரம் வந்து விட்டேனென்றும் எண்ணியறிந்தேன். அந்தப் பௌத்தர் கள் பின்றொடர முயன்றதாகவும் தெரியவில்லை: தாங்கள் அடைந்த வெற்றிமட்டில் அவர்கள் திருத்தி பெற்று நின்று விட்டது இயற்கைதான், தன் உறவினர்களைப் போய்ப்பார்த்துத் திரும்பி வரும்வழியில் இடையே தங்குவதற்காக **மீனாம்பாள்** பெருமாட்டி கோபுரத்தை நோக்கிச் செல்லுவதாக முன்னமே எனக்குச் செய்தி எட்டியது. அஃதல்லாமலும், **மீனாம்பாள்** பெருமாட்டியின் ஒத்து உழைப்பின்றித் தாங்கள் எந்தக் காரியத்திலும் புகுவதில்லை என்பதும் பெருமானே! யான் அறிவேன், **மீனாம்பாள்** பெருமாட்டி வரும் வழியில் இளைய நீலலோசனனைப் போம்படி செய்விக்கத் தந்திரஞ் செய்ய வல்லேனாயின், நீலகிரிக்கு நேரே செல்லும் பாட்டை யினின்றும் அவனைத் தவறுவித்து அவ்வம்மை அவனை மயக்கி அதற்கு நெடுந்தூரம் விலகியுள்ள கோபுரத்திற் கொண்டு போய்ச்

சேர்த்து விடுவார்கள் என்றும், யான் தங்களிடம் திரும்பிச் சேர்ந்து தங்களிடம் உள்ள ஆட்களை அனுப்பி அப்பௌத்தர் தலைவனையும் அவனைச் சேர்ந்தோரையும் பிடித்துக் கொள்ளுவதற்கு வேண்டப்படும் சில நாழிகை வரையில் அவ்வம்மை அவனை அங்கேயே நிறுத்தி வைக்கக் கூடுமென்றும் எனக்குப்பட்டது." என்று கூறினான்.

"நல்லது, இவ்வுபாயத்தை எண்ணி முடித்ததிற் சிறிதுந் தப்பு இல்லை; ஆனால், அதனைச் செய்து முடிப்பதோ--" என்று நல்லான் சொல்ல;

அதற்குள் இடைமறித்து இருளன் சொல்வானாயினான்: "புகழ் நிறைந்த தலைவனே! கேளுங்கள் மற்ற விவரங்களையும் முன் பின் அறியாத இடத்தில் வழிப்பயணம் போவோர் தாந்தாம் செல்லுதற்கு உரிய வழி யாது என அவசியம் வினாவுதற்கு இடமாக மூன்று பாட்டைகள் பிரியும் ஒரு சந்தியில் யான் குடியானவனைப் போல் உடையணிந்து போய் இருந்தேன். அங்கே யான் எண்ணியபடியே நேரலாயிற்று. மீனாம்பாள் பெருமாட்டி தன் பாங்கிமாரோடும் இளைப்பாறும் இடம் இதுவென முன்னமே உறுதியாகத் தெரிந்து கொண்டு, அங்கே போகும் ஒரு சந்துவழியில் அவர்களை அனுப்பினேன். மீனாம்பாள் பெருமாட்டியுடன் துரிதமாய் யான் கலந்து பேசிய போது அவ்வம்மை யான் குறித்துக் காட்டிய ஏற்பாட்டில் ஒருப்பட்டுநடக்க இசைந்தார் என்பதை யான் சொல்லவும் வேண்டுமோ?"

நல்லான் "அதைப் பற்றிச் சந்தேகம் இல்லை." என்று உரத்துச் சொல்லி, "அதன் பிறகு, அப்பிரயாணிகளை அங்ஙனம் செம்மையாய் ஏமாற்றி...." என்று கேட்க,

இருளன், "உடனே யான் கோபுரத்திற்குக் கடுகெனச் சென்று நடக்க வேண்டுவன இவையென்று கற்பித்தேன்; பிறகு அங்கேயிருந்து ஒரே பாய்ச்சலாய்க் கிளம்பி, மறம் மிக்க என் தலைவனையும், ஆண்மை மிக்க எங்கள் ஆட்களில் அறுவரையும் இவ்விடங் காணலாமென்று வந்தேன்." என்று விடைபகர்ந்தான்.

அதற்கு நல்லான், "எனக்குரிய வேலையாக யானே வரைந்து கொண்ட முதன்மையான காரியத்தை முடிக்கும் பொருட்டு நமது மலைக்கோட்டையினின்று இங்கே யான்

கூட்டிவந்த அவ்வாண்மையாளர் அறுவரையும், உன் சொற்படியே கோபுரத்தில் அவரைச் சிறைப்படுத்துதற்குத் துரிதமாக யான் அனுப்பி விடலானேன். அதோ உள்ள பாட்டை நெடுக நாகநாட்டரசி பயணம் வருவள் என்னுஞ்செய்தி இன்னும் ஒரு நொடிப்பொழுதில் எனக்கு வரலாம்; என் ஆண்மையாளர் தக்க நேரத்தில் திரும்பி வந்து சேராவிட்டால், அவனை யான் சிறைப்படுத்துவது எப்படிக்கூடும்?'' என்று மறுமொழி கூறினான்.

“அழகிற் சிறந்த நாகநாட்டரசி பெண்களை மாத்திரந் துணைக் கொண்டு பயணமாக வந்தால், புகழ்மிக்க தலைவனே! அவர்களைச் சிறைப்படுத்தி மலைக்குக் கொண்டுபோக நீங்களும் நானுமே போதும்.'' என்று இருளன் சொன்னான்.

“நாகநாட்டரசி **குமுதவல்லி**, இளைஞனான **சந்திரன்** சொல்லிய சொற்களைக் கேளாமல், ஏறக்குறைய வலிமையிற் சிறந்த ஆண்மக்கள் துணையாகப் பின்வரக் கொண்டு வந்தால் என் செய்வது?'' என்று **நல்லான்** இணைந்து வினாவினான்.

அதுகேட்டு இருளன் “உண்மைதான்! தங்கள் ஏற்பாடுகளைப் பற்றித் தாங்கள் சிறிதேனும் எனக்குச் சொல்ல அருள் புரிந்தீர்களில்லை யாதலால், இதைப்பற்றி ஏதும் என் கருத்தைச் சொல்லவாவது நடக்க வேண்டிய முறை தெரிவிக்கவாவது கூடாதவனாய் இருக்கிறேன்.'' என்று மரியாதையோடு வினாவினான்.

அதுகேட்டு நல்லான் அகந்தை மிக்க பார்வையோடு “என் கீழ் ஏவலரிடமிருந்து அபிப்பிராயமாவது புத்திமதியாவது வேண்டுகில்லேன்; நான் கட்டளையிடுவேன்--அதற்கு அவர்கள் கீழ்ப்படிந்து நடக்கக்கடவர். என்றாலும்,'' என்று பிறகு சிறிது அமைந்த குரலோடு “நீயும் உன் கூட்டத்தாரும் மேற்கரையிலிருந்து நீலகிரிக்குப் போகும் நீலலோசனனையும் அவன் துணைவரையும் சிறைப்படுத்தும் வண்ணம் ஒரு பக்கம் அனுப்பப்பட்டபோது, யான் என் கூட்டத்தாரோடு நாகநாட்டிலிருந்து நீலகிரிக்குப் போகுங் **குமுதவல்லி**யையும் அவளுடன் வருவோரையும் சிறைப்படுத்துவதற்கு இந்தப் பிரதேசத்தில் வந்து பதிவிருந்தேன் என்பதை அப்பொழுதே உனக்குச் சொல்லியிருக்கின்றேன். இதற்குமேல் நன்றாகச் செய்யக்கூடிய ஏற்பாடு ஒன்றுமில்லை; அப்படியிருந்தும் அவ்வுபாயங்கள் நிலை

குலைந்து போயின. இருளா உன் கூட்டத்தார் அழிந்து ஒழிந்த மையால், உன்னால் ஆகாது. தவறிய காரியத்தை முடிப்பித்தற்கு என்னவரைக் கோபுரத்திற்கு அனுப்பலானேன்." என்று உரைத்தான்.

"தலைவனே! நீலலோசனன் இந்நேரம் கோபுரத்திற் பத்திரமாகச் சிறை வைக்கப் பட்டிருப்பான் என்று நம்புவோமாக. ஆயின், நாக நாட்டரசியின் பொருட்டு யான் செய்யக்கூடியது ஒன்றுமில்லையா? அந்தப் பாட்டைக்கிட்டப் போய்ப் பதிவிருந்து பார்க்கட்டுமா?" என்று இருளன் கேட்டான்.

"அப்பாட்டையில் பதிவு இருத்திப்பாராது அவ்வளவுக்கு யான் முன் எச்சரிப்பு இன்றி இருப்பேன் என்று நீ எண்ணு கிறாயா? ஆ! இதோ நான் பதிவுபார்க்க வைத்தவன் குதிரைமேல் வருகின்றான்." என்று நல்லான் இடைமொழிந்து சொன்னான்.

இங்ஙனஞ் சொல்லிக்கொண்டே நல்லான் துள்ளி எழும்பினான்--அதுகண்டு உடனே இருளனும் அவ்வண்ணமே செய்தான்; பிறகு சில நிமிஷங்களுக்கெல்லாம் ஒருவன் மலையநாட்டார்க்குரிய உடுப்பு அணிந்தவனாய்த் தன் குதிரையை அவ்விடத்திற்கு விரைவாகச் செலுத்தி வந்தான்.

"என்ன செய்தி கொண்டு வந்தாய் **மாதவா**?" என்று அக்கள்வர் தலைவன் ஆவலோடும் வினாவினான்.

"ஒருவகையில் நல்ல செய்தியே." என்று குதிரையிலிருந்து கீழே குதித்திடும்போதே சொல்லிக் கொண்டு பின்னும் "மற்றொரு வகையில் திருத்தியில்லாததே" என்று அத்தூதுவன் கூறினான்.

"அதனை விளக்கமாய்ச் சொல்." என்று உடனே நல்லான் மொழிந்திட்டான்.

"பறவைகள் கண்டுபிடிக்கப்பட்டன. தலைவனே! நீங்கள் எனக்குச் சொன்ன வருணனைப்படியே அழகிற்சிறந்த இளம் பெண் ஒருத்தி, இங்கிருந்து இரண்டரை நாழிகை தூரத்திலுள்ள அகன்ற பாதை நெடுக மிக விரைவாய்க் குதிரைமேற்போனாள்; அவளைப்போலவே குதிரைமேற்கொண்ட வசீகரமான பெண்கள் இருவரும் அவள் பின்னே போயினர். சிறிதுநேரம் யான் அவர்களைப் பதிவிருந்து பார்த்தேன்: அந்தப் பாதை

யிலேயே போவதற்கு மாறாக, அவர்கள் சடுதியில் இடது பக்கமாய்த் திரும்பினார்கள்." என்று **மாதவன்** தொடர்ந்து சொன்னான்.

"ஆ! தீமொழியே!" என்று நல்லான் உரத்துக் கூவி, " அந்தச் சிறிய ஊரைநோக்கிப் போவதற்கு மாறாக அவர்கள் நகரத்திற்குச் சென்று விடுதி கொள்வார்கள் போலிருக்கின் றதே! அச்சிறிய ஊரிலுள்ள சாவடியிற் போய்த் தங்குவார் களாயின் அவர்களைச் சிறைப்படுத்துவது திண்ணம்: நகரத்திலா னால் அவர்கள் பத்திரமாய் இருந்திடுவர்--அதுவல்லாமலும், அவர்கள் தங்கும் சத்திரத் தலைவனோ காசு பறிப்பதில் திறமை வாய்ந்தவ னாகையால் மறு நாட்காலையில் அவர்கள் புறப்படும் போது தக்க துணையோடு செல்லும்படி அவர்களுக்கு எடுத்துச் சொல்லுவான் என்பது திண்ணம். அவன் தன்னிடத்திற் பெருந்திரளாக உள்ள மக்களும் மருமக்கள்மார்களும் அவர் களுக்கு வழித்துணையாகச் சென்று பொற்காசு பெறல் வேண்டி நல்லானைப் பற்றிய நடுக்கமுள்ள கதைகளை மெல்லியல்புள்ள அவர்களுக்கு நிரம்பவும் எடுத்துச் சொல்வானே!" என்று வருத்தத்தோடும் பேசினான்.

யாது செய்வதென்று தெரியாமல் திகைப்புற்று அக்கள்வர் தலைவன் வருத்தமிக்க நிலையுடையான் போல் சில நிமிஷம் அங்கும் இங்குமாய் நடந்தான். இப்படிப்பட்ட நிலைமையில் தாம் ஏதும் யுத்தி சொல்லக் கூடியவர்களாய் இருந்தாலும், இருளனும் மாதவனும் இவன் குணம் மாறுதலடைந்த இப்பொழுதில் வலிந்து ஒரு சொல்லேனும் சொல்லத் துணிவில்லாதவர்களாய் அவனை உற்றுப் பார்த்துக் கொண்டேயிருந்தனர்.

"ஒவ்வொன்றுந் தவறுதலாய்ப் போகின்றது!" என்று நல்லான் தனக்குள் முணுமுணுத்தவனாய், "அவன் எனக்குச் சுருக்கமாய்ச் சொல்லிக் கொண்டுவந்த வேதனையான உபாயத்தின் கண் எனக்கு விருப்பமில்லாமையை யான் சந்திர னுக்குத் தெரியச் சொன்னது தக்க காரணங்கள் இல்லாமையான் அன்று. ஆ! எனக்கு ஒன்று தட்டுப்படுகின்றது. நல்லது! இரகசியமாக வைக்கப்பட்டிருக்கும் அளவிறந்த பொருட்டிரளை அடைதற்கு அரிய திறவு கோலாயிருப்பதும் நாகநாட்டரசி எப்போதுந் தன்னிடத்திலேயே வைத்திருப்பதுமான இயந்திரத் தையாவது கைப்பற்றிக் கொள்ளுகிறேன்! அதன் பின், அவள்

*சம்பந்தப்பட்ட மட்டில், நடப்பவை நடக்கட்டுமென்று விட்டிருப் பேனாக." என்று சொல்லிக் கொண்டான்.*

*ஏதோ ஒரு முக்கியமான உபாயத்தைக் கருதி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டவனாய், நல்லான் திடீரென மாதவன் பக்கமாய்த் திரும்பி "எனக்கு உன் உடையைத் தந்து என்னதை நீ மாற்றி எடுத்துக் கொள்." என்றான்.*

*மாதவன் கள்வன் அல்லன்; அப்பக்கங்களிற் பலவிடத்தில் நல்லானால் ஏற்படுத்தப்படும் தீவிர காரியநிருவாகருள் ஒருவனாவன். தன் தலைவன் சொன்னதற்கு உடனே இணங்கி அவன் இவனோடு தன்னுடையை மாற்றிக் கொண்டான். நல்லான் மலையநாட்டில் நடுத்தர வாழ்க்கையிலுள்ளாரின் உடையில் விரைந்து தோன்றினான்; இவன் தன்னிடத்தில் படைக்கலன்கள் வைத்திருப்பதாக வெளிக்குக் காணப்படா விட்டாலும், தான் புதிதாக அணிந்து கொண்ட உள் அரைச் சட்டையின் கீழே கைத் துப்பாக்கியனையும் குத்துவாளினையும் பத்திரப்படுத்தி வைத்திருந்தான். தென்புறமாய்ப் பலநாழிகை தூரத்திலுள்ள கோபுரத்திற்கு அனுப்பப்பட்ட தன் ஆட்கள் விரைவில் மீளுவர் என்று எண்ணி இருளனிடத்திற் சில ஏற்பாடுகளைச் சொல்லி விட்டுத் தனது புரவியிலும் தாழ்ந்ததாயிருந்தமையால் தான் இப்போது கொண்ட தாழ்ந்த கோலத்திற்கு இசைவாயிருக்கு மென்று மாதவன் குதிரைமேல் ஏறிப் புறப்பட்டான்.*

*மாலைக்காலத்து மங்கற்பொழுது வரவர மிகுந்து வரலாயிற்று; அப்போது நல்லான் முன் சொன்ன வகையாய் மாறு கோலம் பூண்டு, மாதவனால் முன்னமே அறிவிக்கப்பட்ட படி நாகநாட்டரசியும் அவள் பாங்கிமார் இருவரும் சென்ற பட்டினத்தே வந்து சேர்ந்தான். தன்னை யாருந் தெரிந்து கொள்ள மாட்டார்களென்று தான் திண்ணமாய் உணர்ந்த மையால் நல்லான் முதன்மையான சத்திரத்திற்கு நேரே சென்று, தனக்குந் தன் குதிரைக்கும் விடுதி சித்தம் பண்ணும்படி கேட்டான்; தனது குதிரைக்குச் செவ்வையாகத் தீனி முதலியன வைக்கப்பட்டனவா என்று பார்க்கச் செல்வான் போல, இவன் குதிரைலாயத்திற்குட் சென்றான்; நாகநாட்டரசி குமுதவல்லியும் அவள் பாங்கிமார் இருவரும் ஊர்ந்து வந்த குதிரைகளின் அங்க அடையாளத்தை மாதவன் தனக்கு அறிவித்தபடியே, அங்கே கட்டப்பட்ட மூன்று அழகிய குதிரைகளும் உடையனவாய் இருக்கக்கண்டான்.*

இவ்வாறு, தான் காணவேண்டியவர்கள் அந்தச் சத்திரத்திலேயே இருக்கின்றார்கள் எனக் கள்வர் தலைவன் ஐயமின்றித் துணிந்தான்.

இவன் தனக்குத் தனிமையான ஓர் அறை வேண்டுமெனக் கேட்டு வாங்கிக் கொண்டான்; பிறகு தனக்கு இராச்சாப்பாடு கொணர்ந்து வட்டித்த பரிசாரகன் வாயினின்றே, குமுத வல்லியையும் அவள் பாங்கிமாரையும் பற்றித் தான் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டியிருந்த சில சிறு உண்மைகளை வரச் செய்தான். தனக்குச் சிறிதும் பற்றில்லாத விஷயங்களைக் குறித்துப் பேசுவான் போல், முன் நினைவின்றி வெறும் பேச்சாகப் பேசும் வகையில் வைத்து இவ்வளவும் சுளுவாகத் தெரிந்து கொண்டான். சாப்பாட்டு விடுதியில் உள்ளார்க்குஉரிய இயற்கைப்படியே அவ்வேவற்காரனும் மிகவும் பேச்சுக்காரனா யிருந்தான். இங்ஙனம் தான் தேடிப் போந்த பெருமாட்டி ஒருவாறு ஒளிவாய் வழிப்பயணம் போய்க் கொண்டிருக்கின் றாள் என்பதனைக் கள்வர் தலைவன் கண்டு கொண்டான்; ஆனால் அவ் ஏவற்காரன் குமுதவல்லியின் மேனிலைமையின் மெய்ம்மையைப் பற்றி ஐயுறவு கொண்டவன் அல்லாமையால், அவனுக்கு அப்பெருமாட்டி மறைவாய்ச் செல்லுகின்றா ளென்பது தெரியாது; ஆனால் நல்லானோ இவ்வரலாறு களையெல்லாஞ் சந்திரனிடம் தெரிந்து கொண்டான். முன்போலவே இவன், குமுதவல்லியும் அவள் பாங்கிமாரும் அச்சத்திரத்திற் றங்கியிருக்கும் அறைகளின் உளவுகளைத் தெளிவாய்த் தெரிந்து கொண்டான்.

ஐந்து நாழிகை சென்றன: நடுஇரவு ஆகுஞ்சமய மாயிருந்தது; அச்சத்திரம் எங்கும் ஓசை அவிந்து அமைதியா யிருந்தது. இப்போது நல்லான் தான் பூண்டிருந்த மாதவன் உள்ளரைச்சட்டையின் கறுப்புக் கரையின் ஒருதுண்டைக் கிழித்தெடுத்தான்; அங்ஙனங் கிழித்த துண்டிற் கண்கள் பார்ப்பதற்கு இரண்டு தொளைகள் செய்து, பிறகு அதனை முகமறைப்பாக அணிந்துகொண்டு, தானிருந்த அறையை விட்டுத் திருட்டுத்தனமாய் புறப்பட்டான். புறப்பட்டு நாகநாட்ட ரசியும் அவள்தோழிமாரும் இருக்கும் அறைவரிசைகளுக்குப் போகுஞ் சிறியநடையறையில் வந்து சேர்ந்தான். அங்கே ஒருவிளக்கு எரிந்து கொண்டிருந்தது: ஆனால் அக்கள்வர் தலைவன் அது வெறுமை

யாய் இருக்கக்கண்டான். உட்கதவில் காதை வைத்து உற்றுக் கேட்டான். அங்கே தூங்குகிறவர்கள் முறையாக மெதுவே தாழ்ந்துவிடும் மூச்சைத்தவிர மற்றெல்லாம் அமைதியாக இருந்தது. நல்லான் தனது முகமூடியை முகத்தின்மேல் இப்போது பொருத்திக்கொண்டு, உறையினின்றுங் குத்து வாளைக்கழித்து எடுத்துப்பிடித்தவனாய், மேற்கட்டி இட்ட தளிமத்தின்மேல் அழகியகுமுதவல்லியும் அப்படுக்கையின் பக்கத்தே சாய்வுஅணைமேல் அவள் தோழிமார் இருவரும் உறங்கிக் கொண்டிருக்கும் அறையினுள் திருட்டுத் தனமாய் நுழைந்தான்.

## அதிகாரம் - 6

# நாகநாட்டரசி

முதன்முதல் நல்லான் அவ்வறையினுள்ளே நோக்கிய போது அவன் கண்களின்எதிரே தோன்றியகட்சியானது மிகவும் அழகிய தொன்றாய் இருந்தது. அந்தச் சத்திரத்திலுள்ள சிறந்த அறைவரிசைகளுள் இந்த அறை சேர்ந்ததா யிருந்தமையால் இதுவும் நேர்த்தியாகவே அலங்கரித்து வைக்கப்பட்டிருந்தது. மலைநாட்டு வழக்கப்படி அந்தப்படுக்கையானது தரைக்குமேல் ஏறக்குறைய இரண்டடி உயரம் உயர்த்தப்பட்டிருந்தது; கட்டிலோ அழகாகச் செதுக்கப்பட்ட இலேசான மரத்தாற் செய்யப் பட்டிருந்தது. அதன்மேல் விதானம் ஒன்று ஏற்றப் பட்டிருந்தது. அவ்விதானத்தினின்றும் நீலப்பட்டுத்திரை தொங்க விட்டிருந்தது. சூரியகாந்திப்பட்டினால் உறையிடப் பட்ட மெத்தையும் தலையணைகளும் மிகப்பருத்தவை களாயிருந்தன. அத்தகைய தான கட்டிலின்மேல் நமது கதாநாயகியான நாகநாட்டரசி பள்ளிகொண்டிருந்தனள்; இவளுக்கு வாய்த் திருந்த எங்கு மில்லாத பேர் அழகின் பொலிவால் இவளுக்கு **குமுதவல்லி** என்னும் பெயர் வழங்கி வரலாயிற்று.

இவள் நேர்த்தியான ஒற்றை யாடைமாத்திரம் மேலே அணிந்திருந்தாள்; ஏனெனில், நம் இந்தியநாட்டுப் பெண்கள் இராக்காலத்தில் ஆடையை முழுதுங் களைந்து விடுவதில்லை; பகற்காலத்தில் வழக்கத்துக்கு இணங்கித் திருத்தமாக உடுக்கும் உடைக்கு ஈடாக, இரவில் இலேசாகத் துவளும் தளர்ந்த ஆடை யைச் சுற்றிக்கொள்வர். அவ்வறையினுள் எரிந்து கொண்டிருந்த விளக்கானது, அக்கட்டிலின் மேற் சாய்ந்திருக்கும் அழகிய உருவின்மேல் தன் கொழுஞ்சுடரின் செழுங் கதிர்களைச் சொரிந்தது; மெல்லிய ஆடையாற் சுற்றப்பட்டிருந்த அவ்வழகிய உருவானது, திரைகளினின்று விழும் கரியநிழலின் அண்டை யிலே தன்மேல் வெளிச்சம் படுதலால் மிகவும் விளக்கமுடன்

தோன்று வதாயிற்று. மேலும் அவ்விளக்கின் ஒளியானது நாகநாட்டரசியின் அருமையான முகஅமைப்பை இனிது விளக்கியதோடு, வழுவறத் திருந்தியிருக்கும் அவளுருவின் அமைவையும் அவள் நிறத்தின்மெல்லிய இயலினையும் தெளித்துக்காட்டியது. இவளுக்கு இப்போதுவயது ஏறக்குறைய பதினேழு; ஆனால், வடிவத்தின் திரண்ட வளர்ச்சியைப் பார்த்தால் வயது பத்தொன் பதென்று மதிப்பிடக்கூடிய தாயிருக்கும். கன்னங்கறேல் என்று பளப்பளப் பாயிருக்கும் இவளது செழுங்கூந்தலானது அழகிய தலைவைத்திருந்த அணையின்மேல் கற்றை கற்றையாய்த் துவண்டு மிளிர்ந்து கிடந்தது; இவள் புருவங்களோ பல படியாலும் மிகக்கறுத்துத் துகிலிகையால் மெல்லென எழுதப் பட்டனபோல் எழிலுடன் வளைந்து வழுவழுப்பான பொட்டுக்களின் மினுமினுவெனும் வெண்மை நிறத்தை விளக்கிக் காட்டின. மூடப்பட்டிருந்த கண் இதழ்கள் பரியனவா யிருந்தமையால் தம்மால் உள் மறைக்கப் பட்ட கோளங்களின் பருமனைத் தெரிவுறுத்தின; புருவங்களைக் காட்டினும் பின்னுங்கருமை யாயிருந்த இறைப்பைமயிர் விளிம்புகளானவை நாம் சார்ந் திருந்த கன்னங்களின் களங்கமற்ற தூயவெண்ணிறத்தோடு மாறுபட்டு விளங்கின. கடற்சிப்பியிற் பிறக்கும் முத்தின்கண் உள்ள பளபளப்போடு அழகிய தெளிவும் உடையதாயிருந்தமையால், அகத்திற்றோன்றும் உணர்வின் அசைவால் அழகியமுகத்தின்கண் வருவிக்கப்படும் சிவப்பினைத் தோன்றக்காட்டும் தூயமறுவற்ற இவளது தோளிலே துலங்கின நிறத்தைத் தாமரையின் மெல்லிய செந்நிறத்தோடு சேர்த்துக் குழைத்த வெள்ளல்லியின் ஒளிமிக்க வெண்மை நிறம் என்று மாத்திரம் வருணித்து உரைக்கலாம். இவளுடைய கன்னங்கள் இளம்பருவத்தின் புத்தப்புதுமைக்கும் சுகத்திற்கும் இணங்கப் போதுமான அளவு திரண்டு உருண்டு இருந்தனவே யல்லாமல், முகத்தின் முட்டை வடிவமான அழகைச் சிறிதும் பழுதுபடுத்த வில்லை. நெற்றியானது மட்டாகவே உயர்ந் திருந்தது. - மூக்கு மிகவும் நேராக அந் நெற்றியோடு பொருந்தி யிருந்தது. வாயோ உலகத்திற் பார்க்கப்பட்ட மிக இனிய பொருள்களுள் இனியதாய் இருந்தது! அஃது அகலமின்றி ஒடுங்கி மேல் இதழ் கீழ்இதழினும் மிகப்பருத்து இருந்தது; அவ்விதழ்கள்இரண்டும் சிறிது அகன்றபோது, மிகச்சிவந்த இனிய **கொழும்பழம்** ஒன்று வெடித்து உள்ளே அமைந்த தூயவெள்ளிய விதைகளை

அவ்வெடிப்பின் வழியே காட்டுவது போன்று இருந்தன. மோவாய் வேண்டுமளவுக்கு நீண்டு, அங்ஙனமே முகத்தின் முட்டை வடிவுக்கு நிறையப்பொருந்தி இளகி வட்டமுற்று இருந்தது; இவள் உறங்கும்பொழுதும் இவளது அழகிய முகத்தின் பொதுவான தோற்றமானது கள்ளமறியாத மிகவுந் தூய வசீகரத்தன்மையை ஒளிரக் காட்டியது.

இவள் தலையின் அழகில் எவ்வகையான குற்றமேனும் களங்கமேனும் இல்லை. எல்லாம் முழுத்திருத்தத்தோடும் வயங்கின; சிறியவாய் மெல்லென மடிந்த காதுகளுங்கூடக் கல்லிற் செதுக்கி யமைத்தாற்போலத் திருத்தம்பெற்றிருந்தன. கழுத் தானது மெருகிட்ட வெண்பழுப்புக் கற்போல் துலங்கியதே யல்லாமல், விளக்கமில்லாச் சலவைக்கல்லின் வெண்மை வாய்ந் ததாக இருக்கவில்லை; அதன் நிறம் உறைபனிபோல் தூயதாய் இருந்தாலும், பனியின்கண் உள்ள சீதளம் அதனிடத்தில்லை; அதனைப்பார்த்த கண்களுக்கு அது மெல்லென அனன்று காட்டியது. தொண்டைவரையில் சுற்றப்பட்டிருந்த மெல்லிய ஆடையானது தன்னுள் நாணத்தோடும், பொதிந்து வைத்த மார்பில் திரண்ட பொருளின் வடிவைத் தெரித்துக்காட்டியது. ஓர் அழகிய கையானது கட்டிலின் ஓரத்தின்மேற் றுவண்டு கிடந்தது.

இனி இப்படுக்கையின் தலைப்பக்கத்திலே மெத்தையிட்ட குறிச்சியில் ஓர் இளம் பெண் இருந்த வண்ணமாய் உறங்கினள்; மற்றொருத்தி அதன் கால்மாட்டில் அப்படியே மற்றொரு குறிச்சியில் உறங்கினாள். இவ்விளம் பெண்கள் இருவரும் தம் தலைவிக்கேற்ற அழகு வாய்ந்தவர்களாய் இருந்தமையால், கட்டிலின்மேற் றுயில் கொள்ளும் மிக மேம்பட்ட தெய்வ மொன்றைப் பாதுகாத்திருக்கும்படி இருந்த வேறிரண்டு சிறு கந்தருவப்பெண்கள் தூக்கத்தால் மயக்குண்டு கிடந்தனரோ என்று சொல்லும்படி தோன்றினர்.

நல்லான் அவ்வறையினுள் எட்டிப்பார்த்தபோது அவன் கண்ணெதிரே தோன்றிய காட்சி அத்தனை அழகு வாய்ந்ததா யிருந்தது. இதுதான் முதன் முதல் இவன் குமுதவல்லியைப் பார்த்தது; இவளுக்குக் குமுதவல்லியெனும் பெயர் மெய்யாகவே மிகவுந் தகுதியான தொன்று என்னும் எண்ணம் இவன் உள்ளத்தில் உடனே தோன்றியது. இவன் நெஞ்சமானது வேறு

ஒருத்திக்கு உருக்கத்தோடு உண்மையாகவே தரப்பட்ட தாய் இருந்தாலும், அக்கட்டிலின்மேல் அரைவரிசையாகச் சாய்ந் திருக்கும் உருவின் மிக உயர்ந்த அழகைக்கண்டதும் அதனாற் கவரப்பட்டுச் சிறிதுநேரம் மயங்கினான். இம்மண்ணுலகத்திற் றோன்றிய வடிவத்தையன்றி, ஏதோ மேலுலகத் திலிருந்து வந்த ஓர் அழகிய தோற்றத்தைத் தான் உண்மையிலே காண்பதாகச் சிறிதுநேரம் நல்லானுக்குத் தோன்றியது; அவ்வளவுக்கு இவ் வுருவின் மேல்வரிகள் எல்லாம் துவண்டு நீண்டு மெல்லியனவாய் இருந்தமையே யன்றியும், முகத்திலும் எல்லையற்ற பேர் எழில் குடிகொண்டு விளங்கியது.

நல்லான் ஓசைப்படாமல் மெல்ல அவ்வறையின் கதவைத் திறந்த நேரத்தில் **குமுதவல்லி** உண்மையிலே நல்லதூக்கத்தில் இருந்தனள். ஆனால், இவ்விளம் பெருமாட்டி நெடுநேரம் அந்தத் தூக்கத்தால் கவரப்பட்டிருந்தவள் அல்லள்; அஃது ஆழ்ந்ததுயில் அன்று; கனவோடுகலந்த உறக்கத்தின் றன்மை யுடையதாய் இருந்தது.கதவு திறக்கப்பட்டமையால் அவள் திடுக்கிடவும் இல்லை; ஒருகால் அவள் ஓசையொன்றும் கேட்கத்தான் இல்லையோ: ஆனால், ஏதோ புதுமையாக வழக்கத்திலில்லாதது நடக்கிற தென்னும் ஓர் உணர்வு மாத்திரம் விரைவாக அவள் உள்ளத்தில் வந்து நுழைவதாயிற்று. உறக்கத்திற்கும் கண்விழிப்புக்கும் நடுவே மனமானது தன்னைச் சூழ நடப்பதைத் தெளிவின்றி மங்கலாய் உணர்வதும், அங்ஙனம் உணரினும் அது மெய்யோ பொய்யோ என்று வரையறுக்கக் கூடாத வகையாய் அவ்வுணர்வு தெளிவின்றி மழுங்கலாய் இருப்பதும்போன்ற நிலையைப் படிப்பவரிற் பெரும்பாலார் தம் அனுபவத்திற் கண்டிருக்கலாம். அந்நிமிஷத்தில் **குமுதவல்லி**யின் மன நிலையும் அவ்வாறாகவே இருந்தது; ஆனால், அவள் வரவர விழிக்கத் துவங்கிச் சிறிதே கண்களைத் திறந்தாள் - மிகவுஞ் சிறுகத் திறந்தமையால் உள்ளே அழகிய கோளங்கள் நம் அகத்தே வரைந்து வைத்த ஒளியில் ஒரு கதிர்மாத்திரமே வெளியே விளங்கியது. ஆகவே, இங்ஙனந்திறந்தது மிகவுஞ் சிறிதாயிருந்த தனால் இது **நல்லான்** கவனத்தில் தென்படாமற் போயிற்று; ஆனால், அது தன்னருகில் வந்திருக்கும் அச்சம் மிகுந்த பெரியதோர் இடரின் தன்மையைக் குமுதவல்லிக்குக் காட்டிவிடப் போதுமானதாயிருந்தது.

இவள் தன் வயதிற்கும் பெண்டன்மைக்கும் ஏற்ப மெல்லியல்பு எல்லாம் உடையவளாயிருந்தும், சடுதியில் நிகழும் நிகழ்ச்சியிலேனும் கடுமையான இடர்ப்பாடு களிலேனும் தனது மனத்துணிவை இதற்கு முன் சோதனையாக எங்குங் காட்டிப் பார்த்தவள் அல்லள் - என்றாலும், இப்போது **குமுதவல்லி** ஒரு நிமிஷத்தில் தெய்வீகமான ஒரு மனத்துணிவினால் உந்தப் பட்டாள். முகத்தை மறைத்துக்கொண்டு கையில் வாட்படை பிடித்தவனாய் ஒருவன் தன் அறையினுள் திருட்டுத்தனமாய்ப் புகுந்திருக்கின்றான் என்பது மனத்திற்பட்ட அந்த நேரமே, அவள் திடீரென முற்றும் விழித்துக் கொண்டாள். ஆயினும் தன் கண்களை மூடியபடியே திறவாதிருந்தாள். அங்கே நடப்பதை அவள் உணர்ந்தாளென்று அறியும்படி அவள் திடுக்கிட்டு எழுந்திருக்கவும் இல்லை, அப்பக்கம் இப்பக்கம் அசையவும் இல்லை, அதனோடு, தான் மூச்சுவிட்டுக்கொண்டிருந்த முறையைக்கூட அவள் சிறிதாயினுந் தடைசெய்யவும் இல்லை, மாற்றவும் இல்லை.

மின்னல் தோன்றி மறைவதைப் போலப் பலவகைப்பட்ட எண்ணங்கள் மிகவிரைவாய் அவள் உள்ளத்தில் ஊடுருவிப்போ யின. கூக்குரலிட்டால் அந்தச் சத்திரத்தில் உள்ளவர்கள் அவளுதவிக்கு வரக்கூடுமாயினும், அவள் இருந்த அறைகள் சிறிது ஒதுப்புறமாய்த் தனித்து இருந்தமையால், அவள் எவ்வளவு கூவினாலும் அஃது அங்குள்ளவர் காதுகளுக்கு எட்ட மாட்டாது: மற்றும், தன் இதழ்களிலிருந்து அங்ஙனம் ஓசை புறப்படும் அப்பொழுதே தன்னுயிர்க்கு இறுதியாய் முடியும் என்பதும் அவள் அறிந்தாள். ஆகவே, நான் தூங்குவது போற் பாசாங்கு பண்ணுதலே அவள் தப்பிப் பிழைப்பதற்கு வழி. முகமறைப் போடு வந்த அவன் கொள்ளையிடுவதற்கே வந்தான் என்பது அவன் திருட்டுத்தனமாக உள்நுழைந்தமையானும் அறைக்குள் உள்ளவர்கள் எல்லாரும் தூங்குகிறார்களா என்று தான் திட்டமாகத் தெரிந்து கொள்ளும் பொருட்டு நிற்பது போல அவன் கதவண்டையில் சிலநேரம் மிகவும் எச்சரிக்கை யோடு நின்றமையானும் இனிது விளங்குவதாயிற்று. முகமறைப் பிட்டு அறையுள் நுழைந்தவன் அங்ஙனஞ் சிலநேரம் நின்றதற்கு உருவெளித்தோற்றம் போன்ற அளவு கடந்த தன் அழகின் காட்சியே காரணமாய் இருந்ததென்று, பெண்களுக்குரிய வீம்பும்

கள்ளமும் முற்றும் இல்லாத குமுதவல்லி சிறிதாயினும் நினைத்தது இல்லை.

இங்ஙனம் நாகநாட்டரசி உற்ற சமயத்தில் அருமையான மன வலிமை காட்டினதை இதனைப்படிப்பவர் தெரிந்து கொண்டனர்; இத்தகைய அற்புதச் செய்கை தனது நிலை மையை உணர்ந்து கை விட்ட உணர்ச்சியால் மாத்திரம் வருவதாகும். நல்லான் முற்றும் வஞ்சிக்கப்பட்டவன் ஆனான்: **குமுதவல்லி** இன்னும்தூங்குகிறாள் என்றே அவன் மெய்யாக நினைத்தான். ஓசை செய்யாமல் அவன் கட்டிலண்டை வந்தான். இதிற் சில கணங்கள் சென்றன,--பறந்து போகும் இச்சிறிய கணப்பொழுதில் மனிதனுக்கு ஆறு சுவாச ஓட்டங்களே நடைபெறக்கூடும்; என்றாலும் இவை குமுதவல்லிக்குப் பலயுகங்களாய்த் தோன்றின. முகமறைப்பிட்டவன் கிட்டவே வந்திட்டான். இப்போது அணுவளவு கூடக் **குமுதவல்லி** தன் கண்ணிதழ்களைத் திறக்கத் துணியவில்லை; ஏனென்றால் கண் விழிக்கும் அடையாளம் சிறிதாயினும் காணப்பட்டால் தன்மேல் உடனே ஆழ்த்துவதற்கு இசைந்தவண்ணமாய் அவன் கையிற் குத்துவாள் பிடிக்கப்பட்டி ருக்கிற தென்பதை அவள் இயற்கையுணர்ச்சியால் தெரிந்தாள். உலக சோதனைகளிற் சிறிதும் அனுபவம் இல்லாதவளும், தனது மனத் துணிவை இதற்குமுன் காட்டி வழக்கப்படாதவளும் ஆன இளங்குமுதவல்லி, எந்தக் காலத்திலேனும் எந்த இடத்திலேனும் இப்படிப் பட்ட சமயங்களில் ஆண்மை காட்டிய வீரமக்களுக்குப் பெருமைதருதற்கு உரிய நிறைந்த நிலையிலே தனது மன வலிமையை இங்ஙனம் உறுதிப்படுத்திக் காட்டியது மிக வியப்பாயிருந்தது.

இன்னும் அவள் உறங்குவது போலவே காணப்பட்டாள். இன்னும் நல்லான் கட்டிலை அணுகிப் போயினான். அவன் அவள் மேற் குனிந்து நோக்கினான்: அவன் விடும் மூச்சானது அவள் கன்னங்களில் மேல் வீசியது. "ஓ தெய்வமே! அவளது உயிரைப் போக்கவா அவன் எண்ணினான்? ஓர் அழகியகை கட்டிலின் ஓரத்தின் மேற்றுவண்டு கிடந்ததென முன்னமே மொழிந்திட்டோம்: மெழுகுதிரியை ஒத்த அவள் விரல்கள் ஒன்றின்மேல், ஒரே ஒரு கல் அழுந்திப் புதுமையாகவும் ஒருவகையான வேலைத்திறம் வாய்ந்ததாகவுஞ் செய்யப்பட்ட ஒற்றை மோதிரம் இடப்பட்டு இருந்தது. இதில் அழுத்தப்

பட்டிருந்தது **சிவப்புக்கல்:** அதன் மேல் சுன்னம் ஒன்று செதுக்கப்பட்டிருந்தது. முகமறைத்து நுழைந்தவன் விரல்களானவை அந்த மோதிரத்தை மெல்லெனத் தொட்டன. மணிக்கலம் ஒன்று அழகு பெறச் செய்த அவ்வழகிய கையில் அஃதிருந்த இடத்தினின்றும் அதனை அவன் மெதுவாகச் சுழற்றத் தொடங்கினான்.

குமுதவல்லிக்கு இதுதான் மிகவுஞ்சோதனையான நேரமாய் இருந்தது. அணிகலன்கள் கழற்றி வைத்த மேசை மேல் விலை மிக்க மணிகள் இருந்தன. கிடைத்தற்கரிய முத்துமாலையொன்று அவள் கழுத்திற் சூழப்பட்டிருந்தது; அவளது மற்றக்கையிலோ விலையுர்ந்த மோதிரங்கள் பல அணியப்பட்டிருந்தன. முகமறைத்த கள்வன் இவற்றையெல்லாம் எடுத்துக் கொண்டிருக்கலாம், குமுதவல்லியும் தான் உயிர் பிழைத்ததை எண்ணிப்பார்த்து அவற்றை இழந்தமைக்கு நகையாடி யிருப்பாள். ஆனால் இந்த ஒரு மோதிரத்தை--அதற்குள்ள இயல்பான விலையைக் காட்டிலும் மிகவும் பெரிதாய் அவளால் மதிக்கப்பட்டிருந்த இந்த மோதிரத்தைச்--சில காரணங்கள் பற்றி மந்திரக்கெவிட்டுக்குச் செலுத்தும் வணக்கமெல்லாம் அவளாற் செலுத்துப்பட்டுவந்த இந்த மணிக்கலத்தை--அவளிடத்தினின்றும் பறித்துக் கொள்வதென்றால், ஓ! இஃது இதுகாறும் அவள் தன்னுள் அடக்கி வைத்திருந்த கூக்குரலை அவள் இதழ்களினின்றும் வெளிப்படுத்துவதற்குப் போதுமானதாம் அன்றோ! அப்படியிருந்தும் அவள் இன்னும் தன் மனவுறுதியை விடாமற் பிடித்திருந்தாள்: அவள் அசையவில்லை-- தூக்கத்திற்கு உரிய அடையாளங்களுள் ஒன்றான உயிர்ப்பு முறையினின்று மாறவும் இல்லை. இந்தக் கொள்ளைக்காரன் தன்னைக் கொலைகாரனாகச் செய்து கொள்ள வேண்டுவதும் அகத்தியம் எனக் கருதுவானாயின் திகிலான தன்றொழிலைச் செய்வதற்குக் குத்துவாள் அருகாமையில் இருக்கிறதென்பதை அவள் தெரிந்தாள். ஒருவேளை, ஓர் இமை கொட்டும் நேரங் குமுதவல்லியின் கன்னத்தில் நிறம் மாறியிருக்கலாம். அப்படி நிகழ்ந்ததானால் அது நல்லானாற் காணக் கூடாதபடி அவ்வளவு சொற்பமாய் இருந்திருக்க வேண்டும்; அல்லது, அவன் அதனைக் குமுதவல்லியின் முகத்தின்மேற் பட்ட விளக்கொளியின் அசைவாக எண்ணியிருக்க வேண்டும்.

மோதிரமானது அவள் கையினின்றுங் சுழற்றப்பட்டு விட்டது; அக்கொள்ளைக்காரனின் உடையிலிருந்து மெல்லென உண்டான சரசர என்னும் ஓசையால் தன் கட்டிலின் பக்கத்தே யிருந்து அவன் போகின்றான் என்பதனை அவள் அறியலானாள். இப்போதுஅவள் தன் கண்மடல்களை மிகவுஞ் சிறுகத் தூக்குவதற்குத் துணிவு கொண்டாள்: நல்லானுடைய உயர்ந்த உருவத்தைத் தனது கீழ்க் கண்ணாற் சிறிது பார்த்தாள்; மறுபடியும் அவளைப் பார்க்க அவன் திரும்புவதற்குள், அவள் கரிய இறைவிளிம்புகளானவை கன்னத்தின் மேற்றங்கியிருந்தன. அவன் தனக்குப் பின்னே கதவை மெதுவாகச் சாத்துதலையும் கேட்டாள்; பின்னுஞ் சில நிமிஷங்கள் செல்ல அவ்வறை வரிசைகளுக்குப் புறம்பேயுள்ள வாயிற் படியை அவன் தாண்டிச் சென்றிருப்பான் என உறுதி கொண்டாள். இப்போது அவள் இடரினின்றும் விலகினாள்: ஆபத்து ஒழிந்தது! திகில் மிக்க அச்சோதனை நடந்தேறுங்காறும் அவளைத் தாங்கி வந்த அதிசயமான மனவலிமையானது, இப்போது ஒரு நொடிப் பொழுதில் இற்றுப் போயினது; உணர்வுகளைக் கட்டி ஆண்ட அத் தெய்வீக வலிமையானது பிறகு அங்ஙனம் அவ்வளவுக்கு மறுதலைப்பட்டு நெகிழ்ந்துபோதல் இயற்கையே யாகும். அதன் பின்னே, நாகநாட்டரசி தன் குரலை எழுப்பித் தன் பாங்கி மார்களை விழிப்பிக்க நினைத்த அக்கணத்திலே, சடுதியில் ஒரு களைப்பானது அவளை வந்து பற்றியது--அவள் உணர்வு இழந்து மன இருளிற் புதைந்து கிடந்தாள்.

அங்ஙனம் பல நாழிகை நேரம் அவள் கிடந்தாள் ஏனெனில் அவளுக்குத் திரும்பவும் உணர்வு வரத் தொடங்கிய பொழுது விளக்கானது அவிக்கப்பட்டிருந்தது--சாளரங்களின் வழியாயும் திரைகளின் நடுவேயுள்ள திறப்பின் வழியாகவும் பகலவன் கதிர்கள் புகுந்து துலங்கின. மிகவும் இளைப்படையச் செய்து கிடக்கையிலே கிடத்தி விட்ட தீயகனவினின்றும் எழுந்திருப்பாள் போலக் **குமுதவல்லி** சிறிது சிறிதாகக் கண்விழித்தாள். கலக்கம் அடைந்த தன் நினைவுகளை அதனின்று மீட்கவும், தன் எண்ணங்களை ஒன்று சேர்க்கவும் மாட்டாதவளாய் அவள் நெடுநேரம் அசைவின்றிக் கிடந்தாள். கடைசியாக அவை யெல்லாம் கனவு அல்ல என்னும் சமுசயம் அவள் மனத்தில் நுழையலாயிற்று, என்றாலும் நெடுநேரம் தியங்கிக் கிடந்ததன்

பயனாக அவள் மிகவும் சோர்வு அடைந்த வளாயும் பிராணசக்தி இல்லாதவளாயும் இருந்தமையால், இடம் பெயர்ந்து பார்ப்பதற்கே சில நிமிஷங்கள் கழிந்தன; அங்ஙனம் பார்த்தி ருப்பாளானால் அது சமுசய மெல்லாம் நீக்கிக் கண்டது கனவு அன்று என மெய்ப்படுத்தியிருக்கும். அப்படியிருந்தாலுங் கடைசியாக அவள் தனது கையைத் தூக்கிப் பார்த்தாள்; மோதிரம் போய்விட்டது.

முன்னாட் பயணத்தின் களைப்பினால் இன்னும் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த தன் பாங்கிமார்களை இப்போது எழுப்பி விட்டாள்; கலவரமானது ஏதோ நடந்திருக்கிறது என அவ்விரு பெண்களும் அச்சம் உற்றார்கள்: ஏனெனில், தங்கள் தலைவியின் குரல் ஒலி கலக்கமும் வெருட்சியும் நிறைந்து இருந்தது. அவர்கள் அவளிடம் பறந்து ஓடினார்கள்: சுகத்தின் குறியாகச் செந்தாமரை வண்ணமானது அல்லியின் விளங்கு நிறத்தோடு கனிந்து மெல்லெனக் கலந்து தோயப்பெற்ற அவளது முகத்திலே வெளிறின நிறத்தைக் காண்டலும் பெருந்திகில் அடையப் பெற்றார்கள். தெய்வப் பேரின்பமே ஆழ்ந்து குடிகொளப் பெற்றவை போலக் காணப்படும் அவள்தன் பருத்த அழகிய நீலவிழிகளுங்கூட, இதற்குமுன் அப் பாங்கிமார் என்றும் பார்த்திராத ஒரு பொல்லாத தோற்றத்தை இப்போது உடையதாயிருந்தது. கலங்கிய சொல்லிலும், வருத்தம் மிக்க சொல்லசைவிலும், முறை பிறழ்ந்த சொற்றொடர் களிலும் நடந்த கதையைக் குமுதவல்லி சொல்லக் கூடியவளா னாள்; அவ்வாறு அதனைச் சொல்லிக் கொண்டு வருகையில் **சுந்தராம்பாள் ஞானாம்பாள்** இருவரும் பெருந் திகிலோடும் ஐயுறவோடும், அச்சங்கலந்த ஆவலோடும் அதனை உற்றுக் கேட்டு வந்தார்கள். குமுதவல்லி சொல்லிய சொற்களிலிருந்து அவள் தனக்குள்ள உரிமைப் பொருள்கள் எல்லாவற்றையும்விட இழந்து போன அம்மோதிரத்தை மிக்கதோர் அரும் பொருளாக மதித்திருந்தாள் என்பதை அவர்கள் தெரிந்து கொள்ளலா னார்கள். இதற்கு முன் அவள் அம்மோதிரத்தைச் சுட்டி ஏதும் பேசக் கேட்டது இல்லாமை யால், இச்செய்தி அப் பெண்களுக்கு முழுதும் புதிதாய் இருந்தது: உண்மையிலே அவர்கள் நினைப்பிடக்கூடிய வரையில் சில நாட்களுக்கு முன்னே தான் தங்கள் தலைவியின் விரலிலே அவர்கள் அதனைப் பார்த்ததும், **சுந்தராம்பாள்,**

**ஞானாம்பாள்** இருவரும் தம் தலைவியினிடத்து மிக்க பற்றுதல் உடையவர் களாதலால், அவள் முகமறைத்து வந்த கள்வன் வாளுக்குத் தப்பிப்பிழைத்ததைப் பற்றி நெஞ்சங்கரைந்து வாழ்த்துரை சொரிந்தார்கள்: அவளுயிரைத் தப்புவித்ததாகிய அந்த மன வலிமையைப் பற்றிக் கலக்கம் மிக்க அதிசயத்தோடு வியந்து பேசினார்கள்.

அவ்விரு பெண்களில் மூத்தவளும், மான் விழிபோல் மெல்லென்ற கரிய நிறங்கலந்த பருத்த விழிகளோடு கருங் கூந்தலும் வாய்ந்த அழகியாளும் ஆன **சுந்தராம்பாள்** தன் தலைவியை நோக்கிப் "பெருமாட்டியார் மறுபடியும் அக்கீழ் மகனைத் தெரிந்து கொள்ளக் கூடுமே?" என்று வினாயினாள்.

"இல்லை--அவன் முகத்தை நான் பார்க்கவில்லை, அவன் உடம்பு நீண்டிருந்தது--யான் மதிப்பிடக்கூடும் அளவில் ஒல்லியாகவே இருந்தான்," என்று **குமுதவல்லி** மறுமொழி கூறினாள்.

"எங்கோமாட்டி, அவன் உடுப்பு?" என்று பரபரப்பாய் இடையிட்டு வினாவினாள், மேற்கணவாய் மலைநாட்டு மகளிர்க்குள்ள அரிய வனப்பின்படி நெளிப்பட்ட கூந்தலும் கரு விளம்பூப் போன்ற கண்களும் வாய்ந்த அழகிய **ஞானாம்பாள்** என்னும் இளம் பெண்.

அதற்கு நாகநாட்டரசி "நான் அதனை விளக்கமாக விரித்துச் சொல்லக் கூடவில்லை." என்று விடைகூறிப் பின்னும் "என்றாலும் அது நீலகிரி நாட்டான் உடை போலிருந்ததென்று நினைக்கின்றேன்--இல்லை! இன்னதென்று என்னாற் சொல்லக் கூட வில்லை!" என்று, குழம்பிய தன் நினைவுகளை ஒழுங்குபடுத்துவாள் போல் அழகின் மிக்க கையாற் புருவத்தைத் தடவிக் கொண்டே கூட்டிச் சொன்னாள்.

**சுந்தராம்பாள்** நினைவிழந்த அதிசயத்தோடும் சிந்தித்த வளாய், "அவன் யாராய் இருக்கக்கூடும்?" என்று கேட்டாள்: பிறகு திடீரென ஒரு நினைவு தோன்றினவளாய் அணிகல மேசையண்டை விரைந்து போய், "இல்லை! பெருமாட்டியார் சொன்ன வண்ணமே தங்கள் மோதிரத்தை யன்றி வேறொன் றையும் அவன் எடுத்துக் கொண்டு போகவில்லை." என வியந்து சொன்னாள்.

"அவன் சாதாரண கள்வனாய் இருக்க முடியாது," என்று ஞானாம்பாள் படும்படி மொழிந்தாள்: "அவனுக்கு ஏதோ வேறே நோக்கம் இருந்திருக்க வேண்டும்--"

"ஆம்! நிச்சயமாய் அவள் வெறுங்கொள்ளையிடும் எண்ணத்தைத் தவிர வேறு நோக்கம் உள்ளவனாகத் தான் இருக்க வேண்டும்!" என்று **குமுதவல்லி** உரத்துச் சொன்னாள். "இந்த எண்ணம் எனக்கு முன்னே படவில்லை. இஃது என்ன கருத்துப்பற்றி இருக்கக் கூடும்? இந்த மோதிரம் --இந்த அதே மோதிரம் அவ்வாறு ஆவதற்கு--" என்று சொல்லியவள், தன் மனத்தில் நிகழ்வதைத் தன் பாங்கிமார்க்குத் தெரியப்படுத்த விருப்பம் இல்லாதவள் போல இடையிலே பேச்சை நிறுத்திக் கொண்டாள்; பின்னும் ஆழச் சிந்தித்துப் பார்த்தாள்.

"நாம் கூக்குரலிடுவோம்!" என்றாள் சுந்தராம்பாள் என்னுங் கருங்குழலாள். "ஒரு வேளை அந்தக் கொள்ளைக்காரன் இன்னும் இந்தத் சத்திரத்திலேயே இருக்கலாம்."

அதற்கு "ஆம்!" என்று, இக்கலவரத்தால் அவிழ்ந்து அழகிய தன் முகத்தை மறைத்த வெளிக்கூந்தலை விலக்கிக் கொண்டே ஞானாம்பாள் கூவினாள். "அதிகாரிகளை அழைப்பிக்க வேண்டும்! தேடிப்பார்த்து விசாரணை செய்ய வேண்டும்!"

இங்ஙனஞ் சொல்லிக் கொண்டே தன் பாங்கிமார் இருவரும் கதவைத் திறக்க ஓடிய போது "நில்லுங்கள்" எனக் குமுதவல்லி விரைந்து மொழிந்தாள். "சிறிது சிந்தித்துப் பார்த்தால் இதன் பொருட்டு ஏதும் முயற்சி செய்யத் துவங்கல் பயன்படாதென்பது நமது அனுபவ அறிவுக்குத் தோன்றும். இப்போது விடிந்து ஐந்து நாழிகை ஆயிற்று." என்று சாளரத்தின் வழித்தோன்றிய வெயிலைப் பார்த்தவளாய்ப் பின்னும், "பகலவன் ஏற்கெனவே கீழ்த்திசையிற் கிளம்பிப் பல நாழிகை ஆய்விட்டன; அந்தக் கொள்ளைக்காரன் சென்ற இரவில் இந்தச்சத்திரத்தினுள் இருந்தானாயின், இந்நேரம் அவன் இதனை விட்டு நெடுந்தூரம் போய் விட்டான் என்பதை நிச்சயமாய் அறிமின்கள்." எனத் தொடர்ந்து உரைத்தாள்.

"அப்படியானால் இழந்த மோதிரத்தைத் வெளிப்படுத்து தற்குப் பெருமாட்டியார் ஒன்றும் செய்யப் போகிறதில்லையா?"

என்று சுந்தராம்பாள் வினவினாள். தம் இளம்பெருமாட்டி இப்போது எழுந்து உட்கார்ந்திருந்த கட்டிலண்டை தன்றோ ழியும் தானுமாகத் திரும்பி வருகையில் ஞானாம்பாள் "குற்ற வாளியைத் தண்டனை செய்வதற்கு?" எனச் சேர்ந்து வினா வினாள்.

"அது பயன் படாதாகும் என அஞ்சுகின்றேன்--இல்லை, பின்னும் உறுதியாகவே நம்புகின்றேன். யான் சொல்வதை அமைதியோடு கேளுங்கள். என்னிடத்தினின்று அந்த மோதிரத் தைக் கவர்ந்து கொண்டு போனதைப் பார்த்தால், அந்த மனிதன் யாராயிருந்தாலும் ஏதோ ஆழமான கருத்துடைய வனாய் இருக்க வேண்டும்; அவன் கருத்து இன்னதென்று யானே அறிந்து கொள்ளக் கூடவும் இல்லை, யூகித்தறியவும் முடிய வில்லை. பாருங்கள் அவன் எவ்வளவு முன் எச்சரிக்கை யோடு வந்திருக்கின்றான்! அவனது முகத்தின் மேலோ ஒருமறைப்பு-- அவன் நடவடிக்கைகளோ மிகவும் மறை பொரு ளான கள்ளத்தனத்தோடு கூடியவை-அவன் அப்பொழுது அணிந்தி ருந்த உடுப்பே அப்போதைக்குக் கொண்டதன்றி மறுபடி எக்காலத்தும் தரியாத வெறும் வேடமே போலும்! ஆகையால் தன் கருத்து முற்றுப் பெற்றவுடனே இங்குச் சிறிதுந் தாமதியாது தன்னைக் பாதுகாத்துக் கொண்டு போக அவன் தவற மாட்டான் என்பதை உண்மையாய் நம்பியிருங்கள்." என்று **குமுதவல்லி** துயரம் மிக்க சொற்களோடும் பார்வையோடும் மொழிந் திட்டாள்.

சுந்தராம்பாள் ஞானாம்பாள் இருவரும் குமுதவல்லி சொல்லியவற்றின் உண்மையைச் சோர்வுற்ற தமது பார்வையால் ஒப்புக் கொண்டு காட்டினர்.

"என் அன்புள்ள பெண்களே, யாரும் என்னைக் கவனியாத வண்ணம் யான் யாத்திரை செல்கின்றேன் என்பதை நீங்கள் அறிவீர்கள்--" என்று நாகநாட்டரசி பின்னுந் தொடர்ந்தாள்.

ஓ! தக்க ஆண் துணையோடு வழிச்செல்லும்படி யான் கழறியதைப் பெருமாட்டியார் பின்பற்றத் திருவுளஞ் செய்திருந் தால்!" என்று சுந்தராம்பாள் உரத்துச் சொன்னாள்.

உடனே ""ஞானாம்பாள் "முக்கியமான அத்தனை தொலை தூரம்!" என்று நடு நுழைந்து கூறினாள். இப்போது

நிகழ்ந்த இடரைக் குறித்துப் பார்க்கும் போது, தன் பாங்கிமார் கள்ளமின்றிச் சொல்லிய சொற்களைப் பற்றிக் குமுதவல்லி புன் முறுவல் செய்து, "ஒரு படை முழுதுமே நமக்கு வழித்துணையாக வந்தாலும், உண்மையில் வலுக்கட்டாயமாக அன்றி மிகவும் இரண்டகமான தந்திரத்தால் விளைந்த இப்பொல்லாங் கினின்றும் என்னைப் பாதுகாப்பதற்கு அது போதுமென்று எனக்குத் தோன்றவில்லை." என்றாள்.

'இந்தச் சத்திரக்காரருக்கு அது நடந்த வரலாற்றைச் சொல்வது நல்லதென்று பெருமாட்டியார் கருதவில்லையோ?" என்று சுந்தராம்பாள் கேட்டாள்.

"அந்த விஷயத்தைப் பற்றி உன்னுடன் நான் பேசலா மென்றிருந்த சமயத்தில், நீ நடுவே உன் கருத்தைச் சொல்ல லானாய். என்னை இன்னாரெனப் பிறர் அறியாதபடி யான் மறைவாகச் செல்வது எனது நோக்கத்திற்கு இணங்கின தாகு மென்பதை யான் முன்னமே உனக்கு நினைவூட்டத் தொடங் கினேன் ஆகவே, என்னைப் பிறர் ஏதும் சுட்டிக் கவனிக்கும்படி செய்து கொள்ள விருப்பம் இல்லாதவளாய் இருக்கின்றேன். ஆகையால், உனது ஆலோசனையைத் தழுவி இந்த மடத்தின் தலைவருக்கு எனது குறையை அறிவிப்பே னாயின், அவர் உடனே தமது மடத்தின் பெயரைக் காப்பாற்று வதற்காக இதனைத் தீர விசாரணை செய்ய வேண்டுமென்று கட்டாயப் படுத்துவார்: அதிகாரிகள் இதனுதவிக்காக அழைக்கப்படுவர்--இந்த மோதிரத்தைக் குறிப்பாய்க் கைப் பற்றுவதற்குக் காரணமாய் நின்ற கருத்தின் உளவை வெளிப்படுத்துவதற்காகத் திருடினவன் யாராயிருக்கலாம் என்று என்னைக் கேள்வி மேற் கேள்வி கேட்பார்கள்--இப்படிப்பட்ட பரிசோதனைகளின் ஊடே செல்ல யான் சிறிதும் விரும்பவில்லை. எனவே, எல்லாவற்றையும் ஆழ்ந்து சிந்திக்குங்கால், எனக்கு நேர்ந்த துன்பத்தை யார்க்குந் தெரிவியாமற் சும்மா இருப்பதே நல்லது." என்று மறுமொழி கூறினாள்.

"என்றாலும் என் அன்புள்ள செல்வியே, இதனைப் பொறுத்து இருத்தல் அரிதேயாம்!" என்று சொல்லிக் கொண்டே சுந்தராம்பாள் குமுதவல்லியின் கையை எடுத்து அன்போடும் வணக்கத்தோடும் தன் இதழ்களில் அழுந்த முத்தம் வைத்தாள்.

"ஆம், அரிதுதான்!"என்று கூடச் சொல்லிக் கொண்டே ஞானாம்பாள் குமுதவல்லியின் மற்றக் கையை எடுத்து அங்ஙனமே முத்தம் வைத்தாள்.

'அஃது அரிதாயிருந்தாலும், நமக்கு வேறு வழியில்லாமையால் அப்படித்தான் செய்ய வேண்டியிருக் கின்றது." என்று குமுதவல்லி சேர்ந்து பேசினாள். "ஆகையால், என் இளம் பெண்களே, இந்த நஷ்டத்தை எந்த உயிருக்குஞ் சொல்லாதிருக்கும்படி யான் உங்களுக்குக் கட்டளை யிடுகின்றேன். நீலகிரிக்கு நாம் நம் வழியே தொடர்ந்து செல்வோம்: நாம் இப்போது கற்றுக் கொண்ட பாடமானது இனி நம்மை இன்னும் எச்சரிக்கையாய் இருக்கும்படி செய்யும்." என்று சொல்லியதும், அவள் பாங்கிமார் தம் தலைவியை அலங்காரஞ் செய்வதற்கு வேண்டுவனவற்றைச் சித்தம்பண்ணப் போனார்கள். உடனே **குமுதவல்லி** தனக்குள் சிந்தித்து மெல்லிய குரலில் "அந்தோ! இப்போது அம்மோதிரத்தை இழந்து விட்டமையால் அந்தரங்கமான இப்பிரயாணத்தின் நோக்கமும் இழக்கப்பட்டுப் போமே! என்றாலும், நான் விடாமல் முயன்று பார்க்க வேண்டும்: யான் அந்த மோதிரத்தை யார்கையிற் கொடுக்கும்படி கட்டளையிடப்பட்டேனோ அவருக்கு என்னிடத்திலிருந்து அது தவறிப் போன தீவினையை நான் விவரித்துச் சொல்லலாம் என்று நினைக்கின்றேன்." என்று சொல்லிக் கொண்டாள்.

இச் சொற்கள் மிக மெதுவான குரலிற் சொல்லப்பட்டமையால் அவ்வறையின் கடைசியிலே வெவ்வேறு மூலைகளிலிருந்த சுந்தராம்பாள் ஞானாம்பாள் செவிகளுக்கு அவை எட்டவில்லை. சென்ற இரவின் பயங்கரமான நிகழ்ச்சிக்குப் பின் வந்த நீண்ட சோகக் களைப்பினின்றும் இப்போது குமுதவல்லி மிகவுஞ் சுகப்பட்டமையால், சிதறுண்ட தன் மனமுயற்சிகளைத் திரும்பவும் ஒன்று கூட்டத் தன்னால் ஆனமட்டும் முயன்றாள்.

பிறகு தான் பூணவேண்டுவனவெல்லாம் முற்றும் பூண்டாள்-- காலையுணவு செய்யப்பட்டது--புறப்படுவதற்குக் குதிரைகளைச் சித்தஞ் செய்யும்படி கட்டளை தரப்பட்டது. ஆனால் சத்திரத்தலைவனோ இப்போது எதிரே வந்து, தகுந்த மரியாதையோடு தன் அழகிய விருந்தினருக்குத் தான் சொல்ல வேண்டியிருப்பதைச் சொல்லும் வண்ணம் அனுமதி தரும்படி கேட்டான். குமுதவல்லி அவனைப் பேசும்படி கட்டளை

கொடுத்தாள்; அப்படிக் கொடுக்கையில் சிறிது கவலையும் ஐயுறவுங் கொண்டாள்; ஏனென்றால், இனி வெளிவருஞ் செய்தி முன்னாள் இரவின் நிகழ்ச்சியோடு சம்பந்தப்படக் கூடுமென்று எண்ணினாள்.

நான் கேள்விப்பட்டபடி, பெருமாட்டி, தாங்கள் தங்கள் பாங்கிமாரோடு மாத்திரம் பயணம் போகக் குறித்திருக்கிறீர் களோ? அங்ஙனஞ் செல்வது அறிவுடைமைக்குச் சிறிதும் பொருந்தாதென்றும், உண்மையாகவே அது பேரிடராய் முடியும் என்றும் தங்களுக்கு யான் தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்." என்று அந்தச் சத்திரக்காரன் தொடர்ந்து பேசினான்.

"அதனை விவரமாய்ச் சொல்லும்" என்று குமுதவல்லி மிகுந்த தவிப்போடும் கூறினாள்.

உடனே சத்திரத்தலைவன் சொல்வானாயினன்: ஒரு வகையில் மலைநாடனென்றாலும் மற்றொரு வகையில் வழிப் பறிக்காரனான ஓர் ஆளைப்பற்றித் தாங்கள் எப்போதா யினும் கேள்விப்பட்டிருக்கின்றீர்களா? அவன் மலைநாடனென்ற வகையில் நமக்கு இயற்கைப் பகைவர்களான சோழ நாட்டார்க்கு மிகுந்த தீமை செய்திருந்தாலும் கொள்ளைக்காரன் என்ற வகையில் அவ்வளவு மிகுந்த துன்பத்தைத் தன் சொந்த நாட்டார்க்கும் செய்து வந்திருக்கின்றான். தன் படைக் கலன்களை நமக்கு எதிராகவே சிலசமயங்களில் திருப்பிவிடும் அத்தகைய வீரனுதவியை நாம் வேண்டாமலே இருந்து விடக் கூடுமே."

" திண்ணமாய் நீர் நல்லானைப் பற்றித் தான் பேசுகின்றீர்," என்று **குமுதவல்லி** சொன்னாள்.

இதற்குச் சத்திரத்தலைவன் இணைந்து பேசுவானாய் " வேறு யாரையும் அன்று, பெருமாட்டி, அவனும் அவனது இழிந்த மறக்கூட்டமும் இந்தப்பக்கங்களில் அடிக்கடி வருவதில்லை, என்றாலும்--" என்று முடிப்பதற்குள்; குமுதவல்லி தன் கன்னங்கள் வெளிறப் பெற்றவளாய்ப், "பயங்கரமான நல்லானும் சூறையிடும் அவன் ஆட்களும் இந்தப் பிரதேசத்தில் வந்து இப்போது தொந்தரை செய்கிறார்கள் என்பது ஒவ்வுமா?" என்று கூவிக் கூறினாள்.

“பெருமாட்டி, அது மெய்தான்.” என்று சத்திரக்காரன் விடை பகர்ந்தான்.

“எனினும், ஒரு குறிப்பிட்ட பாதை வழியே நான் பயணம் போனால் ஒரு படையைத் துணைகூட்டி வந்தது போல அவனது கொள்ளைக்குத் தப்பலாம் என்று உறுத்திச் சொல்லக் கேட்டேன். இல்லை, இன்னும் படைக்கலம் பூண்டோரைத் துணைகூட்டிச் செல்வது அவசியம் அன்று எனவுஞ் சொல்லக் கேட்டேன்; அதனாலேதான் நான் என் பாங்கி மாரோடு பயணம்போகக் கண்டீர். இவ்வுறுதி மொழிகளை என்னிடம் புகன்றவன் நீலகிரியினின்றும் வந்த ஓர் இளைஞன் ஆவன் - அவன் நன்மையே கருதுபவன், நம்பிக்கையுள்ளவன் என்று நினைப்ப தற்கு நல்ல காரணங்கள் உண்டு; எனது வீட்டுக்கு என்னிடம் அவன் வந்தபோது அவனிடம் நம்பகமான செய்தி ஒன்று கொடுக்கப்பட்டிருந்தது. அவன் நீலகிரியில் நிலையாய் இருப்பவன் ஆதலால், வழிப்பறிகாரர் தலைவனான நல்லானு டைய வழக்கமான பழக்கங்களைப்பற்றி அவன் செவ்வையாகத் தெரிந்திருக்க வேண்டுமென்று யான் எண்ணினேன்; தொலை விலுள்ள வேறு நாட்டில் வசிக்கும் நானோ நிலைப்படாத ஊரார் பேச்சைக்கொண்டும் பரும் படியான செய்தி களைக் கொண்டும் அவன் பழக்கங்களைப் பற்றிச் சிறிது தெரிந்திருக்கி றேன்.” எனக் **குமுதவல்லி** கூறினாள்.

“பெருமாட்டி,. உங்களுக்கு அறிவித்தவன் தான் எண்ணியபடி பேசினான் என்பதில் ஐயமில்லை; தான் பிறந்த மலைகளின் நடுவிலேயே வழக்கமாய்த் தங்கியிருந்து கொண்டு அதற்கு அருகாமையில் வரும் தனது இரைமேற் பாய்ந்து அதனை அடித்துக் கொண்டுபோகுங் கழுகைப் போன்றவன் நல்லானாகையால், பெரும்பாலும் அவன் உண்மையே பேசி னான். என்றாலும் அக்கழுகு சிலகாலங்களில் மேற் கணவாய் மலைகளை விட்டு நெடுந்தூரம் பறந்து போய்ப் பச்சென்று செழுமையாய் இருக்கும் மைதானவெளிகளில் மேய்ந்து கொண்டிருக்கும் ஆட்டுக்குட்டியை இறாஞ்சிப் போதலும் உண்டு. இப்படியே நல்லானுஞ் செய்வதுண்டு அவன் ஆட்களிற்சிலர் சென்ற இரண்டொரு நாளாய் இந்தப் பக்கங் களிற் காணப்பட்டார்கள். பெருமாட்டி, இன்னும் என்ன சொல்வது - திடுக்கிடாதேயுங்கள் - திகில் கொள்ளாதேயுங்கள் -

இடர் ஒழிந்துபோயிற்று! நல்லான்" என்று சத்திரத் தலைவன் தான் சொல்லுஞ்செய்திக்கு இணங்கச் செய்துங் காட்டு வோனாய் மெதுவான குரலில் பின்னும் நல்லான் இந்தச் சத்திரத் தினுள்ளே சென்ற இரவு தங்கியிருந்தான்!" என்று மறுமொழி கூறினான்.

திடுக்கிடவேண்டாம் எனவும் திகிற்படவேண்டா மெனவும் அங்ஙனம் மனவருத்தத்தோடு கேட்டுக் கொள்ளப் பட்டாலும் அழகிற்சிறந்த **குமுதவல்லி** கதுமென மிகவுந் திடுக்கிட்டாள். பெருந்திகிலானது அவள் முகத்தின்மேற் புலப்பட்டுத் தோன்றியது. சத்திரக்காரன் அச்செய்தியை அறிவித்த அந்த நேரத்திலேயே அவள் உள்ளத்தில் ஓர் எண்ணம் தோன்றியது. தன் அறைக்குள் முகம் மறைத்து வந்தவன் கிலிபிடிக்கப் பண்ணும் கொள்ளைக்காரனாய் இருக்கக் கூடுமோ?

"தாங்கள் அமர்ந்திருக்க வேண்டுமென யான் தங்களைக் கெஞ்சிக் கேட்டும், பெருமாட்டி! தாங்கள் இங்ஙனந் திடுக் கிட்டது ஓ! ஒருவியப்பன்று; ஏனென்றால், அவ்வளவு பயங்கரமான ஓர் ஆள் இக்கட்டிடத்தினுள்ளே தங்கியிருந்தான் என்பதை எண்ணிப்பார்த்தால் அஃது ஒரு பெருந்திகிலான காரியமாய்த் தான் இருக்கும்." என்று சத்திரக்காரன் திரும்பவும் அதனை எடுத்துப் பேசினான்.

உடனே **குமுதவல்லி** விரைந்து "அவன் எப்படி இருப்பான் என்பதை எனக்குச் சொல்லிக்காட்டும். உம்மாற் கூடிய வரையில் நுட்பமாக அவனை முடிமுதல் அடிகாறும் தெளிவாய்ச் சொல்லிக்காட்டும்; ஏனெனில் அலுவலின் பொருட்டு வழிநடையாய்ப் போவார் எவர்க்கும் அச்செய்தி மிகவும் பயனுடையதாயிருக்கலாம்" என்று கூறினாள்.

"நானே அவனைச் செவ்வையாகப் பார்த்ததில்லை, பெருமாட்டி, ஆனாலும் நான் இவ்வளவு உங்களுக்குச் சொல்லக்கூடும். அவன் தீத்தொழில் முதிர்ந்தவனாயிருந்தாலும் ஆண்டில் இளையவனே - நாற்பத்தைந்து வயதுள்ளவனாகிய நான் அவனுக்குத் தகப்பன் என்று சொல்லக் கூடியதாயிருக்கும். பிறகு, அவள் உடம்பின் தோற்றத்திலோ நீண்டு ஒல்லியாயிருப் பான். - அவன் மயிர் கறுப்பாயிருக்கும் - அவன் கண்கள் நேர்த்தி யாயிருக்கும். அவன் - ஆம் எனக்கு நினைவிருக்கிறது - அவன்

மீசை வைத்திருக்கிறான்." என்று சத்திரக்காரன் மறுமொழி புகன்றான்.

**குமுதவல்லி** திகில்கொண்ட குரலில் "உயரமாய் - ஒல்லியாய் - கரியமயிரோடு" என்று சொல்லிக்கொண்டே "நல்லது நேற்றிரவு அவன் இங்கேயிருந்தபோது எவ்வாறு உடை அணிந்திருந்தான்?" என்று விரைந்து கேட்டாள்.

அதற்குச் சத்திரக்காரன் சொல்லுவான்; "உண்மையிலே, நான் அவன் உடையை நுணுக்கமாய்க் குறிப்பிட்டுப் பார்க்க வில்லை; என்றாலும் யான் நினைவிடக்கூடியமட்டில் அது சாதாவாகவும் சாமானியமாகவும் இருந்தது. என்றாலும், நீங்கள் யாரையேனும் சந்திக்கும்படி நேர்ந்து வேறுகாரணங்களால் அவரை **நல்லான்** என்று சந்தேகிக்கும்படியானால் அவன் உடையைக்கண்டு ஏமாறிப்போகாதீர்கள்; ஏனென்றால் மலைமேலிருந்து பாய்ந்து தன் இரையை இறாஞ்சிக்கொண்டு போகுங் கழுகின் வேகத்தையும் தன்னை எதிர்ந்தோருடன் சண்டையிடும்பொழுது புலியின்வலிவையும் நல்லான் உடைய னாயிருப்பது போலவே சமயம் வந்தபோது தனது இரண்டகத் தைக் காட்டும் படியானநரிக்குள்ள தந்திரமும் அவனுக்கு உண்டு. ஆகவே எல்லா வகையான வேடங்களும் அவன் கையிலிருக் கின்றன. அவன் மலைப்பாங்குகளில் இருக்கும் பொழுது கள்வனைப்போல் கோலம் பூண்டவனாய் இருக்கலாம்; ஆனால் நகரங்களுக்குப் போவானாயின் சாமானிய குடியானவனைப் போலவும் இருக்கலாம். அஃதன்றி இன்னும் அவன் ஒரு துருக்கனைப் போலவும் - பறங்கி வியாபாரிபோலவும் - பாரசீகனைப்போலவும் அல்லது யூதனைப் போலவுங்கூடக் கோலம்பூண்டு வருவான் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். சுருக்கமாய்ச் சொல்லுமிடத்துப் பெருமாட்டி! பலமுறைகளில் என்காதுகளுக்கு எட்டியவற்றை எல்லாம் உங்களுக்குச் சொல்லுவேனானால்-" என்று அவன் சொல்லி முடிவதற்குள் நடுவே குமுதவல்லி, "உமது சத்திரத்திற்கு அவன் எந்த நோக்கத்தோடு வந்திருக்கலாம் என்று நினைக்கின்றீர்?" என்று வினவினாள்.

அதற்குச் சத்திரக்காரன், "பெருமாட்டி! அதனை யார் சொல்லமுடியும்? ஒருகால் சில நேரம் இளைப்பாறவும் உணவு கொள்ளவும் வந்திருக்கலாம்: ஒருவேளை வீட்டிலேயே ஏதாவது

பறித்துக் கொண்டு போகக்கூடுமா என்று பார்க்க வந்திருக் கலாம்; அல்லது ஒரு சமயம் பல திறப்பட்ட பயணக்காரர் கூட்டங்களும் இன்றைக்கு எந்த முகமாகப் போவார்களென்பது தெரிந்து கொண்டு அவர்களைப் பின் தொடர்தற்கும் வந்திருக்கலாம்; பின்னதுதான் பெரும்பாலும் நம்பத்தக்கதா யிருக்கின்றது. ஆ! அவன் தான் என்று மாத்திரம் நான் தெரிந்தே னானால் அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்குத் தரப்படும் பரிசானது இவ்வருஷத்தில் எனக்குவரும் இலாபத்தை மிகுதிப் படுத்துவதாயிருக்கும்--காலம் நன்றாயில்லை என்பதைப் பார்க்கும்போது--'' என்று உலகிலுள்ளவர்கள் எல்லாரும் வழக்க மாய் முறையிட்டுக் கொள்வதான கால நிலைமையைப் பற்றி அவன் விரித்துப் பேசப்புகுந்த அப்பொழுது;

நடுவே **குமுதவல்லி,** ''அவன் புறப்பட்டுப் போன பிறகு நீர் தங்க வைத்தவன் கள்வர் தலைவனான நல்லானே என்று எப்படிக் கண்டு கொண்டீர்?'' என்று வினாவினாள்.

''அந்தச்சண்டாளன்! ஒரு வழியிலன்றிப் பலவழியாய்ப் பிறர்க்குத் துன்பந்தரத் தெரிந்திருக்கின்றான். பெருமாட்டி! தங்கள் அறைக்கு மிகவும் எட்டியிராத தன் அறையிலிருந்தும் அவன் பாதியிரவிலே கீழ்இறங்கிக் குதிரை லாயத்திற்கு விரைந்து போய்க் குதிரைக்காரனைத் தட்டி எழுப்பித் தன் குதிரைக்குச் சேணம் இட்டு அவன் புறப்படுவதற்கு எத்தனம் பண்ணினதை எண்ணிப் பாருங்கள். ஆயினும், அவன் எனக்குத் தரவேண்டிய தொகைக்கு மேலே மிச்சமாகப் பணத்தை தன் மேசை மேல் வைத்து விட்டுப் போனான் என்று ஒத்துக் கொள்ளுகிறேன். சத்திரத்தின் முற்றத்திலே அவன் தன் குதிரை மேல் ஏறுந் தறுவாயில் ஒரு வழிப்போக்கன் உள்ளே வந்தான்; இவன் குடகு நாட்டு வியாபாரியாய் இருக்க வேண்டுமென்று எண்ணுகிறேன்; இவன் நேரங்கழித்து வந்தமையால் தன்னை ஏற்றுக் கொள்ளுவதற்கு யாரேனும் விழித்திருப்பதைப் பற்றி ஒருவாறு மகிழ்ச்சி அடைந்தான். ஆனால், அவ்வேழை வர்த்தகன் பந்த வெளிச்சத்தினால் புறப்பட்டுப் போகும் விருந்தினன் முகச்சாயலை பார்த்தவுடனே ஆ' எப்படி நடுநடுங்கினான்! அவனோ பறந்து போயினான், அவன் குதிரைக் குளம்படிகள் தெரு நெடுகக் கடகடவென்று விரைந்து ஓசையிட்டன; அவ்வோசை நெடுந் தூரத்தில் அவிந்துபோன பிறகு தான்

*நடுக்கமுற்ற அவ்வர்த்தகன் நல்லான் என்னும் பெயரைக் குழறலோடு சொல்ல வலிவு பெற்றான்." என்று சத்திரக்காரன் உரத்துச் சொன்னான்.*

***குமுதவல்லி** ஆழ்ந்த சிந்தனையோடும், "ஆ! அவன் அங்ஙனம் பாதியிரவிலா போயினான்!" என்று பின்னும் தனக்குள்ளே "அப்படித்தான் இருக்க வேண்டுமென யான் கருதினேன்." என்று சொல்லிக் கொண்டாள்.*

*"நல்லது பெருமாட்டி!" என்று பேச்சுக்காரனான, அச்சத்திரக்காரன் பேசத் தொடர்ந்தான், "கேட்டவர்களுக்குக் கிலியை உண்டாக்கும் **நல்லான்** என்று குதிரைக்காரன் தெரிந்தவுடனே, புறப்பட்டுப் போன அவ்விருந்தினனுக்குப் பின்னால் அவன் கூக்குரல் போடுவதற்கு நேரம் ஆகிவிட்டது; ஆகவே, என்னையும் என் ஊழியக்காரர்களையும் உடனே கூவி எழுப்பி அதனை அறிவிப்பது தேவையில்லை என்று அவன் எண்ணினான். ஆனால், விடிந்தவுடன் நேர்ந்தது இன்னதென அறிவிக்கப்பட்டேன்; உடனே யான் முதலிற் செய்த காரியம் அக்கள்வர் தலைவன் தங்கியிருந்த அறைக்குக் கடுகப் போனதே அவன் எதனையும் எடுத்துக் கொண்டு போகவில்லை. மேசை மேல் அகலமான ஒரு பொன் துண்டு வைக்கப்பட்டிருந்தது."*

*இப்போது குமுதவல்லி தன்னறைக்கு முகமறைப்பு இட்டு வந்தவன் பயங்கரமான நல்லானைத் தவிர வேறு யாரும் அல்லர் எனச் சிறிதும் ஐயமின்றித் தெளிந்தாள்; கிலியை உண்டாக்கும் அக்கொள்ளைக்காரன் வசத்தில் தான் அகப்பட்டிருந்ததனை நினைக்கவே அவளுக்கு மிக்க நடுக்கம் உண்டாயிற்று. ஆனாலும், முன்னமே அவள் தன் தோழிமார்க்கு விளங்கப் பண்ணின காரணங்களால் நிகழ்ந்ததையேனும் மோதிரம் இழந்ததையேனும் சத்திரக்காரனுக்குச் சொல்லுவது தக்க தென்று அவள் எண்ணவில்லை: அப்படிச் சொல்லி யிருப்பாளானால் அவன் சந்தேகமின்றி அதனை நியாய விசாரனைக்குக் கொண்டுவரும்படி வற்புறுத்துவான்; அதனால் தாராளமாய்ப் பணங்கொடுக்கும் குமுதவல்லியானவள் தன் சத்திரத்திலே பல நாட்கள் தங்கியிருக்க நேரும் என்னும் நோக்கமும் அவனை அவ்வாறு செய்யும்படி தூண்டும்.*

நல்லான் அச்சத்திரத்திற்கு வந்ததைப் பற்றிக் **குமுதவல்லி** எவ்வளவு வருந்தலானாள் என்பதைச் சிறிதும் அறியாதவனாய் அவன் பின்னும் பேசுவானாயினான்: "ஆகையால், பெருமாட்டி! ஓர் அஞ்சலிடம் போகும்வரையில் தாங்கள் தக்க வழித் துணையோடு வருவது நலமாமென்று உங்களுக்குத் தோன்று கிறதன்றோ: அதன்பிறகு உங்களுக்கு இசைவாயிருந்தால் உங்கள் தோழிமார்களோடு நீங்கள் தனியே செல்லலாம். ஏனென்றால், நல்லான் இப்போது ஏதேனும் தங்களுக்குத் தீங்கு இழைக்க எண்ணியிருந்தானானால் இங்கிருந்து சில தூரத்திற்கு அப்பால் அவன் தன் பதிவிடத்திலிருந்து நீங்கள் நல்ல துணையோடு செல்லுவதைப் பார்த்தவுடனே தன் எண்ணத்தை மாற்றி விடுவான்."

குமுதவல்லியோ தன்னைச்சுட்டி அக்கள்வர் தலைவன் ஏதேனும் முடிவான உத்தேசம் கொண்டிருப்பான் என்று உண்மையிலே ஒன்றும் நினைக்கவில்லை; அவன் நோக்கம் எதுவாய் இருந்தாலும் அம்மோதிரத்தை அவன் தன் வசப்படுத்திக் கொண்ட அப்பொழுதே அது நிறைவேறி விட்டதென அவள் எண்ணினாள். ஏனெனில், அவள் இப்போது தன்னிடம் வைத்திருந்த பொருள்களையெல்லாம் அவன் கொள்ளை கொண்டு போக வேண்டுமெனக் கருதியிருந்தானா யின், அவன் அவள் அறையினுட் புகுந்து அவள் உறங்குவதாக எண்ணிய சென்ற இரவைக் காட்டினும் வேறு நல்ல சமயம் எங்ஙனம் வாய்க்கக்கூடும்? ஆகவே, அதைப்பற்றி அவளுக்கு இனி அச்சமில்லையாயினும், வழித்துணையைக் குறித்துச் சத்திரக்காரன் சொல்லிய வேண்டுகோளுக்கு அவள் இணங்கினாள். தான் செல்வம் மிகுதியும் உடையவளாதலால் அதன் செலவை அவள் ஒரு பொருட்படுத்தவில்லை. மேலும் அத்தகைய முன்னெச்சரிப்பை அவள் புறக்கணித்தால் அஃது ஒரு புதுமையாய்க் காணப்படும் எனவும் அஞ்சினாள். ஆதலால் அவள் அதற்கு உடன்பட்டு மறுமொழி புகன்றாள்; சத்திரத் தலைவனும் வேண்டு மேற்பாடுகளைச் செய்வித்ததற்கு விரைந்து போனான்.

குமுதவல்லிக்கும் சத்திரக்காரனுக்கும் இடையே நிகழ்ந்த இச்சம்பாஷணை நடையறையிலே நடந்தது; அப்போது தோழிமார் இருவரும் திரும்பவும் பயணம் தொடங்குவதற்கு

வேண்டுவனவற்றை முடிக்கும்பொருட்டுப் படுக்கையறையிலே அலுவலாயிருந்தனர். ஆகையால் அவ்விருபெண்களும் நாம் இங்கெழுதிய சம்பாஷணையை ஒட்டுக் கேட்கவில்லை; குமுதவல்லியும் நல்லானைப் பற்றித் தான் கேட்டவற்றில் ஓர் எழுத்தாயினும் சொல்லி அவர்களைப் பயமுறத்தலாகாது எனத் தீர்மானஞ் செய்து கொண்டாள். அவள் அவர்களிடம் திரும்பிச் சேர்ந்தவுடன், தனது வழி செல்லும் அம்முகமாகவே, முதல் ஆறு நாழிகைத் தூரம் படைக்கலம் பூண்ட துணைவர் போவதால் தானும் அதனைப் பயன்படுத்திக் கொள்ளக் கருதுவதாக மாத்திரம் அவர்களுக்குச் சொன்னாள்.

நன்கு படைக்கலம் பூண்ட பன்னிரண்டு மனிதர் சத்திரக்காரனால் இவ்வழித்துணைக்கென்று வகுக்கப்பட்டார் கள்--இவர்கள் பெற்றுக் கொள்ளும் வருமானத்தில் திட்டமாய் மூன்றிலொரு பங்கு தனக்குரியதென்று ஒப்பந்தம் செய்து கொண்ட காரணத்தால் கூடியமட்டில் துணைவர் தொகையை மிகுதிப் படுத்துவதில் அவன் கருத்துக் கொண்டிருந்தான். இங்ஙனம் துணைவர் பின்வரக் குமுதவல்லி தன் பாங்கிமார் இருவரோடும் நீலகிரியை நோக்கிப் பயணம் புறப்பட்டாள்.

## அதிகாரம் - 7

# சந்திப்பு

நாகநாட்டரசியும் அவள் பாங்கிமாரும் ஏறியிருந்த குதிரைகள் மூன்றும் நல்லழகு வாய்ந்தவைகள். மெல்லிய அங்க ஒழுங்கோடு கூடியதொன்றாயினும், பூரண அழகு தரும்படி போதுமான வரையில் உறுப்புகளின் அளவு திரண்டு உருவாகிய குமுதவல்லியின் நீண்டவடிவானது அவள் குதிரை மேல் அமர்ந்த நிலையின் நயத்தாலும் அவளது செயற்கையல்லா இயற்கை நடையின் சீரினாலும், அச்சிறந்த பிராணியின் நடைகளுக்கு ஏற்ப அவள் துவண்டு தன்னை இசைவித்துக் கொள்ளும் இலகுவாலும்--பின்னும் மிக்க எழில் உடைத்தாய் விளங்கித் தோன்றுவ தாயிற்று.

அவள் வழிப்பயணத்திற்கு ஏற்ற ஓர் அழகிய உடை அணிந்திருந்தாள். திறப்பாக விட்டிருந்த உட்சட்டையானது பொற்சரிகை பின்னப்பட்டிருந்தது--இச்சரிகைவேலையில் ஒரு பாகம் இவள் தானே தன் ஓய்வு நேரங்களிற் செய்தது, மற்றொரு பாகம் இவள் தோழிமாரின் திறமையாலும் நுண்ணறிவாலும் செய்யப்பட்டது. அதற்கு அடியிலே அணியப்பட்டிருந்த கீழ்ஆடையானது தொண்டைவரையிற் கட்டப்பட்டிருந்தது. அது வடிவத்திற் பொருந்திய அமைவினால் மார்பிற்றிரண்ட கோள வடிவை வரைபெறக் காட்டியது. உட்சட்டையின் குறுகிய கைகளானவை பால்போன்ற வெண்மை நிறத்தோடு வியப்பாக உருவமைந்த முன் கைகளைப் பெரும்பாலும் வெளியே காட்டின. அக்கையின் தெளிவாகிய தோலோ நீலநரம்புகளின் மெல்லிய சுவடுகளைப் புலப்படக் காட்டியது. இடுப்பின்கீழ் உடுக்கப்பட்டு முழங்கால் வரை யிற் றொங்கும் மேலாடையானது பெரிய பொற் சரிகைக்குஞ்சம் உடைய தாயிருந்தது; இதற்குக் கீழே உடுக்கப் பட்டிருந்த சிறுநிறமுள்ள நீண்ட பட்டாடைமேல் இஃது அணியப்பட் டிருந்தமையால் இஃது அவ்வுடுப்பின் அழகை

மிகவுஞ் சிறப்பித்துக் காட்டுவதாயிற்று. மெல்லிய வெண் சல்லாவினாற் செய்யப்பட்ட முக்காட்டு ஆடையானது அவள் முடிமேலிருந்து முதுகின் கீழ்த் தொங்கியது--அது சிலவேளை வீசிய சிறுகாற்றிலே பறந்தது--சில வேளை குதிரை உடம்பின் மேல் அலை அலையாய் அழகுடன் மிதந்து கிடந்தது.

இளம்பெண்கள் இருவரும் தம் இளம்பெருமாட்டியின் உடையினும் விலைமிகக் குறைந்ததே உடுத்திருந்தார் களாயினும், அவ்வுடை அழகிற் குறையாதாய் நாகரிகமும் நேர்த்தியும் வாய்ந்ததாயிருந்தது.. குமுதவல்லியும் அவள் தோழிமாரும் **சைவ சமயத்திற்** சேர்ந்தவர்களா யிருந்தமையால் ஏனை வடநாட்டுப் பெண்களின் வழக்கம்போல் தமது முகங்களை முழுதும் முக்காட்டினால் மறைத்துக் கொள்ள வேண்டு மென்னும் ஏற்பாடு உடையவர்களாய் இல்லைஎன்பதை இதனைப் படிப்போர் நினைவில் வைக்க வேண்டும்.

அவ்வழகிய பெருமாட்டியும் நல்ல தோற்றமுள்ளஅவள் பாங்கிமார் இருவரும் ஆக மூவரும் நன்றாகச் சேணம் இடப்பட்ட குதிரைகளின் மேல் அமர்ந்து, தமக்குப்பின் துணையாய்ப் படை தாங்கி வந்த நீலகிரி நாட்டு மக்கள் பன்னிருவரின் மிக வேறாய் விளங்கிய தோற்றமானது மிகவும் மனத்திற்கு இனியதாயிருந்தது. சத்திரத்தைவிட்டுப் புறப்பட்ட பிறகு முதலிற் சில நாழிகை தூரம் வரையில் விசேடமான சம்பவம் ஏதும் நிகழவில்லை; ஆனால், கடைசியாக நாகநாட்டரசியும் அவள் பாங்கிமாரும் ஐந்து நாழிகை நேரம் இளைப்பாறவும் அவர்கள் குதிரைகளை இளைப்பாற்றவும் இப்போது வழித்துணையாக வந்தவர்கள் அவர்களைப் பிரிந்து போகவும் வேண்டிய ஓரிடம் வந்து சேர்ந்தது. குமுதவல்லி இப்போது தன் பாங்கிமாரோடு மாத்திரம் பிரயாணம் போவதா--அல்லது வேறொரு துணையைத் தேடிக் கொள்வதா என்று தீர்மானிக்க வேண்டியவளானாள். நாம் முன்னமே மொழிந்த காரணங்களைக் கொண்டு அவள் முந்திய ஏற்பாட்டின்படி நடக்க எண்ணங் கொண்டாள். ஆனால் இந்தத் தங்குமிடத்தில் வந்த ஒரு செய்தியினால் அவள் தான் கொண்ட இவ்வெண்ணத்தை மாற்ற வேண்டியவளானாள். இச்செய்தி நல்லானைப் பற்றியதன்று--மற்று இஃது அக்கொள்ளைக் காரனைவிடத் திகில் கொள்ளத்தக்க ஒரு பகைவனைப் பற்றிய தாகும். சுருங்கச் சொல்லுங்கால், அங்கே அடுத்துள்ள இடத்தில்

வழிதப்பித்திரியும் ஒரு புலியானது தென்பட்டது. சுந்தராம் பாளும் ஞானாம்பாளும் இச்செய்தியைக் கேட்டுத் துயரத்தோடு திடுக்கிட்டார்கள்; குமுதவல்லியும் தான் அச்சமில்லாதவளாய் இருக்கவில்லை. ஆகவே படைக்கலம் பூண்ட இரண்டு ஆண் மக்களை வழித்துணை கொள்ளும்படி தீர்மானஞ் செய்யப் பட்டது. இந்த ஏற்பாடானது பிறகு முறையே கைக்கொள்ளப் பட்டது.

திரும்பவுங் **குமுதவல்லி** தன் பாங்கிமாரோடும் வழித் துணையாகக் கொள்ளப்பட்ட இரண்டு வலிய நீலகிரி நாட்டாருடனும் பயணம் புறப்பட்டபோது ஏறக்குறையப் பிற்பகல் இருபத்திரண்டு நாழிகையாயிற்று. இவ்வாண்மக்கள் இருவரும் உடம்பெங்கும் படைகள் தாங்கி வலிய குதிரைமேல் ஏறியிருந்தார்கள்: அக்கொடிய மிருகம் கண்ணுக்கு எதிர்ப் பட்டால் உறையினின்றுங் கைத்துப்பாக்கிகளை இழுப்பதற்கு அவர்கள் தம் கைகளை ஆயத்தமாக வைத்திருந்தார்கள். அவர்கள் போன வழியானது அந்நாட்டின் அழகிய ஓரிடத்தின் ஊடே சென்றது--அங்கே பழங்களைச் சுமை சுமையாய்த் தாங்கிய மரங்களும், பழக்குலைகள் நிறைந்து கனத்திருக்கின்ற கொழுமையுள்ள கொடிமுந்திரிகளும் பாதைகளுக்கு நிழலைத் தந்து சந்து வழிகளுக்குத் திரைமறைப்புப் போல் இருந்தன; இன்னும் அங்கே பச்சென்ற வரம்புகளின் பின்னே, அகன்ற பெரிய இடங்கள் **பூசணிப்பழங்களாலும் கொம்மட்டிப்** பழங்களாலும் மூடிப்பட்டிருந்தன--இது பலவகைப் பழங்களும் தாமே வளர்ந்து செழிக்குங்காடாயிருந்தது!

கடைசியாகத் தங்கிய இடத்தினின்றும் அவர்கள் புறப்பட்டு வந்த பிறகு இரண்டரை நாழிகை கழிந்தது; இச் சமயத்தில் சிறிது தூரத்திலேயிருந்து தாழ்ந்த உறுமல் ஒலியொன்று தொடர் பாய்வரக் கேட்டாற்போல் **குமுத வல்லிக்குப்** பட்டது; உடனே கடிவாளத்தைப் பிடித்துத் தன் குதிரையை நிறுத்திக் கொள்ளவே, சிலஅடி பின்னேயிருந்த அவள் பாங்கிமாரும் வழித் துணைவரும் ஒரு நொடியிற் கிட்ட வந்து சேர்ந்தார்கள். சுந்தராம்பாளும் ஞானாம்பாளும் அவ்வாறே அவசகுனமான அவ்வோசையைக் கேட்டார்கள். அவர்கள் முகங்கள் திகிலால் வெளுப்பு நிறம் அடைந்தன. ஆனால் அந்த நீலகிரி நாட்டார் இருவரும் விரைவில் அஞ்சாமொழிகள் சொல்லி, அப்பெண்மக்களைத் தமக்கு நடுவே

நிறுத்திக் கொள்ளும் வகையிலே தாம் நின்று கொண்டார்கள். அவர்கள் கைத்துப்பாக்கிகள் அவர்கள் கைகளில் ஏற்கெனவே எடுக்கப் பட்டிருந்தன: அவர்களின் சுறுசுறுப்பான கூரிய கண்களானவை சுற்றிலும் தம் பார்வையைச் செலுத்தின.

சில நிமிஷங்கள் வரையில் ஏதும் அரவம் இல்லாமல் இருந்தது; ஆனால், திடீரென்று ஊளை போலவும் உறுமுதல் போலவும் பயங்கரமான ஓர் ஓசை உண்டாயிற்று. அதன்பிறகு "மரங்களின் இடையே சர சர வென்றும் நெறு நெறு வென்றும் ஓர் ஓசை உடனே தொடர்ந்து வந்தது; **கொடி முந்திரி** மறைப்பினின்றும் ஒரு பெரும் புலி கிட்ட இருக்க நீலகிரி நாட்டான் மேற் பாய்ந்தது. உடனே அம்மனிதன் கையிலிருந்த இரண்டு கைத்துப்பாக்கிகளும் வெடி தீர்ந்தமை கேட்டது. சுந்தராம்பாள் ஞானாம்பாள் இதழ்களிலிருந்து கீச்சென்று ஓர் ஒலி உண்டாயிற்று. - குமுதவல்லியிடத்திலிருந்து கூடத் திகிலோடு கூடிய ஓர் ஒலி உண்டாயிற்று; இவர்கள் ஏறியிருந்த குதிரைகளோ அடக்க முடியாதவாயின. துர்பாக்கியனான அம்மனிதன் குதிரையினின்று புலியினால் கீழே இழுக்கப் பட்டான்: அவனுதவிக்காக அவன்தோழன் கிட்டே ஓடினான்; ஆனால், அப்பிராணியோ தன் பகைவரை ஒருவர்பின் னொருவராக வெல்லுவதற்குத் தீர்மானித்தாற்போலத் தன் இரண்டாம் பகைவன்மேல் பயங்கரமாக ஒரு குதியிற் பாய்ந்தது.

இந்தக்காட்சியானது பார்ப்பதற்கு மிகவும் கோரமாயும், பயங்கரமாயும் இருந்தது. திரும்பவும் கைத்துப்பாக்கிகளின் அதிர்வெடி கேட்டது: அக்கொடிய மிருகமானது காயப்படுத்தப் பட்டது- ஆனாலும் கொல்லப்படவில்லை. மற்று அது தான் பட்ட காயத்தினால் வெறிபிடித்துத் திகிலான கறுசுறுப்பு உடையதாயிற்று. தன்குதிரையிலிருந்து இடியேறுண்டு தள்ளப் பட்டாற்போல இரண்டாம் மனிதன் கீழே இழுத்துப் போடப் பட்டான்; அப்போது இரத்தம் ஒழுகும் வெறிகொண்ட குதிரைகள் இரண்டும் ஊர்வோன் இல்லாதனவாய்க் காற்றினால் இறக்கை வாய்ந்தனபோல் பறந்து சென்றமை காணப்பட்டது. அதே சமயத்தில் குமுதவல்லியும் அவள் பாங்கி மாரும் ஏறியிருந்த குதிரைகளும் அச்சமுற்று அடங்காதனவாய்ப் பலமுகமாய் விரைந்து ஓடின. இங்ஙனம் எல்லாம் பெருந் தடுமாற்றமாய் இருப்பதற்கு நடுவே - கடிகாரத்தில் நிமிஷங் காட்டும் முள்

நிமிஷங்களை அடுத் தடுத்துக் காட்டுவதுபோல ஒவ்வொன்றும் ஒன்றன்பின் னொன்றாய்க் கடுகிவரும். இப்பொழுது மறுபடியும் துப்பாக்கி களின் வெடிகள் கேட்டன. அந்தப் புலியானது மரண வேதனை ஊளைக்குரலோடு நிலத்தேகிடந்து புரண்டது - மறுபடியும் மற்றொரு குண்டு அப் பிராணியின் மண்டைக்குள் நெறு நெறு வென்று தொளைத்துச் செல்லும்படி அவ்வளவு திட்டமாய்க் குறிவைத்துச் சுடப் பட்டது; அடுத்தாற்போல் மூன்று பேர் குதிரைமேல் அவ்விடத் திற்கு விரைந்து வந்தார்கள்.

அதற்குள் குமுதவல்லி தன் குதிரையை முற்றுந் தன் வசத்தில் அடக்கிக் கொள்வதானாள்; அந்தக் கோரமான சண்டை நடந்த இடத்திற்கு நெடுந்தூரத்திலே அவள் இப்போது இருந்தாலும், ஆபத்து ஒழிந்தது என்பதனை அவள் அறிகுறியாக ஆர்ப்பரித்துக் கூவுவோர் ஓசையைக் கேட்டனள். குதிரை ஊருந் திறத்தில் தம் தலைவியை எதிரவல்லவர்களான சுந்தராம்பாள் ஞானாம்பாள் இருவரும் தம் குதிரைகள் தம் உடைகள் சிறிது கீறுண்டு கிழியும்படி கொடிமுந்திரி அடர்ந்த இடங்களின் ஊடே விரைந்து சென்றாலும் அவற்றின்மேல் தமது இருக்கை கலையாதவண்ணம் அங்ஙனமே இருந்து கொண்டார்கள். அவர்கள் தங்கள் உயிரோடு தப்பிப்பிழைத்ததையும் இரண் டொரு கீறல்தவிர வேறு காயம் தம் உடம்பிற் படாமையையும் எண்ணிப்பார்க்கும்போது இஃது ஒருபொருட்டாக வைத்துச் சொல்லற்பாலதன்று”

உற்றசமயத்தில் அவ்விடத்திற்குக் குதிரைமேல்வந்த மூவரின் தலைவனானோன் - தன் கூட வந்தோர் இருவருக்கும் சுருக்கெனச் சில கற்பித்துவிட்டு, இதற்குள் தமது தடுமாற்றம் நீங்கித் தேறி அந்தப் பாதையில் சிறிது தூரத்தே ஒன்றுகூடி நின்ற குமுதவல்லியையும் அவள் பாங்கிமாரையுஞ் சந்திக்கும் பொருட்டுக் குதிரையை முன்னே பாய்ச்சலிற் கொண்டு போனான். அங்ஙனம் நயம்மிகுந்த வணக்கத்தோடும் தேறுதல் மொழிகளோடும் அந்தப்பெண்மக்களை விரைந்து அணுகி னவன் ஓர் அழகிய பௌத்த இளைஞனாயிருந்தான். நாகரிகமும் இனிய அழகும் வாய்ந்த இவ்விளைஞன் நீலலோசனனேயன்றிப் பிறர் அல்லரென்றும், இவனுடன் வந்தோர் இருவரும் கேசரி வீரனும் வியாக்கிரவீரனு மாவரென்றும் இதனைப்படிப் போர்க்கு உடனே தெரிவித்திடுகின்றோம்.

திகிலைத்தரும் அச்சண்டையின் முடிவு குமுதவல்லியினாலும் அவள் பாங்கிமாராலும் காணப்படாவிடினும், அது முடிந்து போயிற்றென்பதை அவர்கள் ஏற்கனவே தெரிந்து கொண்டார்கள். இப்போது அவர்கள் இப்பௌத்த இளைஞன் சொல்லிய சொற்களிலிருந்து கடைசியாக இவன் கையினாலே தான் அப்புலி இறந்துபட்டதென்று தெரிந்தார்கள். குமுதவல்லி அவனுக்குத் தன் நன்றி மொழிகளை பொழிந்தாள்; கலக்கமும் ஐயமுங் கலந்த நோக்கத்தோடும் சொல்லசைவோடும் அவள் தன்பின் வழித்துணையாய் வந்த நீலகிரி நாட்டார் இருவர் விதிப்பயனையும் பற்றி உசாவினாள்.

அதற்கு நீலலோசனன், "அத்துர்ப்பாக்கிய மனிதர்மேல் பரபரப்பாக என் பார்வையைச் செலுத்திப் பார்த்தவரையில், நங்கைமீர், அவ்விருவரும் பிழைத்திருக்கின்றார்கள் என்று உங்கட்கு உறுதியுரை சொல்லக்கூடியவனாவேன்; ஆனால் அவர்கள் அபாயமான வகையில் சின்னபின்னப் படுத்தப் பட்டிருக்கின்றார்களென அஞ்சுகின்றேன். என்கூட வந்தவர்கள் இருவரும் அவர்களுக்குத் தம்மாற் கூடியமட்டும் உதவி செய்து கொண்டிருக்கின்றார்கள்; அவர்கள் காயங்களினின்று இரத்தம் ஒழுகுவதை நீங்கள் பாராதிருக்கும்பொருட்டும், திகிலான இந்நிகழ்ச்சியின் முடிவைத் தெரிவிக்கும் பொருட்டும் யான் இங்ஙனம் முன்னே விரைந்து வந்தேன்." என்று மறுமொழி புகன்றான்.

உடனே குமுதவல்லி காயப்பட்ட அம்மனிதரிடத்து இரக்கமுங் கவலையும் மிக உடையவளாய், "ஐயன்மீர், யானும் என் தோழிமாரும் ஏதேனும் உதவி செய்யக்கூடுமா? என்பதைச் சொல்லுங்கள். ஒருகால், உங்கள் மனிதரைவிட யாங்கள் அக்காயங்களைத் திறம்படக் கட்டக்கூடுமே; ஏனென்றால் எங்கள் பெண்பாலர்க்கு அஃது உரிய தொழிலன்றோ?" என்று கூறினாள்.

"நங்கைமீர், என்னுடன் வந்தவர்கள் போர்நிகழ்ந்த இடங்களில் இருந்து அனுபவம் ஏறினவர்கள்; காயங்களைக் கட்டுவது அவர்களுக்குப்புதிய தொழில் அன்று. நான் திரும்பி வரும் வரையில் இங்கே தானே தங்கியிருக்க அன்பு கூருங்கள், கெடுதி சேர்ந்த இடத்திற்கு யான் கடுகத் திரும்பிப் போகின்றேன்.

*சில நிமிஷங்களுக்கெல்லாம் யான் உங்களிடம் மறு படியும் வந்து நீங்கள் தயாள சிந்தை வைத்துள்ள அம்மனிதர் களின் நிலைமையை அறிவிக்கின்றேன்.” என்று* ***நீலலோசனன்*** *மறுமொழி கூறினான்.*

*மறுபடியும் மரியாதையோடு வணங்கி நீலலோசனன்தன் குதிரையைத் திருப்பிக் குமுதவல்லியையும் அவள் பாங்கி மாரையும் விட்டு அகன்று போயினான்.*

*அதன்பிறகு குமுதவல்லி, “சிறிதுநேரம் நாம் குதிரையை விட்டுக் கீழே இறங்குவோம். அத்துர்பாக்கிய மனிதர் இருவரும் எல்லாவகையாலும் செவ்வையாகப் பராமரிக்கப்படுகிறார்கள் என்பதை நாம் உறுதியாகத் தெரிந்துகொண்டால் அல்லாமல் நாம் பயணம் தொடங்கலாகாது. அதுவல்லாமலும் நம் குதிரைகள் எல்லாம் இன்னும் நடுநடுங்கிக்கொண்டிருக்கின்றன. இச் செழும் புல்லை அவைகள் மேயும்படிவிட்டால், அஃது அவ்வேழைப் பிராணிகளை ஆற்றுவிக்கும்.” என்று நாக நாட்டரசி கூறினாள்.*

*அவ்வாறே,* ***குமுதவல்லி, சுந்தராம்பாள், ஞானாம்பாள்*** *மூவரும் குதிரையைவிட்டு இறங்கினார்கள்: அவர்கள் குதிரை கள் பாதையோரமாய்த் திரியும்படி விடப்பட்டன; ஏனெனில், நுண்ணறிவும் நம்பிக்கையும் உள்ள அப்பிராணிகள் ஒவ்வொன் றுந் தன் தலைவி அழைக்கும்போது உடனே திரும்பிவரும் வழக்கம் உடையது. குமுதவல்லி தான் ஒரு கரைமேல் உட்கார்ந்து கொண்டு தன் றோழிப் பெண்களும் அவ்வாறே இளைப்பாறுக வென்று சைகை காட்டினாள்.*

*“நல்ல காலமாயிற்று, அப்பௌத்த துரைமகனும் அவர் ஆட்களும் அச்சமயத்தில் வரலானது!” என்று நாகநாட்டரசி மொழிந்தாள்.*

*“எவ்வளவு அழகான இளைஞர் அவர்!” என்றாள் சுந்தராம்பாள்.*

*“அவர் பார்வையில் சுத்தவீரனே - என்றாலும் இளமையும் அழகும் வாய்ந்தவர்!” என்று கூடச்சொன்னாள் ஞானாம்பாள்.*

"பேசாதிருமின், சிறுமிகாள்! அவரது நல்ல தோற்றத்தை விட அவரது ஆண்மையை எண்ணிப்பாருங்கள்; நாம் இப்போது தப்பிப் பிழைத்ததற்காகச் சிவபெருமானுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம் என்பதையும் எண்ணிப் பாருங்கள்" என்று சிறிது கடுமையாகக் குமுதவல்லி பேசினாள்.

சிலநிமிஷம் பேசாமல் இருந்தார்கள். அப்போது குமுதவல்லி தன்னைப்படைத்த கடவுளுக்குத் தனக்குள்ளே வழிபாடு செலுத்தினாள்; மற்ற இருபெண்களும் அவள் உள்ளத்தில் நிகழ்வதை அறிந்து தாமும் அவ்வாறே செய்தார்கள்.

இப்போது நீலலோசனன் திரும்பிக் குமுதவல்லியும் அவள் பாங்கிமாரும் உட்கார்ந்திருந்த இடத்திற்கு வந்தான்; வந்தவன் சொன்னதாவது: "நங்கைமீர், உங்கள் வழித்துணைவர் அடைந்த காயங்கள் கொடியனவா யிருந்தாலும் உயிர்க்கு ஏதும் அச்சமில்லையென்று மகிழ்ச்சியோடு தெரிவிக்கின்றேன். இந்தப் பாட்டையில் வந்து சேரும் ஒரு சிற்றடிப்பாதை வழியாக வன்றோ நானும் என் ஆட்களும் நல்ல சமயத்தில் அவ்விடம் வந்து சேர்ந்தோம். அதோ தோன்றும் மரங்களால் மூடப்பட்டு அவற்றின் நடுவே ஒரு சிறு குடிசை இருக்கின்றது. காயப்பட்ட மனிதர்களை அங்கே கொண்டுபோக வேண்டுமென்பது என் கருத்து; அவர்களை மிகவும் அன்பாய்ப் பார்ப்பதற்கு வேண்டிய உபகரணங்களை நிரம்பத் தந்து அவர்கள் அடைந்த காயங் களால் அவர்கள் சிறிதும் உயிர்ச்சேதம் உறாமல் செய்தன்றி அவர்களைவிட்டு வரமாட்டேன் என்று உறுதியாய் நம்பி ஆறுதல் அடைமின்கள்."

"கனவானே, தாங்கள் உண்மையாகக் காட்டிவருகின்ற அன்புடைமைக்கு ஆயிரம் வந்தனம்!" என்று சொல்லி, "அம்மனிதர்க்கு வேண்டுவனவெல்லாம் சேகரித்துத் தருவதும், சிறிது காலம் என்னிடம் சேவகத்திலிருக்கையில் அவர்கள் அடைந்த துன்பங்களுக்குப் போதுமான அளவு ஈடு கொடுத்து உதவுவதும் என்னுடைய கடமை அல்லவோ? எனக்காகத் தாங்கள் ஐயம் பகிர்ந்து கொடுக்க ஒருப்படுவீர்களா?" என்று குமுதவல்லிக் கேட்டாள்; அங்ஙனங் கேட்கையிலேயே, தனது பணப்பையினின்றும் பல பொன் நாணயங்களை எடுத்து, அவற்றை நாண் இனிமைகலந்த புன்முறுவலோடு நீலலோசனனி டம் நீட்டினாள்.

அந்நங்கையை முன்பின் முழுதும் அறியாதவனா யிருக்குந்தான் அவள் அடைந்த செலவுக் காகத்தான் பொருள் செலுத்துவதாயிருக்கும். இதனைப்பற்றி வற்புறுத்துதல் தனக்கு மென்னடையும் தகுதியும் ஆகாதெனப் பௌத்த இளைஞன் உடனே கண்டு கொண்டான்; ஆகவே, அப்பொன் நாணயங் களைத் தான் வாங்கிக்கொண்டபோது, "காயப்பட்ட அவ் வேழை மனிதர் இருவரையும் பற்றி யான் முதலிற் கொண்ட நோக்கத்தையும் நிறைவேற்றுதலிற் சிறிதும் குறையேன்; எனவே, அவர்கள் பெற்றுக்கொள்ளும் ஈடு இரட்டை நன்கொடை யாகும்." என்று கூறினான்.

இங்ஙனஞ் சொல்லிவிட்டு அங்கிருந்து மறுபடியும் அவன் குதிரைமேற்போக எழுந்தான் -அபோது அவனுக்கு ஓர் எண்ணந்தோன்றவே, "நங்கைமீர்" இப்போது நீங்கள் வழித் துணை இன்றி யிருத்தலால், யானும் என் ஆட்களும் எங்களால் இயன்றளவு செய்துவரக்கூடிய காவலையும் பாதுகாப்பையும், தாங்கள் ஏற்றுக்கொள்ள அருள் செய்வீர்களாக! நாங்கள் நீலகிரியை நோக்கிப் பயணஞ் செல்பவர்களாய் நேர்ந்தோம்: காயப்பட்ட மனிதரில் ஒருவன் சிறிதுமுன்னே சொன்ன சிலவற்றிலிருந்து நீங்கள் செல்லவேண்டிய இடமும் அதுவே யெனத் தெரிந்தேன்." என்று கூறினான்.

குமுதவல்லி ஏது விடைசொல்வதென்று சிறிது நேரந் தடைபட்டாள்: ஆனால், தன்றோழிமார்களைக் கண்நோக்கவே அவர்கள் உருக்கமுடன் வேண்டிக்கொள்ளுங் குறிப்போடு தன்னை உற்றுப்பார்த்துக் கொண்டு இன்னது சொல்வதென்று விரைவில் தீர்மானித்தாள்.

"கனவானே! இப்பயங்கரமான சம்பவத்திலிருந்து யான் அடைந்த அனுபவமானது,. தாங்கள் இவ்வளவு தயாளத்தோடு செய்யும் உதவியை மறுத்தல் எனக்கு மூர்க்கத்தனமாய் முடியுமென்றும், நடுநடுங்கும் என் பெண்களாகிய இவர்கள் நிலைமையை எண்ணிப்பாராக் கொடுமையாகு மென்றும் எனக்குக் காட்டுகின்றது. ஆகையால், இவ்வுதவியை யான் நன்றியறிதலோடு ஏற்றுக் கொள்ளுகின்றேன்" என்று விடை பகர்ந்தாள்.

*தேவமாதின் அழகுவாய்ந்த அப்பெண்மணியின் தீர் மானத்தைத் தான் பெற்றுக்கொண்ட பொழுது இளைய* **நீலலோசனன்** *தன் நெஞ்சத்துள் துணுக்கென ஒரு மகிழ்ச்சி கொண்டான்: இங்ஙனம் எழுந்த உள்ளப் பெயர்ச்சியினைத் தகுதியான மரியாதைத் தோற்றத்தின் கீழ் அடக்கிக் கொண்ட வனாய், "நங்கைமீர் அம்மக்களை அக்குடிசைக்கு எடுத்துக் கொண்டு போக உதவி செய்யும்பொருட்டு இப்போது விரைந்து போகின்றேன். கட்டாயமாய் வேண்டிய அளவுக்குமேல் ஒரு நிமிஷமேனும் யான் அங்கு நீட்டித்திரேன் என்று உறுதியாய் நம்பியிருங்கள்." என்று கூறினான்.*

*மறுபடியும் அப்பௌத்த இளைஞன் ஊக்கம் மிகுந்த தன் குதிரைமேல் ஏறிப்போயினான்; அவன் காதுக்கெட்டுந் தூரங் கடந்து சென்றபின், "அவ்வளவு கருணையோடு தரப்பட்ட வழித் துணையை நாம் ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு செய்யக் கூடியதில்லை." என்று* **குமுதவல்லி** *மொழிந்தாள்.*

*ஒரோவொருகால், தன் நினைவுகளின் கன்னிமைத் தூய தன்மையோடும் - மிகநெடுந்தூரம் அல்லா மேற்கணவாய் மலைகளின்மேல் எந்நேரமும் தங்கியிருக்கும் பனிபோல் தூய தான தன்னுயிரின் இயற்கைக் கற்புடைமையோடும் அவ்விளங் கன்னிப்பெண், நீலலோசனனைப் பற்றி இன்னும் ஏதோ மிகுதியாக காணவேண்டும் நினைவிலே மெய்யாகவே வெறுப்ப டையாத ஓர் இரகசிய எண்ணந் தன்னுள்ளே கொள்ளப் பெற்றாள். ஏனெனில்,* ***ஆண்பாலருள் அழகால் மிக்கவ ரென்றும் பெண்பாலருள் அழகால் மிக்கவரென்றும் நன்கு மதிக்கப்படும். இளையோர் இருவர் ஒருவர் ஒருவர்மாட்டு ஏதோ சிறிதுபற்று உண்டாகப் பெறாமல் இங்ஙனங் தற்செயலாய் ஒருங்கு கூட்டப்படுதல் கூடாததேயாம்.***

*நீலலோசனன் திரும்பிவரும் முன் ஏறக்குறைய இரண்டரை நாழிகை கழிந்தன; இப்பொழுது அவன் ஆட்கள் இருவரும் அவன்பின்னே வந்தார்கள். அந்தப்பெருமாட்டியோடும் அவள் தோழிப்பெண்களோடும் சேர்ந்து பயணம்போகும்படி ஏற்பாடு செய்யப்பட்டதென்று முன்னமே அவன் அவர்கட்குத் தெரிவித் தான். இச்செய்தியை வியாக்கிரவீரன் மகிழ்வோடு கேட்டான், ஏனென்றால், பெண்பாலார் கூட்டத்திற் சேர்ந்திருப்பது அவனுக்கு இனியது: மற்றுக் கேசரிவீரனோ இதனைக்*

கேட்டதும் தன்முகத்தின்மேல் துயரக்குறிப்பு உடையவ னானான்.

தன் வாலிப எசமானன் பொய்ந்நெஞ்சுள்ள மற்றொரு மோகினிப் பேயின் வசத்தில் அகப்பட்டால் என் செய்வதென்று அஞ்சினான்; என்றாலும், இப்படிப்பட்ட நிலைமையில் தடுத்துச்சொல்வதற்கு அவன் அவ்வளவு தயாளம் அற்றவன் அல்லன். பயங்கரமான அபயாத்தினின்றும், திகிலான மனக் கலக்கத்தினின்றும் இப்பொழுதுதான் தப்பிய ஆதரவில்லாப் பெண்கள் மூவரும் தாங்கள் இழந்துபோனதற்கு மாறாக வேறொரு வழித்துணை உறுதிப்படுத்திக்கொள்ள ஆவல் உள்ளவராய் இருக்கக்கூடுமென்றும், மக்கள் உறவின் நியமத் திற்கும் மக்கள் இயல்பின் நியமத்திற்கும் இணங்க அவர்கள் அங்ஙனந் துணைநாடுவதற்கு உரிமையுள்ளவர் களென்றும் அவன் இயற்கையாகவே உணர்ந்தான். ஆனால், நீலலோசனனும் அவன் ஆட்களும் குமுதவல்லியையும் அவள் பாங்கிமாரையும் வந்து சேர்ந்தபோது, கேசரிவீரன் ஐயுற்றுப் பார்த்த பார்வை வரவரத் தெளிவடைந்தது; ஏனெனில், ஏதோ **சொல்லமுடியாத இனிமையும், களங்கமற்ற நெஞ்சக்குறிப்பும், வசீகரமும், பிரியமும்** குமுதவல்லியின் முகத்திலே காணப் பட்டமையால், அவநம்பிக்கையும் முன் எச்சரிப்பும் உள்ள கேசரிவீரனுங்கூட அத்தெய்வீக முகத்திலே எழுதப்பட்ட சான்றுக்கு இணங்காத வனாய் இருக்கக்கூடவில்லை.காமக் கொதிப்பும் காமவிழைவும் உள்ள கருவிழியாளான மீனாம்பாளையும் - தூய்மையும் கள்ளமின்மையும்ஆகிய ஒளியினாற் சூழப்பட்ட நீலவிழி யாளான குமுதவல்லியையும் அவன் தன் மனத்துள்ளே விரைவில் ஒப்பிட்டுப்பார்த்த போது இவளைப் பற்றி அவன் மிகவும் நல்லெண்ணங் கொள்ளாமல் இருக்கக்கூட வில்லை. இன்னும் இவள் பாங்கிமார் இருவரிடத்தும் கரவில்லாத வெளிப் படையான தாராள குணத்தையும் - நாணமுடன் மரியாதை நிறைந்த ஒழுக்கத்தையும் கண்டபோது, தன் வாலிப எசமானன் இவர்கள் புதுஉறவைப் பெற்றதற்காக வருந்துதல் ஒழிந்தான். மற்று, இத்தனை இனிமைவாய்ந்த இவர்கள் வழித்துணையாவது பாதுகாப்பாவது இல்லாமல் வழியே ஏகுவதற்கு விடப்படா மையை நினைக்கும்போது தன்னுள்ளே ஒரு மகிழ்ச்சியும் மனத்திருத்தியும் உண்டாதலை உணர்ந்தான்.

*நீலலோசனன் குமுதவல்லியின் பக்கத்தே குதிரை ஊர்ந்து சென்றான். கேசரிவீரன் சுந்தராம்பாளுக்குத் துணையாய் ஏகினான்... வியாக்கிரவீரன் ஞானாம்பாளுடன் தன்னை இணைத்துக் கொண்டான். மீனாம்பாள் குமுதவல்லி என்னும் இருவரின் இயற்கை மாறுபாட்டைப் பற்றிக் கேசரிவீரன் உள்ளத்தில் தோன்றியது போலவே, நீலலோசனனுள்ளத்திலுந் தோன்றுவதாயிற்று. தன் நெஞ்சம் குமுதவல்லியினிடத்து விளங்கிய விழைவுகூரத்தக்க இனிய அழகின் வசப்பட வேண்டுவதாயிருக்க, ஒரு கணப் பொழுதேனும் தான் மீனாம் பாள் அழகினால் மயக்கப்பட்டது என்னை என்று அவன் வியப்படைந்தான். அவன் மீனாம்பாளைக் கண்ட போது குமுதவல்லியை இதற்குமுன் என்றும் பார்த்ததில்லை என்பதும், பெண்பாலாரில் அத்துணை நிகரற்ற வடிவம் ஒன்று உலகத்தின் கண் உள்ளதெனக் கருதியது இல்லை என்பதும் உண்மையே: ஆனால் இந்த எண்ணமுங்கூட, அவன் தான் சிறிது நேர மாயினும் கரியவிழி மீனாம்பாளின் காமங்கனிந்த மிக்க அழகினுக்கு வணங்கியதனால், தன் நெஞ்சமானது இப்போது தோழமை கொண்ட நங்கையின் தூய கன்னிமை அழகினுக்கே செலுத்தற்கு உரிய வணக்கம் என்னுந் தூய தூபத்திற்கு இடம் பெறத் தகுதியல்லாததாயிற்று என்று உணரும் உணர்ச்சி யினின்றும் அவனை மாற்றாதாயிற்று.*

*பொதுவான பலதிற விஷயங்களைப் பற்றிப் பேசியபிறகு குமுதவல்லி, "ஐயன்மீர், இந்தப் பிரதேசத்தில் வழிதப்பித் திரியுங் காட்டு மிருகம் ஒன்று மாத்திரமே அஞ்சத்தக்க அபாயம் ஆகாதென்று சொல்லக்கேட்டேன்." என்றாள்.*

*"நங்கைமீர்! உண்மையே! வேறு யாது அபாயம் உங்களுக்கு இவ் அச்சத்தை உண்டு பண்ணியது?" என்று நீலலோசனன் வினாவினான்.*

*"திகிலை உண்டாக்கும்* **நல்லானைத்தவிர** *வேறொன்றும் அன்று," எனக் குமுதவல்லி விடைபகர்ந்தாள்.*

*அதற்கு நீலலோசனன் "ஆ!" என்று உரத்துக் கூவினான்; இங்ஙனங்கூவிய ஓசை புதுமையாகத் தோன்றினதனால், ஓர் இமைப்பொழுது குமுதவல்லி அவனை உற்றுப்பாராமல் இருக்கக்கூடவில்லை. அழகிய அவ்விளம்பெண் கொண்ட*

திகிலை மிகுதிப்படுத்துவதற்கு அஞ்சி உடனே அவன் "ஆம், அப்படிப்பட்டது ஏதோ யானும் கேள்விப்பட்டேன்: ஆனாலும் நங்கைமீர் அஞ்சாதேயுங்கள்!" என்று கூறினான்.

"என்மட்டில், அதைப்பற்றி யான் சிறிதும் அஞ்சவில்லை; ஆகையால், நான் என் தோழிப் பெண்கள் மனத்திலும் கலவரத்தை உண்டு பண்ணாதிருந்து விடுகின்றேன்." என்று **குமுதவல்லி** தொடர்ந்து பேசினாள்.

"நங்கைமீர்! நீங்கள் செய்வது நல்லது, தீமையும் ஆபத்தும் வரும்முன் பாதிவழியிற் சென்றே அவற்றை எதிர்க்க ஓடாமல், அவை வரும்போது எதிர்ப்பதே போதும். நாளைக்கு நாம் நீலகிரியில் இருப்போம்--அங்கே போய்விட்டோமானால் அச்சம் சிறிதும் இல்லை." என்று **நீலலோசனன்** மறுமொழி புகன்றான்.

மலையநாட்டின் தலைநகரான நீலகிரிக்குத் தாம் இன்ன காரியத்தின் பொருட்டுப் போகின்றார்கள் என்பதைப்பற்றி நீலலோசனனாவது குமுதவல்லியாவது சிறிதாயினும் ஒருவரோ டொருவர் மறந்தும் பேசவில்லை. அவர்கள் ஒருவரையொருவர் உசாவியதில் வெறும் பெயர் மாத்திரந்தான் சொல்லிக் கொண்டார்கள்: இவ்விஷயத்திலுங்கூடச் சிலவற்றைச் சொல் லாமல் அடக்கி விட்டார்கள்; நீலலோசனன் தான் அரசிளை ஞன் என்பதைத் தெரிவித்திலன்--குமுதவல்லியும் தான் அரசி என்பதைத் தெரிவித்திலள். சில வயணங்களால் இருவரும் இங்ஙனம் அடக்கமாய் இருந்தனர்; ஏனென்றால், இதனைப் படிப்போர் ஏற்கெனவே தெரிந்தபடி இவ்விருவரும் மறைவாகப் பிரயாணஞ் செய்யும் படிக்கும், தாம் மறைவாகச் செல்வது சிறிதுந் தெரியாதபடிக்கும் வற்புறுத்தப்பட்டார்கள்.

இப்போது மாலை இரண்டரை நாழிகை வேளை ஆயிற்று. தன்னிடத்திலிருந்து நீலகிரி நகரம் ஏறக்குறைய இருபத்தைந்து மைல் தூரம் அல்லது ஒருநாட் பயணத்திலுள்ளதும், அவ்விராப் பொழுதிற்குத் தாம் தங்க வேண்டியதுமான ஓர் ஊர் நம்முடைய பிரயாணிகள் பார்வைக்குத் தென்படலாயிற்று. நீலலோசனனுங் குமுதவல்லியும் தத்தம் துணைவர்க்குச் சிறிது முன்னே குதிரை ஊர்ந்து சென்றார்கள்--அப்போது ஒன்று நேர்ந்தது. அது பார்வைக்கு அற்பமானதொன்றாய்த் தோன்றினாலும், இதனால் விளைந்தவை முக்கியமானவைகள். பாட்டை ஓரத்தில்

பார்க்கப் பரிதாபமான முதியோன் ஒருவனும், அவனைப் போலவே ஏழ்மையான முதியோள் ஒருத்தியும் உட்கார்ந்திருந் தனர்--இவர்கள் இருவரும் முடவர்கள்--இருவரும் உறுப்பு அற்றவர்கள்--இருவரும் பிச்சைக்காரர்க்குரிய கந்தைத் துணி கட்டியிருந்தார்கள். நீலலோசனனுங் குமுதவல்லியும் முன் சென்ற போது இவ்விருவரும் பிச்சை கேட்பதற்கு நொண்டி எதிரே வந்தனர். இப்பிச்சைக்காரரின் பரிதாபமான நிலைமை யைப் பார்த்தபோது நம் இளைய தலைவனுந் தலைவியுமான இருவருக்கும் ஒருங்கே இரக்கம் உண்டாயிற்று: ஆகவே இருவருந் தமது பணப்பையை இழுத்தார்கள். குமுதவல்லி ஒரு பொன் நாணயத்தை முடத்தி கையில் வைத்தாள்; நீலலோசனனும் அவ்வாறே தளர்ந்த அம்முதியோனுக்கு உதவி புரிந்தான். ஆனால் அச்சமயத்தில் நீலலோசனன் குதிரையானது ஏதோ பதறி அசைந்தது; இதனால் அவன் பணப்பையினுள்ளேயிருந்த சில நிலத்தே விழுந்தன. நன்றியறிவுள்ள அம்முதிய முடவர்கள் அவற்றைப் பொறுக்கியெடுத்து உடையவனிடம் சேர்ப்பிக்க விரைந்தனர்: ஆனால் அங்ஙனங் கீழே விழுந்த பொன் நாணய வெள்ளி நாணயங்களுக்கு இடையிலே, பாம்பின் மினுக்கொளி போலக் குமுதவல்லியின் கண்களைத் திடீரெனக் கவர்ந்தது ஒன்று கிடந்தது. அஃது ஒரு மோதிரம்! ஆம்-ஒருவகையான வேலைப்பாடு அமைந்ததாய் ஒரே சிவப்புக்கல் பதிக்கப்பட்ட ஒரு பொன் மோதிரம்! நீலலோசனன் அவசரமாய் அம்மோதிரத் தையும் அந்நாணயங்களையும் தன் பணப்பையினுள்ளே வைப்பானாயினான்; குமுதவல்லி கலக்கமுற்ற தன் பார்வையை அப்புறந்திருப்பிக் கொண்டாள்; அவள் நெஞ்சமோ நோய்ப் படுத்தும் உணர்வால் தாக்குண்டது.

அவள் உள்ளத்திற் பொல்லாத எண்ணங்கள் பல மின்ன லெனத் தோன்றின. நல்லானைப் பற்றி அந்தச் சத்திரக்காரன் தனக்குச் சொல்லிய ஒவ்வொன்றையும் அவள் நினைவு கூர்ந்தாள். அவன் இளைஞன்--அந்தச் சத்திரக் காரனுக்கு மகனென்று சொல்லும்படி அவ்வளவு இளைஞன்! அவனுக்கு கரிய தலைமயிரும் மீசையும் இருந்தன. அவன் உயரமாய் ஒல்லியாயிருந்தான்; குமுதவல்லியுந் தான் தன் அறைக்குள் முகமறைப்பிட்டு வந்தவனைக் கீழ்க்கண்ணாற் பார்த்த பார்வை யிலும் அவன் அப்படியே இருந்தானென நினைத்தாள். அவ்

*விவரமெல்லாம் நீலலோசனனிடம் ஒத்திருந்தன! அதுவல்லா மலும், நல்லான் பலவகையான வேடங்களும் எடுப்பவன்; ஒருநாள் துருக்கனைப் போலவும் மற்றொரு கால் மலை நாடனைப் போலவும் உடை அணிபவன்: ஏனென்றால் பொல்லாத தன் கெட்ட நோக்கங்களை முடிப்பதற்கு அவன் செய்து பாராத உபாயம் இல்லை. சுருங்கச் சொல்லுமிடத்துக்* **குமுதவல்லி,** *தன் பக்கத்தே குதிரைமேல் வருபவன் கள்வர் கூட்டத் தலைவனான பயங்கர நல்லானையன்றிப் பிறர் அல்லர் என்னும் திகிலும் வருத்தமும் மிக்க ஓர் உறுதி எண்ணங் கொள்ளப் பெற்றாள்!*

*பிச்சைக்காரரிடம் நிகழ்ந்த இச் சிறுநிகழ்ச்சிக்குப் பின் அவளும் நீலலோசனனும் வழிச் செல்கையில், சிறிது நேரம் அவள் முகம் அப்புறமாகவே திரும்பி இருந்தது. இந்த நேரத்திற்குள் அவள் தன் முகச்சாயலை அமைதிப்படுத்திக் கொண்டாள்--தன்னையுந் தானே திடப்படுத்திக் கொண்டாள். இனி எப்படி நடந்து கொள்வதென்றும் தன் மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டாள்; ஏனெனில், உடனே ஏதும் அபாயம் நேராதென்று கண்டறிந்தாள்: அந்தச் சிறுபட்டிக்காடு இப்போது அருகாமையில் வந்து விட்டது; தன் தோழனும் அவன் துணைவரும் தனக்குந் தன் பாங்கிமார்க்கும் விரைவில் தீங்கு செய்யக் கருதியிருந்தார்களாயின், ஊருக்கு நெடுந் தூரத்தில் தனிமையிலிருந்த வெளிகளிலே அவ்வாறு செய்திருப் பார்களன்றோ?*

*அவள் கலக்கமில்லாத குரலிலே, "ஐயன்மீர்! வாருங்கள், நாம் குதிரையை முடுக்கி முன் விடுவோம்!" என்றுரைத்தாள். அதற்கு நீலலோசனன் "நங்கைமீர், தங்கள் விருப்பப்படியே," என்று நேசநயம் மிக்க மகிழ்ந்த குரலிற் கூறினான்; ஏனென்றால், குமுதவல்லி இப்போது தன்னைப்பற்றிக் கொண்ட திகிலான எண்ணத்தை அவன் சிறிதும் அறியான்.*

*சில நிமிஷங்களுக்கெல்லாம் அச்சிறிய ஊர்போய்ச் சேர்ந்தனர். அவ்வூரில் தட்டுக்கெட்ட ஒரு சத்திரமும் ஆறு ஏழைக் குடிசைகளும் சிறிது விலகியிருந்த ஒரு நல்ல வீடும் இருந்தன. அந்த வீட்டுக்கு உடையவன், அடுத்திருந்த ஒரு பஞ்சாலைக்குச் சொந்தக்காரனான பணக்கார வியாபாரி ஒருவன். அந்தச்*

சத்திரத்தண்டை போனவுடனே, குமுதவல்லி அந்த நல்ல வீட்டுக்கு உடையவர் தனக்குந் தன்தோழிப் பெண்கட்கும் விடுதி தந்து உதவக்கூடுமோ என்று கேட்டாள். அச்சமயத்தில் அப்பஞ்சாலைத் தலைவன் அச்சத்திரத்திற்கு எதிரிலே நின்று கொண்டிருந்தான்; குமுதவல்லி குறிப்பிட்ட வீட்டுக்காரன் தானே என்று அவன் அறிவித்ததன் மேல், நீலலோசனன் அந்நங்கைக்கும் அவள் தோழிமார்க்கும் உதவியாகத் தானே அவனைப் பரிந்து கேட்டான். அந்த வீட்டுக்காரன் வெடு வெடுப்பான குணமும் லோபத்தன்மையும் உடையவன். அவன் சிறிது தாமதித்தான்; நீலலோசனன் அவன் இயற்கை இன்னதென உணர்ந்து அவன் காதண்டை போய், "இந்த நங்கைக்கும் அவர் தோழிமார்க்கும் செய்யும் உபசாரத் திற் பிசுனத்தனம் பண்ணாதீர்; அதற்காக நீர் பெற்றுக் கொள்ளும் நன்கொடை தாராளமாகவேயிருக்கும்." என்று மெதுவாகச் சொன்னான்.

இங்ஙனஞ் சொல்லவே எல்லா ஏற்பாடும் ஆயிற்று; குமுதவல்லி கேட்டபடியெல்லாம் செய்ய அவ்வீட்டுக்காரன் மிக அன்போடு இணங்கினான். இன்னுந் தன் மனத்துள் நிகழ்வது இன்னதென்று சிறிதும் புலப்படுத்தாமல், பெருமுயற்சியோடு வெளிக்கு இன்சொல்லும் நன்னடையுங் காட்டிக் குமுத வல்லியானவள் நீலலோசனனிடம் விடை பெற்றுக் கொண் டாள்,--அங்ஙனம் விடைபெறும் பொழுது அவன் சொல்லிய படியே மறு நாட்காலையில் ஒன்று சேர்ந்து பயணம் போவதாக இணங்கி மறுமொழி கூறினாள். அவ்வாறே அவள் பாங்கிமாரும் சிறிது நேரத்திற்கென்று தாம் எண்ணிய விடையைக் கேசரி வீரனிடத்தும் வியாக்கிர வீரனிடத்தும் பெற்றுக் கொண் டார்கள்; பௌத்தர் மூவரும் அந்தங்கெட்ட அச்சத்திரத்திலே விடுதி கொள்ளச் செல்கையில், குமுத வல்லியும் அவள் பாங்கிமாரும் அவ்வியாபாரியின் பின்னே அவன் வீட்டுக்குப் போகும் ஒரு சந்தின் வழியே சென்றார்கள்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் வீட்டண்டை போய்ச் சேர்ந்தார்கள். உடனே குமுதவல்லி, " பெண்காள், என் பிறகே வாருங்கள்! உங்கள் உயிர் பிழைக்க ஓடிவாருங்கள், ஓடி வாருங்கள்!" என்று உரத்துக்கூவித் தன்குதிரையை விரைந்து பறக்க முடுக்கினாள்.

அவள் வாயிலிருந்து பிறந்த புதுமையான சொற்களாலும், விவரந் தெரியாமல் அவள் செல்லும் மிக்க விரைவினாலும் மனந் திகைத்துத் திகில் கொண்டார்களாயினும், சுந்தராம்பாள், ஞானாம்பாள் இருவரும் தம்மையறியாமலே அவள் செய்த படியே செய்து தாமும் பின்றொடர்ந்தார்கள்.

அந்த முதியவியாபாரியோ--அவர்களைப் பின்னே பார்த்துக் கொண்டு இமையாக்கண்களோடும் திறந்த வாயோடும் ஒன்றும் பேசாமல் வியப்புற்று நின்றான்; அவர்கள் தன்பார்வைக்கு எட்டாமல் மறைந்து போன பின்னுஞ் சில நிமிஷங்கள் அவன் அவ்வாறே நின்றான்.

## அதிகாரம் - 8

# மலையநாட்டு விதவை

*தன் தோழிப்பெண்கள் இருவரும் பின்னேவரக் குமுதவல்லி விரைந்து ஓடினாள்,--மூவரும் மிக்க விரைவோடு செல்லும்படி தங்குதிரைகளை முடுக்கினார்கள்; அந்தச்சந்தின் வழியே அவர்கள் வேகமாய்ச் சென்ற போது அருகே யாராவது இருந்து பார்த்தால், அப்பெருமாட்டியும் அவள் தோழிப் பெண்களும் குதிரையேற்றத்திற் காட்டிய திறமையை அவர் வியவாமல் இருக்க முடியாது. நாகநாட்டரசி தாம் படுமோசத்தில் அகப்பட்டுக் கொண்டதாக எண்ணிய இடத்தி னின்றும் பறந்து வந்து, இன்ன வழியாய்த் தாம் போவதென்று சிறிதும் எண்ணாமல் அவர்கள் போயினார்கள்; மற்றொரு சந்துவழி வந்து குறுக்கிடும் ஓர் இடத்தண்டை வந்தபிறகு, தம்மைப் பின்றொடர்ந்து வருவார் உண்டானால் அவர்கள் தம்மை வந்து பிடித்துக் கொள்ளுவதற்கு இடம் இல்லாதபடி குமுதவல்லி வேண்டுமென்றே மறைவான வழி ஒன்றில் திரும்பிப்போனாள். கடைசியாக, அன்று பகல் நல்லஊழியஞ் செய்த அக்குதிரைகளானவை தமக்குண்டான வருத்தத்தை இனிது புலப்படுத்திக் காட்டவே குமுதவல்லி தன் குதிரைக் கடிவாளத்தை இழுத்துப் பிடித்தாள்--அதைப் போலவே அவள் பாங்கிமாருஞ் செய்தார்கள். சில நிமிஷங்களில் குதிரையின் நடையானது இன்னுங் குறைந்து மெது நடை யாயிற்று; விரைந்தோடி வந்தமையால் முன்னே தெரிவிக்கக் கூடாத விவரங்களை குமுதவல்லி இப்போது சொல்லுவதற்கு ஒழிவு பெற்றாள், அவள் பாங்கிமாரோ அவற்றை எப்போது அவள் சொல்வாள் என்று ஆத்திரத்தோடு எதிர்பார்த்திருந் தார்கள்.*

*“பெண்காள், நான் இங்ஙனஞ் சடுதியில் வரலானதைப் பற்றி நீங்கள் திகைப்புந் திகிலும் அடைந்தீர்கள் என்பதில்*

ஐயமில்லை. ஆனால், நீங்கள் தப்பிப்பிழைத்த ஆபத்தைப் பற்றிச் சிறிதும் அறிய மாட்டீர்கள். திடுக்கிடும் செய்தி ஒன்றைக் கேட்கச் சித்தமாயிருங்கள். முதன் முதல் பேர் ஆண்மைத் தொழிலோடு கூடிய நடையுடைவன்போற் காணப்பட்ட வனும்--உங்களால் அவ்வளவு வியந்து சொல்லப்பட்ட நல்லழகு வாய்ந்தவனும்--நம்பிக்கையை வருவித்தற்கு கூரிய சொல்லுஞ் செயலுங் காட்டினவனும் ஆன அந்த இளைஞன், சிறிது நல்ல நிலைமை யிலுள்ள பௌத்த கனவான் போல் உடை அணிந் திருந்த அந்த இளைஞன் சுருங்கச் சொல்லுங்கால், பயங்கரமான நல்லானைத் தவிர வேறு பிறன் அல்லன்.'' என்று குமுதவல்லி மொழிந்தாள்.

சுந்தராம்பாளும் ஞானாம்பாளும் தாம் அடைந்த ஆச்சரியத்தைப் பற்றி ஒருசொற்கூடப் பேச வலியற்றவர் களானார்கள்; ஏக்கத்தினாலும் திகிலினாலும் பேச்சு இழந்து இருந்தார்கள்.

“ஆம், பல நாழிகைகளாக வழித்துணை கொண்டு நாம் பயணஞ் செய்துவந்த அவ்விளைஞனே நேற்றிரவு நம் அறையி னுள்ளே முகம் மறைத்து வந்து என் மோதிரத்தைக் கைப்பற்றிப் போனவன்!'' என்று பின்னுந் தொடர்ந்து பேசினாள் குமுதவல்லி.

“ஆ! தெய்வமே!'' நேசப்பெருமாட்டி, இதனை நீங்கள் எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?'' என்று சுந்தராம்பாள் இப்போது பேசும் உணர்ச்சி வந்து வினவினாள்.

அதற்குக் குமுதவல்லி தாம் இரண்டு பிச்சைக்காரர்களைச் சந்தித்ததையும், பௌத்த இளைஞன் தன் பணப்பையி லுள்ளிருந்தவற்றிற் சிலவற்றைத் தற்செயலாய்க் கீழ் விழுத்தி விட்ட செய்தியையும் தன் தோழிமார்க்கு நினைப்பூட்டினாள்.

“அப்போது தான் நான் என் மோதிரத்தைக் கண்டு கொண்டேன் மாதர்காள், உடனே யான் அதிசயமுந் திகிலுங் கொண்டேன் என்பதை நீங்களே எளிதில் எண்ணிக் கொள்ள லாம். நான் மோதிரத்தைக் கீழ்க்கண்ணாற் பார்த்தது பற்றி நல்லான் ஐயங்கொள்ளாமல் இருக்கும்பொருட்டு என் முகத்தை விரைவில் அப்புறமாகத் திருப்பிக் கொண்டேன்; அவனது பிந்திய நடவடிக்கையினால்--அது முன்போலவே செவ்வையாய் இருந்தது--யான் அதனைப் பார்க்கவில்லையென்று நம்பி அவன் தன்னுள் எண்ணி மகிழ்ந்து கொண்டான் என்பதைத் தீர

அறிந்தேன்." என்று குமுதவல்லி தொடர்ந்து உரைத்தாள்.

"அவ்வளவு இளம்பருவம் உள்ளவன் அவ்வளவு பெருங் குற்றத்தைச் செய்தானென்று நினைக்க மனந்திடுக்கிடுகின்றதே!" என்றாள் சுந்தராம்பாள்.

"நாம் அவன் ஆட்களின் வழித்துணையாற் பத்திரமா யிருந்தோமென்று உணர்ந்தோமே" என்று கூறினாள் ஞானாம்பாள்.

"அந்த மோதிரத்தைப் பற்றிய நிகழ்ச்சிக்கு முன்னே நடந்த ஒரு சிறுகாரியம் உண்டு; அது நிமிஷநேரம் எனக்குப் புதுமை யாகப்பட்டது. அந்த பாசாங்குக்காரப் பௌத்தனுடன் யான் பேசிக் கொண்டிருக்கும் போது, நல்லானைப் பற்றி ஏதோ ஒன்று சொன்னேன்; அப்போது அவன் புதுமையான மாதிரியாய் ஓர் ஓசையிடவே, யான் அவனை உற்றுப் பார்க்க வேண்டிய தாயிற்று. அவன் பேர்பெற்ற கள்வர் தலைவனாகத் தான் இருக்க கூடுமென்று அப்போது யான் சிறிதும் ஐயங்கொள்ளவில்லை. ஆ! அவன் என்னைப் பொய்த்துணை காட்டி ஏமாற்றப் பார்த்தான் என்பதை இப்போது நினைவு கூர்கின்றேன்!--நல்லா னைக் குறித்து என்னை அஞ்சவேண்டாமென்று கற்பித்தான்; என் பெண்களே, இன்று பகலில் நமது பிரயாணத்தில் அச்ச முறுத்தும் அக்கொள்ளைக்காரனைப் பற்றி நீங்கள் திகில் கொள்ளத்தக்க எதனையும் உங்களுக்கு யான் சொல்லாம லிருந்து விட்டேன் என்பதை யான் அவனுக்குத் தெரிவித்த போது அவன் யான் செய்தது நல்லதென்று இசைந்தும் பேசினான். இனி அவ்வுண்மையை உங்களுக்கு மறைத்து வைக்க வேண்டிய தில்லை;--அவ்வுண்மையாதெனில், சென்ற இரவு நாம் உறங்கியதும், எனது மோதிரக்கொள்ளை நடந்தேறியதுமான அந்தச் சத்திரத்திற்கு உரியவனால் யான் பலவகையாலும் எச்சரிக்கப்பட்டிருக்கிறேன். ஆம்--அதுமாத்திரமன்று, நல்லானு டைய உருவ அடையாளங்களைப் பற்றியும் போதுமான அளவுக்குத் தெரிந்து கொண்டேன்; அதனால் அவன் தற்செயலாகக் கீழே விழுத்திய மோதிரத்தைக் கீழ்க்கண்ணாற் பார்த்த அப்பொழுதே அவன்றான் என் பக்கத்திற் குதிரை மேல் வந்தவனென்று தெளிய உணரலானேன்." என்று குமுதவல்லி மொழிந்தாள்.

"நேசப்பெருமாட்டி! நீங்கள் ஏன் இந்தச் செய்தியை அந்தப் பஞ்சாலைக்காரனுக்குச் சொல்லாமல் இருந்து விட்டீர்கள்?" என்று சுந்தராம்பாள் வினாவினாள். "அவன் தன்னுடைய ஆட்களை ஒன்று சேர்த்துத், தன் குற்றங்களுக்கு உரிய தண்டனையைப் பெறுங் குற்றவாளியாகக் கொடிய நல்லானைச் சிறை வைத்திருப்பானே."

"ஆ, சுந்தராம்பாள்! சடுதியிற் பறந்தோடின என்னைப் பின்பற்றி வந்த நேரத்தில் நம்மைச் சூழ்ந்திருந்த ஆபத்துகளை எல்லாம் இன்னும் நீ உணர்ந்தாயில்லையே. அந்த வியாபாரி நல்லானுடைய ஆள் என்பதற்கு ஐயமே இல்லை;-- அல்லது எப்படியோ அவனுடன் சேர்ந்து புனைசுருட்டுப் பண்ணுகிற வனாயிருக்க வேண்டும். அந்தச் சிறிய ஊரிலுள்ள சிறு சத்திரத்தண்டை போனதும்-- அங்கே சிறிது தூரத்தில் நாம் பார்த்த நேர்த்தியான கட்டிடத்திலே நாம் தங்குவதற்கு இடங் கிடைக்கக் கூடுமாவென்று யான் கேட்டதும்;--அப்போது அம் முதிய வியாபாரி தானே அவ்விடத்திற்கு உரியவன் என்று முன் நின்று அறிவித்ததும்,--அந்தப் போலிப்பௌத்தன் எனக்காகத் தாராளமாய்ப் பரிந்து பேசுவது போல உடனே அவனிடஞ் சென்று கேட்டதும் எல்லாம் நீ கவனித்திலையோ? இன்னும், அப்போது அம்முதுவியாபாரி, துணையற்ற பெண்கள் மூவருக்குந் தீங்கு இழைத்தலைப் பற்றி .இரக்கங் கொண்டவ னாய்ப் போலும் சிறிது தடங்கி நிற்க, அதற்குள் நல்லான் தலைகுனிந்து ஏதோ அவன் காதில் முணுமுணுத்ததும், அதனால் உடனே அவ்வியாபாரி தான் நடந்து கொள்ள வேண்டிய வகை இன்னதென நிச்சயிக்கப்பட்டதும் நீ காண்கிலையோ?" என்று குமுதவல்லி மறு மொழிந்தாள்.

"ஆம், பெருமாட்டி, இவையெல்லாம் கவனித்தேன்." என்று கூவினாள் சுந்தராம்பாள்.

"நானும் அப்படியே கவனித்தேன்." என்றாள் ஞானாம் பாள். "ஓ, சமயகுரவர்களே! ஆனால், நான் அவற்றைச் சிறிதுஞ் சந்தேகிக்கவில்லையே!--"

நடுவே குமுதவல்லி, மாந்தர்காள், நாம் மிகவும் பத்திரமாய் இருக்கின்றோம் என்று நினைத்திருக்கும் போதே, நாம் உண்மையிலே அபாயங்களாற் சூழப்பட்டிருக்கும் வகையாய்

இந்த உலகத்திலே எப்படி நேர்கின்றது பாருங்கள்! நம்மைக் குறித்துக் கள்வர் கூட்டத் தலைவனுடைய நோக்கம் எதுவாயிருக்கலாம் என்று என்னால் அளவிடக்கூடவில்லை: ஆனால், அவன் ஏதோ மிகக் கொடியதும் துயரமுள்ளதுமான இரண்டகஞ் செய்ய நினைத்தான் என்பதிற் சிறிதுஞ் சந்தேகம் இல்லை என்றாலும், நாம் தப்பி வந்ததைப் பற்றி நாமாக மகிழ்தலே போதும்; பெண்காள், இப்போது நாம் இவ்விரவு தங்கியிருப்பதற்கு ஓர் இடம் எங்கே தேடுவதென்று சிந்திக்க வேண்டும்." என்றுரைத்தாள்.

மாலைக்காலத்து இருள் வரவரச் சூழ்ந்து வரலாயிற்று--மசங்கற்பொழுது நாகநாட்டரசியையும் அவள் பாங்கிமார் இருவரையும் சூழ்ந்து கொண்டது;--இவர்கள் சென்ற சிறு வழியானது வீடுகள் காணப்படாத ஒரு பிரதேசத்தின் ஊடே செல்லுவதாகத் தோன்றியது. குதிரைகளோ ஒவ்வொரு நொடியும் தமது இளைப்பைப் பலபல அடையாளங்களாற் காட்டுவனவாயின; அந்த நங்கையும் அவள் பாங்கிமாரும் அவ்வாறே மிகவுங் களைப்படைந்தனர். ஆகவே, அவர்கள் மெதுவாகச் செல்லலாயினர்; சிறிது நேரத்துள் அச்சிறுவழியானது ஓர் அகன்ற பாதையிற் போய்ச் சேர்ந்தது. அவர்கள் நீலகிரி நகரத்திற்கு நெருங்கிச் செல்லுகின்றார்களோ அல்லது தாம் செல்ல வேண்டிய அதற்கு வரவர அகன்று விலகிப் போகின்றார்களோ என்பதைச் சிறிதும் அறியாதவர்களாய்க் கெடுதிக்குத் துணிந்தே அப்பாதை நெடுகச் சென்றார்கள். என்றாலும் அவ்வளவு நல்ல பாதையின் கிட்ட எங்கேனும் சில குடியிருப்புகள் இருக்க வேண்டுமென்றும், அல்லது அது விரைவில் ஓர் ஊர்க்காயினும் நகரத்திற்காயினுங் கொண்டு போய் விடுமென்றும் உறுதியாக எண்ணினார்கள்.

உடனே சிறிது தூரத்தில் ஒரு விளக்கு வெளிச்சம் மினுக்கு மினுக்கென்று தோன்றக் கண்டார்கள். சில நிமிஷங்களில் ஒரு குடியானவள் மனையகம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே தனக்கும் தன் பாங்கிமார்க்கும் அவ்விரவு தங்குவதற்கு இடம் உதவும்படி குமுதவல்லி கேட்டாள்; தனது தோற்றத்தினால் அவ்விடத்திற்கு உரியவள் என்று காணப்பட்ட நடுத்திர வயதினள் ஆன ஒரு பெண்பிள்ளை அவ்வேண்டுகோளுக்கு அன்புடன் இசைந்தாள். கூலியாள் ஒருவன் அழைக்கப்பட்டான்.

களைப்படைந்த குதிரைகள் லாயத்துக்குள் கொண்டுபோகப் பட்டன; தாழ்மையானதாயிருந்தாலும் நேர்த்தியான அம் மனையின் கூடத்து அறையிலே அங்ஙனமே களைப்புற்ற அப்பிரயாணிகளுக்குத் திறமான சாப்பாடு கொண்டு வந்து பரிமாறப்பட்டது.

குமுதவல்லி எண்ணியபடியே அன்புடன் வந்து முதலிற் கதவு திறந்த அப்பெண்பிள்ளையே அவ்விடத்திற்கு உரியவள் என்று தெரிந்தது, அவள் ஒரு மலையநாட்டாள் ஆகையால், அவளிடத்தில் இன்னும் பேர் அழகின் அடையாளங்கள் இருந்தன; ஆனாலும் அவள் முகத்திலே கவலைக்கும் துன்பத்திற்கும் உரிய குறிகள் புலப்பட்டன. அவளோ ஒரு விதவை; முறையே பதினேழு பத்தொன்பது வயது உள்ளவர் களாய்ப் பலகைமேல் உணவு கொண்டு வந்து பரிமாறிய இரண்டு இனிய அழகு வாய்ந்த பெண்கள் இவளுக்குப் புதல்விகள். அவள் கணவன் தன் வயலிலே நடந்து கொண்டு போம்பொழுது ஒரு கரும்பாம்பினாற் கடிக்கப்பட்டுச் சில ஆண்டுகள் முன்னே இறந்து போனான்; அது முதல் அந்தக் காணியைப் பராமரிக்குங் கடமை முழுதும் அவ்விதவையின் மேலதாயிற்று. ஆயினும், அவள் அதனைப்பயன் படும்படி நடத்திவந்தாள்; பொருள் அளவில் அவள் குறை சொல்லு வதற்கு ஒன்றும் ஏதுவில்லை.

உரையாடிக் கொண்டிருந்தபோது நாகநாட்டரசி அவ்வன் புள்ள விதவையைப்பற்றித் தெரிந்த விவரங்கள் இவ்வளவே. தன்னைப்பற்றியோ குமுதவல்லி தான் நீலகிரி நகரத்திற்குப் பயணம் போவதாகவும், நான் வழிதப்பி வந்து விட்டடதனாலே தானுந் தன்தோழிமாரும் இவ்வுதவியைப் பெற வேண்டிய தாயிற்று என்றும் மாத்திரங்கூறினாள். அவள் சிறிதேனும் நல்லானைக் குறித்துப் பேசவில்லை; ஏனென்றால், பயங்கரமான நல்லானால் தான் துன்புறுத்தப்பட்ட செய்திகளை அவள் அவ்வீட்டுக்காரிக்கு எடுத்துச்சொன்னால் அக் கொள்ளைக் காரர் தலைவன் தன்னிடத்தில் புதுவிருந்தாய் வந்த அவளைத் தேடிவருவான் என்னும் அச்சத்தினால் இவ்விதவை தம்மை இங்கே தங்க விடமாட்டாள் என்று அஞ்சினாள். இந்த மலையநாட்டு விதவையிடமிருந்து குமுதவல்லி தெரிந்து கொண்ட ஒரு செய்தி மனத்திற்குத் தளர்ச்சியைத் தருவதாயிருந் தது. அது, தான் நீலகிரிக்கு முப்பத்தைந்து மைல் தூரத்தில் இருப்பதாகத் தெரிந்ததே; ஆகவே, தானும் தன் தோழிமார் களும் அப்பஞ்சாலைத் தலைவன் வீட்டுவாசலிலிருந்து ஓடிவந்தமை

யால், அப்போது தமக்கும் அம்மலையநாட்டுத் தலைநகருக்கும் இடையிலிருந்த தூரத்தைத் தாம் இப்போது பின்னும் மிகுதிப்படுத்திக் கொண்டார்கள் என்பது புலனா யிற்று. ஆனாலும் இப்போது அதற்காகச் செய்யக் கூடியது ஒன்றுமில்லை; - மெய்யாகவே குமுதவல்லி தாம் செவ்வையாகத் தப்பிவந்ததை எண்ணுமிடத்து இதற்காக மனம் வருந்தலாகா தென்று உணர்ந்தாள்.

நாகநாட்டரசியானவள் அவ்வீட்டுக்காரியின் முகத்திலே காணப்பட்ட கவலை துயரங்களின் அடையாளத்தைக் கவனி யாமல் இருக்கவில்லை; தன் கணவனை இழந்த வருத்தத்தின் வேறான ஒரு துயரத்தோடு அவை இயைந்தனவாய் இருக்க வேண்டுமென்று அவள் எண்ணாமல் இருக்கக்கூட வில்லை; ஏனென்றால், கணவனை இழந்ததால் உண்டான துயர மானது இவ்வளவு காலத்திற்குப்பிறகு கனிந்து தேவவிசுவாச மாக அமைதி பெற்றிருக்குமென்று மனோபாவனை செய்தாள். அவளுக்கு இயற்கையாக உள்ள மேன்மைக் குணமானது அவள் அதனைப்பற்றி ஏதுங் கேளாமல் தடை செய்தது: ஆனாலும் அடிக்கடி அந்நல்லவளை இரக்கத்தோடும் பரிவோடும் மனத்திற் சிந்தித்தாள். இப்போது - இம்மலையநாட்டு விதவையின் புதல்விகள் அவ்வீட்டினுள்ளே சிறந்த படுக்கையறையில் குமுதவல்லி, சுந்தராம்பாள், ஞானாம்பாள் மூவருக்கும் படுக் கைக்கு வேண்டிய வசதிகளை ஒழுங்குபடுத்தும் பொருட்டுக் கூடத் தறையினின்றும் போனவுடனே - இந்த நல்ல கைம் பெண்ணா னவள் தானே தன் துயரமான தோற்றத்தைப் பற்றி விவரித்துச் சொல்லப்புகுந்தாள்.

இப்போது நம்மை வீட்டுப்போன அருமையான அவ் விரண்டு பெண்கள் மாத்திரமே எனக்குக் கடவுள் அருள் பண்ணின பிள்ளைகள் அல்லர். இரண்டு ஆண்டுகளாக எங்களுடன் இல்லாமலிருக்கிற மற்றொரு பெண்ணும் உண்டு." என்று சொல்லும்போதே அக்கைம்பெண் அழுதாள்.

"அப்பெண் உண்மையில் இறந்துபோயிற்றோ?" என்று குமுதவல்லி இரக்கம் நிரம்பிய மெதுவானகுரலிற் சொன்னாள்: இதுபோல் இரக்கமானது இசையின் இனிமை கலந்த மெது வான குரலிற் சொல்லப்படுதல் என்றும் அரிது அரிது.

"இல்லை, அம்மா, அறிவும் அழகும் மிகுந்த என் **மரகதத் தைக்** கொண்டு போனது மரணம் அன்று. அஃது ஒரு துயரமான

கதை: என்றாலும் அதனை உங்களுக்குச் சொல்லு கிறேன். மரகதம் என் பெண்மக்கள் மூவரில் ***மூத்தவள்;*** அவள் வயது - இன்னும் அவள் உயிரோடு இருந்தால் - இப்போது இருபத் தொன்று ஆகும். ஒருவரைப் புகழ்ந்துபேசுவது எனக்கு இயற்கை அன்று: ஆனாலும், உண்மையைச்சொல்லுவது எனக்கு அவசியமாய் இருக்கிறது; இந்தச்சாய்ங்காலம் உங்களை என் கண்கள் காணும் வரையில் இதற்குமுன் என்மரகதத்தைப் போல் அவ்வளவு அழகான ஒரு பெண்ணை நான் பார்க்கவே யில்லை. ஆம்-அவள் அழகாயிருந்தது போலவே கற்பொழுக்கம் உள்ளவளுமாய் இருந்தாள் - பிரியமுள்ள மகள் - அவளை அறிந்தவர்கள் எல்லாராலும் அவள் நேசிக்கப்பட்டாள். அப்படிப்பட்ட களஞ்சியம் போல்வாளைக் கைப்பற்றுதற்கு எல்லாவகையாலும் தகுதியுள்ளவனான இந்நாட்டிற் பணக்கார இளங்குடியனாவன் ஒருவனுக்கு அவளை மணம் பொருத்து வதாக உறுதி செய்திருந்தது. அம்மா! பாருங்கள், என் கணவனை இழந்த பிறகுங் கூட நான் ஆறுதல் அடைவதற்குப் பலவழிகள் இருந்தன. எனக்கும் என் குடும்பத்திற்கும் நல்ல காலம் என்னும்படி பல குறிகளுங் காணப்பட்டன.'' என்று அம்மலைய விதவை விடை கூறினாள்.

இதனை மிகவுங்கவனமாய்க் கேட்டுவந்த குமுதவல்லி ''உங்கள் சொற்களால் எனக்கு முன்னமே தெரிந்தபடி, இவைகள் பிறகு எங்ஙனம் அவ்வளவு முழுதுங்கெட்டுப் போயிருக்கக் கூடும்!'' என்று வினவினாள்.

''அம்மா, அதை உங்களுக்குச் சொல்லுகிறேன்,'' என்று தன் கன்னத்தில் ஒழுகின கண்ணீரைத் துடைத்துக்கொண்டே அம்மலைய விதவை மறுமொழி தந்தாள். ''அம்மா, ஒருகால் உங்களுக்குத் தெரிந்திருக்கலாம், ஆண்டுதோறும் முகமதியர் இரமசான் என்று சொல்லப்படும் சிறந்த ஒரு நோன்பை ஒரு மாதகாலம்வரையில் நோற்றுவருகிறார்களே'' என்று தொடர்ந்து உரைத்தாள்.

''நான் அதனைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கின்றேன்.'' என்று குமுதவல்லி கூறினாள்.

''நல்லது, அம்மா, அந்த இரமசான் நோன்பு நோற்கிற போது - அல்லது அதன் முடிவில் உள்ள ஒரு வழக்கத்தைப் பற்றி நீங்கள் ஒருவேளை தெரியாதிருக்கலாம். அதாவது: எங்கேயாவது அகப்பட்ட அழகில் மிகச்சிறந்த ஒரு கன்னிப்

பெண்ணைத் துருக்கிசுல்தானுக்குக் காணிக்கையாகக் கொண்டு போய் விடுவதே. அதற்காக அடிமை விற்பவர்கள் இரமசானுக் குச் சில மாதங்கள் முன்னாகவே அழகிய பெண்களைச் சாவ தானமாய்த் தேடித்திரிவார்கள். சுல்தானது அந்தப் புரத்திற்குத் தெரிந்தெடுக்கப்படும்படி மற்றவர்களைப் போட்டி யில் பின்னிடச்செய்யும். அத்தனை அழகுள்ள ஒரு கன்னியைத் தாம்பெறும் நல்லதிர்ஷ்டம் உடையவர்கள் ஆகலாம் என்பது அவர்களுடைய ஆவல்." என்றாள் அக் கைம்பெண்.

"இஃது எனக்கு நன்றாய் தெரியும். மேற்கணவாய் மலைநாடுகளில் உள்ள அழகிய இளங்கன்னிப்பெண்கள் பலர் துருக்கி தேசத்துப் பெருஞ்செல்வப்பிரபுக்களின் அந்தப் புரத்துக்குட் செல்ல விழைந்து தாமாகவே அடிமை விற்கிறவர்களின் பின்னே **காந்தாந்திநோபிள்** என்னும் நகரத்திற்குப் போவதைத் துயரமுடன் ஒப்புக்கொள்ள வேண்டியதே. இன்னுங் **கொச்சி, குடகு, மலையநாடு, நாகநாடு** முதலிய வற்றிலுள்ள தாய் தந்தை மாரும் தம் புதல்விகளுக்கு உயர்ந்த பதவி தேடிக்கொடுக்கும் விழைவால் அடிமை விற்பவர்களிடம் தாமே தஞ்சொந்தப் புதல்வியரைக் கொடுத்துவிடுவது பின்னும் மிக்க வருத்தத்தோடு சொல்ல வேண்டியதாயிருக்கின்றது." என்று குமுதவல்லி மொழிந்தாள்.

"அவை எல்லாம் அவ்வளவும் உண்மை, அம்மா! இன்னும் என்ன, அடிமை விற்கும் அவர்கள் அடிக்கடி மனிதரைக் கொள்ளை கொண்டு போகுங் கொடியர்கள். அவர்கள் நடவடிக் கைகளால் பறிகொடுத்த குடும்பத்தில் துயரமும் கேடும் உண்டா கின்றன. என் தலைவிதியும் இதுவே, அம்மா." என்று அம்மலைய விதவை மறுமொழி கூறினாள்.

இப்போது அவ்வேழைக் கைம்பெண்ணின் மனத் துயரத் தின் காரணம் இதுவென்று அறிவாளாய்க் குமுதவல்லி. "ஓ, இது கூடுமானதா! உங்கள் அழகிய மரகதம் அங்ஙனம் கொண்டு போகப்பட்டனளா?" என்று கூவினாள்.

"அஃது அப்படித்தான், அம்மா." என்று மறுமொழி சொல்கையிலேயே தேம்பிதேம்பி அழுதாள். "இரண்டு ஆண்டுகளுக்குமேல் ஒருநாள் அடிமை விற்பவன் ஒருவன், ஏராளமான குதிரைச்சாரியுடன் வந்து, உணவு எடுப்பதற்காக

இந்த மனையகத்தில் தங்கினான். அவன் தன்னிடத்தே ஏறக் குறைய ஆறு அழகிய இளம் பெண்கள் வைத்திருந்தான். அவர்கள் எல்லாரும் **காந்தாந்திநோபிள்** நகரத்திற்குப் போவதைப்பற்றி மகிழ்ச்சி நிறைந்தவர்களாய் இருந்தனர். இன்னும் அவன் பார்வைக்குக் கொடுந்தோற்றம் உடையராய்ப் படைக்கலம் பூண்ட ஆறுபேர்களைக் கூட வைத்திருந்தான். என் மரகதத்தின்மேல் அந்தப்பாவி கண்கள் பட்டநாள் பொல்லாத நாள்! இப் பெண் தன் பேரழகின் பொலிவால் துருக்கி சுல்தானுக்குப் பிரியமானவளாய் அவ்வரச நகரத்திலே தெரிந் தெடுக்கப்பட்டு வரப் போகின்ற இரமசான் பண்டிகை முடிவிலே அவருக்குக் காணிக்கையாக விடப்படுவதற்கு இடம் இருக்கிற தென உறுதிமொழி சொல்லி, - ஆகவே அவளைத் தன்னோடு சேர்த்து விடுவதற்கு நான் உடன்பட வேண்டுமென்று முதன் முதல் எனக்கு எடுத்துச் சொல்லத்துணிந்தான். ஆனால் நான் அவன் சொல்லிய ஏற்பாட்டை இகழ்ந்து கோபத்தோடுந் திகிலோடும் மறுதலித்துவிட்டேன். அம்மா, அப்போதுதான் அவன் கைக்கூலியாலும் வேண்டுதலாலும் தான் பெற்றுக் கொள்ளக் கூடாததைப் பலவந்தமாய் அடையலானான். என் கூலியாட்கள் தூரத்தே வயலிலே இருந்தார்கள்: நானோ இங்கே என் மூன்று புதல்விமாரோடும் காவலற்று இருந்தேன். அந்தப்பாவி என்னையும் என் இளைய புதல்விகள் இருவரையும் காலுங் கையுங் கட்டிவிடும்படி தன் ஆட்களுக்குக் கட்டளை யிட்டான்--நாங்கள் எவ்வளவோ தடுத்தும் கெஞ்சியும் அழுதும் அவர்கள் அப்படியே செய்து விட்டார்கள். பிறகு மரகதம் அலங்கோலமாய்த் துன்பத்தால் மெய்மறந்து போக அவளைக் கொண்டுபோய் விட்டனர்! என்னையும் மிஞ்சின என் இரண்டு பெண்களையுங் கட்டவிழ்த்துவிட யாரும் இந்த மனையகத்திற்கு வரும்முன்னே அந்தக் குதிரைச்சாரி மிகநெடுந் தூரம் போயிருக்க வேண்டும்.''

குமுதவல்லி அப்பெண்பிள்ளையின் கையைப் பிடித்து அதனை உண்மையான இரக்கத்துடன் அழுத்திக் கொண்டு, ''ஓ! இவையெல்லாம் கோரமாயிருக்கின்றன! இவ்வாறு உங்கள் மரகதத்தை இழந்து போனீர்களோ?'' என்று சொன்னாள்.

அதற்கு வருத்தம் மிக்க அவ்விதவை, ''எப்போதுமே இழந்து போனேன். தானும் நாங்களும் உள்ளான இப்பொல்

லாத கொள்ளையை அவளுக்கு மணமகனாக நிச்சயிக்கப்பட்டவன் தெரிந்தவுடனே அவன் மனத்தை வருத்திய துன்பத்தை, ஓ! அம்மா நீங்களே எண்ணிப் பாருங்கள். என் மரகதத்தினிடத்திலே அவனுக்கு இருந்த உண்மையான பற்றுதலுக்கு ஓர் அடை யாளம் உங்களுக்குச் சொல்லுகிறேன். அந்தக் குதிரைச்சாரியைப் பின்றொடர்தற்காக அவன் ஆயுதம் பூண்ட தோழர் கூட்டத் தோடு புறப்பட்டான்: ஆனால் அதைப்பற்றி அவன் ஒரு செய்தியும் பெறக்கூடவில்லை--அவன் **காந்தாந்திநோபிள்** நகரத்திற்குப் பயணம் புறப்பட்டுப் போனான். ஆனால் பலவகைப்பட்ட இடுக்கண்களும் அபாய சம்பவங்களும் அவனை வழியிலே தடங்கல் பண்ணின; ஆகையால் அவ்வரச நகரத்திற்கு மிகவும் காலம் தாழ்த்துப் போனான். இரமசான் பண்டிகை முடிவு பெற்றது--வழக்கப்படி திருவிழாக்களும், களியாட்டுகளும், வாண வேடிக்கைகளும்., சிறந்த ஊர்கோலங்களும் அதனைப் பின்றொடர்ந்து நடந்தன. கடைசி யாக நரபலியும் நடந்தேறியது; முந்நூறு அழகிய பெண்கள் நடுவிலே என்னுடைய மரகதம் சுல்தானுக்குக் காணிக்கையாகச் செலுத்தப்படும் நிகரற்ற அழகிய மணியாய்ப் பொறுக்கி எடுக்கப்பட்டாள். அவ்வேழை இளம் பையன் நெஞ்சம் உடைந்த வனாய்க் காந்தாந்திநோபிளை விட்டு வந்தான்; உரிய காலத்தே தன் வீடு வந்து சேர்ந்தான்--ஆனால், ஐயோ முன்னிருந்ததற்கு அவன் வடிவம் எவ்வளவு வேறுபட்டுப் போனான். அம்மா, நான் அவனை அடிக்கடி பார்க்கிறேன்: அனால் அவன் திரும்பி வந்தது முதல் அவன் வாயில் ஒரு புன்சிரிப்பாயினும் வர நான் பார்க்கவில்லை. தானே இயங்கும் ஆற்றல் வாய்ந்த மெய்யான உயிர் ஒன்றும் இல்லாத ஓர் இயந்திர சூத்திரத்தால் நடைபெறும் இயந்திரம் போல அவன் தன் அலுவல்மேற் போகிறான். என்மகள் சுல்தான் மனைவி யாகியிருக்கலாம் என்பதில் தட்டில்லை; ஆனால், ஐயோ! இந்நேரம் அவள் மனம் முறிந்து போகா விட்டாலுங் கூட, வெளிமினுக்கான துயரநிலைமை யிலே தான் அவள் இருக்கின் றாள் என்று எனக்குத் துணிவாய்த் தோன்றுகின்றது." என்று கூறினாள்.

"அவளிடமிருந்து உங்களுக்கு ஒரு செய்தியும் வர வில்லையா?" என்று குமுதவல்லி வினாவினாள்.

"ஐயோ, இல்லையே!" என்று அக் கைம்பெண் விடை பகர்ந்தாள். "ஒரு தரம் ஒரு பெண்பிள்ளை காந்தாந்தி நோபிளி லுள்ள அரசன் அந்தப்புரத்திற்குள் நுழைந்து விட்டால், அவளுக்கும் வெளியேயுள்ள உலகத்திற்கும் நடுவிலே நடக்க முடியாத பெருந் தடை உண்டாய் விடுகின்றது. அவள் யார்க்கும் செய்தி அனுப்பவுங் கூடாது -மற்றவர்களிடமிருந்து ஒரு செய்தியும் பெற்றுக்கொள்ளவுங்கூடாது. வேறிடங்களில் தான் விட்டுவந்த **பெற்றோர், உறவினர், நண்பர்கள்** முதலான எல்லாரையும் அவள் ஒழித்துவிடவேண்டும், ஆணையோடு மறுத்துவிட வேண்டும். அவள் சைவசமயியாயிருந்தால் தான் கைக்கொண்ட சமயத்தையுங்கூட விட்டுவிடுதல் வேண்டும். சுருக்கமாய்ச்சொன்னால், அம்மா, அவள் இன்னாரென்பதே தொலைந்து போய் விட்டது; அவளிடத்திற் பற்றுதல் வைத்த வர்கள் அவளைப் பற்றி இனி ஒன்றுங் கேளாமலே போகலாம். என் மரகத்தின் தலைவிதியும் அப்படியே யாயிற்று - அம்மா, இப்போது, என்முகத்தின்மேல் அடையாளங்களாக அவ்வளவு ஆழ்ந்தகோடுகள் அவ்வருத்தத்தினால் எவ்வாறு உண்டாயின என்பதை நீங்கள் அறிந்து கொண்டீர்கள்."

குமுதவல்லியும் அவள் பாங்கிமார் இருவரும் அம்மலைய நாட்டுவிதவை சொல்லிய கதையிலே துயரமும் இரக்கமும் மிகுந்த ஓர் பற்றுதல் கொள்ளப்பெற்றார்கள். அவளை ஆற்று வித்தற்கு அவர்கள் ஒரு சொல்லாயினும் பேச முயல வில்லை. ஏனெனில் அங்கே ஆறுதலுக்கு இடம் ஒன்றும் இல்லை. திரும்ப நன்மையுண்டாமென்று அவர்கள் ஓர் எழுத்தாயினும் சொல்ல வில்லை: என்னை யென்றால், ஆசையே அவிந்து போயிற் றென்றும் அவ் வாபத்தை இனித் திருப்ப முடியா தென்றும் அவர்கள் அறிந்து கொண்டார்கள்.

"இலட்சக்கணக்கான குடிமக்களுக்கு எல்லாம்வல்ல அரசனாயிருக்கும் வல்லமையுள்ள சுலுத்தான் அவர்கள் தாம் இன்பம் நுகர்தற்பொருட்டுத், தாழ்ந்தோராயினும் தம்மோ டொத்த மக்கள் சிலர்மேல் எவ்வளவு பெருந்துயரத்தைச் சுமத்திவிடுகின்றார் என்பதைத் தாம் சிறிதும் நினைக்கின்றார் இல்லையே! இன்னும், அம்மா, அவ்விளவரசன் இன்பத்திற்காக மற்ற நாடுகளில் உள்ள குடும்பங்கள் - என் குடும்பம் ஆக்கப் பட்டது போல்! பாழாக்கப்படுவது பின்னுந் துயர காரியமாய்

*இருக்கின்றதே! இப்படி யிருந்தும், அவர் அமைதியும் .இரக்கமும் உள்ள நல்லமன்னன். என்றும் - அவர் பூத தயையும் அன்பும் நிறைந்தவரென்றும் - தான் அவற்றை நீக்கிவிடப் பிரியமுள்ள வராய் இருந்தும் தன் குடிமக்களின் விசுவாசத் திற்குப் பின்ன மாகும் என்று அஞ்சி ஆசார வழக்கங்கள் பலவற்றிற்கு இடந் தந்திருக்கிறார் என்றும் பேசிக் கொள்ளுகிறார்கள்." என்று அவ்விதவை தொடர்ந்து கூறினாள்.*

*ஓ! அவ்வாறாயின் அவர் வல்லமையால் யாது பயன்? எவ்வளவு நன்மைசெய்யக் கூடுமோ அவ்வளவும் செய்தில ராயின் தான்செலுத்தும் அத்தனைவல்லமையும் என்ன பயனுக்கு? என்று குமுதவல்லி அவ்விதவைக்கு நேர்ந்த இடுக்கணை நினைத்து அருவருப்பு மிக்க குரலிற் பேசினாள்.*

*"அம்மா, பேசாதேயுங்கள்!" என்று அவ்விதவை மறு படியுந் தன்கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, "என் புதல்விகள் திரும்பி வருகிறார்கள், காணாமற்போன அவர்கள் அக்காளைப் பற்றி நான் அவர்களிடம் பேசுவதே இல்லை." என்று உரைத்தாள்.*

*அப்பெண்கள் அங்ஙனமே வந்தார்கள்; குமுதவல்லிக்கும் அவள் பாங்கிமார்க்குஞ் சித்தம் பண்ணப்பட்ட அறைக்கு அவர்களை இப்போது அழைத்துச் சென்றார்கள். அங்கே நாகநாட்டரசியானவள் சிறிது முன்னே தாம் கேட்ட துயரமான வரலாற்றைப்பற்றித் தமக்கு உறக்கம் வந்து கூடும்வரையில் தன் பாங்கிமாரோடு சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்தாள்.*

*காலையில் அவர்கள் அறையைவிட்டு வந்தபோது, அவ் விதவையும் அவள் மகளிர் இருவரும் தாம் செய்தற்குரிய உதவி களைக் கூடுமானவரையில் ஏற்கும் வகையாகச் செய்து கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்:* ***பல திறப்பட்ட உணவு களு.ம், காணியில் விளைந்தனவும், கனிகளும், குளிரப் பண்ணும் பானங்களும் சாப்பாட்டுக்காகப் பலகைமேற் கொண்டுவந்து பரப்பப்பட்டன.*** *குமுதவல்லி, அவ்விதவையி னிடத்துக் கூலிக் காரரா யிருப்போரிற் சிலரை ஆயுதந்தரித்த வழித்துணையாக் கூட்டியனுப்பும்படி கேட்க எண்ணினாள்; ஆனால், அக்கைம் பெண் தற்செயலாய்ப் பேசியதொன்றி லிருந்து அவர்கள் எல்லாரும் தமது விடுமுறை நாளைக் களியாட்டிற் கழிக்கத் தொலைவிலுள்ள ஓரிடத்திற்குப் போயிருக்கின்றார்கள்*

என்று அறிந்து கொண்டாள்; ஆகவே, நீலகிரி நகரத்தை நோக்கிச் செல்லும்வழியில் காணப்படும் கிராமத்திலாவது நகரிலாவது தக்க துணையொன்றைப் பெற்றுக் கொள்ளலாம் என்னுந் தீர்மானத்தினளவில் நாகநாட்டரசி தன்னைத் திருத்திசெய்து கொண்டாள்.

குமுதவல்லியும் அவள்பாங்கிமாரும் தாம் பெற்றுக் கொண்ட அன்பான உதவிக்காக நன்றி மொழிகளும் கடமை களுஞ் சொல்லிவிட்டு, அக்கைம்பெண்ணினிடத்தும் அவள் புதல்விமார் இருவரிடத்தும் விடைபெற்றுக் கொண்டார் கள். உதார குணத்தோடு செய்யப்பட்ட உதவிக்காகக் கைம்மாறு ஒன்றும் அவ்விதவை விரும்பாமலும் எதிர் பாராமலும் இருந்தும், குமுத வல்லியானவள் சமயம் பார்த்து மறைவாய் இரண்டு, வெகுமதிகளை அவ்விரு பெண்களுக்குங் கொடுத் தாள்; - திருப்பவும் இப்போது நமது அழகிய கதாநாயகி தன் அன்புள்ள பாங்கிமாரோடு பயணஞ் செல்ல நாம் காண்கிறோம்.

ஏறக்குறைய அவசியமாய்க் குறிக்கவேண்டிய இரண் டொரு செய்திகளைச் சொல்லவேண்டி யிருந்தும், இதுவரையில் நாம் சொல்லிக்கொண்டு வந்ததை அவற்றிற்கு நடுவே நிறுத்த வில்லை; ஆகையால், இப்போது இடம்பெற்றமையின் அதனைச் சொல்லிவிடுவோம். அப்பஞ்சாலைக்காரன் வீட்டண்டை யிலிருந்து தான் கலவரமாய் ஓடிவந்த பிறகு ஒழிவுகிடைத்தமை யால் குமுதவல்லி இப்போதுதான் பயங்கர நல்லானைத்தவிரப் பிறன் அல்லன்எனத் தீர்மானமாக எண்ணிய அவ்விளம் பௌத்தனுடன் தான் சிறிதுநேரங் கொண்ட பழக்கத்தைப் பற்றிச் சிந்தித்தபொழுது, தான் சிறிதுநேரமே யாயினும் பற்றுதல் வைத்த ஒருவன் அவ்வெண்ணத்திற்கு அங்ஙனம் எள்ளளவேனும் தகுதியில் லாதவனாய்ப் போனதைப்பற்றி மிகுந்த வருத்தங் கொள்ளப் பெற்றாள். **தம் வகுப்புக்குரிய உடம்பின் மிக்க அழகெல்லாம் முறையே ஒருங்கு திரண்டு உருவாகிய இருவர் அங்ஙனந்தமக்குள் ஏதோ அத்தன்மைத் தாகிய பற்றுதல் கொள்ளப்பெறாது ஒருங்கு கூட்டப்படுதல் கூடாதேயாம்** என்பதனை முன்னரே கூறிப்போந்தாம். குமுதவல்லியின் அளவு கடந்த வசீகரத்தினாலும், அமைதியி னாலும், அறிவினாலும் நீலலோசனன் உள்ளத்தில் எழுந்த எண்ணமானது ஏற்கனவே ஏதோ காதலோடு மிகவும் இன்பப்பட்டதொன்றாய் இருந்தது.

ஆனால் அக்கன்னிப் பெண்ணோ மும்முரமில்லாத எண்ணங்களும் விரையாத குணமும் உடையவளாய் இருந்ததனால் சிறிது பற்றுதலுணர்வு மாத்திரங் கொள்ளப் பெற்றாள். தன் புத்தப்புதிய இளம் பருவ உணர்வுகளினிடையே மனித இயற்கையில் நம்பிக்கை கொள்ள விழைந்த ஒருத்திக்கு அந்த நம்பிக்கை, நீலலோசனனிடத்தில் ஆனதுபோல, அவ்வளவு கொடுமையாக அதிர்ச்சி பெறு மானால், அல்லது அழிக்கப்படுமானால் பின்னும் அது வருத்த மாகவேயிருக்கும். ஆகவே, அங்ஙன மானதுபற்றி அவள் புலம்பியது ஒரு வியப்பன்று. பயங்கரமான நல்லான் தன்னோடு வழிப்பயணம் வந்ததைப்பற்றி நினைக் கையில் உண்டான திகிலினும் வியப்பினும் வேறாக, அவன் அத்தனை இளைஞ னாய் வசீகரநோக்கம் வாய்ந்தவனாய் இனிய நடை யுள்ளவனாய் உள்ள ஒருவன் திகிலையுங் கலவரத்தையுந் தரும் செய்கை யுடையவன் ஆயதை நினைக்கும் போது தான் மனவெழுச்சி குன்றுவது ஒரு வியப்பன்று.

இனிக் குமுதவல்லியும் அவள் பாங்கிமாரும் தம் வழியே செல்வதை விடுத்துச் சிறிதுநேரம் படிப்பவர் கவனத்தை மற்ற விஷயங்களுக்குத் திரும்புகின்றோம். இந்த அத்தியாயத்தை முடிப்பதற்கு முன்னே முதலாக நீலலோசனனிடம் திரும்பு வோம்- குமுதவல்லியைப் பிரிந்தபிறகு அவனையும் அவன் துணைவர் கேசரிவீரன் வியாக்கிரவீரனையும் துப்புக் கெட்ட அச்சத்திரத்திலே விட்டு வந்தோம். அப்பௌத்தர் மூவரும் தங்குதிரைகளை லாயத்துக்குள் விட்டபிறகு அத்தனை எளிமை யான அவ்விடத்திற் கிடைக்கக்கூடிய உணவை உண்பதற்கு உட்கார்ந்தார்கள். என்றாலும், நீலலோசனன் சிறிதே உண்டான்- அஃது அம்மிதமான உணவு தனக்குச் சுவைப்படாமையால் அன்று, ஏனெனில் செழுமையான அல்லது சுவைமிக்க உணவிலே அவன் அவா உடையவன் அல்லன்- ஆனால் அவன் உள்ளத்தில் குமுதவல்லியின் அழகிய வடிவம் நிறைந்திருந்த தனாலேயாம். பரவசப்படுத்தும் அத்துணை அரிய அழகினை இதற்குமுன் அவன் கண்கள் எங்கும் பார்த்ததே இல்லை; தன் காதினுள் மெல்லெனப்புகுந்த அல்லது தன் நெஞ்சத்துள் முழுதும் ஆழ இன்னிசை பொழிந்த அவ்வளவு இசையினினிய குரலினை அவன் இதற்குமுன் கேட்டதே யில்லை. அவர்கள் அந்நாளில் எதிர்ந்த இனிய கூட்டுறவைப்பற்றிக் கேசரிவீரனும்

வியாக்கிரவீரனும் மிகவுந் திருப்தி அடைந்தார்கள்; முந்தின வனான கேசரி வீரன் குமுதவல்லியின் வசீகரத்தால் தன் இளைய எசமானன் நெஞ்சங் கவரப்பட்டது குறித்துச் சிறிதும் துயரம் அடையாமலே இருந்தான்.

ஆனால் திடீரென்று அம்மூவரும் உட்கார்ந்திருந்த அறையின் கதவு அச்சத்திரத்தின் இடத்தின் அளவு நெருக்கமாய் இருந்தமையால் எசமானனும் அவன் ஆட்களும் இருத்தற்குத் தனித்தனி அறைகள் வகுக்கப்படவில்லை- திறக்கப்பட்டது. அப்பஞ்சாலைத் தலைவன் உள்ளே வந்தான்.

"ஐயா, வாலிபரே, நல்ல பெண்கள் கூட்டத்தை என்னு டைய உபசரணைக்குக் கள்ளமாய் அனுப்பினீர்! நான் அடைந்த அவமானத்திற்காக இவ்வூரிலுள்ளஆறு நல்ல தடியர்களை ஒன்று சேர்த்து உம்மையும் உமக்குத் துணைவந்த இவர்களையும் நன்றாய் பழுக்கப்புடைத்தேனானால் என் மனம் ஆறும்1 நீங்கள் நல்லொழுக்கம் உள்ளவர்கள் அல்லரென எனக்குத் தோன்று கின்றது- இல்லாவிட்டால் அந்தமாதும், அவள் பாங்கிமாரும் அங்ஙனம் நடந்திருக்கமாட்டார்களே." என்று அவன் உரத்துக் கத்தினான்.

"அகந்தையுள்ள முதிய மனிதனே! என்ன பேசுகின்றாய்?" என்று நீலலோசனன் துள்ளி எழுந்தான்.

அதற்குப் பஞ்சாலைக்காரன் கடுகடுப்பான பார்வை யோடுங் குரலோடும் என்ன பேசுகிறேனா? அந்தப்பெண்ணும் அவள் தோழிகளும் உங்களையொத்த பௌத்தர்களின் வழித்துணையை வேண்டாமென்று தாம் பிரிந்து போக வேண்டித் தக்க சமயத்தை நாடியதற்கு ஏதோ நல்லகாரணம் இருந்திருக்கவேண்டும்." என்று மறுமொழி புகன்றான்.

"பிரிந்தாபோயினார்கள்?" என்று நீலலோசனன் திடுமெனக் கூவினான். "உன்னுடைய சொற்கள் எதனைக் குறிக்கின்றன?"

"அவர்கள் பறந்தோடிப்போனார்கள்" என்று விடை பகர்ந்தான் பஞ்சாலைக்காரன். வீட்டண்டை போனதும்"

"ஓடியா போனார்கள்?" என்று நீலலோசனன் மறுபடியும் கூவினான்; அங்ஙனமே வியாக்கிரவீரனுங் கூவினான். -

*அப்போது கேசரிவீரன் பேசாதிருந்தாலும் தன்பார்வையில் தானுற்ற வியப்பைப் புலப்படுத்தினான்.*

*"ஆம் - ஓடித்தான் போனார்கள்." என்று திரும்பவும் பஞ்சாலைக்காரன் மறுமொழி கூறினான்: "அங்ஙனம் செய்தற்குத் தக்க காரணம் இருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை."*

*அப்பௌத்த இளைஞன் மிகவும் கலவரம் அடைந்தவனாய் ஓ புத்தரே! சாரணர்களே! என்று ஓலமிட்டான்; "உம்முடைய வெடுவெடுப்பான குணமும் அன்பற்ற செய்கையுமே அந்நங்கையும் அவள் பாங்கிமாரும் அவ்வுதவியை வேறிடத் திற்றேடிப் பெறும்படி அவர்களைத் துரத்திவிட்டன; ஐயமின்றி நீர்தாம் அவ்வுதவிக்கு விலை ஏற்படுத்தி வியாபாரம் பண்ணினீரே!"*

*"உமது விருப்பப்படி புத்தரையாவது அவர் சாரணரையாவது ஆணையிட்டுக் கூப்பிட்டுக்கொள்ளும்; நானோ சைவசமயத்திற்குரிய அடியார்கள் எல்லாரும் அறிய ஆணையிட்டு நீர் பொய் பேசுகிறீர் என்று சொல்லுகின்றேன்! அந்தப் பெண்ணையும் அவள் பாங்கிமாரையும் நான் என் வீட்டுக்கு எவ்வளவோ உபசாரத்தோடு அழைத்துப்போனேன்; போய் வீட்டுக்கதவைத் திறக்க யான் திரும்பவே, அவர்கள் வில்லி னின்று அம்புகள் புறப்பட்டாற்போல விரைந்து ஓடிப் போனார்கள். 'பறந்து ஓடுங்கள் உங்கள் உயிர் தப்ப!' என்னுஞ் சொற்கள் அப்பெண்ணின் வாயினின்றும் ஒலித்தன! அவர்கள் ஓடியேபோனார்கள் - குளம்பின் ஓசையாலல்லாமல் அவர்களுடைய குதிரைகள் தமது அடிநிலத்தே, பாவாதன போல் தோன்ற அத்தனை வேகமாய்ச் சென்றன." என்று பஞ்சாலைக்காரன் திரும்பவும் பேசினான்.*

*அம்மனிதன் வெடுவெடுப் புள்ளவனாய் இருந்தாலும், அவனது உயர்ந்த பெருந் தன்மையைப் பார்க்குமிடத்து அவன் இக்கதையைச்சொல்லிய மாதிரியில் ஏதோ பிசகாத உண்மை ஒன்று உண்டென்பது புலப்பட்டது. அது வல்லாமலும் வெகுமானம் கிடைக்குமென்று உறுதிமொழி சொன்னவுடனே அவன் தான் உதவி செய்வதிற் போதுமான பெருமகிழ்ச்சி காட்டினதை நீலலோசனன் நினைவு கூர்ந்தான்; இப்பொழுதே*

குமுதவல்லியும் அவள் பாங்கிமாரும் ஓடிப்போனமையால் அவன் தான் எதிர்பார்த்ததை இழந்துபோனான். ஆகவே, அப்பௌத்த இளைஞன் அவன் சொல்லிய கதையில் அவ நம்பிக்கை கொள்ளக்கூடவில்லை. - அல்லது அக்கதை வேறு படுத்தியாவது, பிசகாகவாவது சொல்லப்பட்டதென்றும் அவன் எண்ணக்கூடவில்லை. அவன் பஞ்சாலைக்காரனிடம் கடுமை யாகப் பேசிய தனது நடையை மாற்றி, அவனை அழைத்து மேசையின் அருகே இருத்தி நடந்தவற்றைப்பற்றி நுணுக்கமாய்க் கேட்டான்; அப்பஞ்சாலைத் தலைவன். இக்கதையைத் திரும்பவும் அப்படியே மொழிந்தான்; அவன் பின்னுஞ் சேர்த்துக்கூறவேண்டுவ தொன்றும் இல்லை. குமுதவல்லியும் அவள் தோழிமாரும் போய்விட்டார்கள் என்பது தெளிவாகப் பெறப்பட்டது; அவர்கள் அடைந்த பேர் அச்சத்திற்குகாரணம் யாதென்று அவர்கள் ஒருங்கு கூடி ஆழச் சிந்தித்தும் சிறிதேனும் ஊகிக்க வலியற்றவர்களானார்கள்.

மறுநாட் காலையில் அவ்வழகிய நங்கையோடு கூடி மறுபடியும் பயணம் துவங்கக் குறித்த நீலலோசனன் எண்ணம் பாழ்பட்டது; தனது ஆன்ம இன்பத்திற்கு இன்றியமையாத தான ஏதோ ஒன்றைத் தான் இழந்துவிட்டது போலவும் - இதற்குமுன் எங்குந் துலக்கமாய் நகைகொண்டு விளங்கிய ஒரு தோற்றத்தின் மேல் கரிய மேகமானது தனது நிழலை வீசி மறைத்தது எனவும் அவன் எண்ணினான்; அன்றிரவு அப்பௌத்த இளைஞன் துயர் மிகுந்த உள்ளத்தோடு படுக்கைக்குச் சென்றான்.

## அதிகாரம் - 9

# கொள்ளைக்காரன் மனைவி

இப்போது நாம் நல்லானிடம் திரும்புதல் வேண்டும். ஏனெனில், அப்போது நேர்ந்த அச்செயலின் வயணங்களால் நாகநாட்டரசி அவ்வளவு வருந்துதற் கிடமான பிழையெண்ணங் கொள்ளப்பெற்றது இயற்கையே என்றாலும், இதனைப் படிப் போர் உயர்ந்த ஒழுக்கமும் நற்குணமும் வாய்ந்த நீலலோசனனை அக்கொடிய கொள்ளைக்காரனோடு ஒன்று படுத்திய குமுதவல்லியின் பிழையில், சிறிதும் ஒருப்படமாட்டார்களாத லால் என்க.

குமுதவல்லியினின்று அவள் மோதிரத்தைக் கவர்ந்து கொண்டமையால் தன்கருத்து இனிது நிறைவேறியபின் எவ்வாறு நல்லான் சத்திரத்தைவிட்டுச் சடுதியிற்போனான் என்பதைச் சத்திரக்காரன் வாய்மொழியால் நாம் அறிந்து கொண்டோம். இருளனையும் மாதவனையும் தான்விட்டு வந்ததும், நீலலோசனனையும் அவன் துணைவரையும் தவறாமல் சிறைப்படுத்தும் பொருட்டு கோபுரத்திற்குத் தான் விடுத்த தன் கூட்டத்தார் கையில் அவர்கள் சிறைப்பட்ட செய்தியைத் தெரிந்து கொள்ளுதற்கு இப்போது அவன் எதிர்பார்த்ததும், சிலமைல் தூரமுள்ளதும் ஆன ஓர் இடத்திற்கு அவன் விரைந்து குதிரை ஊர்ந்து திரும்பிவந்தான். மாதவன் உடையிற் கொண்ட கோலத்தோடு சிறிது நேரம் இல்லாதிருந்தது, பிறகு தான் இப்போது திரும்பிவரும் இவ்விடத்தில் பௌத்தரைச் சிறை கொண்டு தன் கூட்டத்தார் வந்திருப்பர் என்றும் அவன் எதிர்பார்த்தான்.

இந்த நிமிஷத்தில் கூடாரத்தின் திரையானது அப்புறம் இழுக்கப்பட்டது; மீனாம்பாள் வெளியே வந்தாள்.

"என் மேன்மை மிக்க கணவனே!" என்று கூறிக்கொண்டு நல்லானுடைய மார்பில் மேற் போய்விழுந்தாள்..

"என் அழகிய மீனாம்பாள்! காதலின்மிக்க என் மனைவி" என்று அத்தலைவன் கூவித் தான் காதலிக்கும் அவ்வழகில் சிறந்த மங்கையைத் தன்மார்புற அணைத்துக்கொண்டான். இவ்விரு வரும் பலவாரங்களாகப் பிரிந்திருந்தமையால் இப்போது கூடிய இச்சந்திப்பில் உண்டான பெருங்களிப்பின் கண் ஆழ்ந்தவனாய் அவன் சில நிமிஷநேரம் தன் தந்திரங் களையும் சூழ்ச்சிகளையும் மறந்திருந்தான்.

முதலிற் கிளைத்த அவ்வுணர்வின் கொந்தளிப்புத் தணிந்த வுடனே மீனாம்பாள், "இருளன் மேற் குற்றஞ் சொல்லாதீர். நான் என்னாற் கூடியமட்டும் செய்ததுபோலவே, அவனும் தன்னாற் கூடிய அளவும் செய்தான்; ஆயினும், அவ்விளம் பௌத்தனின் துணைவர்கள் ஏதோ சமுசயப்பட்டார்கள் - அதனால் எல்லாம் பிசகிப் போயின." என்று மொழிந்தாள்.

நல்லான் தன் தோளின் மேற் சாய்ந்து கொண்டிருக்கும் அழகிற் சிறந்த தன் மனையாளோடும் கூடாரத்துக்குப் போயி னான்; அவர்கள் இரட்டுத்துணி மேல்மறைப்பின் கீழ் உட்கார்ந் தார்கள். காப்பிரிப்பெண்ணும் மலைநாட்டுப் பணிப்பெண்ணும் சிறிதுதூரத்தில் ஊன்றப்பட்டிருந்த வேறொரு கூடாரத்தில் இருந்தார்கள். அதனால் நல்லானும் மீனாம்பாளும் ஒருங்கு தனியே யிருக்க இடம் பெற்றனர்.

"இப்போது நடந்தவற்றையெல்லாஞ் சொல் என் மீனாம்பாள்." என்றான் கள்வர் தலைவன்.

அங்ஙனமே அவள் நீலலோசனனிடத்தும் அவன் துணைவர்களிடத்தும் தான் செய்த துணிகரச் செயல்களை விரித்துரைப்பாளானாள்; அங்ஙனம் சொல்லுமிடத்துத் தான் அவ்விளம் பௌத்தனிடத்து அளவுக்கு மிஞ்சிக் காட்டிய காதலினிமைகள் அவ்வளவும் மெதுவாகச் சொல்லாது விட்டு நெகிழ்ந்து போயினாள். பிறகு அவள்தான் வியாக்கிரவீரன் கையால் அடைந்த கிருத்திரமங்களைச் சொல்லவந்தபோது அவன் தன்னைக் காலுங்கையுஞ் சேர்த்துக்கட்டிச் சாய்வணை யோடு எங்ஙனம் பிணித்து முடிந்தான் என்பதை எடுத்துக் கூறினாள்; - இதனைக் கேட்டதும் நல்லான் "ஒரு பௌத்தனு

டைய நாய்" என்று தான் பெயரிட்ட நீலலோசனன் இளைய துணைவன் மேல் பயமுறுத்துங் கொடுஞ் சொற்களையும் பழிவாங்கும் ஆணைமொழிகளையும் எடுத்துரைத்தான். நல்லான் விரைந்தனுப்பின ஆட்கள் கோபுரத்திற்கு வந்த பிறகு அல்லாமல் தான் கட்டவிழ்த்து விடப்படவில்லை என்று மீனாம்பாள் கூறுவாள் ஆனாள். ஏனெனில், பின்னே தெரிந்த படி, வீட்டுக்குரியவனும் அவ்வாறே காலுங்கையுங் கட்டப் பட்டுக் கிடந்தான்; குதிரைக்காரனும் இலாயத்தில் உள்ள தன் அறையில் கட்டப்பட்டு இருந்தான் அந்தப் பௌத்தர்கள் புறப்பட்டுப் போம்பொழுது கோபுரத்தின் பெரிய வாசற்கதவு அவர்களால் திறந்து விடப்பட்டிருந்தது. நீலலோசனனையும் அவன் துணைவரையும் பிடிக்க வேண்டுவது மிகவும் அவசிய மாகுமென்று கருதி அவர்களை நாடெங்குந் தேடிப்பார்க்கும் பொருட்டு அக்கொள்ளைக் கூட்டத்தாரால் தான் அனுப்பி யிருப்பதாகவும், தாங்கள் தேடிப்போகும் பொருள் அகப் பட்டால் அல்லாமல் அன்றி அவர்களைக் கண்டுபிடிக்கும் எண்ணம் முழுதும் பாழ்பட்டாலல்லாமல், அவர்கள் திரும்பித் தங்கள் தலைவனிடம் வரலாகாது எனவும் தான் அறிவுறுத்தி யிருப்பதாக மீனாம்பாள் பின்னும் மொழிந்தாள். குதிரைமேற் சென்ற அம்மனிதர்கள் நெடுநேரமாக வராததற்குக் காரணம் இதுதான். அம்மனிதர்கள் தன்னை விடுதலை செய்ய வரும் வரையில் தான் இரண்டரை நாழிகைக்குமேல் சாய்வணை யோடு சேர்த்துக் காலுங்கையும் இறுகக் கட்டப்பட்டிருந்தமை யால், தான் மிகவும் களைத்து நோயாய்ப்போகவே, திரும்பவும் தன் கணவனிடம் வந்து சேரப் பயணம்புறப்படும்முன், அந் நாளின் பிற்பகலில் தான் நெடுநேரம் தாமதித்திருக்கலாயிற் றெனவும் மீனாம்பாள் கூறிமுடித்தாள்.

அந்தப் பௌத்தர்களுக்கு மாறாய் எடுத்த துணிகரச் செய்கை தவறியதைப்பற்றி நல்லான் மிகவும் மனம் அலைக் கழிந்தான்; என்றாலும், தன் ஆட்கள் அவர்களைத் தொடர்ந்து பற்றிக்கொள்வார்கள் என்னும் ஒரு சிறு நம்பிக்கை இன்னும் அவன் கொண்டிருந்தான்.

இவ்விடத்திற்கு வந்ததும் நல்லான் அங்குள்ள தோப்பிற் குள் நுழைந்தான்; அவன் அங்குநின்று போனதும் அங்கே இயற்றப்பட்ட கூடாரத்தின் உள்ளேயிருந்து ஒருவிளக்கு

ஒளிர்வதைக் கண்டான். உடனே, புல்லின்மேற் படுத்துக் கொண் டிருந்த இருளனும் மாதவனும் விரைந்தெழுந்து இவனிடம் வந்து சேர்ந்தார்கள்; கள்வர் தலைவன் ஆத்திரத்தோடும் "என்ன செய்தி?" என்று கேட்டான்.

அதற்கு **இருளன்** துயரத்தோடும், "பொல்லாத செய்தி சொல்ல வேண்டியிருப்பதாக விசனிக்கின்றேன்." என்று விடைபகர்ந்தான்.

"கேடுகாலமே!" என்று சினம் நிறைந்த குரலோடு, "நான் கொண்ட பொல்லாத சந்தேகப்படியே ஆயிற்று! நல்லது ஈது என்ன செய்தி? நம்முடைய ஆட்கள் எங்கே? அவர்கள் திரும்பி வந்தார்களா? மீனாம்பாள் எப்படியானாள்?" என நல்லான் உரத்துக் கூவினான்.

"மீனாம்பாள் பெருமாட்டி பத்திரமாகவே இருக்கிறார் கள்." என்று இருளன் ஏதோ சொல்லுவதற்கு நல்லசெய்தி வாய்த்தது பற்றி மகிழ்ந்து விடை கூறினான். "அவ்வம்மை அதோ அந்தக் கூடாரத்தில் இருக்கிறார்கள். பௌத்தர்களைப் பற்றியோ வென்றால் - அவர்கள் மறுபடியும் நம்மைத் தப்பிப் போய் விட்டார்கள்."

"மறுபடியும் தப்பியா போய்விட்டார்கள்?" என்று நல்லான் இரைந்தான். "முனிவர்கள் எல்லோரும் அறிய, நாம் எடுத்த காரியங்களில் நாம் உணர்வுகெட்ட முழு மூடர்களாய் விட்டோம் என்று தெரிகிறது! குறைந்தமட்டில் நான் மாத்திரம் இல்லை - ஏனென்றால் நான் ஒருவனே காரியசித்தி அடைந்து வருகின்றேன்!"

"ஆ! சிறந்ததலைவனே தாங்கள் காரியசித்தி பெற்று வந்தீர்களா?" என்றான் இருளன். "ஏதோ அவ்வளவேனும் நல்லதுதான்."

"ஆம் - ஏதோ நல்லது தான்," என்று நல்லான் விரைந்து விடை கூறினான். "ஆனாலும், அஃது ஆகவேண்டியதிற் பாதியே தான். நம்முடைய ஆட்கள் எங்கே இருக்கிறார்கள்? இன்னுஞ் சிறிது நேரத்தில் குமுதவல்லியையும் அவள் பாங்கிமாரையும் வழிமறித்துப் பிடிக்கிறதற்காக அவர்கள் வேண்டப்படுவார்கள்."

"காதலிற் சிறந்த மீனாம்பாள், யான் தங்கியிருக்கும் இன்னபாயத்தின் விவரம் முழுமையும், யான் அனுப்பிய திருமுகத்தால் நீ தெரிந்திருக்கலாம்? இதன் பொருட்டாகவே, நீ பார்க்கச்சென்ற உன் உறவினர் வீட்டிலிருந்தே உன்னை அவ்வளவு திடீரென்னு வரவழைக்கலானேன்." என்று அவன் தன் மனைவியை நோக்கிச் சொன்னான்.

"மேன்மை தங்கிய பெருமானே, யான் எல்லா விவரங் களையும் தெரிந்து கொண்டேன்." என்று மீனாம்பாள் தன் கணவனின் அழகிய முகத்தை அன்போடும் வியப்போடும் நோக்கினவளாய் விடை பகர்ந்தாள். "ஆனால், குமுதவல்லியைப் பற்றியோ-"

"இதோ அவள் மோதிரம்" என்ற தன் வடிவத்தின்மேல் வெற்றிக்குறிப்புக் கிளர்ந்து தோன்ற நல்லான் மறுமொழி புகன்றான். "நான் மாத்திரம் மேற்கொள்ளும் எந்தக் கருமத் திலும் நான் வெற்றி பெறுகின்றேன்."

அதன்பிறகு, அவன்தான் இன்னும் அணிந்திருக்கும் அவ்வேடத்தோடு, சத்திரத்தில் நிகழ்த்திய நடவடிக்கைகளை மீனாம்பாளுக்கு விரித்து உரைத்தான்; அவன் அவற்றைச் சொல்லி முடித்தவுடனே, அவன் மனையாள் "ஓ! என் அன்புள்ள காதலனே, ஒருவர் அறிந்தாலும் உயிர்க்கு இறுதியாய் முடியும் ஒரு நகரத்தின் நடுவிலே நீர் புகுந்தது எவ்வளவு முரட்டுத்தனம்?" என்று கூவினாள்.

"நீ என்னிடத்தில் வைத்திருக்கும் பற்றுதலின் மிகுதியைக் காட்டுவதனாலே இச்சொற்கள் என் காதிற்கு இனிமை தந்தாலும், என் காதலி, இத்தகைய அச்சத்திற்கு நீ இடங் கொடாதே." என்று அவன் மறுமொழி கூறினான்; "இப்போது நான் அவ்வளவு நன்றாய்ச் சித்தி பெற்றுவந்த துணிகரச் செய்கையை நான் துணிந்து செய்யவேண்டுவது எனக்கு அவசியமாய் இருந்தது. என்றாலும், மீனாம்பாள், நான் மிகவும் சாக்கிரதையாய் இருந்தேன்! குமுதவல்லியிருந்த அறையில் அவசியமாக இருக்கவேண்டியதற்கு மேல் ஒரு நிமிஷங்கூட நான் தங்கவில்லை -- அவள் அணிந்திருந்த மற்ற இரத்தினங்களை அகப்படுத்திக் கொள்ளவும் கூட நான் தங்கவில்லை; அலங்கார மேசைமேல் ஏராளமாய்ப் பரப்பி வைக்கப்பட்ட அணிகலங்களைக் கூட

எடுக்க நான் தங்கவில்லை. அதுவேயன்றியும், இராக்காலத்தில் காவல் அற்று உறங்கும் பெண்கள் உள்ள அறைக்குள் நுழைந்தபோது, பதுங்கிச் செல்லும் இழிந்த திருடன் போல் யான் நடக்க வேண்டி வந்ததைப்பற்றி என்னையே யான் இகழ்ந்து கொள்ளவேண்டியவனானேன் என்பதை வெளிவிட்டுச் சொல்லுகின்றேன். திறந்த பாட்டையில் செவ்வையாகப் படைக்கலம் பூண்டு செல்லும் பிரயாணிகளை மிகவுந் துணிகரமாய் எதிர்த்துவென்று கொள்ளை கொள்ளுஞ் செய்கைக்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்?"

"ஆம், ஆம், என் பெருமானே, உங்கள் அலுவலில் கூடப் பராக்கிரமும் ஆண்மையும் இருக்கவேண்டியனவே." என்று வியந்துகூறினாள் மீனாம்பாள்.

இங்ஙனம் இவ்விருவரும் தத்தம் நெறிவழுவின நடவடிக் கைகளோடு ஒன்றுபட்ட எண்ணங்களை எல்லாம் உயர்த்திக் கொள்ளுதற் பொருட்டும், நாம் தலையிட்ட தொழில்களுக்கு ஆண்மை என்னும் மேல் மினுக்குப் பூசுதற் பொருட்டும் மிகவருந்தி முயன்றார்கள். அது, தனது தாழ்வினை மறைக்க முயன்ற பொய்ப்பெருமையோ அன்று - தன்னைத்தானே அமைதிப்படுத்திக் கொள்ள முயன்ற மனச்சான்றின் ஐயுறவோ அதுவும் அன்று; அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கும் போது அவர்கள் கண்களானவை அவர் தம் தீய செய்கைகளின் கருத்தைத் தாம் உணர்ந்தமை புலப்படுத்துமாயின் அவர்கள் தம்முட் பாராட்டிய மிக்க அன்பு பழுது படுமெனவும், அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் வைத்த நன்மதிப்புக்குறையப் பெறுவார் களாயின் அம்முறையே அவர்கள் அன்பானது நமது குற்றத்தை யுணரும் உணர்ச்சிவலியால் அழிவுபட்டுச் சுருங்குமெனவும் அஞ்சிய அச்சமே அவர்கள் அவ்வாறு உயர்த்திப்பேசிக் கொண்டதற்குக் காரணமாம்.

"நல்லதிப்போது, மீனாம்பாள்," என்று நல்லான் பேசும் போதே சிறிது நிற்க, அப்போது அவ்விருவரின் கரிய கண்களும் ஆர்வத்தோடு ஒன்றை யொன்று நோக்கின. "குமுதவல்லியின் மோதிரம் உன்வசத்தில் உள்ளமையால் நாம் எடுத்த பெருங்காரியத்தில் முதற்பாகம் பாதிக்குமேல் நிறைவேறி விட்டது. என்காதலி, விடியற்காலையிலேயே நீ நீலகிரிக்குப் புறப்பட்டுப் போகலாம்; எச்சரிக்கையோடும் இருக்க

வேண்டியவனான சந்திரன் உன்னை உடனே வந்து காண்பன். **நீலலோசனன்** வந்து சேர்ந்தனனா என்பதையும் அவன் உனக்குச் சொல்லுவான்: அப்படி அவன் வந்திருப்பானாயின் நீ உடனே தாமதமின்றித் திரும்பி நமது மலையிலுள்ள வீட்டிற்கு வருவதைத்தவிர வேறொன்றும் செய்ய வேண்டியதில்லை - ஏனெனில் எல்லா ஏற்பாடும் பிசகிப்போய் இருக்கும். ஆனால், அவ்வாறின்றி, நீலலோசனன் நீலகிரியில் இல்லாவிட்டால், எல்லாம் செவ்வையாக இருக்கின்ற தெனவும், அவன் பிடிக்கப்பட்டிருக்கின்றான் எனவும், நமது மிகச் சிறந்த உபாயத்தை நிறைவேற்றுவித்ததற்கு நான் உன்னிடம் கடுகவந்து சேர்வேனெனவும் நீ முடிவு செய்து கொள்ளலாம்"

"இனிக் குமுதவல்லியைப் பற்றி என்ன?" என்று மீனாம்பாள் வினவினாள்.

"இன்னுஞ்சில நாழிகைக்குள் நம்முடைய ஆட்கள் திரும்பி வராவிட்டால், நான் இருளனோடும் மாதவனோடும் சேர்ந்து புறப்படவேண்டியிருக்கும்; நாங்கள் மூவரும் குமுதவல்லியையும் அவள் தோழிமாரையும் சிறைப்படுத்த வேண்டாம். அல்லது ஒருவேளை அவள் தனது மந்திர மோதிரம் காணாமற் போனதைத் தெரிந்து கொண்டால், தான் நீலகிரி நகரத்திற்குப் பயணம் போவது பயனற்ற தென்று எண்ணித் துயரத்தோடும் திரும்பி நாகநாட்டிற்குப் போகலாம் - அங்ஙனம் நேருமாயின் நமது நோக்கம் மிக எளிதிலே நிறைவேறும், அவளுக்குச் சிறிதும் தொந்தரவு கொடுக்க வேண்டி இராது." என்று நல்லான் மறுமொழி தந்தான்.

"பின் சொன்னபடியே தான் நிகழும் என்று நம்புகின்றேன். நல்லது, எம் பெருமானே, இந்தத் துணிகரமான செய்கையில் நாம் சித்தி பெற்றால் அடைவது இன்னது என்பதனை எனக்குச் சொல்லும்." என்று மீனாம்பாள் வினவினாள்.

"ஓ அப்படியா, மீனாம்பாள்." என்று தன் அழகியகரிய கண்களிலே மனக்களிப்புப் பளீரென மின்னக்கூவி, "துணிகரச் செய்கையினை எழுப்புவதும், மனவுற்சாகத்தை உந்துவது மாயிருந்தாலும், கலக்கத்தினையும் ஆபத்தினையும் விளைப்ப தான வாழ்க்கையை நடத்த வேண்டுவது இனி எனக்கு அவசிய மாய் இராது. ஆம் என் காதலி மீனாம்பாள்! நாம் தொலைவி

லுள்ள ஏதேனும் ஒரு நகரத்திற்குப்போய், நம்முந்தின செய்கைகள் முற்றுந் தெரியாவண்ணம் அங்கே வேறுபெயர் வைத்துக் கொண்டு நம்வசத்தில் வருவதான எல்லையற்ற செல்வத்தை அநுபவித்துக்கொண்டிருப்பது மிக நல்லது, அல்லது அப்படியல்லா விட்டால், மீனாம்பாள், நாம் விரைவில் அடையப் போவதாகிய இரகசிய வழியாம் பெறப்படும் இனி **மலைய வேலியின்கண்** - தன்னிடத்துள்ள வெல்லாம் ஏராளமாய் அமைதியும் அழகும் வாய்ந்திருப்ப, என்றும் இளவேனிலே அரசிருப்ப, மாரிக்காலத்தின் குளிரானது காணாது ஒழிய, தன் இனியதனியிடங்களிற் புயற்காற்றே நுழைய மாட்டாதாக விளங்கும் **தாமரை வேலியின்கண்** இருக்கையமைத்துக்கொண்டு இவ்வுலக வாழ்வையே நாம் முற்றுந்துறந்து விடுவோமாக!" என்று நல்லவன் இயம்பினான்.

"ஆ, அதுவே உண்மையான இன்பம்!" என்று தன் கணவன் அவ்வளவு சொற் சாதுரியம் பட வரைந்த ஓவியத்தின் நிறைந்த அழகால் தன்னுயிர் கலவரப்பட்டாற்போல மீனாம்பாள் அடங்கின குரலில் விளம்பினாள்; அவள் அழகின் மிக்க தன்தலையை அக்கள்வர் தலைவன் தோள்மேற் சாய்த்துக் கொண்டு தன் சிறந்தகரிய விழிகளால் அவன் விழிகளை நோக்கினாள். "ஆம், அத்தானே." என்று அவள் பின்னுந் தொடர்ந்து, "பிந்தின முறையே எனக்கு இசைந்ததாக இருக்கின்றது. ஓ! இந்நிலவுலகத்திலே **துறக்க நாடென்னும் அதன்கண்** உள்ள கொடிப்பந்தர்ச் சுற்றுகளின் இடையே திரிவதும் - அதன்பழங்களைத் தின்பதும், அம்மலைய வேலியிற் பளிங்கு போலுந் தெண்ணீரைப் பருகுவதும் - உலகமங்கையின் கொடைப் பொருளெல்லாம் மிகவும் ஏராளமாய்ச் சொரியப் பட்டுக், குவிந்துயர்ந்த மலைக்குவடுகள் வைரச்சுவர் எழுப்பி னாற் போல் அரைப்பட்டிகையாய்ச் சூழ்ந்து காப்பத் தோன்றும் அவ்விளம் பொழிலிலே நம்முதற் றாய்தந்தையர் அடிச்சுவடு களின் மேல் அடி வைத்துச் செல்வதும் எவ்வளவு இனிமை யாயிருக்கும்!" என்று மொழிந்தாள்.

"என்றாலும்," என்று நல்லான் புன் முறுவல் செய்து, "என் அழகிய மீனாம்பாள், நாம் தாமரை வேலியிலேயே தங்கி விட்டோமானால் நாம் அங்கே கண்டெடுக்கும் அளவற்ற

நிதியினை எவ்வாறு பயன் படுத்துவதென்று எனக்குத் தெரியவில்லை.'' என்று மறுமொழி புகன்றான்.

''ஆ! நான் இன்னும் முடியச் சொல்லவில்லை!'' என்று அக் கள்வர் தலைவன் மனையாள் கூறினாள். ''சிலகாலம் இன்பம் நுகர்ந்தபின் அது தெவிட்டிப்போவதும், முழுதும் இனிமை யால் ஆக்கப்பட்ட எவ்வகையான வாழ்க்கையிலும் உவர்ப்புத் தோன்றுவதும் மக்களியற்கைக்கு உரிய ஊழ்வினை யாய் இருக்கின்றன. நாம் எடுத்த தருமத்தில் சித்திபெற்றோம் என்றே எப்போதும் பாவித்துக்கொண்டு, எல்லாவகையான இன்பங் களும் நுகருதற்கு நமது செல்வம் உதவியாகும் படியான ஒரு சிறந்த நகரத்திலும், அச்செல்வம் முழுதற்கும் பிறப்பிடமான அவ்வினிய வேலியிலும், ஆக நமது காலத்தை நாம் இரண்டு கூறிட்டுக் கொள்ளலாம் என்று என்னுள்ளே அங்ஙனம் புனைந்து பார்த்துக் கொண்டிருந்தேன், என் பெருமானே!. நகரவாழ்க்கையின் இன்பங்களும், செழும் பொருள் நுகர்ச்சியும் தெவிட்டிப் போனபின், சிலகாலம் நாம் அவ்விளம் பொழிலின் அமைந்த தனியிடங்களிற் போயிருக்கலாம்; அதன்பிற் சில காலங்கழித்துத் தாமரைவேலியின் மலை வரம்புகளுக்கு அப்பால் உள்ள களிப்பும் பரபரப்பும் பொருந்தின உலகின் இன்பங்களை துய்த்ததற்குத் திரும்பவும் எழும் வேட்கையோடு நாம் மறுபடியும் வெளிப்புறப்படலாம்.''

இங்ஙனம் நல்லானும் அவன் அழகிற் சிறந்த மனையாளும் ஒருங்கு அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தனர்; சிறு குழந்தையைப்போல உறுதிப்படாதவற்றில் அவர்கள் வீண் எண்ணப்பாங்கு நாட்டினராயினும், வருங்காலத்தைப் பற்றின இனிய கனவின் கண் ஆழ்ந்தனராயினும், தமக்குள் இன்பத்தை விளைவிக்கவும், அவ்வளவு சொல் நயத்தோடும் புனைந்துரைத்த இன்பவாழ்வினைப் பெறுதற்குத் தம்மைத் தகுதியுடையரெனத் தாம் உணர்ந்தாற் போற் பேசவும் அவர்கள் தமக்குள் மறுபடியும் முயன்றனர். விழித்திருந்து காணுங் காட்சிகளைப் பற்றிப் பேசுவது போல் அவர்கள் அங்ஙனம் உரையாடின எல்லாவற்றையும் தாம் மெய்யாகவே அடைவதற்கு நல்ல சமயம் வாய்த்ததெனத் தம்முளே அவர்கள் எண்ணி மகிழ்ந்து கொண்டார்களென்பதும் ஆண்டே அறியற் பாற்று; ஏனென்றால், பின்றொடரும் தன் ஆட்களுக்கு நீலலோசனன் கடைசியாகத் தப்பிப்போய்

விடுவானென்றாவது, அவனும் அவன் துணைவர் இருவரும் தான் முதலில் விடுத்தவர்களை எளிதிற் செயித்தது போல இரண்டாந்தரம் விடுத்தவர்களையும் அங்ஙனம் வென்று விடுவாரென்றாவது நல்லான் எண்ணங் கொள்ள மாட்டாதவனானான்.

மறுநாள் விடியற்காலையில் நல்லானும், மீனாம்பாளும் மறுபடியும் சிலநாட் பிரிந்திருக்க விடைபெற்றுக் கொண்டனர்; மீனாம்பாள் தன் மலைநாட்டுப் பணிப்பெண்ணும் காப்பிரி மாதும் முன்போலவே தன் பின்னே வரப் பயணம் புறப்பட்டாள். அவர்கள் அங்ஙனம் புறப்பட்டுப்போன சிறிது நேரத்திற்குப் பிறகு, தன் சொந்த உடுப்பை மறுபடியும் அணிந்து கொண்டவ னான அக்கள்வர் தலைவன், பௌத்தர் மூவர் பின்னே தொடர்ந்து அனுப்பப்பட்ட தன் ஆட்கள் வந்து சேராமைகண்டு இருளனையும் மாதவனையும் தன் பின்னேவரக் கற்பித்தான். அவர்கள் தங்கள் குதிரைகளின் மேல் ஏறிக்கொண்டு, ஒரு சுற்று வழியாகப் போய்க் குமுதவல்லி ஓர் இரவு தங்கியிருந்ததும் நல்லான் அம்மோதிரத்தைக் கவர்ந்து கொண்டதுமான அந்த நகரத்தைத் தாண்டிவந்து சேர்ந்தார்கள். சேர்ந்து, நீலகிரியை நோக்கிப் பயணம் போம்பொழுது குமுதவல்லியும் அவள் பாங்கிமாரும் செல்லவேண்டிய பாதையோரமாய் உள்ள ஒரு தோப்பின் செறிந்த சூழல்களிலே அவனும் அவன் ஆட்கள் இருவரும் ஒளிந்து கொண்டார்கள்; ஏனெனில், மோதிரம் காணாமற் போனபின்னும், பயங்கரனான நல்லான் அங்கே வந்திருந்தானென்பது சத்திரத்தில் நிச்சயமாகத் தெரிந்தபிறகும், குமுதவல்லி படைக்கலம் பூண்டோரை வழித்துணைகொண்டு ஏகுவாளென்பது கூடாதது அன்றெனக் கொள்ளைத் தலைவன் எண்ணினானேனும், அவ்வழித் துணை அவ்வளவு பெரிதாக இருக்குமென்பது அவனுக்குச் சிறிதுந் தென்படவில்லை. ஆகவே, தனது ஒளிப்பிடத்திலிருந்து நல்லான், குமுத வல்லியும்அவன் பாங்கிமாரும் நன்கு படைக்கலம் பூண்ட வலிய ஆட்கள் பன்னிருவர் பின்னேவரச் சவாரிபோதலைக் காண்டலும் தான் எதற்குந்துணிந்த அஞ்சாநெஞ்சினனா யிருந்தும் அவ்வழித் துணைவரை எதிர்க்க அவன் துணிவில்லை. மாதவனோ நம்பிக்கையுள்ள உளவாளியாய் மிகத் தேர்ந்தவனே அல்லாமல், படைக்கலஞ் சுழற்றும் வீரச்செய்கையில் நம்பத் தக்கவன்

அல்லன்; எனவே, தான் துணிந்து சண்டையில் தலையிட்டுக் கொள்ளானாயின் தானும் இருளனுமே போர் முனையைத் தாங்கவேண்டி வருமெனக் கள்வர்தலைவன் அறிந்தான். அஞ்சத் தக்க அம்மிஞ்சின கூட்டத்தோடு எதிர்ப்பது வெறிபிடித்த செய்கையாகுமேயன்றி வேறன்று: அதனால், நல்லான், அப்பெருமாட்டியையும் அவள் தோழிமாரையும் அவர் வழித்துணைவரையும் தொல்லைப்படுத்தாமல் போக விடலானான்.

இது நல்லானுக்கு மற்றுமொரு பயங்கரமான ஏமாற்றமாய் முடிந்தது; அவனுடைய சூழ்ச்சிகளெல்லாம் பாழாய் விடு மெனவும் அச்சுறுத்திற்று. ஏனென்றால், குமுதவல்லி நீலகிரிக்குச் சென்று சேர்ந்து விடுவாளாயின், நீலலோசனன் இடையே தன் கையில் அகப்பட்டுக்கொண்ட போதிலும், மீனாம்பாள் தன்னிடம் ஒப்புவிக்கப்பட்ட காரியத்தை முடிப்பது ஆகா தென்று அவன் கண்டான். கழிந்த இராநடுவில் தான் புறப்படும் நிமிஷத்தில், சத்திர முற்றத்தினுள்ளே அந்தக் குடகுநாட்டு வியாபாரியை நுழைவித்த தீவினையை நல்லான் மிக நொந்து கொண்டான்; ஏனெனின் அவ்வியாபாரி தன்னைத் தெரிந்து கொண்டதனாலே தான் குமுதவல்லி அவ்வளவு அஞ்சத்தக்க வழித் துணைகொண்டு பயணம் போகலானாள் என்று அக்கள்வர் தலைவன் எண்ணினான். குமுதவல்லி சிறிது நேரத்தில் அவ்வழித்துணையை விட்டு விட்டு, வேறு தங்குமிடம் போகும் வரையில் படைக்கலம் பூண்ட இரண்டு பெயரை மாத்திரம் கூட்டிச் செல்வர் என்பது அவனறிவிற் படாமற் போனது இயல்பேயாம்: அவன் நடவடிக்கைகளில் அந்த வகையான ஒரு மாறுதல் நிகழுமென அத்தலைவன் முன்னமே உணர்தலாவது ஊகித்தலாவது செய்யக்கூடவில்லை; - ஆகவே, அவன் எந்தவகையாக நடந்துகொள்வதென்று சிறிது நேரம் கலக்கமுற்று நின்றான். என்றாலும், திடீரென்று அவனுக்கு ஓர் எண்ணம் தட்டுப்பட்டது.

"நான் நீலகிரிக்குப்போய், யாரும் அங்கே வந்து சேர் வதற்கு முன்னமே சந்திரனிடம் எல்லாம் தெரிவித்து விட்டால் என்ன? அப்படிச் செய்வேனானால் எந்த வழியிலாவது நான் குமுதவல்லியைத் தொலைத்து விடலாம்; அல்லது, நீலலோ சனன் தன்னைத் தேடித்திரியும் என் ஆட்களைத் தப்பி

வந்திருந்தானானாலும் அவளையும் அவ்வாறே செய்து விடலாம்! ஆம் - இந்தப்படியே செய்யக்கடவேன்."

இங்ஙனம் நல்லான் தனக்குள் தானே சிந்தனை செய்து கொண்டிருக்கையில், அருளனும் மாதவனும் பேசாமல் அவனைப் பார்த்துக் கொண்டே யிருந்தனர்; ஏனெனில், தங்கள் தலைவன் ஏதோ ஓர் உபாயத்தைத் தன் உள்ளத்தில் சிந்தனை செய்கின்றானென்று அவர்கள் கண்டு கொண்டார்கள். மற்றொரு முறையும் நல்லானும் மாதவனும் உடைமாற்றிக் கொண்டார்கள்; அதன் பிறகு, கள்வர் தலைவன் இருளனுக்குப் பலவகை முறைகளைக் கற்பித்து, விசேடமான சம்பவங்கள் தோன்றுமானால் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்ப தையும் போதித்தான். இருளனும் தன்மேலவன் கற்பித்தவற்றை முற்றும் அறிந்து கொண்டான்; இராச பாட்டையைச் சாக்கிரதையாக அகன்று, நீலகிரியை நோக்கி நல்லான் பயணம் புறப்பட்டான். எனவே, அவன் குமுதவல்லியைத் தொடர்ந்து பற்றவும் இல்லை, பௌத்தர் மூவரைச் சென்று சந்திக்கவும் இல்லை என்பதை நாம் கண்டுகொண்டோம்.

காப்பிரிமாதும் தன் அழகிய மலையநாட்டுப் பணிப் பெண்களும் பின்னேவர நீலகிரி நகரத்திற்கு அங்ஙனமே தான் பயணம் புறப்படும் சமயத்தில் நாம் விட்டுவந்த மீனாம்பாளிடம் இப்போது நாம் திரும்புவோமாக. நீலலோசனனையும் அவன் துணைவரையும் தாம் தற்செயலாகச் சந்திக்கும்படிநேருமோ என்னும் அச்சத்தால் இராசபாட்டையை விட்டுப்போவது இவர்கள் நோக்கத்திற்கும் இணங்கினதாய் இருந்தது. இடையிடையே தாமும் தங்குதிரைகளும் இளைப்பாற இடங்கொடுத்துக்கொண்டு, அந்தப் பகல்முழுவதும் அவர்கள் தொடர்ந்து வழிச்சென்றார்கள்; சாயங்காலம் அணுகியவுடன் ஓர் ஊரிலே சத்திரத்தில் தங்கினார்கள். மலைய நாட்டு விதவை வாயினின்றும் துயரமான கதையைக் கேட்டுக் கொண்டு குமுதவல்லியும்ட அவள்பாங்கிமாரும் அம்மனையகத்திற் கழித்த அதே இரவு தான் இது என்று இதனைப்படிப்போர் உணரவேண்டும், வழிநாட்காலையில் மீனாம்பாள் மறுபடியும் நீலகிரிக்குப் பயணந்துவங்கினாள், - அத்தனைவிரைவில் தன்கணவனும் அந்தமுகமாகவே செல்லும்படி நேருமென்பதை அவள் சிறிதும் உணரவில்லை. குமுதவல்லியும் அவள்

தோழிகளும்நல்லான்கையில் அகப்பட்டிருப்பார்கள் என்பதில் அவள் ஐயப்படவில்லை. நீலலோசனனும் தன்பின்னே தொடர்ந் தனுப்பப்பட்ட ஆட்களால் அவ்வாறே பிடிபட்டிருப்பான் என்று ஆவலோடு எண்ணினாள். அங்ஙனம் அல்லாமல், அவன் நீலகிரி நகரத்திற்குப் போய்ச்சேரப் பெற்றிருப்பானானால், தான் அவ்விடத்திற்குச்செல்லும் பயணம் முற்றிலுஞ் சிதைவுபடும் என்று உணர்ந்தாள்.

உச்சிப்பொழுதிற் பகலவன் எப்போதினும் உள்ள புழுக்கத்தைவிட மிகுந்த புழுக்கத்தோடும் தன் வெங்கதிர்களை அம்மலைநாட்டு நிலப்பகுதிகளின் மேற் சொரிவானாயினான்; அச்சமயத்தில் மீனாம்பாளும் அவள் பணிப்பெண்களும் தங்குதவதற்கு மிகவும் இசைவாய்க்காணப்பட்ட ஓர் இடந் தண்டைவந்து சேர்ந்தனர். அவள் நீலலோசனனை எதிர்ப் பட்டதும், பல மைல்தூரம் உள்ளதுமான அந்தத்தெளிநீர் வேலியோடு அஃது ஒப்புமையுற்றுத் தோன்றியது. ஏனென்றால் நாம் இப்போது பேசுகின்ற இந்த இடத்தில் ஒருதெளிவான நீரோடையானது பழம் நிரம்பின மரங்கள் நிழற்றும் மெல்லிய பசிய மேட்டு நிலத்ததைக்கடந்து சிலுசிலுவென்று ஓடியது. அங்கே அவ்வாறே அவர்கள் தங்கினார்கள்; அந்தக் காப்பிரிப்பெண்ணின் வசத்தில் உள்ளதும் அவள்தன் குதிரைச் சேணத்தின் பின்புறத்தில் கட்டப்பட்டிருந்ததுமான ஒரு சிறுகைக்கூடாரம் விரைவில் விரித்து ஊன்றப்பட்டது. என்றா லும், மீனாம்பாள் அக்கூடாரத்தின் கீழ்க்கிடந்து இளைப்பாற விரும்பவில்லை; அவள் அவ்வோடையில் ஓரத்தே யுள்ள புல்லின் மேல் உட்கார்ந்து பலவாறு சிந்தித்துக் கொண்டிருந் தாள்; அத்தனை பற்றுதலோடு தான் காதலித்த தன் கணவனையும் மலைநாட்டின் தென்பகுதியில் நல்லபெயர்வாய்ந்த தன் இல்லத்தை அவன் பொருட்டுத் தான் விட்டுவந்ததையும் எண்ணினாள். சிலநாட்களுக்கு முன் தான் பார்க்கப் போயிருந்த தன் பெற்றோரையும், தான் மணந்து கொண்ட அவன் பயங்கர மான நல்லானே என்று அவர்கள் சிறிதுஞ் சமுசயப்படாததையும் அங்ஙனமே அவள் எண்ணினாள். அவற்றின்பின் தானும் தன்கணவனும் மேற்கொண்டிருக்கும் அரிய செயலைப்பற்றி சிந்திப்பாளானாள்; அதனால்வரும் பயன் பயனின்மைகளையும் கணக்கிட்டுப் பார்த்தாள்.

இவ்வாறு ஐந்துநாழிகை வரையில் மீனாம்பாள் அந்தத்தெளி நீரோடையின் பக்கத்தே இளைப்பாறிக்கிடந்தாள்; இனித் திரும்பப் பயணந் தொடங்குதல் தக்கதென்று அவள் எண்ணிய அச்சமயத்தில் குதிரைக் குளம்படிகளின் ஓசை அவள் செவியில் வந்து பட்டது. உடனே அவள் திடுக்கிட்டு எழுந்து தன்னை அம்மரச்செறிவின் இடையே மறைத்துக்கொண்டாள். கூடாரமும் அவன் பணிப்பெண்களும் கண்ணுக்கு தென் படாமல் பசிய மரப்பந்தர் நடுவே யிருந்தார்கள். மீனாம்பாள் யார் வருகிறார்கள் என்று தெரிய நோக்கினாள். அந்தப் பௌத்தர் மூவரையும் எதிர்ப்படுவதில் அவள் சிறிதும் பிரியமில்லா திருத்தலால் அவள் தன்னை இங்ஙனம் எச்சரித்துக் கொண்டது பற்றி யாரும் வியப்படைதல் வேண்டாம்.

ஆனால், குதிரைமேல் அணுகவந்தவர்கள் மூன்று மாதர்கள். ஆகவே, மீனாம்பாள் தான் ஒளிந்திருந்த இடத்தை விட்டு வெளியேவந்தாள். அவள் அவர்கள் முகத்தைப் பார்க்கக் கூடவில்லை-வெயில் வெப்பத்தால் அவர்கள் முக்காட்டை முகத்தின்மேல் இழுத்திருந்தார்கள். என்றாலும், தன்பாங்கிமார் பின்னேவர முன்னேறிவந்த அந்நங்கையின் அழகிய வடிவு அவள் உள்ளத்திற்சென்று பதிந்தது. உடனே மீனாம்பாள் உள்ளத்தில் ஒருசமுசயம் சடுதி யிற்றோன்றியது. இவள் நாகநாட்டரசியாய் இருக்கக்கூடுமோ? இவள் என் கணவன் பார்வைக்குத்தப்பி வந்தவளோ? தற்செயலாக இவள் என் வழியில் வந்து அகப்பட்டுக் கொண்டனளோ? ஆம் தன்றோழி மாரோடு வந்த அவள் குமுதவல்லியேதான். மீனாம்பாள் வேண்டுமென்றே வந்த சுற்றுவழியும், முன்நாள் மாலைக் காலத்தில் பஞ்சாலைத் தலைவன் வீட்டின் அருகேயிருந்து குமுதவல்லி பறந்து விரைந்து வந்த அவ்வழியும் அவர்களை அவ்வாறு ஒரே இடத்திற் கொண்டுவந்து விட்டன. நாகரீகமான உடை அணிந்த அழகிய மாது ஒருத்தி அவ்வோடையின் பசியகரை மேல் நிற்றலை நாகநாட்டரசி பார்த்தவுடனே நட்பின் உபசார அடையாள மாகத் தன் முக்காட்டை அப்புறம் வாங்கினாள். மீனாம்பாள், தன் கணவனால் விரித்துரைக் கப்பட்ட வருணனையோடு தனக்கு எதிரிலுந் தோன்றிய அற்புதமான அவள் அழகினையுங் கண்டு, இப்போது தான் கண்ட அந்நங்கை நாகநாட்டரசியே என்பதில் எள்ளளவும் ஐயமுறவில்லை.

“ஆ! ஏதோ தற்செயலாக நீ என் கம்பீரநாயகனுக்குத் தப்பி வந்துவிட்டாய். ஆகையால் நான் உன்னைச் சந்திக்கலானது அதிட்டவசந்தான்.” என்று தனக்குள் எண்ணிக்கொண்டாள்.

மிகவும் விரும்பத்தக்க உபசாரத்தோடும் ஒரு நொடிப் பொழுதில் முன் வந்து எதிர்கொண்டு வாழ்த்திய அவ்வழகிய நங்கையின் உள்ளத்தில் இங்ஙனம் புரண்டு கொண்டிருந்த இரண்டகமான எண்ணங்களைப் பற்றிக் குமுதவல்லி ஒரு நிமிடமேனும் ஐயுறவுகொள்ளக்கூடவில்லை. குமுதவல்லியும், அவள்பாங்கிமாரும் விருந்தோம்பும் அம்மலைய நாட்டு விதவையின் மனையகத்தைவிட்டு வந்தபோது தாங்கள் முதலிற்போய்ச்சேரும் ஊரிலாயினும் நகரத்திலாயினும் வழித்துணைபெற்றுக் கொள்ள எண்ணியிருந்தார்கள் என்பதைப் படிப்போர் நினைவுகூர்வர். ஆனால் அவர்கள் அம்மலைய நாட்டுவிதவையால் குறித்துக் காட்டப்பட்ட வழியைவிட்டுத் தற்செயலாய்ப் பிசகி வந்துவிட்டார்கள். அவர்கள் ஊரையாவது நகரத்தையாவது சேர்ந்திலர்-- அவர்களும் அவர்கள் குதிரை களும் உணவு கொள்ளவேண்டிய வரானார்கள் - ஆகவே தங்குவதற்கு ஏற்ற ஓர் இடத்தை அவர்கள் நாடுஞ்சமயத்தில் அவ்வோடையின் கரை மருங்கில் மீனாம்பாளைக் கண்ணுற் றார்கள்.

தம்முடைய குதிரைகளினின்றும் கடுகெனக் கீழ்இழிந்து தம்மைப்போலவே பெண்பாலரா யிருத்தலால் தங்கருத்துக்கு இயற்கையாகவே இணங்கினதுணைவர் கிடைத்த இச் சமயத்தை அவர்கள் உடனே பயன்படுத்திக் கொண்டார்கள். சுந்தராம் பாள் ஞானாம்பாள் இருவரும் அந்த காப்பிரி மாதோடு இருக்கலாயினர். மலைநாட்டுப்பணிப்பெண்ணோ சிறிது தூரத்தில் மரப்பந்தரினிடையே போயிருந்தனள். அழகிய குமுதவல்லியே விழுமிய மீனாம்பாள் பக்கத்தே அந்நீரோட்டத் தின் கரைமீது அமர்ந்தனள்.

ஆ! குமுதவல்லி! நீ இங்ஙனம் நினக்குத் துணைவியாகக் கொள்ளும் அவ்வழகிய மாது, மாதரழகின் இரண்டு சிறந்த மாதிரியாய் அங்குள்ள இருவரில் எவருடம்பிலே தன் கொலைப் பற்களை ஊன்றல் வேண்டுமென்று ஐயுறவு கொண்டார் போலநின்று சிறிது தூரத்திற் புற்களின் ஊடே அரவம் இன்றிக் கரவாய் நுழைந்துவரும் அக்கரிய நச்சுப்பாம்பைப்போல் வஞ்சனையுடையள் என்பதை நீ சிறிதும் நினைந்தாய் இல்லை!

## அதிகாரம் - 10

# குமுதவல்லியும் மீனாம்பாளும்

மீனாம்பாள் மிக்கமரியாதையோடும் குமுதவல்லி யினிடத்துக் கவனங்காட்டிவருகையிலேயே தன் கள்ளவுள்ளத் தில், நாகநாட்டரசியையும் அவள் பாங்கிமார் இருவரையும் தன்னிடத்திற் சிறைப்படுத்துவதற்கு எவ்வகையான தந்திரம் நன்றாய்ச் செய்யலாம் என்று சிந்திப்பாளானாள். பலவந்தமாகச் செய்வதைப்பற்றி நினைத்தலுங்கூடாது, ஏனென்றால் இரண்டு பக்கத்தும் மும்மூன்று பெயர் இருந்தனர். வீரமகளுக்குரிய வீரச்செய்கையின் துணிகரத்தை மீனாம்பாள் காட்டக் கூடியவளா யிருந்தாலும், அதனை இங்கே காட்டினால் வெற்றி யுண்டாமென்பது தூரத்தோற்றமாகவே இருந்தது. அதுவே யன்றியும், ஏதேனும் ஒருபாயம் செய்யப்படுதல் வேண்டுமென அவள் ஏற்கனவே தன்னுள்ளத்தில் உறுதி செய்துவிட்டாள், ஆகவே, குமுதவல்லியை முழுதும் நம்பச் செய்தது, அவளுக்குத் துணைப்பயணம் போவதுபோற் காட்டிக் கொண்டுபோய் அவளை ஓரிடத்திற் சிறிதுநேரம் சிறையிட்டு வைப்பதே இனிதுசெய்யக்கூடிய உபாயமாகத் தோன்றியது.

பலநிறமணிகள் பதித்தாற்போலப் பூக்கள் மலிந்த புல் நிலத்தின்மேல் சாப்பாடுகொண்டுவந்து பரப்பும்படி மீனாம்பாள் தன் பணிப்பெண்களுக்குக் கட்டளையிட்டாள்; இளைய நீலலோசனனிடத்துத் தான் அத்தனை திறமையோடுங் காட்டிய இன்சொல் உபசாரத்தைப் போலவே, இந்தச் சிற்றுணவு விருந்திலும் அவள் உபசாரங்காட்டினாள். அவர்களது சம்பாஷணை பொதுவான விஷயங்களைப்பற்றியே நடந்தது. ஏனெனில் குமுத வல்லி இனித்தான் முழுவதும் தொடர்பாக எச்சரிக்கையோடு இருக்கவேண்டுமென்றும், யாரிடத்தும் சிறப்பாகப் பேசலாகா தென்றும், வெளிக்கு நண்பரைப்போற்

பூண்ட கோலத்தில் எல்லாம் ஒளிப்பான பகைவனொருவன் மறைந்திருக்கக் கூடுமென நினைந்தே நடக்கவேண்டுமென்றும் ஏற்கனவே தீர்மானஞ் செய்து கொண்டாள். தான் இப்போது நட்புக்கொள்ள நேர்ந்த நங்கையைப்பற்றி நாக நாட்டரசி ஒரு நிமிஷமேனும் ஏதும் கெடுதலாக நினைந்தவலல்லள்; ஆனாலும் தன்புதிய அனுபவங்களால் தான் விழிப்பாகவும், எச்சரிக்கை யாகவும் இருக்கப் பெற்றாள். ஆயினும், அவநம்பிக்கை கொண்டிலள்.

ஏதேனும் ஒன்றைக்குறித்துப் பேசப் புகுந்தால் தன்னிடத்து ஏதோ முடிவான நோக்கம் உண்டென்று சமுசயங் கொள்ளப் படுமென அஞ்சினவளாய் மீனாம்பாளும் அவ்வாறே பொது விஷயங்களைப்பற்றிப் பேசுவதில் மிகவும் பிரியமுடையவளா யிருந்தாள். குமுதவல்லியின் உள்ளத்தில் தான் அச்சத்தைப் புகட்டுவதாக முடியுமென்று அஞ்சி, இங்ஙனம் அவள் கள்வர்தலைவன் நல்லான் பெயரைக் கூடச் சொல்லாது விட்டாள்; - ஏனென்றால் அத்தகைய அச்சங்களே ஐயமுறுதற்கு இடஞ்செய்யும். மீனாம்பாள் முதலிலே நல்லகுணமும் கற்பொழுக்கமும் உடையளாயிருந்தாள்; ஆனால், அவள் தன் கணவன் நல்லான்மேல் வைத்தகாதலானது அளவுகடந்த அற்புத ஆற்றலுடையதாய் எழுந்தமையினாலே, அது மற்ற எல்லா உணர்வுகளையும் மற்றெல்லா ஆலோசனைகளையும் தன் கீழ்ப்படுத்தி நின்றது. அவளது முழுவாழ்வினோடு முழுதும் பிணைந்து, அவளது முழுவுயிரோடு முழுதும் பின்னப்பட்டு அக்காதல் வளர்ந்து முதிர்ந்தமையால், அவள் அதற்கென்றே உயிர்பிழைத்திருப்பாளானாள். அதனால் அவள் தன் கணவன் விருப்பத்திற்கு இணங்கிப் படிமானம் உள்ளவளாய் எந்த வகையான குற்றத்தைச் செய்யவும், எந்தவகையான பழிச் செய்கையை அணுகவும் ஒருப்படுவாளானாள்; என்றாலும், அவள்தன் நல்லொழுக்கங்கள் அவளை விட்டு இன்னும் முற்றும் அழிக்கப்படவில்லை - அவை அவள்தன் காதற் பெருக்கத்தின் வயப்பட்டுச் செயலிழந்து மாத்திரங் கிடந்தன.

இப்பொழுதோ தனக்கெதிரே யிருந்த பதினேழுவயதுள்ள அவ்வழகிய பெண்ணை நோக்கிச் சிந்திக்கையில் மீனாம்பாள் நெஞ்சத்தில் அந்த நல்லுணர்வுகள் சிறிதே கண்விழித்து எழுவ வாயின.பெண்டண்மையோடிருந்து பார்ப்பவர் நெஞ்சத்தையும்

உருகச் செய்யும் ஓர் ஒப்பற்ற பெண்மையழகிலே ஏதோ இருக்கின்றது. அவ்வழகிய கண்களிலிருந்து நீர் வரச்செய்வதும் - அவ்வழகிய முகத்தை வருத்தத்தோடு சுளிக்கச் செய்யும் எதனையாவது புரிதலும் - அல்லது அக்கன்னிமை நெஞ்சத்தைக் கலங்கச் செய்வதும் ஒரு பெருங் குற்றமாகும் என்று, உயிர் தனக்குத்தானே சொல்லிக்கொள்வது போற் காணப்படு கின்றது. குமுதவல்லியின் மிக உயர்ந்த வசீகரத்தைத் தான் நோக்கியபோது மீனாம்பாள் தன் நெஞ்சத்தே இத்தன்மை யவான நினைவுகள் வந்து நுழையாமற் றடுக்கக்கூடவில்லை. நாகநாட்டரசியைப் பற்றித் தான் சிறிதும் பொறாமை கொள்ளாமையால், அவள் இச்சமயத்தில் அங்ஙனம் உணர்ந்து உள்ளங் கசிவதற்கு மிகவும் இடம் பெறுவாளாயினாள். அவள் தற்பெருமை, அல்லது தான் அழகுடையவள் என்பதைப் பற்றிய செருக்குக் கொண்டவளாகவே யிருந்தாள். குமுதவல்லி ஒருவகையான வளப்பின் முதிர்ந்த மாதிரியாகத் தோன்றியது போலவே, தானும் வேறொரு வகையான அழகின் முடிந்த மாதிரியாக உள்ளவள் என்று நினைந்தாள். நல்லானும் நாக நாட்டரசி குமுதவல்லியைப் பார்த்தான்; அவள் அப்பெயர் பெறுதற்குப் பெரிதுந் தகுதியானவளேயென்று அவன் மீனாம்பாளிடம் சொல்லத் தாமதிக்கவில்லை; ஆயினும் உலகத் தில் உள்ள எந்த மக்கட்பிராணியும் தன் மனைவியைப்போல அத்துணை அழகுள்ளதாக வேனும் நேசிக்கத்தக்கதாவேனும் தன்மதிப்பிற் றோன்ற மாட்டாதென்று அவன் அதே சமயத்தில் தன் மனைவியிடம் உறுதிமொழி புகன்றான். ஆதலினாற்றான் மீனாம்பாள் குமுதவல்லியின் வசீகரத்தைப் பற்றி பொறாமை யாவது மனப்புழுக்கமாவது கொண்டிலள்; ஆகவே, அவள் உள்ளத்திற் சிறிது சிறிதாக அவிழ்ந்து விரியும் இரக்கம் என்னும் அம்மெல்லிய மலரை வளராமல் அழுக்குவதற்குக் கொழுத்த களைப் பூண்டுகளேனும் முட்களேனும் அங்கில்லை. தான் நல்லானுக்கு மணமகளாய் வந்த நாள் தொட்டு இதுவரையில் இம் முறை தான் அவள் அவனது அலுவல் மிக்க துணிகர வாழ்க்கையினால் தானும் அடிக்கடி சேரும்படி கட்டாயப் படுத்தப்படும் உபாயங்களை வெறுக்கத் தலைப்பட்டாள். இளைய நீலலோசனனைத் தன்னுடைய மயக்குவித்தைகளால் ஏமாற்றும் பொருட்டுக் காதல் மொழிகளைச் சொல்லும் போதும் கண்ணெறியும்போதும் அவள் தன் நெஞ்சத்திற்குச்

செய்த கொடுமை சிறிதன்று; ஏனென்றால், பெண்பாலியல்பில் மீனாம்பாள் கடுங் கற்பொழுக்கம் உள்ளவள், மனையாளியல் பில் தன் கணவனிடத்து மாசற்ற அன்புள்ளவள். இதனைப் படித்தோர் தெரிந்து கொண்டபடி குறிப்பிட்ட ஒரு நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டும் விவகார சாமார்த்தியத்தினாலும் அவள் அப்பொழுது அங்ஙனம் நடந்து கொள்வாளானாள். அப்போது அவள் தன்நெஞ்சத்திற்குக் கொடுமை செய்தன ளாயின், இப்போது தன் அப்பத்தையும் உப்பையும் தின்ற அழகிய களங்கமற்ற இளம்பெண்ணுக்குத் தான் இரண்டகமாய் நடக்கவேண்டி யிருத்தலைப்பற்றித் தன்னையே தான் இன்னும் மிகுதியாய் அருவருப்பாளானாள். சில சமயங்களில் குமுதவல்லியின் இசையினிமை வாய்ந்த குரலொலியானது காந்தருவ கானத்தைப்போல மீனாம்பாள் செவிகளிற் சென்று ஒழுகினது - வேறு சில சமயங்களிற் குமுத வல்லியின் பெரிய நீல விழிகளின் மெல்லியல் நோக்கமானது அவள்மேற்சென்று இனிது வைகிற்று - மற்றுஞ் சில சமயங் களில் குமுதவல்லியின் இங்குலிகம் போன்ற இதழ்களானவை மிக இனியகுறுமுறுவல் முகிழ்த்தன - அத்தகைய சமயங்களி னெல்லாம் மீனாம்பாள் தன் நெஞ்சம் அவ்விளம் பெண்மேல் ஆவல்கொள்ளக் கண்டாள். அப்போது அவள் அவளைத் தன் மார்புறத் தழுவி யிருக்கக் கூடும் - மிகவும் நேசிக்கப்பட்ட தன் ஒரு சகோதரியைக் கட்டியணைக்கும் அத்தனை வேட்கை யோடும் அவளையும் அணைத்திருக்கக்கூடும் - அவள் செல்லும் வழியைச் சூழ்ந்திருக்கும் மோசங்களைக் குறித்து அவளை எச்சரித்து மிருப்பள்.

ஆனால் இல்லை! - மீனாம்பாள் அங்ஙனம் நடக்கவில்லை. அவளது தீவினையின் வலியானது இன்னும் முதன்மை பெற்று நின்றது. அவள் நல்லான்மேல் வைத்திருந்த காதலே அவன் விருப்பத்திற்கு மாறு பேசாமல் கீழ்ப்படியவும் அவன் பற்று வைத்தவற்றில் தானும் பற்றுவைத்தொழுகவும் பிணையாய் இருந்தது. என்றாலும் அப்போதிருந்த அவள் மனநிலையானது அவள் நல்லொழுக்கங்களை எல்லாவற்றிற்கும் மேலே எழச்செய்து அவள் நல்உணர்வுகளுக்கு ஆட்சி தரற் பொருட்டு ஒரு சிறு நற்சமயத்தை மாத்திரம் அவாவி நின்றது.

சாப்பாடு முடிந்தது; இப்போது இவ்விரு நங்கைகளின் பாங்கிமாரும் சிறிது தூரத்தில் ஒருங்குசேர்ந்து விருந்துண்

டார்கள்; மீனாம்பாளுங் குமுதவல்லியும் இன்னும் அந் நீரோடையின் கரை மருங்கே உட்கார்ந்திருந்தனர். அக்கள்வர் தலைவன் மனைவியானவள் திரும்பவும் பயணந் தொடங்க வேண்டும். அவசியத்தைப்பற்றித் தான் பேசும் வகையிலே சம்பாஷணையைத் திருப்புதற்கும், அதனால் குமுதவல்லியின் வாயின் நின்றே அவள் தானும் நீலகிரிக்குப் போவதை வருவித்தற்கும், அவ்வாற்றால் வழியிலே துணை கூடிச்செல்லுங் கருத்து மொழியப்படுதற்கும் ஆனவிதமாய்ப் பேசத் துவங்கினாள்; ஆனால் அச்சமயத்தில் அவ்விடத்தில் வேறோர் ஆள்வந்து தோன்றலாயிற்று.

இஃது ஒரு துருக்கி தேசத்துப் பெண்பிள்ளை; இவள் தான் அணிந்திருந்த உடுப்பினாலும் தன் கையிற்கொண்டு செல்லும் ஒரு சிறு சந்தனப் பெட்டியினாலும், ஆசியாக் கண்டத்தும் அதனை யடுத்த நாடுகளினும் மருந்துச் சரக்குகளும், வாசனைக் கூட்டுகளும், மருந்துகளும் விற்றற் பொருட்டுச் சுற்றித் திரியும் அறிவான் மிக்க பெண் மக்களுள் ஒருத்தியாகக் காணப்பட்டாள். இப்போது நாம் குறிப்பிட்டு பேசும் இப்பெண்மகள் நடுத்தர வயதும், நீண்டு நேரான வடிவும் உள்ளவள்; சணல் நூற்புடவையால் தன்முகத்தின் பெரும் பாகத்தை வழக்கமாய் முக்காடிட் டிருந்தாலும் மங்கலான நிறம் உடையவள்.

அவள் அவ்விரண்டு நங்கைமாரையும் அணுகி மலைய மொழியில், “அழகுள்ளவர்களே, என்னுடைய சாம்பிராணி வர்த்திகளையேனும் வாசனைக் கூட்டுகளையேனும் வாங்கிப் பாருங்கள்! எல்லாக் காயங்களையும் ஆற்றும் என்னுடைய தைலங்களையேனும், எல்லா விஷங்களுக்கும் மாற்று மருந்தான என் சூரணங்களையேனும் வாங்கிப் பாருங்கள்! - அல்லது உங்கள் அலங்கார மேசைகளுக்குச் சிங்காரமாய் வைக்க அழகான அம்பர்த்துண்டுகளும் என்னிடம் விலைக்கு இருக்கின்றன. நீங்கள் கலியாணமானவர்களாயிருந்தால் உங்களுக்குக் கணவன்மார் இருப்பர் - அங்ஙன மில்லாவிட்டால் உங்களுக்குக் காதலர் இருப்பர் - அவர்களுக்கு நீங்கள் என் அழகிய அம்பரை இனாமாகக் கொடுக்கலாம். **திகழ்கலை**யின் சாக்குகளிற் சிலவற்றை வந்து வாங்குங்கள்! அலைந்து திரியும் திகழ்கலைக்கு ஒரு நல்ல உதவியைச் செய்வது அதிர்ஷ்ட மாகும்!” என்று சொன்னாள்.

இவளை யொத்த அறிவான மிக்க பெண்பிள்ளைகள் இங்ஙனம் பசப்பிப் பேசுவது வழக்கத்தில் இல்லாவிட்டால், காதலர் இருக்கக்கூடிய விஷயத்தைப் பற்றித் திகழ்கலை பேசிய ஒரு பகுதி ஏதோ மரியாதையற்றதாக வாயினும் நாகரிக மில்லாததாக வாயினும் காணப்பட்டிருக்கும். இதுதான் வழக்க மென்பது குமுதவல்லிக்கும் மீனாம்பாளுக்கும் தெரியும்; அதனால், திகழ்கலைகிட்ட நெருங்கிவந்தபோது குமுதவல்லி நல்ல குணத்தோடு நகைத்தாள். மீனாம்பாளும் அங்ஙனமே நகைத்தாள். -ஆனால் மரியாதையோடும் எச்சரிக்கையோடும் மாத்திரம் அணுகற் பாலகான ஒரு விஷயத்தைக் குறித்துத் தான் அத்தனை திறமையோடும் சம்பாஷணையைத் திருப்புகிற சமயத்தில் நேர்ந்த இவ் இடையூற்றால் தான் அடைந்த கவலையை மறைப்பதற்காகவே இவள் அங்ஙனம் நகைத்தாள். திகழ்கலையோ ஒருவரோடு மற்றவரும், நகைத்ததனால் உள்ளத்தில் உற்சாசங் கொள்ளப் பெற்றாள்; உடனே தான் புல்லின்மேல் உட்கார்ந்து கொண்டு தனது சிறிய சந்தனப் பேழையைத் திறந்தாள்.

“இதோ கலப்பில்லாத சிறந்த சுத்தமான குலாப்பூவின் அத்தர் அமைத்த சிறு குப்பிகள். இதோ மிகக் கொடிய விஷத்தையும் கடுக மாற்றும் மருந்துகளாகிய சூரணங்கள். பாண்டி தேசத்து அதிபதிக்கு ஆறுமாதத்திற்கு முன்னே ஒரு மோசக்கார அடிமை ஒரு கிண்ணம் பானகத்தில் தந்திரமான ஒரு நஞ்சைக் கலந்து கொடுத்தபோது அதை நான் இதனால் தீர்க்கவில்லையா? - இது திகழ்கலையின் புகழை மிகுதிப் படுத்தவில்லையா? இதோ, பெருமாட்டிகளே, சிறிது முன்னே நான் சொல்லிய சிறந்த அம்பர்த்துண்டுகள். ஆண்டவன் அறிய இவைகள் பளிங்குக் கல்லைப்போல எவ்வளவு தெளிவாய் இருக்கின்றன!” என்று அவள் மொழிந்து, பயபத்தியிற் சிறந்த பார்வையோடுங் குரலோடும் மருந்துவைக்கும் சிறு பரணிகள் இரண்டு மூன்றைக் கையில் எடுத்து, “இதோ ஒரு மருந்து, இதிற் சேர்ந்திருக்குஞ் சரக்குகள் அலைந்து திரியும் திகழ்கலைக்கு மாத்திரந்தான் தெரியும்! இந்தப் பரிதன திரவியத்தை இவ்வுலகத்திலுள்ள எல்லா உயிர்களிலும் திகழ்கலை மாத்திரமே செய்யத் தெரிந்தவள்.” என்று தொடர்ந்து சொன்னாள்.

*இந்தப் பசபசப்புப் பேச்சில் தனக்குப் பிரியமேனும் மகிழ்ச்சியேனும் இல்லாவிட்டாலும், அந்தப் பெண்பிள்ளையைப் பிரியப்படுத்த வேண்டுமென்னும் நற்குணத்தால் "அஃது எங்ஙனம் வந்தது திகழ்கலை; இவ் வற்புத மருந்துமுறை உன் வசத்தில் எவ்வாறு வழிதேடி வந்தது?" என்று குமுதவல்லி வினவினாள்.*

*"ஆ! பெருமாட்டி, அஃது என்னிடத்தே மாத்திரமுள்ள மறைபொருள்!" என்று இரகசியக் குறிப்புமிக்க பார்வையோடு மறுமொழி கூறுவாளாய்ப் பின்னும், "என்றாலும், இந்தப் பரிமள திரவியம் மேலான நற்குணங்கள் உள்ளதென்று ஆண்டவன் அறிய ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்! இந்த மேற்கணவாய் மலைப் பக்கங்களில் நன்குமதிக்கப்படுகின்ற பூர்ச்சமரத்தின் வெள்ளைப்பட்டைச்சாறு இவ்வுயர்ந்த பரிமள திரவியத்தின் கலவையிற் சேர்ந்திருக்கிறதென்று திறந்து சொல்ல நான் பின்வாங்கவில்லை; இன்னும் இதிற் கலக்கப்பட்டுள்ள பூண்டுகளும் மருந்துகளும் மற்றும் பல உண்டு; அவைகள் இவ்வெள்ளைப் பூர்ச்சமரத்தின் நோய் ஆற்றுந் தன்மையினும் மிக உயர்ந்தனவாகும். பதினெட்டு மாதங்களுக்கு முந்தி மிகவும் மறைவான நிலைமையில் கிழவன் ஒருவனை இந்த உறையைக் கொண்டு யான் நோய் தீர்க்கவில்லையா?" என்று எடுத்துரைத் தாள்.*

*"நீ அங்ஙனஞ் சொன்னால், திகழ்கலை, அஃது உண்மையாகத் தான் இருக்க வேண்டும்; ஏனென்றால், நீ பொய்சொல்லத் தெரியாதவள் என்று யான் உறுதியாக நம்புகிறேன்." என மீனாம்பாள் மொழிந்தாள்.*

*"பெருமாட்டி, நீங்கள் என்னை இறக்கிப் பேசிக் கேலி செய்கிறீர்கள்; ஆனாலும், அது நான் சொல்லுகிறபடியேதான் உள்ளதென்று கடவுளறிய ஆணையிடுகிறேன்!" என்று அவ்வறிவோள் விடை பகர்ந்தாள்.*

*"எப்படி அந்நிலைமை அவ்வளவு புதுமையா யிருந்தது?" என்று குமுதவல்லி கேட்டாள்.*

*திகழ்கலை உடனே நாகநாட்டரசியின் மேல் ஒரு புதுமையான பார்வையைச் செலுத்தினாள்: அதன்பிறகு, அறிவுக்குத் தென்படாத அதே ஆழ்ந்த நோக்கத்தை மெல்ல*

மீனாம்பாள்மேல் திருப்பினாள்; இங்ஙனஞ் சிறிதுநேரம் பெரிதும் வாய்பேசாதிருந்தாள்.

கடைசியாக அவள் வாய்திறந்து அமைதி மிக்க குரலோடு, “பெருமாட்டிகளே, புதுமையான ஒரு கதையைக் கேட்க உங்களுக்கு ஒய்வும் விருப்பமும் இருந்தால், நான் அதனை விரித்துரைக்கின்றேன். ஆண்டவன் அறிய அஃது உண்மை யென்றே ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்! யான் உயிரோடி ருப்பவளாயினும், உண்மை நம்பிக்கையுடையவர்கள் இறந்தபின் செல்லும் இறைவன் துறக்க வுலகத்தைப்பற்றி ஒரு சிறிது தெரியப்பெற்றிருக்கின்றேன் என்னும் நம்பிக்கையினின்று என்னை எதுவும் பிறழ்த்தமாட்டாது” என்று கூறினாள்.

திகழ்கலை கூறிய இப்புதிய சொல்லைக் கேட்டவுடனே மீனாம்பாள் தானுந் தன் கணவனும் சிலநாளாகப் பெறுதற்கு ஆவலுற்றிருக்குந் துறக்க நிலத்தின் காட்சிகளோடு தெளிவுந் திட்டமும் இன்றி இதனை இயைபுபடுத்தினவளாய் “உண்மை தான்!” என்று திடுமென மொழிந்தாள்.

மேன்மைமிகுங் கனவைப்போன்ற அத்தகைய எண்ணங்கள் தன்னுள்ளத்தின்கண் மிதக்கப் பெறாதவளா யிருந்தும் குமுதவல்லியுங்கூடத் திகழ்கலை மொழிந்தே புதுமையும் மறைபொருளும் உள்ள அச்சொற்களைக் கேட்டு அதனை அறியும் வேட்கையுடையளானாள்; ஆகவே, அவ் விரண்டு நங்கைமார்களின் பார்வைக் குறிப்பினாலேயே தான் அக்கதையை எடுத்துரைக்கலாமென்று அம்மேதக்காள் கண்டுகொண்டாள். தன் மருந்துகளின் திறனை உறுதிப்படுத்திக் காட்டுதற்கும், ஒருநாழிகை நேரம் இனிதாகக் கழியவேண்டித் தான் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்குத் தக்க ஈடாகப் பரிசு பெறுதற்கும், மெய்யோ பொய்யோ அக்கதையைச் சொல்லு தற்கு நுணுக்கமாக அவள் வழி பிறப்பித்துவிட்டாள்.

“பதினெட்டு மாதங்களுக்கு முன்னே” என்று துவங்கி அந்நல்லோள் அக்கதையைச் சொல்வாளானாள்: “மிகவுங் கடுமையான ஒரு மழை காலத்தின் நடுவிலே யான் நீலகிரி நகரத்தில் இருக்கும்படி நேர்ந்தது. அப்போது அங்கே எல்லாரும் மெச்சத்தக்க வகையாய்ச் சில நோய்களை நீக்கினேன்; அதனால் என் புகழ் வெளியூர்களிற் பரவிற்று. ஒருநாள் அவ்வூரிலுள்ள

பெரியவர் ஒருவர் யான் தங்கியிருந்த இடத்திற்று வந்து, தான் என்னைப்பற்றிக் கேள்வியுற்ற எல்லாவற்றாலும் குறிப்பான ஓர் அவசரத்தின்பொருட்டு என்னைக் கலந்துகொள்ளும்படி செய்விக்கப்பட்டதாகத் தெரிவித்தனர். அதற்கு, மக்களுக்குள்ள கருவிகளைக்கொண்டு போராடக்கூடிய எவ்வகையான அவசரத்திலும் யான் உதவத்தக்க திறமை வாய்ந்தவள் என்பதை அவருக்கு உறுதிகட்டிச் சொன்னேன். தான் செல்லும் வழியைக் கையாற்றடவிப் பார்த்துச் செல்வதுபோலவும், தான் இன்னுந் சிறப்பாகப் பேசுவது தனக்குத்தகுமா வென்றும் தான் தெரிவிக்கப்போகும் கருத்துக்களோடு யான் ஒட்டி வரக்கூடுமா வென்றும் திண்ணமாக அறிந்துகொள்ளுதற்கு என்னை ஆழம் பார்ப்பதுபோலவும் முதலில் அவர் தற் காவலோடும் எச்சரிக்கையாக பேசினார். நங்கைமார்களே, எம்மிருவருக் குள்ளும் நடந்த பேச்சுமுழுதுஞ் சொல்லி உங்களை நான் வருத்தவேண்டுவதில்லை. யான்செய்யும்படி கேட்டுக் கொள்ளப் பட்ட உதவியின் தன்மை இதுவென்று உடனே சொல்லிவிடுவதே எனக்குப் போதும். தம்மோடு நான் சிறிது நெடுந்தூரங் கூடவே வரவேண்டுமென்றும், சிலதூரம் சென்ற வுடன் யான் கண்ணைக் கட்டிக்கொள்ள இசையவேண்டு மென்றும் அப்பெரியவர் - அவர் பெயரை யான் சொல்லாது விட்டதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும் - உடன் படிக்கை செய்துகொண்டார். யான் நலப்படுத்தும்படி கேட்டுக் கொள்ளப்பட்ட நோயாளியை யான் அதன் பொருட்டுப் பார்க்கவேண்டுவது மிகவும் இன்றியமை யாததா யிருந்தமை யால், யான் இந்த வகையாகவே அழைத்துக் கொண்டு போகப்படல் வேண்டும். இதற்கெல்லாம் நான் இணங்கினால் ஏராளமான தொகை எனக்குக் கைம்மாறாக அளிக்கப்படும்: நான் குறிப்பிட்ட அப்பெரியவர் நேசத்தில் பின் எப்போதும் நான் நம்பிக்கை வைத்திருக்கலாமென்றும் வலியுறுத்திச் சொல்லப்பட்டேன். நல்லது, பெருமாட்டிகளே, இஃது என்னைப் பிடிக்கும்படி செய்த உபாயம் ஆகமாட்டா தென்றும் எண்ணிப் பார்த்தேன்; ஏனெனில் அப்பெரியவர் நாடெங்கும் நன்கு மதிக்கப்பட்டவர்; மேலும் அலைந்து திரியும் ஏழையான அறிவோள் ஒருத்தியின் உயிரை வாங்குவது அவருக்கு யாது பயனைத் தரும்? ஆகவே, நான் இசைந்தேன்; அவர் தமது ஈகைக்கு அறிகுறியாக அச்சாரமும் கொடுத்தார். மாலைப் பொழுதின் இருள் வந்தவுடனே, அப்பெரியவர் என்னை

அழைத்துக்கொண்டு போக வந்தார். கடுகிச் செல்லும் வலிய குதிரைகளின்மேல் தனித்தனியே ஏறிக்கொண்டு நாங்கள் இருவேமும் நீலகிரியை விட்டுச் சென்றோம். இரவுமுழுதும் வழிச்சென்றோம்; காலைப்பொழுது வந்தவுடனே மேற் கணவாய் மலைக் காடுகளின் இடையே நாங்கள் இருந்தோம். சிலநாழிகை நேரம் பெருங்குகை ஒன்றிலே நாங்கள் இளைப் பாறி யிருந்தோம்;யான் முன்னமே உங்களுக்குச் சொல்லியபடி மழைக்காலம் மிகவுங் கடுமையாய் இருந்தமை யால், நாங்கள் ஏறக்குறையக் குளிரினால் மடிந்துபோவோம் போலிருந்தது; அதனால் அப்பெரியவர் அங்கே தீமூட்டினார். உணவுக்கு வேண்டிய நல்ல பண்டங்களும், சிறந்த பானகங்களும் அவர் கொண்டுவந்திருந்தார். ஆகவே, நாங்கள் குளிர்காய்ந்து மகிழ்ச்சியோடு வசதி பெற்றிருந்தோம். நாங்களும் எங்கள் குதிரைகளும் போதுமான அளவு இளைப்பாறி உணவு கொள்ளும் பொருட்டுப் பலநாழிகை நேரம் அக்குகையிலே தங்கி யிருந்தோம். கடைசியாக எங்கள் பயணம் தொடங்க வேண்டி வந்தபோது என் விழிகளின்மேல் துணிகட்டவேண்டிய நேரமும் வந்ததென்று கண்டு கொண்டேன். இரண்டகமாய் நடக்கும் எண்ணம் இருந்தாலும் யான் விழி திறந்து காணக்கூடாதபடி அவ்வளவு செவ்வையாகக் கண்கட்டப் பட்டேன். பெரு மாட்டிகளே, உங்களை நான் அலுப்படையச் செய்யவில்லை யென்று நம்புகின்றேன்?"

"இல்லை, இல்லை! என் நல்ல அம்மையே, சொல்லு, சொல்லு! உனது கதையை அதற்குரிய ஆவலோடும் கேட்டு வருகின்றோம்." என்று மீனாம்பாள் வியப்புடன் கூறினாள்.

குமுதவல்லியும் தன் பார்வையினால் மனக்கிளர்ச்சி உண்டு பண்ணினாள்; அதனால் அவ்வறிவோளும் அக்கதையைத் தொடர்ந்து சொல்வாளானாள்.

"கண்கட்டப்பட்டிருந்தாலும் இன்னும் என் குதிரைமேலே தான் நான் இருந்தேன். அந்தப் பெரியவர் என் பக்கத்தில் சவாரி செய்துகொண்டு, நான் ஏறியிருந்த குதிரையின் கடிவாளத் தைத்தாம் பிடித்துக் கொள்ளத்தக்க வகையாக அமைத்து அதனால் அதனை நடத்திவந்தார். சிலநேரம் நாங்கள் கடுவிரைவாய்ச் சென்றோம். சிலநேரம் ஏற்றமான இடங்களில் ஏறிச்செல்லும்போதும், குதிரையின் நடை வேறுபாட்டால்

அருமையுங் கரடுமுரடு முள்ளனவாக யான் தெரிந்துகொண்ட நீளங்களைத் தாண்டிச் செல்லும் போதும் மிகவும் மெதுவாகச் சென்றமையால் அங்காந்த மலைப்பிளவுகளைப் பற்றியும் திடுக்கிடும்படியான செங்குத்து மலைகளின் விளிம்பிற் சுற்றிச் செல்லும் வழிகளைப்பற்றியும் நினைத்துக் கலங்கினேன். இந்த வகையாக மங்கல் மாலைப்பொழுது வந்து சூழும் வரையில் வழிச் சென்று கொண்டிருந்தோம்; அதன் பிறகு மறுபடியும் ஓரிடத்திற் றங்கினோம்.என் கண்ணினின்றும் கட்டு அவிழ்த்துவிடப்பட்டது; மேற்கணவாய் மலைப்பக்கத்தில் மிகக் கடுமையானதும் அச்சுறுத்துவதுமான ஓரிடத்தில் நான் இப்போது வந்திருந்தேன் என்பதனை எனக்குக் காட்டுவதற்கு இன்னும் போதுமான வெளிச்சம் இருந்தது. நங்கைமீர், அங்காந்த மலைப் பிளப்புகளையும், உயர்ந்தோங்கிய மலை களையும், வழுக்கி நகரும் பனிப் பாறைகளையும், இடியென முழங்கும் பெரிய மலையாற்றின் வீழ்ச்சிகளையும், நடுக்கந்தரும் கணவாய்களையும், உறைபனிமூடின மிக உயர்ந்த இடங் களையும் நீங்களே நினைத்துப் பாருங்கள்; அப்போதுதான் என்னைச்சூழ இருந்த நிலத்தோற்றங்களின் மேன்மையும் திகிலும் உட்கும் வாய்ந்த வடிவங்களைப்பற்றி நீங்கள் ஏதோ சிறிது புல்லிய நினைவு கொள்ளக்கூடும். மற்றொரு பெருங்குகை எமக்குத் தங்கும் இடமாயிற்று; திரும்பவுந் தீமூட்டப்பட்டது- உணவுப் பொருள்களும் பானீயங்களும் கொண்டுவந்து வைக்கப்பட்டன- மற்றும் ஒரு முறை யான் தீக்காய்ந்து மகிழ்ச்சியோடும் இளைப்பாறி யிருந்தேன்.” என்று திகழ்கலை மொழிந்தாள்.

“இனி இப்போது தான் உனது கதையில் தெரிந்து கொள் வதற்கு மிகுந்த ஆவலை எழுப்பும் பகுதி வரப்போகிறதென்று நினைக்கின்றேன்.” என்று மீனாம்பாள் தன்னகத்தெழுந்த ஆவலையும் அயிர்ப்பையும் வருத்தத்தோடு மறைத்துக் கொண்டு கூறினாள்.

“கடவுள் அறிய அஃது அப்படித்தான் உள்ளது! கடுங் குளிர் நிறைந்ததும், கரடுமுரடான தன்றன்மையால் உள்ளத்திற் பதியத் தக்கதுமான இயற்கை யமைப்பு வாய்ந்த அவ்வச்சம்மிக்க இடத்தில் நாங்கள் வந்து சேர்ந்த போது, நான் முன் சொல்லிய படி மாலைக் காலமாகத்தான் இருந்தது. ஏறக்குறைய ஐந்து நாழிகை நேரம் பெரும்பாலும் முழுதும் இருள் வந்து சூழும்

வரையில் நாங்கள் அங்கே தங்கியிருந்தோம்; அவ்விருளின் இடையிலே அடுத்துள்ள மலைக்குவடுகளிலுள்ள உறை பனியின் துலக்கம் மாத்திரம் சிறிது தெரிந்தது. அப்பொழுது அப் பெரியவர் என்னை எழுந்து தன்னுடையனே வருவதற்கு ஆயத்த மாம்படி கட்டளையிட்டார். இப்போது மறுபடியும் என் கண்ணைக் கட்டிவிட்டார்: ஆனால், இந்த முறை நாங்கள் எங்கள் குதிரைகளின் மேல் ஏறவில்லை;--அவைகள் அக் குகையிலே பத்திரமாக நிறுத்தப்பட்டன. நாங்கள் கால் நடையாகவே செல்லவேண்டுவதாயிற்று. அந்தப் பெரியவர் என்னைக் கையைப் பிடித்து அழைத்து கொண்டு சென்றார்; இவ்வாறு ஒரு நாழிகை நேரம் நடந்து சென்றோம்; உறை பனியால் ஆன அம்புகள் என் மூளையை ஊடுருவிப் பாய்வது போலக் குளிர் அவ்வளவு முறுகித் தோன்றியது. கடைசியாகச் சில நொடிநேரம் ஓரிடத்தில் வந்து நின்றோம். பின்னர் அப்பெரியவர் என்னை முன்னுக்கு நடத்தினார்--மிகவுங் கொடிய குளிரின் வருத்தம் சிறிது நீங்க உண்டான வெது வெதுப்பி னாலும், எங்கள் கால்களில் உண்டான மழுங்கிய எதிர் ஒலியி னாலும் ஏதோ ஒரு குகை யினுள் நுழைந்தோம் என்பாதை நான் சொல்லக்கூடும். அது நீண்டதாயிருந்தது; அது முடிவு பெற்றவுடனே, அப் பெரியவர் என்னை நோக்கி, "இப்போது நீ படிக்கட்டுகளின் வழியே இநங்க வேண்டியிருக்கின்றது. அதுவும் ஆழத்தில் இறங்க வேண்டும்; என்றாலும் என் கையைப் பிடித்துக் கொள், அஞ்சாதே' என்று சொன்னார். ஒரு கதவு மெல்லெனத் திறப்பது போல் ஓர் ஓசை எனக்குக் கேட்டதென்று நினைத்தேன்; ஆனாலும் அஃது எனக்கு உறுதிப்படவில்லை. இறங்கத் துவங்கினோம்; உடனே எங்கள் காலடிகள் புதுமை யான எதிரொலியை எழுப்பினமையினாலே, மூடிக் கொள்ளும் கதவினொலி ஏதேனும் இருந்தாலும் அஃது என் செவியிற் படவில்லை. வரவரக் கீழ் இறங்கிச் சென்றோம். உரமான மலைப்பாதையில் வெட்டப்பட்டுத் திருகிச் செல்லும் படிக்கட்டாக அது காணப்பட்டது. இன்னுங்கீழே, இன்னும் நெடுந்தூரம் கீழே கீழே இறங்கிப் போனோம்; வளைந்து வளைந்து சென்றமையால் என் தலை கிறுகிறு வென்று சுற்றத் தொடங்கிற்று, இறங்கும் வருத்தத்தால் என் கால்கள் நோவுற் றன, ஆயினும்; ஆழத்திற் செல்லச் செல்ல வாயுமண்டலம் வெப்ப முள்ளதாவதை உற்றறிந்தேன்; புதுமையும் அச்சமும் நிறைந்த எண்ணங்கள் படிப்படியே என் உள்ளத்திற் றோன்றலாயின. தீது

செய்யும் பொல்லாத கூளிப் பேய் தான் மக்களுருவில் வந்து, என்னைத் தேடிப் பொருட்கள் தருவதாக ஏய்த்து, இப்போது என்னைத் தான் இருக்குங் கொடிய பாதாள உலகத்திற்குக் கொண்டு போவதாய் இருக்கலாமோ!" என்று திகழ்கலை கூறுகையில்,

இடையே குமுதவல்லி இதனைக் கேட்டவுடன் தன் மெல்லிய உடம்பு நடுங்கப் பெற்றவளாய், "ஆ! இந்நினைவுகள் உண்மையிலே வெருவத்தக்கனவாய்த் தாம் இருக்க வேண்டும்!" என இயம்பினாள்.

மீனாம்பாள் ஒவ்வொரு நொடியும் தன் உள்ளத்தெழுந்த ஐயம் முதிர்ந்தமையால் அதனைத் தாங்கப் பெறாதவளாய்க் "கதையைச் சொல்லு, சொல்லு!" என்று விளம்பினாள்; அவ்வறிவோள் தன் கதையைச் சொல்லிக் கொண்டு வந்த மாதிரி போதுமான வரையில் சுருக்கமுள்ளதாக இருந்தாலும், அக் கொள்ளைக்காரன் மனைவிக்கு அது மிகுதியும் மெதுவுள்ள தாகவே காணப்பட்டது.

மறுபடியும் திகழ்கலை, "என்னுடைய எண்ணங்கள் இங்ஙனம் என்னைக் கவர்ந்து கொள்ளப் புகுந்த சமயத்தில், சடுதியிலே நாங்கள் நின்றோம்--வெளியிலே ஒரு கதவு திறந்தது; உடனே நறுவிய வாயு மண்டலத்தின் இருப்பு எனக்குப் புலனா யிற்று. மழை காலத்தின் குளிர் மிகுந்த நீண்ட இராப் பொழுதின் நள்யாமமாயிருந்தும் அப்போது அங்கு வீசிய காற்று மெல்லி தாயும், வெதுவெதுப்பாயும், நறுமணங் கமழ்வதாயும் இருந்தமை யால், என்னுடைய திகிலெல்லாம் ஒரு நொடிப் பொழுதிற் பறந்து போயின; என்னுள்ளத்தில் இனியதொரு கழி பெருங்களிப்பு எழுவது உணர்ந்தேன். என்னை அழைத்துப் போம் அப் பெரியவர் திரும்பவும் என்னைக் கைபிடித்து முன்னே அழைத்துச் சென்றார். அங்குள்ள கருங்கற் பாறை யினாற் செய்யப்பட்டது போன்ற கதவு பேரோசையோடும் எனக்குப் பின்னே சாத்திக் கொள்ளக் கேட்டேன். சிலவேளை மென்புல் வளர்ந்த பற்றை போலவும், மற்றுஞ் சிலவேளை நன்கு மிதிபட்ட பாதை போலவுந் தோற்றப்பட்ட இடத்தில் இறங்கிக் கொண்டே போயினோம். உறைபனியும் மலைகளும் நிறைந்த அப்பக்கத்தில் என்னைச் செவிடு படுத்தின நீரோட்டங்களின் பேரிரைச்சல் போலாது, அதனோடு மாறுபட்டு இனியவாய்த் தோன்றின மலை

வீழாறுகளின் அமைதியான முறுமுறுப் பொலிவும், சிலுசிலுவென்று ஓடும் அருவிகளின் ஓசையும் என்காதிற் பட்டன. நடந்து செல்வது உழைப்பாகக் காணப்படாத மெல்லெனச் சரிந்த இடங்களில் இறங்கிக் கொண்டும், ஆறுதலும் மென்மையும் நறுமணமும் மிக்க தென்றற் காற்றினிடையே ஒவ்வொரு நொடியும் நுழைந்து கொண்டும் மேலும் மேலும் போயினோம். என் ஆடைகள் செடிகளின் மேற்பட்டுச் சரசரவென்று ஓசை செய்தன: என் காலடிகள் சிலநேரம் மலர்களினிடையே அகப்பட்டுக் கொண்டன: பிடிக்கப்படாத எனது மற்றைக்கை கிளை களிலிருந்து தொங்கும் பழங்களின் மேல் தட்டுப்பட்டன. யான் நுழைந்த அவ்விடம் இளவேனிற் காலமுடையதாய்த் தோன்றியது! கடைசியாக என்னை அழைத்துச் சென்றவர் திடுமென நின்று என் கண்களினின்றுங் கட்டவிழ்த்து விட்டார்.'' என்று சொல்லவே,

உடனே மீனாம்பாள், "நீ என்ன கண்டாய்? என்ன கண்டாய்? விரைந்து சொல்!'' என்று வினவினவள். அப்புறம் நம்பிக்கையால் எழுந்த மிகுகளிப்பினிடையே தன்னைத் தானே தடுத்துக் கொண்டு, முன்னிலும் அமைதியாய், "நல்ல திகழ்கலை, உனது கதை வலுத்த ஆவலைக் கிளப்ப வல்லதாய் இருக்கின்றது.'' என மொழிந்தாள்.

"மேற்கணவாய் மலைகளின் நடுவே மறைபட்டிருக்கும் இன்ப உறையுளைப் பற்றிய ஊரார் சொற்களை நான் கேட்டிருக்கிறேன்: ஆனால், கட்டுக்கதை குடி கொண்ட அந்நாடுகளில் நடைபெறும் பொய்க் கதையாகவே இவற்றை நான் இதுவரையில் நினைந்து வந்தேன்.'' என்று குமுதவல்லி கூறினாள்.

"இங்கே கட்டுக்கதை இல்லை; நான் உண்மையே சொல்லி வருகிறேனென்று கடவுளுக்கு ஒப்பாக ஆணையிட்டுக் கூறு கிறேன்.'' என்று திகழ்கலை பகர்ந்து, பின்னும் மீனாம்பாள் பக்கமாகத் திரும்பி, "பெருமாட்டி, நான் என்ன கண்டேன் என்று கேட்டீர்களே, அதனைச் சொல்லுகின்றேன் கேளுங்கள், வெண்மதி துலக்கமாக விளங்கிற்று. மக்கள் கண்ணிற்கு என்றுந் தென்பட்டிராத மிக அழகிய அவ்விடத்தின் மேல் அதன் ஒளிபட்டுத் துலங்கியது. அவ்விடம் மிக அழகியதாய் மாத்திரம் இருக்கவில்லை, மற்றொரு வகையில் மிக்க வியப்புடைத்தாயும்

*சாலவும் விழுமியதாயும் இருந்தது! பலதிற விநோத வடிவங் களாக விளிம்பு உடைந்த பெரிய ஒரு சீனத்துப் பீங்கானை நினைத்துப் பாருங்கள்; அதன்பிறகு, அப்பீங்கான் அடியிற் கிடந்த சில சிறிய பூச்சிகள் மேல் நிமிர்ந்து அவ்விளிம்பைச் சுற்றி நோக்கினால் அவற்றிற்கு எவ்வகையான தோற்றமுண்டாகு மென்பதை நினைத்துப் பாருங்கள். புதுமையாகக் காணப்படும் இவ் எனது உருவகத்தைப் பொருந்திப் பார்க்குமிடத்து, அப் பெரியவர் என்னை அழைத்துக் கொண்டு போய் விட்ட அப்பள்ளத் தாக்கினடியில் யான் அப்பூச்சையைப் போல் இருந்து கொண்டு சுற்றிலும் மிகப் பெரிய மலைகளின் வட்டவேலியை மேல் நிமிர்ந்து நோக்கினேன். அங்குள்ள ஒவ்வொரு பொருளையும் நிரம்பவுந் தெளிவாக யான் பிரித்தறியத் தக்கபடி, வெண்டிங்கள் அத்துணை விளக்கத் தோடும் திகழ்ந்தது; வட்டமாயுள்ள மலைக்குவடுகளின் மேல் மூடிய பனிக்கட்டிகளின் எதிரொளி யால் அந்நிலவின் பளபளப்பு அப்பள்ளத்தாக்கிலே ஒருங்கு சேர்க்கப்பட்டு அத்துணை விளக்கத்தோடும் இலங்கியது. இப்பள்ளத் தாக்கினின்றும் அப்பால் ஏறிப் போகவாவது, அல்லது அப்பாலுள்ள காட்டிடங்களிலிருந்து ஏறி இதனுள் வரவாவது முயலும் எவரும் அங்ஙனங்கடந்து செல்வதற்கு ஏலாத வண்ணம் பிதுங்கி நீண்ட செங்குத்தான பெரும் பாறைத் தொகுதிகளோடு அவ்வோங்கிய பொருப்பிடங்களெல்லாம் அப்பள்ளத்தாக்கின் பக்கங்களில் நேர் நீண்டிருந்ததாகிய ஈதொன்றிலே தான் இம்மலையவேலி நான் சொன்ன ஒழுங்கின்றி விநோதமாக உடைந்த விளிம்பினை உடைய பீங்கான் உவமையினின்றும் வேறுபடுகின்றது. ஓ! இம்மலைய வேலிக்குப் புறத்தேயுள்ள நாடுகளிலெல்லாம் மிகக் கொடிய குளிர் மிகுந்த மழைக்காலமாயிருக்க, இப்படுகரின் ஆழ்ந்த இடத்திலோ இனியவேனிற் காலமாயிருந்தது! தித்திக்கும் பழக்குலைகளைச் சுமந்த முந்திரிக் கொடிகளையும் மணிகள் பதித்தாற் போலப் பன்னிற மலர்கள் நிறைந்த நிலத்தையும், என்னைச் சூழ எண்ணிறந்த நிலத்தாமரைப் (Rose Flower) பூக்கள் மலர் தலையும் யான் வேறுவேறு பகுத்தறியக் கூடியதாயிருந்தது.'' என்று திகழ்கலை சொல்லி வருகையில்;*

*“நிலத் தாமரைகளா? ஆம்!'' என்று மீனாம்பாள் களிப்பினால் மெய்ம்மறந்து கூறினாள்; தான் கேள்வியுற்ற இன்ப நிலத்தைப் பற்றிய எண்ணங்களே தன்னுள்ளத்தில் நிரம்பி*

நின்றமையால், அவள் அம்மலையவேலி என்னுந் துறக்க நிலத்தைப் பெறுதற்கு மிகுதியும் விரும்பினாள்.

குமுதவல்லி களங்கமற்ற தன்மையுடையவளாதலால், திகழ்கலை படுபொய்களைக் கட்டிச் சொன்னாள் என்று நம்பக் கூடாதவளாயிருந்தாலும், அவ்வளவு புதுமையானதும் நம்பிக்கை யற்றதுமான ஒரு வரலாற்றினை உண்மையென்று ஒப்புக் கொள்வதற்கும் தான் கூடாதவளாய், "இவைகள் எல்லாம் உண்மையிலே வியப்பாகவே இருக்கின்றன!" என்று கூறினாள்.

"ஆண்டவன் அறிய இவைகள் எல்லாம் மெய்யே என்று ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்! என்னுடைய கதையை முற்றுஞ் சொல்லி விடுகின்றேன். முழுமதி விரித்த தெள்ளிய வெண்ணிலவொளியின் உதவி கொண்டு அத்தூய நிலத்தை யான் இன்பமோடு வியந்து நோக்குதலை என்னை அழைத்துச் சென்ற அப்பெரியவர் சிறிது நேரம் பார்த்து மகிழ்ந்தார் போற் காணப்பட்டது; பிறகு அவர் அருள் கூர்ந்த புன்சிரிப்புடன் என்னைத் தன் பின்னே வரும்படி கட்டளையிட்டபோது அவர் சொன்னதாவது: 'மறுபடியும் இங்கிருந்த வெளியேயுள்ள பெரிய உலகத்திற்கு நீ போன பின்பு, இவ்விரகசியத்தை வெளியிட லாகாதென்று நான் சொல்ல வேண்டுவதில்லை; ஏனென்றால், இத்தகைய நீ வெளியிட்டாலும் எவரும் உன்னை நம்பவே மாட்டார்!" என்று திகழ்கலை திரும்பவும் உரைத்தாள்.

மீனாம்பாள் பெருங்களிப்பினால் ஓசையின்றி நீண்ட பெருமூச்செறிந்து, "ஓ! எங்ஙனமாயினும் நான் நீ சொல்லுவதை நம்புகின்றேன்!" என்று தனக்குட் சொல்லிக் கொண்டாள்.

திகழ்கலை திரும்பவுந் தன் கதையைச் சொல்லத் தொடங்கினாள்; "அப்பெரியவர் பூக்களும் பழம் நிறைந்த மரங்களும் பழக்குலை சுமந்த கொடிகளும் என்னும் அவற்றினி டையிலே என்னை வழி நடத்திக் கொண்டே சென்றார்; எனக்கு விருப்பமான கனி எவையேனும் அவற்றைப் பறித்துண்ணும்படி கட்டளையிட்டார். யான் அங்ஙனமே செய்தேன்; நங்கைமீர், அவ்வினிய படுகரிலே அன்று நான் விருந்துண்ட தீங்கனிகளைப் போல் அவ்வளவு சுவையான கனிகளை சுவைத்துப் பார்த்ததே யில்லை. அப்படுகரின் நடுவிலேயுள்ள புல் நிலத்தின் மேல் அமைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய மாளிகைக்கு அப் பெரியவர்

என்னை அழைத்துச் சென்றார். நிலவு வெளிச்சத்தில் வெண் சுண்ணவொளி போல் வயங்கும் புதுமையான ஒருவகைக் கற்களால் கட்டப்பட்டு இருந்தமையால் அஃது ஒரு மலைக்குகை போற்றோன்றியது. ஒரு சிற்றாறு அதன் அருகே சிலுசிலு வென்று ஓடியது; புல் நிலத்தைச் சூழ இருந்த பாங்கெல்லாம் நிலத்தாமரையின் தோட்டங்களைத் தவிர வேறில்லை. ஓ அம்மலர்களின் நறுமணத்தோடு அளாவி வீசும் தென்றற்காற்று எவ்வளவு இனிதாயிருந்தது! அது நோய்ப்படுத்துவதாகவேனும் கடுமையுள்ளதாகவேனும் தோன்றவில்லை. யான் அந்த உல்லாச மண்டபத்தினுட் கொண்டு போய் விடப்பட்டேன். அங்கே யான் பார்க்க வேண்டிய நோயாளியைக் கண்டேன். அவரும் ஆண்டின் முதிர்ந்த பெரியவராகவே இருந்தார்--ஆனால் இக்கதையின் இந்தப் பாகத்தைப் பற்றி யான் சொல்ல வேண்டுவதில்லை. ஒரு வாரம் முழுதும் அவ்வினிய பள்ளத் தாக்கின் கண் யான் தங்கி இருந்து அதன் ஒவ்வொரு பாகத் திலும் உலாவித் திரிந்தே னென்றும், என்னை அங்கே அழைத்துச் சென்ற பெரியவரையும், யான் மருந்து கொடுத்த மற்றொரு பெரியவரையுந் தவிர வேறு எவரையும் யான் அங்கே பார்த்திலேன் என்றும் சொல்வது மாத்திரம் போதும். யானும் அவர்க்கு நோய் தீர்த்தேன்!"

"ஓ, இவ்வழகிய பள்ளத்தாக்கைப் பற்றி இன்னும் மிகுதியாகச் சொல்! கனிகளையும் பூக்களையும் அமைதியான சிற்றாறுகளையும் விரைவான மலைவீழாறுகளையுந் தவிர வேறு எதனையும் நீ பார்க்க வில்லையா?" என்று மீனாம்பாள் வியப்புடன் வினாவினாள்.

அதற்குத் திகழ்கலை, "நங்காய், ஆம், மாந்தர்கண்கள் என்றுங் கண்டிராத நிரம்பவும் அழகான பறவைகளைப் பார்த்தேன்; மக்கள் செவிப்புலனில் என்றும்பட்டிராத மிக இனிய இசைகளையுங் கேட்டேன். வேலியாகச் சூழ்ந்துள்ள அம்மலைகளின் அடிப்படைகளும் நெடுந்தூரங் கீழே ஊடுருவிச் செல்வனபோற் காணப்பட்ட பெருமுழைஞ்சுகளின் நுழை வாயில்களையும் அவ்வாறே கண்டேன்: ஆனால், அவற்றுள் நெடுக நுழைந்து செல்வதற்கு எனக்குத் துணிவில்லாமற் போய்விட்டது. என்றாலும், நான் அப்படுகரில் தங்கியிருந்த ஒரு

கிழமை முழுதும் என்னைக் கலங்கச் செய்யும் அல்லது அச்சுறுத்தும் அல்லது அத்துறக்க நிலத்தில் யான் திளைத்த இன்பத்தினைப் பழுதுபடுத்தும் எந்த உயிரையும் யான் சிறிதேனும் காணவில்லை. அவ்விடத்தில் நரிகளின் ஊளைக்குரல் கேட்கப் படுவதில்லை--நிலத்தாமரைத் தூறுகளின் நடுவிலும் கொடி முந்திரித் தொகுதிகளினி டையிலும் ஓநாய்கள் ஒளிந்திருப்பதில்லை--புற்களினூடே பாம்புகள் களவாய் ஊர்ந்துவருவதில்லை--கழுகுகளுங்கூடத் தாம் ஓங்கிப் பறக்கும் உயரத்திலிருந்து இப்பள்ளத்தாக்கைப் பார்க்கு மட்டில் மன அமைதி பெறுவதல்லாமல், இதனுள் இறாஞ்சிப் போவதில்லை! நங்கைமீர், இன்னும் இதனை விரித்துச் சொல்லப் புகுவே னானால், அப்படுகரின் வளங் களையும் வனப்புகளையும் புனைந்துரைப்பதில் பல நாழிகை நேரங்கள் யான் கழித்து விடக்கூடும்; ஆனால் இக்கதையை நான் ஒரு முடிவுக்கு கொண்டுவரவேண்டும். அக்கிழமை முடிவில், யான் பார்த்து வந்த நோயாளி முற்றிலும் நோய் தீரப் பெற்றார்; என்னை அவ்விடத்திற்கு அழைத்துக் கொண்டு போன பெரியவர், ஓர் இராப் பொழுதின் நடுவில் நாம் புறப்பட வேண்டுமென்றறி வித்தார். யான் நோய் தீர்த்தவரிடத்தில் விடை பெற்றுக் கொண்டேன்: ஆனால், சொல்லற்கரிய துயரத்தோடும் யான் அப்படுகரைவிட்டுவர ஆயத்தமானேன். அப்பெரியவர் மெல்ல மெல்லச் சரிவாய் உயரம் அவ்விடத்திற்கு என்னை நடத்திக் கொண்டு சென்றார்; அதன்பிறகு என் கண்கள் கட்டப்பட்ட மையால், எனது மிச்சக்காலத்தையும் யான் மகிழ்வோடு கழித்து விடத்தக்க அத்துறக்க நிலத்தின் காட்சி மறைபட்டுப் போயிற்று. இல்லை இனி ஒரு போதுமில்லை!'' என்று உறுத்திச் சொல்லிப் பின்னும் ''அங்ஙனம் யான் சிலகாலம் போயிருக்கும் படி நேர்ந்த அவ்விடம் இந்திரலோகமாகத் தான் இருக்க வேண்டும்; மேலும் நான் உண்மை நம்பிக்கையுடைய வளாதலால் பின்னும் ஒரு கால் அவ்விடத்திற்குச் செல்வே னென்று விழைந்திருக்கின்றேன். பெருமாட்டிகளே, யான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டு வந்தபடி, மறுபடியும் நான் கண் கட்டப் பட்டேன்--இறக்கமான இடங்களை ஏறிச் சென்றோம்--பிறகு முன்முறை சொல்லிய கதவண்டை வந்து சேர்ந்தோம்; புறத்தேயுள்ள உலகத்திற்கு

*ஏறும்வழி தொடங்கிற்று--உறை பனிமிக்க மழைகாலம் உள்ள மந்தாரமான புற உலகத்திற்கு! ஓ, எவ்வளவு துயரத்தோடு அவ்வினிய மலையவேலியைப் பின்திரும்பிப் பார்த்தேன்!" என்று பகர்ந்தாள்.*

*இச்சமயத்தில் மீனாம்பாள் திடுக்கிட்டுப் பெயர்ந்தாள்; அலங்கோலமான அழுகை ஒலி ஒன்று அவள் வாயிலிருந்து புறப்பட்டது.*

## அதிகாரம் - 11

# கரும்பாம்பு

*குமுதவல்லியும் திகழ்கலையுந் திகிலினாற் குதித்தெழுந் தார்கள்; தோழிப் பெண்களும் உடனே அவ்விடத்திற்கு ஓடிவந்தார்கள். நிரம்பவுங் கோரமான பெருந்திகில் தோன்றப்பெற்ற முகத்தோடு அக்கொள்ளைத் தலைவன் மனைவி தன் ஆடைபின் ஓரத்தை மேலே தூக்கி இழுத்தாள்; அங்கே மிகவும் நேர்த்தியாக உருவாக்கப்பட்ட அவள் கணைக்காலைச் சுற்றி ஒரு கரும்பாம்பு தன்னுடம்பை வளைத்துக் கொண்டிருந்தது. ஓ! முதலிலிருந்தே அரவமின்றித் திருட்டுத் தனமாய்ப் புற்களினூடே நுழைந்து வந்து, தன் நச்சுப் பற்களைச் சிறப்பு மிகுந்த மீனாம்பாள் சதையிலோ அல்லது அழகிய குமுதவல்லி சதையிலோ பதிப்பதென்னும் ஐயுறவினால் இடையிடையே நெடுநேரம் தங்கித் தங்கி வந்த பாம்பு அதுதான். தான் விழித்திருக்கும் போதுங் கனாக்காண்பது போற் பாவித்து வந்த மனோபாவனையால் முன்னே தான் சிறிதுணர்ந்த இந் நிலவுகத்துறக்கத்தைப் பற்றி அக்கொள்ளைத் தலைவன் மனைவி இப்போது கேட்டு வருஞ் சமயத்தில்--தன் நெஞ்ச மானது களிப்பு நிரம்பின நம்பிக்கையால் நிறைக்கப்பட்டிருப்பப் பரவசமான தன் எண்ணங்கள் உறைபனி மூடிய மேற்கணவாய் மலைவரம்பு களைத் தாண்டி, என்றும் இளவேனில் குடி கொண்டிருப்பதும், பரிமளமான தன் தனியிடங்களில் மழை காலத்தின் ஊதைக் காற்று நுழையப் பெறாததுமான அப்படு*

கரிற் செல்லுகின்ற அச்சமயத்தில் சாவைத்தரும் அக்கொடும் பாம்பு அவளது வெதுவெதுப்பான மெல்லிய தசையிலே தன் கூர்ப் பற்களை ஊன்றியது!

*அறிவிற் சிறந்த திகழ்கலையைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் மனக்கலக்கத்தினாலும் துன்பத்தினாலும் ஏக்கத்தி*

னாலும் அலங்கோலமாயினர். இந்தப் பெண்பிள்ளை மாத்திரம் ஊக்கந் தளரவிடாமலிருந்தாள்; ஒரு மரத்தின் ஒடிந்த கிளை ஒன்றைப் பிடுங்கிப் புல்லின் மேல் நீண்டு கிடந்த அப்பாம்பின் வாலின் மேல் ஓரடி கொடுத்தாள்; உடனே அஃது இரைந்து கொண்டு தன் சுற்றை அவிழ்த்தது; மறுபடியும் அவ்வளாரின் அடி அதன் மேல் விழுந்தது; உடனே அது சாவு நோய் மிகுந்து நெளிந்து கிடந்தது. சுருண்டு துடிக்கும் பாம்பின் கிட்ட இருக்கவிடாமல் இப்போது அரைவாசி களைத்து விழும் மீனாம்பாளைக் கரையின் சிறிது மேற்புறத்தே விரைந்து இழுத்து வரும்படி திகழ்கலை தோழிப் பெண்களுக்குக் கற்பித்தாள். ஒரு நொடிப் பொழுதுங் சோரவிடாமல் திகழ்கலை மிகவும் பெருமை பாராட்டிப் பேசிய தன் மருந்துகளைக் குனிந்து கொண்டே காயத்திற் சேர்த்தினாள். அதன் பின்னர் எவ்வகை யான நஞ்சுக்கும் முறி மருந்துகளென்று தான் முன்னமே சொல்லிய வற்றுள் ஒன்றான ஒரு சூரணத்தை எடுத்துத், தான் ஏவியபடி தோழிப்பெண் ஒருத்தி கொண்டுவந்த ஒரு கிண்ணந் தண்ணீர் சிறிதில் அதனைக் கலக்கி அதனை அவள் மீனாம்பாள் வாயில் ஊற்றினாள்.

மிகக் கொடிய நச்சுப்பாம்பின் கடியையும் மாற்றும் உயர்ந்த மருந்தாகத் தான் நம்பிய ஒரு மூலிகை தங்கள் கூடாரம் அடிக்கப்பட்ட இடத்திற்கு அருகாமையில் வளர்ந்திருப்பதைத் தான் சிறிது நேரத்திற்குமுன் காண நேர்ந்தமையால் அதனைத் தேடிக்கொண்டு காப்பிரிப் பெண்ணானவள் பழமரங்கள் நிறைந்த தோப்பினுள் விரைந்து சென்றாள். அந்தச் சிற்றாற்றின் கரைமேற் றோன்றிய இந்தக் காட்சியானது மனத்தை உருகச் செய்வதாய் இருந்தது. ஞானாம்பாள் மீனாம்பாளைத் தன் கைகளிற் றாங்கிக்கொண் டிருந்தனள். சுந்தராம்பாள் அவள் கைகளில் ஒன்றைப் பிடித்துக்கொண்டு அவள் முகத்தைக் கவலையோடும் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள்; மீனாம் பாளின் பாங்கியான மலையநாட்டுப்பெண்ணோ பெரும் திகிலோடும் பேரச்சத்தோடும் நோக்கிக் கொண்டிருந்தாள் - திகழ்கலையோ உயர்த்துபேசிய தனது மருந்தைச் செலுத்தி யிருந்தும் ஒருவகையான பெரிய முகவாட்டத்தோடும் அருகே நின்று கொண்டிருந்தாள். குமுதவல்லியோ தன் கன்னங்களிற் கண்ணீர் ஒழுகப்புற்பற்றை மேல் மண்டியிட்டு முழங் காலின்மேற்

குனிந்தபடியே நின்றாள்; ஏனென்றால், தான் ஏற்கனவே விரும்பத் தலைப்பட்டவளும் - இறக்கக்கூடாத அத்தனை இளம்பருவ முள்ளவளும் - பெண் அழகிற்கு அவ்வளவு சிறந்த மாதிரியா யிருந்தவளும் ஆன ஒரு பெண்மணி இந்நிலவுலகத் துள்ள ஒளியை என்றுங் காணாதபடி தன் கண்களை மூடிக்கொள்ளப் போவதை எண்ண எண்ண அவள் நிரம்பவுங் கடுமையாகத் துன்புறுத்தப்பட்டாள்!

நாம் முன்னமே சொல்லியபடி மீனாம்பாளை ஒருகளைப்பு வந்து மூடியாது; அஃது, அவளுடைய நரம்புக்குழாய்களில் அப்பாம்பின் நச்சுநீர் ஓடுவதனால் உண்டான விறைப்பின் விளைவு என்றும், அது சாவை உண்டாக்கும் திமிர்ப்பாக விரைவில் முடியும் என்றும் குமுதவல்லி எண்ணினாள். கலக்கமும் துன்பமும் உற்ற குமுதவல்லி தான் மண்டியிட்டிருந்த நிலை யினின்றும் குதித்தெழுந்து உருக்கம் நிறைந்த குரலோடு திகழ்கலையை நோக்கி, “இந்த அம்மையை நீ காப்பாற்றக் கூடுமென்று நினைக்கிறாயா? உன்னுடைய மருந்துகளில் உனக்கு நம்பிக்கை இருக்கிறதா? எனக்குச் சொல். புண்ணியத்தின் பொருட்டாக வேனும் உன்னால் ஆனமட்டும் பார் நானே உனக்கு நிரம்பவுங் தாராளமாகப் பரிசுகொடுப்பேன்!” என்று பேசினாள்.

அதற்குத் திகழ்கலை “மனிதனுடைய கை மருந்துகள் கொடுக்கும், ஆனால், மற்றவற்றை ஆண்டவனே முடிவு செய்யவேண்டும். உங்களுடைய தோழி பிழைத்தாலும் பிழைக்கலாம், அல்லது செத்தாலும் சாகலாம்: அதனைக் கடவுளே அறிவார்! கடவுளே பெரியவர்!” என்று கூறி, இந்த வகையான பேச்சினால் வைத்தியஞ் செய்யுந் தன் உண்மைக் குணத்தையும், சிறிது நேரத்திற்கு முன் தவறாமற் பலிக்குமென்று தான் பெருமை பாராட்டிக் கூறிய தன் மருந்துகளின் மதிப்பையும் பாதுகாக்கப் பார்த்தாள்.

அதனைக்கேட்ட குமுதவல்லி வருத்தமும் மனத் தளர்ச்சியும் அடைந்து “ஐயோ கடவுளே! உன் சொற்கள் எனக்கு நம்பிக்கையைத் தரவில்லையே!” என்று முறுமுறுத்தாள்.

நாகநாட்டரசிக்கும் அவ்வறிவோளுக்கும் இடையே நடந்த இச்சொற்களைக் கேட்கும்படியான அளவுக்கு உணர்வுவரப்

பெற்ற மீனாம்பாள் தன் கரியபெரியவிழிகளைத் திறந்து, "ஏது, நம்பிக்கை சிறிதும் இல்லை! அந்தச் சாநஞ்சு என் நரம்புகளிற் சுற்றி ஓடுகிறது; நான் சாகவேண்டுவது தான்! ஆனால், ஓ பெருமாட்டி! நீங்கள் என்னிடத்தில் பற்றுவைத்தீர்களே, அழகிய குமுதவல்லி நீங்கள் என்பொருட்டுத் துயரமும் அடைகிறீர்களே!" என்று கூறினாள்.

மறுபடியும் மீனாம்பாள் பக்கத்தில் மண்டியிட்டுக் குனிர்ந்த நாகநாட்டரசி தன்னை அவள் பெயர் சொல்லி அழைத்ததைக் கேட்டு அவள் மேல் வியப்புடன் நோக்கினாள்; ஏனெனில், இவள் தன் பெயரை அக்கொள்ளைத்தலைவன் மனைவிக்குத் தெரிவிக்க வேயில்லை.

உடனே அவள் பார்வையினது வியப்புக்குறிப்பின் காரணத்தைத் தெரிந்து கொண்டவளான மீனாம்பாள் "ஆம் - அழகிய குமுதவல்லி நான் உங்களை அறிவேன்! ஓ, நான் உங்களுக்குச்சொல்ல வேண்டுவது மிகுதியாயுள்ளது! அதன் பொருட்டு என்னுயிர் வேண்டுமளவுக்கு நீண்டநேரம் தங்கி யிருக்கும்படி ஆண்டவன் அருள்புரிவாராக! ஆயினும், முதலாக இதனை எடுததுக் கொள்ளுங்கள்!" என்று மொழிந்தாள்.

இவ்வாறு பேசிக்கொண்டே மீனாம்பாள் நோயோடும் வருத்தத்தோடும் தன்கையை உயரத்தூக்கினாள்; தன்மார்பி லிருந்து ஒரு சிறிய பொருளை எடுத்து அதனைக் குமுதவல்லி யிடம் நீட்டினாள். சத்திரத்திலுள்ள அறையின்கண் தன் விரலினின்றும் நல்லானாற் கழற்றப்பட்ட மோதிரந்தான் அது, என்று தெரிந்துகொண்டவுடனே அவ்வழகிய நாகநாட்டரசி யின் வாயிலிருந்து களிப்பும் வியப்பும் உள்ள ஓர் ஒலி தோன்றிற்று.

"ஆம் - அஃது உங்களுடையதுதான், அஃது உங்களுக்குத் தான் உரியது! இப்பொழுது அதனைத் திரும்பவும் உங்களிடம் சேர்ப்பித்ததனாலே, என் மனத்திலிருந்த ஒரு பெருங்கவலை நீங்கப்பெற்றேன்." என்று மீனாம்பாள் கூறினாள்.

அவ்வருங்கலத்தைப்பற்றி நினைத்துப்பார்த்ததும் குமுத வல்லி தன் கண்களையே நம்பக்கூடாதவளாய், "என்னுடைய மோதிரம்!" என்று இறும்பூதுடன் இயம்பினாள்; ஏனென்றால், தனக்கு எதிரில் இப்போது சாகும் நிலைமையில் உள்ள கருங்கண்மாதரார் வசத்தில்அஃது எங்ஙனம் வந்திருக்கக் கூடும்?

என்னும் கலவர ஐயமானது அவள் உள்ளத்தை ஊடுருவிப் பாயந்தது.

"அழகிய குமுதவல்லி, உங்களைத்தவிர மற்றவர்கள் எல்லாரும் தொலைவிலே விலகிப் போயிருக்கட்டும்; நான் உங்களுக்குச் சொல்ல வேண்டுவது மிகுதியுமிருத்தலால், நீங்கள், இங்கே இருங்கள்." என்று மீனாம்பாள் விளம்பினாள்.

இந்தச் சமயத்தில், கனிமரத் தோப்பிலிருந்து காப்பிரிமாது வெளியேவந்தாள்; அவள் தான் பிடுங்கிக் கொண்டு வந்த பூண்டுகளைக் கடுக நசுக்கிப் பிசைந்து தன் தலையின் காயத்தில் வைத்துக் கட்டுவதற்கு விரைந்து முன்வந்தாள்.

அதனைப்பார்த்ததும் திகழ்கலை சிறிது வெகுண்டு, "நான் செலுத்தி யிருக்கின்ற மருந்துகளைக் கலைத்துவிடாதே! கடவுளுக்கும் திருவுள்ளமானால், அவ்வம்மை பிழைத்துக் கொள்வார்கள்." என்று மொழிந்தாள்.

அதற்குக் காப்பிரிமாது "அப்புறம் எட்டிநில் அம்மே - என் மனத்தின்படி தான் நான் நடப்பேன்!" என்று தீர்மானத்தோடுங் கூறிப் பின் மீனாம்பாள் கணைக்காலில் அந்த மருந்தை வைத்துக் கட்டப்போகிறவள், "அன்புள்ள பெருமாட்டி, இந்த ஒரு பரிகாரத்தைமாத்திரம் யான் செய்யும்படி விடைதரல் வேண்டும்; இறைவனுக்குத் திருவுள்ளமிருந்தால் இதனாலேயே பிழைத்துக் கொள்வீர்கள்!" என்று மீனாம்பாளைப் பார்த்துப் பகர்ந்தாள்.

"உனக்குத் தகுதியாகப்படுவதை நீ செய் - ஆனாற், செய்வதை விரைந்து செய் - ஐயோ, எனக்கோ நம்பிக்கை இல்லை! அப்பாம்பின் நஞ்சு என் நரம்புக்குழாய்களிற் சுற்றி ஓடுகிறது. கள்ளம் ஏதும் அறியா அழகிய குமுதவல்லியினிடத்து இழைத்த தீமைகளுக்குப் பரிகாரமாக எனக்கு இன்னும் எஞ்சியுள்ள சிறிது அரிய நேரத்தையும் நான் முற்றும் பயன்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்." என்று மீனாம்பாள் மறுமொழிந்தாள்.

கடைசியான இந்தச் சொற்கள் தாழ்ந்த புலம்பற் குரலிற் சொல்லப்பட்டமையால் அவை குமுதவல்லியின் செவிகளில் மாத்திரம் பட்டன; காப்பிரிமாதோ பிசைந்தமருந்தைப் பாம்புகடித்த கணைக்காலில் வைத்து அதனைத் தன் முக்

காட்டிலிருந்து கிழித்த துணியினாற் கட்டிக்கொண்டு அம் முயற்சியில் நினைவு அழுந்தியிருந்தாள்.

அதன்பின் அக்காப்பிரிமாது, “பெருமாட்டி, இப்போது மருந்து கட்டிமுடிந்தது. தங்களைக் காப்பாற்றுவது ஏதேனும் இருந்தால், அஃது இதுதான். நான் பிறந்தநாட்டில் மிகவுங் கொடுமையான நச்சுப் பாம்புகளின் கடுவையும் முறிக்கும் மருந்தாக இப் பூடுகள் கொடுக்கப்பட்டதனை நான் கண்டிருக் கிறேன்.” எனப் புகன்றாள்.

“போதும், என் நம்பிக்கையுள்ளபணிப்பெண்ணே, என் நெஞ்சத்தில் பிழைப்பேனென்னும் நம்பிக்கையில்லை - என்றாலும், நீ நல்லெண்ணத்தோடு செய்த ஊழியத்திற்காக யான் பாராட்டும் நன்றியறிவு சிறிதும் குறைவுபட்டிலது. அங்ஙனமே திகழ்கலை உனக்கும் எனது நன்றியைச் செலுத்துகின்றேன்! ஆயினும், நீங்கள் எல்லாரும் விலகிப் போங்கள். -- யான் குமுதவல்லியோடு தனித்திருக்கவேண்டும்.” என்று மீனாம்பாள் நுவன்றனள்.

உடனே அவ்வறிவோளும், காப்பிரி பெண்ணும் மலை நாட்டுப் பணிப்பெண்ணும், சுந்தராம்பாளும், ஞானாம்பாளும், காதிற்கு மாத்திரம் எட்டாதாயினும், அவர்கள் அழைக்குஞ் சமயத்தில் தாம் உடனே சென்று உதவத்தக்க அண்மையில் உள்ளதான ஓரிடத்திற்கு அவ்வாறே ஒதுங்கிப்போயினர். அக்கரியவிழிமாதரார் தெரிவிக்கப்போவது எதுவாயிருப்பினும் அதனைக்கேட்கும் ஆவலோடும் ஐயுறவோடும் குமுதவல்லி எதிர்பார்த்திருந்தனள்; ஏனென்றால், மீனாம்பாள் பேசிய சொற்களைக் கேட்டபிறகு, அவள் யாராயிருக்கக்கூடுமென்றும், அந்த மோதிரம் அவள் வசத்தில் எங்ஙனம் வந்திருக்கக்கூடும் என்றும் நாகநாட்டரசி முன்னையிலும் மிகுதியாக விம்மிதம் உற்றாள்.

உடனே, மீனாம்பாள், சாவின் களவான வருகையைத் தெரிவிப்பதுபோல் அவ்வளவு மெலிந்த தன்மையோடு பேசினாலும், தெளிவாகவும் காதிற்கு எட்டத்தக்கதாகவும் உள்ள குரலில், “அழகிய குமுதவல்லி, என்னிடத்தில் நீங்கள் இரக்கங் காட்டினீர்கள்- என் பொருட்டுக் கவலையும் அடைந்தீர்கள் - அமைதியான உங்கள் நல்ல இனிய அழகினால் முன்னே

மனங்கசியப் பெற்ற யான் இப்போது என் நெஞ்சம் முழுதும் உருகப் பெற்றேன்! குமுதவல்லி, திடுக்கிடாதீர்கள்- என்னை அருவருப்போடு பாராதீர்கள் - ஓ! முன்னமே நோய்ப்பட்டிருக்கும் என்னைப் பின்னும் புண்படுத்தாதீர்கள்! நான் அக்கொள்ளைத் தலைவனுக்கு மனைவி யென்று சொல்லும்போது என்னைத் துயரத்தோடும் இரக்கத்தோடும் பாருங்கள் - ஆம், நான் நல்லானுக்கு இல்லக் கிழத்தியே!" என்று விளம்பினாள்.

இவ்வுண்மை வெளிவரக்கேட்ட குமுதவல்லிக்கு உண்டான இறும்பூது இவ்வளவுதான் என்று விரித்துச் சொல்ல ஏலாது; ஆனாலும் புண்ணியத் தன்மைவாய்ந்த அவளது நெஞ்சமானது, திண்ணமாகவே பிழைக்கமாட்டாது இறந்து போகும் நிலை யிலுள்ள மீனாம்பாளிடத்தில் அருவருப்பாவது எரிச்சலாவது காட்ட ஒரு சிறிதும் இடந்தரவில்லை.

"ஓ! உங்கள் கணவன் எனக்குச் செய்த தீமைக்கு நீங்கள் வேண்டிய அளவுக்குப் பரிகாரம் செய்துவிட்டீர்கள்! அவர் என்னிடத்திலிருந்து எடுத்துக்கொண்ட மோதிரத்தைத் திருப்பி எனக்குக் கொடுத்துவிட்டீர்கள்! ஓ, அவர்தாம் அதனை எடுத்துக்கொண்டவர் என்பது எனக்குத் தெரியும்." என்று குமுதவல்லி தன் கன்னங்களிற் கண்ணீர் ஒழுக மெல்லெனக் கூறினாள்.

"உங்களுக்கு அது தெரியுமா" என்று இப்போது மீனாம் பாள் தான் வியப்புற்று வினவினாள்.

"ஆம், நான் இருந்த அறையினுள் அவர் நுழைந்ததைத் தான்கண்டேன். நான் அயர்ந்து உறங்குவதைப் போலப் பாசாங்கு செய்தேன் - ஏனென்றால், அவர் தம்கையில் கட்டாரி ஒன்று வைத்திருந்தார் -- ஓ! நான் அஞ்சினேன் -" என்று குமுதவல்லி மறுமொழி புகன்றாள்.

மீனாம்பாள் நடுக்கத்தோடும் "பெருமாட்டி, அதனைச் சொல்லாதீர்கள், அப்படியானால் நீங்கள் என்கணவனைப் பார்த்தீர்களோ?" என்று கூறினாள்.

அதற்கு "ஆம்-ஆம் நான் அவரைப்பார்த்தேன்." என்று விடைகூறிப் பின்னும், "அவர் என்னைத் துன்பப்படுத்திக் கொண்டு வந்தார். அவர் ஏன் எனக்கு அவ்வளவு பொல்லாங்கு

செய்யத் தேடினார்? என்பதை எனக்குச் சொல்லுங்கள்." என்று குமுதவல்லி கேட்டாள்.

"அழகிய குமுதவல்லி, திரும்பவும் உங்களிடம் நான் சிறிது முன்னே கொண்டுவந்து சேர்ப்பித்த அவ் எந்திரத்தின் மதிப்பு உங்களுக்குத் தெரியாது என்பதனை யான் நன்கு அறிவேன். ஓ! என்னைவந்து மூடுகிற இத்தவிப்பு யாது? இது சாக்காடாகத் தான் இருக்கவேண்டும்!" என்று மீனாம்பாள் இயம்பினாள்.

உண்மையிலே, விளக்கின் சுடரைப்போல் அத்தனை ஒளியோடு மிளிரும் இயல்பினையுடைய மீனாம்பாள் கண்கள் பளிங்குபோல் ஆகத் துவங்கின; சாவின் விகாரவடிவம் ஏற்கனவே அவள் முகத்தின்மேற் காணப்படுவதாயிற்று. அக்கொள்ளைத் தலைவன் மனைவியைக் குமுதவல்லி தன் கைகளிற் றாங்கி கொண்டிருந்தாள்; "ஓ, நான் என்ன செய்யக் கூடும்? யாது உதவி நான் இயற்றக்கூடும்?" என்று அவ்வழகிய நங்கை நடுங்கிய குரலோடு கூறினாள்.

"ஒன்றுமில்லை குமுதவல்லி - ஒன்றுமில்லை!" என்று மீனாம்பாள் மனத்தை உருகச்செய்யும் துயரத்தோடு அமைதி யாகச் சொன்னாள்; அதன்பிறகு இன்னும் மிஞ்சியிருக்கின்ற தன் வல்லமையை ஒருங்குசேர்த்துக்கொண்டு - நழுவிப்போகும் தன் ஆண்மைகளில் மிச்சமா யிருப்பனவற்றை ஒருங்கு தொகுத்துக் கொண்டாலென்ன அவள் கூறுவாளானாள்: "இன்னுஞ்சிறிது நேரம் யான் உயிர் பிழைத்திருக்கும்படி கடவுள் அருள் புரிவாராக! ஓ குமுதவல்லி, எவ்வளவு அன்போடு நான் என் கணவனைக் காதலித்து வந்தேன், இன்னும் காதலிக்கின்றேன் என்பது உங்களுக்குத் தெரியாது! ஆனாலும், இந்த மேலான சமயத்தில் - அழிந்து போவதொன்றும் அழியாமல் நிலைத் திருப்பதொன்றுமாகிய .இரண்டுலகங்களுக்கு இடையிலே என் ஆவி தொங்கிக்கொண்டிருக்கிற சமயத்தில் - சீலத்தையும் மன அமைதியையுமே இன்னும் மேலாக நான் நேசிக்கின்றேன்!"

"உங்கள் கணவனார் எனக்குச் செய்திருக்கும் அல்லது செய்ய நினைத்திருக்கும் தீங்குகளுக்காக எப்போதாயினும் நான் பழிவாங்குவதற்கு ஏற்ற சமயம் வாய்த்தாலும் நான் அவரைப் பழிவாங்கப்பார்ப்பேனென்று நினையாதீர்கள்!" என்று அக்கறையுள்ள குரலோடு குமுதவல்லி உறுதி மொழி புகன்றாள்.

“இந்தச் சொற்களுக்காகக் கடவுள் உங்களுக்கு அருள் வழங்குவாராக!” என்று மீனாம்பாள் நன்றியறிவின் ஒளி தன் கரிய பெருவிழிகளிற் சிறிதுநேரங் கதிர்த்துத்தோன்ற மெல்லென உரைத்தாள். “தங்கள் வாயிலிருந்து யான் பெறுதற்கு விழைந்த உறுதிமொழி அதுவே - அதனை நீங்களே வலியச் சொல்லி விட்டீர்கள்! ஓ, குமுதவல்லி உங்களுக்கு என் நன்றியைச் செலுத்துகின்றேன்- என் நெஞ்சார உங்களுக்கு நன்றி கூறுகின்றேன்! நல்லான் என்பவருக்கு ஏதுந் தீங்கு செய்யா தீர்கள்”

“என்னைப் பாதுகாத்துக்கொள்ள நேர்ந்தால் அல்லாமல் - அவர் இனிமேற் செய்யும் செயல்களால் யான் அவருக்கு எதிராய் நீதி நூற்படிசெய்ய வலுக்கட்டாயஞ் செய்யப்பட்டால் அல்லாமல் நான் அவருக்கு ஒன்றுஞ் செய்யமாட்டேனென்று ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்!” என்று குமுதவல்லி வற்புறுத்திக் கூறினாள்.

“குமுதவல்லி, இனிமேல் அவர் உங்களைத் தொல்லைப் படுத்த மாட்டார். ஆனால், எப்போதாயினும் அவர் மாறு கோலம் பூண்டிருக்கக் காண்பீர்களாயின், அவரைத் தாங்கள் காட்டிக்கொடாமலிருக்கும்படி தங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கின்றேன்!”

“இல்லை- அவர் தமக்கு இரையாக்கப் பார்க்கும் களங்க மற்றவர்களைக் காக்கும்பொருட்டாக அல்லாமல், நான் அவரைக் காட்டிக் கொடுக்கமாட்டேன்!” என்று குமுதவல்லி கூறினாள்.

“இதைவிட இன்னும் மிகுதியாக உங்களால் வாக்குக் கொடுக்க முடியாது; நானும் உங்கள் வாயினின்று இன்னும் மிகுதியாகக் கேட்கக்கூடாது. ஐயோ! என் வல்லமை யெல்லாம் என்னைவிட்டு நழுவிப்போகின்றதே - ஏதோ படலம் வந்து என் கண்ணை மறைக்கின்றதே - என் எண்ணங்கள் தாறுமாறாகக் குழம்புகின்றனவே - ஆ! அந்தத்துறக்கவுலகத்தை இனிநான் என்றும் பாரேன்! குமுதவல்லி, நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்! நான் சொல்வதை உற்றுக் கேளுங்கள் - எச்சரிக்கையாயிருங்கள் - எச்சரிக்கையாயிருங்கள்-” என்று மீனாம்பாள் முற்றுஞ் சொல்லக்கூடாமல் நின்றுவிட்டாள்.

ஐயமுங் கலக்கமுங்கொண்ட குமுதவல்லி, "உங்கள் கணவனைத் தவிர இன்னும் நான் எச்சரிக்கையாக இருக்க வேண்டியவர்கள் வேறு எவரேனும் உண்டோ? சொல்லுங்கள் - ஓ, சொல்லுங்கள்: உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன், எனக்குச் சொல்லுங்கள்-" என்றாள்.

இப்போது மீனாம்பாளுக்கு விழிகள் சிறிது சிறிதாக மூடத் துவங்கின; அவள் குரல் மெலிந்து மங்கலாய்க் கேட்டது; அவள், "அந்தோ! இங்ஙனம் மாண்டு போவதா! - இங்ஙனம் மாண்டு போவதோ - இவ்வளவு இளம்பருவத்தில் - விளக்கமான கதிரவன் வெயில் வெளிச்சத்தில் - பறவைகள் மரங்களின் நடுவில் பாடிக் கொண்டிருக்க - மலர்கள் சுற்றிலும் இதழ் விரிந்திருக்க! இது சாக்காடுதானோ - அல்லது உறக்கந்தானோ என்னைவந்து அமிழ்த்துவது? குமுதவல்லி - நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?" என்று விட்டு விட்டு மெல்லப் பேசினாள்.

அதற்குக் குமுதவல்லி அமைதியாய், "நான் இங்கேதான் இருக்கிறேன், உங்கள் தலையைத் தாங்கிக்கொண்டிருக்கிறேன்" என்று காதுக்குட் சொன்னாள்.

"நெடுந்தூரத்தேயுள்ள உலகங்களிற் கந்தருவமானிடத் திருந்துவரும் இரகசிய ஒலிபோல உங்கள் குரல் எனக்குக் கேட்கின்றது! உங்கள் மெல்லிய இனிய குரல் ஒலியிலிருந்து கடவுளின் திருவருள்நாதம் எனக்கு வருகின்றது! குமுதவல்லி, நான் இறந்து போகின்றேன் - சில நிமிஷங்களில் எல்லாம் முடிந்துபோகும்! காலந்தாழாது நீங்கள் நீலகிரி நகரத்திற்குப் போகும்படி நான் உங்களை வேண்டிக்கொள்கின்றேன் - குளிர்ந்துபோன பிணமாக யான் இங்கே நீட்டப்பட்டுக் கிடக்கும்போது என்கிட்ட ஒரு நொடிப்பொழுதானும் தங்கி யிராதீர்கள் - நீங்கள் செல்லவேண்டிய வழியில் விரைந்து செல்லுங்கள் - குமுதவல்லி எச்சரிக்கையா யிருங்கள் - எச்சரிக்கையா யிருங்கள்-" என்று கடைசியிற் சில சொற்களைச் சொல்லக்கூடாமல் நிறுத்தினாள் மீனாம்பாள்.

மறுபடியும் பேசுவதற்கு மீனாம்பாள் வாயைத்திறந்து மேல்மூச்சு எறிந்தாள்: காதுக்குக் கேளாவிட்டாலும், எவையோ சில சொற்கள் அவள் உதடுகளின் மேல் தத்தளிப்பனபோற் காணப்பட்டன. குமுதவல்லி அவற்றைத் தெரிந்துகொள்வதற்கு

ஆவலுற்று மிகுந்த கவலையோடும் அவள்மேற் குனிந்தாள்; ஆனால் இப்போது மீனாம்பாள் சிறிதும் அசைவின்றிக் கிடந்தாள் - உயிர் போய்விட்டதென்றே நாகநாட்டரசி அஞ்சினாள்.

கடைசியாகத், தொலைவிலே ஒருவர் சொல்லிய ஒரு பெயரைத் திரும்பச்சொல்லும் எதிரொலியைப்போல, மிகவும் மங்கலான குரலில் அக்கொள்ளைத்தலைவன் மனைவி முணுமுணுவென்று கூறுவாள். "குமுதவல்லி, இந்த மேலான சமயத்தில் கடவுளின் திருவருளால் ஒரு தேவதூதன் என்னிடம் அனுப்பப்பட்டிருக்கின்றார்! - எச்சரிக்கையா யிருங்கள் - பற்றி - எச்சரிக்கையா யிருங்கள்-"

சிறிது நின்று மீனாம்பாள் ஒரு பெயரை மெல்லச் சொன்னாள்: சில நிமிஷங்களுக்குமுன் குமுதவல்லியின் சொந்தப்பெயரை அவள் சொல்லியபோது இருந்ததைவிட இப்போது சொல்லியது.இன்னும் மிகவும் மங்கலாய்ப் போயிற்று. இளந்தென்றற் காற்றுச் சடுதியில் வீசிச் சென்றா லென்ன மெல்லச் சொல்லப்பட்ட அது **சந்திரன்** என்னும் பெயரே யெனக் குமுதவல்லி எண்ணினாளேனும் அசைவில்லா மலும், பேசாமலும் இருந்தாள்; உயிர் மறுபடியும் இடைவிட்டுத் திரும்புமே என்று பார்க்கவேண்டிக் குமுதவல்லி அளவிறந்த கவலையோடும் ஐயத்தோடும் காத்துக்கொண்டிருந்தாள். ஆனால், இமைப்பொழுதுகள் பலசென்றன- பின்னர் அவை நிமிஷங்களாயின - ஆகியும் மீனாம்பாள் அசைந்திலன், பேசிற்றிலன்; அவள் வாயிலிருந்து இப்போது மிகச்சிறிய மூச்சுக் கூட வரவில்லை. சிறிய நோக்கத்திற்கு முன்னே அவள் கன்னங் களினின்றும் மறைந்துபோன செந்நிறமானது இப்போது அவள் இதழ்களினின்றும் பிரிந்துபோயிற்று; "மெய்யாகவே எல்லாம் முடிந்து போயிற்று." என்று குமுதவல்லி தனக்குள் முணு முணுத்தாள்.

மீனாம்பாள் தலையைப் பூக்கள் நிறைந்த புல்நிலத்தின் மேற் சோர்ந்து கிடக்கும்படி மெல்லென விட்டுவிட்டு, நாகநாட்டரசி தான் இதுவரையில் தாங்கிக்கொண்டிருந்த அவ்வுடம்பு தன்மேற் படாதபடி விலகிக்கொண்டாள். மூடப் பெற்ற கண்களோடு தனக்கெதிரில் அசைவின்றிக் கிடப்பதும், மேலே கவிந்திருக்கும் மரங்களின் திறப்பின் வழியே ஞாயிற்றி னொளிபட்டு ஆடப்

பெறுவதுமான அவள் முகத்தை அளவிறந்த துயரத்தோடும் கண்ணிமையாமல் நோக்கினாள்.

"இவள் இப்படியா இறக்கலானாள்? எவ்வளவு அச்சத்தோடு வாழ்ந்தனளோ அவ்வளவு அச்சத்துடன் இறந்த னள்! வேண்டுமானால் மிக உயர்ந்த நிலையினையும் தருதற்குரிய அழகிற்சிறந்த இம்மாது ஒரு கொள்ளைக்காரனுக்கு மனைவி யாகி, அவனது திருட்டுத் தொழிலிலும் கலந்திருந்தனளே! இவள் திரும்பவும் உயிர் பிழைத்து வாழக்கூடுமாயின், முன் நாட்களில் தன்னை மலினப்படுத்தி இழிவு செய்த குற்றங்களுக்குப் பின்நாட்களிற் பரிகாரந்தேடி யிருப்பளே! அந்தோ! இப்போது இவள் விட்டுச்சென்ற ஒளி நிறைந்த இவ்வினிய நிலவுலகத்திற்கு இவள் திரும்பவும் வரும்படி செய்யக்கூடிய அற்புதம் ஒன்றும் இல்லையா! ஐயோ! இவள் இங்கே உயிர்அற்ற பிணமாய்க் கிடக்கின்றனளே!" என்று குமுதவல்லி தனக்குட் சொல்லி .இரங்கினாள்.

குமுதவல்லி, தன் கண்களை மங்கச் செய்யும் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்; மற்றப்பெண் பிள்ளைகள் ஒருங்கு சேர்ந்து நின்ற அவ்விடத்திற்கு அவள் மெதுவாய்ச் சென்றாள். அவள் முகத்திலிருந்து உடனே உண்மை இன்னதென்று புலப்படலாயிற்று. அதனை அவ்வாறு தெரிந்து கொண்டவர் களெல்லாம் மனத்துயரத்தால் தாக்குண்டார்கள்; ஆனால், காப்பிரிமாதும் மலையநாட்டுப் பணிப்பெண்ணும் மிக்கதுயரத் தோடும் புலம்பி அழுவாரானார்கள்.

**"ஆண்டவன் திருவுள்ளப்படி தான் நடக்கும்! ஊழ் வினைக்கு மாறாய் உதவக்கூடிய மருந்து எதுவும் இல்லை. தீவினைக்கு எதிராய் மருத்துவனுடைய திறமை போராட மாட்டாது. ஏது நடக்க வேண்டுமோ அது நடந்தே தீரும்: இறைவன் திருவருள் சிறப்பதாக!"** என்று **திகழ்தலை** கூறினாள்.

இந்தப் பெண்பிள்ளையின் பசபசப்புப்பேச்சு முன்னே தீங்கற்றதாகக் குமுதவல்லியால் எண்ணப்படினும், அவள் தன் திறமையற்ற பழக்க மருத்துவத்தை மெழுகிப்பேச எடுத்த பாசாங் காகாவே இருந்தமையால், இப்போது அஃது அருவருக்கத் தக்கதாகவே தோன்றியது. ஆகவே, நாகநாட்டரசி அவ்வறி வோளை விட்டு அப்புறம் திரும்பிப்போயினாள்; காப்பிரி

மாதையும் மலையநாட்டுப் பணிப்பெண்ணையும் அவள் ஆற்றுதற்கு முயன்றாள். செய்யத்தக்க சவச் சடங்குகள் எங்கே செய்யப்படுமோ அங்கே பிணத்தை எடுத்துச் செல்வதற்குரிய ஒழுங்குகள் செய்யவேண்டுவது இப்போது அவர்கள் கடமை என்பதை அவள் அவர்களுக்கு நினைப்பூட்டினாள்; ஆனாலும், அவ்விஷயத்தைப்பற்றி அவள் ஏதும் கேட்கவில்லை - ஏனென்றால் நல்லான் இருக்கும் இருப்பிடத்தைப்பற்றித் தெரிந்துக்கொள்ள அவள் நாடவில்லை.

அவ்வாறு குமுதவல்லி பேசிய அவ்விருதோழிப் பெண் களும் தமக்குரிய கடமையைப்பற்றி நினைக்கும்படி தூண்டப் பட்டார்கள்; உடனே அவர்கள் மனக்கலக்கத்தை ஒருவாறு ஆற்றிக்கொண்டு தங்கள் தலைவிகிடந்த இடத் தண்டை துயரமான பார்வையோடும் மெதுவான நடையோடும் சென் றார்கள். காலந்தாழாமல் உடனே நீலகிரிக்குப் பயணந் துவங்கும் படி தனக்கு மீனாம்பாள் அக்கறையோடு சொல்லி யதை குமுத வல்லி இப்போது நினைவுகூர்ந்தாள்; அவள் உடனே இக் கருத்தைத் தன்தோழிமார்களுக்குத் தெரிவித்தாள். அவர் களுக்குப் பயணந் தொடங்கவேண்டியதைக் கற்பித்து விட்டு ஈர நெஞ்சமுள்ள அம்மாதாரர் போதுமானவரையில் நல்லெண் ணத்தோடு மீனாம்பாளுக்கு உபசாரங்கள் புரிந்த **திகழ்கலை** ஏதுங் கைம்மாறு பெறாமல் நிற்பதையும் அங்ஙனமே நினைவு கூர்ந்தாள் - ஆகவே, அவள் ஞானாம்பாள் கையில் ஒரு பொன் நாணயத்தைக் கொடுத்து, அக்கொள்ளைத் தலைவன் மனைவி கிடந்த நீரோட்டத்தின் கரையண்டைக் காப்பிரிப் பெண் ணோடும் மலையநாட்டுப் பணிப்பெண்ணோடும் பின்சென்ற திகழ்கலைக்கு அதனைக் கொடுக்கும்படி அவளை அனுப்பினாள். ஞானாம்பாளும் அவ்வாறே அதனைச்செய்து முடித்து, அவ்வறிவோள் குமுதவல்லிக்கு நெஞ்சாரச் சொல்லிய நன்றி மொழிகளைத் தெரிவிக்கும்படி கடுகத் திரும்பினார்கள்.

மரங்களுக்கு நடுவே மறைபட்டிருந்த கூடாரத்திற்கு அருகாமையில் தங்கள் குதிரைகள் கொழும்புல் மேய்ந்து கொண்டிருத்தலை நாகநாட்டரசியும் அவள் தோழிப் பெண் களும் கண்டார்கள். சுந்தராம்பாளும் ஞானாம்பாளும் காணாமற் போன மோதிரம் தம் தலைவியினிடத்தில் திரும்பவும் வந்திருத் தலை வியப்போடும் களிப்போடும் பார்த்தார்கள்; **மீனாம்பாள்**

என்பவள் நல்லானுக்கு மனைவியேயல்லாமல் பிறர் அல்லர் என்பதை இன்னும் மிகுந்த வியப்போடு இப்போது அவர்கள் தெரிந்துகொண்டார்கள்.

"என்றாலும், நானே வலிந்து சென்று அக்கள்வனுக்குப் பழுதுசெய்யமாட்டேனென்று உறுதிமொழி சொல்லியிருக் கின்றேன்; ஆகையால், என் தோழிமார்களே, உங்கள் தலை வியைக் கட்டுப்படுத்தியிருக்கும் ஆணையை நீங்களும் பாது காக்கவேண்டும்" என்று குமுதவல்லி அழுத்தமாகச் சொன்னாள்.

அங்ஙனஞ் சொல்லப்பட்ட கட்டளைப்படியே நடப்ப தாகச் சுந்தராம்பாளும் ஞானாம்பாளும் உறுதிமொழி புகன் றார்கள்; உடனே பயணந் தொடங்கலாயிற்று. மிகவுந் திகிலான அத்துயரநிகழ்ச்சி நிகழ்ந்த இடத்தின் அருகே செல்லவேண்டுவ தில்லாதபடி அந்தத் தோப்பிலுள்ள மற்றொரு திறப்பானவழி பயணம் போவதற்கு உதவியாயிற்று; விரைவில் ஒரு பெரும் பாட்டையில் வந்து சேர்ந்தார்கள்; அப்போது அவ்வழியே போகும்படி நேர்ந்த ஒரு குடியானவன் அதுதான் நீலகிரி நகரத்திற்கு நேரான பாதை யென்றும் அந்நகரம் இருபது கல்லுக்குமேற் சிறிதுதூரந்தான் இருக்குமென்றும் நாக நாட்டரசிக்கு உறுதிப்படச் சொன்னான்.

மீனாம்பாளின் துயரமான முடிவை எண்ணி மிகுந்த இரக்கமும் தனது மோதிரம் திரும்ப வந்ததற்கு மிகுந்த களிப்பும் ஆக ஒன்றோடொன்று மாறுபட்ட பல விளைவுகளால் தன் மெல்லிய நெஞ்சம் கலக்கம் எய்தக் குமுதவல்லி தன்வழியே போயினாள்.

இளமையும் அழகும் வாய்ந்த **நீலலோசனனை** அச்சுறுத் துங் கொள்ளைத் தலைவன் **நல்லானாகக்** குமுதவல்லி பிழைபட நினைந்த எண்ணத்தை மாற்றுதற்குரிய சொற்கள் எவையும் மீனாம்பாள் வாயிலிருந்து வரவில்லை என்பதை இதனைக் கற்போர் நினைவில் வைக்கவேண்டும்.

## அதிகாரம் - 12

# நீலகிரி நகரம்

*சென்ற அதிகாரத்தின் கடைசியில் விரித்துச் சொல்லப் பட்டபடி தன் தோழிப்பெண்கள் பின்னேவரக் குமுதவல்லி பயணந் தொடங்கியபோது பிற்பகலில் இருபத்தைந்து நாழிகை யாயிற்று. மலைநாட்டுத் தலைநகராகிய நீலகிரி இன்னும் இருபதுமைல் தூரத்திலிருந்தது; ஆயினும், நம்முடைய பிரயாணிகள் இப்போது செல்லும் பாட்டையானது நல்லதா யிருந்தமையினாலும், மீனாம்பாளின் கூடாரம் அடிக்கப் பட்டிருந்த தோப்பின்கண் ஐந்து நாழிகைக்கு மேல் அவர்கள் தங்கியிருந்தபோது அவர்கள் குதிரைகள் நன்கு இளைப்பாறி யிருந்தமையாலும், அவர்கள் ஏழரை நாழிகை நேரத்தில் அவ்விருபதுகல் தூரத்தையுங் கடந்து வந்தார்கள்; சொல்லத் தகுந்தது ஏதும் வழியில் நிகழவில்லை, நாம் பெரிதும் விரிந்து உரைத்த துயரமான காரியம் நிகழ்ந்த இடத்தினின்று புறப்பட்ட பிறகு குமுதவல்லி தான் முதலிற் புகுந்த ஊரிலேயே தனக்குத் தக்க வழித்துணையாகப் படைக்கலம் பூண்ட ஆடவரைத் தெரிந்து ஏற்படுத்திக் கொண்டாள்; ஆனாலும் மெய்காப்பாளர் ஊழியத்தை வேண்டத்தக்கது எதுவும் நேரவில்லை. ஆகவே, நீலகிரி நகரத்திற்கு அண்டையிலுள்ள பேட்டைக்கு நெருங்கிய வுடனே குமுதவல்லி தாராளமாகப் பரிசுகொடுத்து அவர்களை அனுப்பிவிட்டாள். அதன்பின்னர் அவள் சுந்தராம்பாளும் ஞானாம்பாளும் மாத்திரம் தன்பின்னேவர நகரத்தினுள் நுழைந்தாள்.*

*அங்ஙனம் அவள் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தபோது, சிறந்த வேனிற் காலத்தின் மாலை பொழுதா யிருந்தமையால் ஏழு மணி ஆகியும் இன்னும் நல்ல வெளிச்சம் இருந்தது; நாகநாட்டி லிருந்து வந்த நீண்ட பயணத்தின் பல இடைஞ்சல் களையும் பல*

அல்லல்களையும் தான் உழந்தபிறகு பத்திரமாக அங்குவந்து சேர்ந்ததை நினைக்கவே அவள் நெஞ்சம் களிப்பால் தளும்பிற்று. அவள் முகத்தில் மேல் இப்போது சிறையில் முக்காடு இடப்பட்டது - அதனைப் பார்த்து அவள் பாங்கி யாரும் அங்ஙனமே முக்காடிட்டுக் கொண்டனர். ஆகவே, அவள் முகத்தின் பேரழகும், சுந்தராம்பாள் ஞானாம்பாள்களின் முகவெட்டும் பிறர் பார்வை படாமல் மறைபட்டன. என்றாலும், அவள் நீலகிரி நகரின் சுற்றெல்லையில் நுழையுங்கால் அங்கே ஏதோ சிலவற்றைக்கேட்டுத் தெரிந்துகொண்டு தெருக்களின் ஊடே செல்லுகையில், களங்கமற்ற அவள் உடம்பின் திருந்திய அமைப்பும், அவள் தனது குதிரைமேல் இருந்த அழகிய இலாவகமும், அதனை அவள் நடத்திய திறமும் வழிசெல்வோர் கருத்தைத் கவராமற் போகவில்லை. அங்கே கேட்டது **மனோகரர்** என்னும் பெயருள்ள மலைநாட்டு வியாபாரி ஒருவர் இருப்பிட விவரமேயாம்; அவர் இருப்பிடத்தைக் கண்டுபிடித்தற்கு வேண்டிய குறிப்புகள் உடனே சொல்லப்பட்டன- ஏனென்றால், மனோகரர் செல்வமும், முதிர்ந்த அறிவும், பெருந்தன்மையும் வாய்ந்தவர், அதனால் அவர் குடியிருந்த அந்நகரம் முழுதும் அவரை யறியாதவர் இல்லை.

குமுதவல்லி நீலகிரியின் நடுமையம் வரையிற் சென்றாள்; பெரியனவாய்ப் பார்வைக்கு அழகான மாளிகைகள் இருபக் கத்தும் உள்ள மிக அகன்ற தெருக்கள் ஒன்றின் இடையிற் கடைசி யாக வந்து நின்றாள். மனோகரர் என்னும் பணக்கார வியா பாரிக்கு உரிய வீடு இதுதான் என்று அவளுக்கு திட்டமாயம் தெரியாது; ஆகவே, எவரிடத்து அதனைக் கேட்டறியலாம் என்று அவள் சுற்றி நோக்குகையில், அவளது வலதுகைப்பக்கமாய் மிக அருகில் இருந்த ஒரு பெரிய வாயினுள்ளிருந்து ஓர் இளைஞன் திடீரென வந்தான்; உடனே **சந்திரன்** என்னும் பெயர் குமுதவல்லியின் வாயிலிருந்து வந்தது;

உண்மையிலே, வந்தவன் சந்திரன்தான் - இக்கதையின் முதலதிகாரத்தில் நாம் தெரிவித்த, பதினெட்டு வயதுள்ள, தனி அழகு வாய்ந்த அந்த இளைஞனே. அப்போது அவன் வழி நடைக்கு ஏற்ற உடுப்பு அணிந்திருக்க கண்டோம். ஆனால் இப்போது அவன் அணிந்திருந்த உடையோ முன்னிலும் மிக நொய்தாயும் வளமுள்ளதாயும் இருந்தது. வானத்தின்

நீலநிறமுள்ள துணியினாற் செய்யப்பட்டுக் கழுத்துவரையிற் பொத்தான் மாட்டப்பட்டு அவன் உடம்போடு இறுகப் பொருந்தியிருந்த உட்சட்டையானது அவன் உருவின் மெல்லிய அமைப்பை இனிது புலப்படுத்தியது. இப்போது அவன் தலையின்மேல் ஒன்றுமில்லை; செழுமை பொருந்திய அவன் தலைமயிர்களானவை அகன்ற நெற்றியின்மேல் கொத்து கொத்தாய்ச் செறிந்து சுருண்ட அவன் கன்னப்பொறிகளைச் சிறிதே மூடிக்கொண்டிருந்தன. தன் இடுப்பைச் சுற்றி பூவேலை செய்யப்பட்ட அரைக்கச்சை அணிந்திருந்தான்; மிகவும் அழகிய உறையில் இடப்பட்டிருந்த சிறிய கொடுவாள் ஒன்று இதிலே மாட்டப்பட்டிருந்தது. இவனைப்பற்றி முதலில் விவரித்துச் சொல்லியபோது நாம் எடுத்துக்காட்டிய இவன் கண்களில் உள்ள ஒரு வகையான சுறுசுறுப்பானது, குமுதவல்லியைப் பார்த்த மாத்திரத்திலே உயிர்ப்புடன் திடுக்கிட்டுக் கிளர்ந்த பளபளப்போடு கொழுந்து விட்டெரிந்து, மற்றப்படி ஆண்மை யழகில் முற்றுப்பெற்று ஆவலைத் தரத்தக்கதாய் உள்ள அவனது முகத்தின்மேல் மின்னல் ஒளியின் துளக்கம்போல் மந்தார ஒளி வீசுவதென்னக் காணப்பட்டது. இல்லாவிட்டால் அவனுடைய தோற்றமானது பார்ப்பவர்க்குத் தன்னிடத்தே நிரம்பவும் பற்றுண்டாகும்படி செய்திருக்கும்.

குமுதவல்லி முக்காடு இட்டிருந்தும் அவன் அவளைத் தெரிந்துகொண்டான்; - அவள் வடிவத்தின் மிகவும் நேர்த்தி யான திருந்திய அமைப்பினாலும், அவள் முக்காட்டின் மடிப்பு களின் கீழ் எட்டிப்பார்ப்பது போற் றோன்றிய அவள் கருங் கூந்தலின் ஒரு சுருண்ட கற்றையினாலும் அவன் அவளைக் கண்டு கொண்டான். அவள் கண்கள் அங்ஙனம் சடுதியில் ஒருதீய ஒளியை வீசியது என்ன? அதனால் அவன் ஏதோ ஒரு மனக் கலக்கத்தாற் சடுதியிற் பற்றப்பட்டா னென்பதும், அதனை அவன் தன்னுள் அடக்கமாட்டாத வனாயினானென்பதும் புலப்படு கின்றன வல்லவோ? பலகிளை யாக்கிப் பின்னர் அவளைச் சுற்றி வலைபோற் பின்னப்பட்ட இரண்டகமான உபாயங் களுக்குப் பிறகு நாகநாட்டரசி தான் சேரவேண்டிய இடத்தில் வந்து சேர்வளென அவன் எதிர்பார்க்கவில்லையோ? அல்லது எவரையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்து,. குதிரைக் குளம் படிகளின் ஓசை தெருவில் நின்றதைக் கேட்டுக் குமுதவல்லிக்கு

மாறாக வேறு ஒருவரை எதிர்ப்படும் நம்பிக்கையால் ஓடி வந்தனனோ? இவையெல்லாம் நமது கதையில் போகப்போக விளங்கும் குமுதவல்லி வந்ததனால் இவனிடத்திற் சடுதியில் உண்டான மனக்கலக்கத்தை அவள் பாராதபடி மறைத்துவிட அவ்வளவு எளிதிலே தன்னிடத்தில் வேறொருவகையான பார்வையை வருவித்துக் கொள்ளவாவது அன்றித் தன்னை விரைவில் அமைதிப்படுத்திக் கொள்ளவாவது இளைஞனான சந்திரன் மாட்டாதவனா யினான் என்று கூறுதல் இவ் விடத்திற்குப்போதும். சந்திரனுடைய உண்மையைப் பற்றியும் நம்பகத்தைப் பற்றியும் குமுத வல்லியின் மனத்தில் ஏற்கனவே எழுந்த ஐயமானது முற்றும் உறுதிப்படாவிட்டாலும் ஒரு நொடியில் வலுப்படுவதாயிற்று; ஆகவே, மீனாம்பாள் வாயிலி ருந்து தத்தளித்துவந்து தன் செவியிற்பட்டது சந்திரனு டைய பெயரே என்றும், ஆகையால் தான் எச்சரிக்கையோடு இருக்க வேண்டியது சக்திகளிடத்திலேயே என்றும் குமுதவல்லி பெரும்பாலும் உறுதிகொண்டாள்.

குமுதவல்லி தான் அகப்பட்டுமீண்ட ஆபத்துக்களால் மிகுந்த எச்சரிக்கையோடும் முன்னறிவோடும் இருக்கவேண்டும். அவசியத்தைக் கற்றுக்கொண்டாள்; தனது சமுதாயத்திற்குச் சந்திரன் இடமாயிருக்கிறான் என்பதைக் காட்டாமலிருக்க அவள் தீர்மானித்துக் கொண்டாள்; ஏனெனில், அது தெரிந்தால் அவன் மிகவும் எச்சரிக்கையுடையனாகித், தனது உபாயம் ஏதுவா யிருப்பினும் அதனைக் கண்டுபிடித்தற்கு நிரம்பவும் அருமை யான இரகசியத்தில் மூடிவைப்பனென அஞ்சினாள். அதுவல்லா மலும், குமுதவல்லியின் தயாள குணமானது தன்னையொத்த ஒருசீவகனிடத்து ஆன்றகாரணங்கள் இன்றித் தப்பெண்ணங் கொள்ளப்புகுதலைத்தடுத்தது; அதுவன்றியும் சந்திரனுக்கு எசமானரான மனோகரர் தனக்கு உற்றநண் பராகவுங்கூடுமென நினைக்கலானாள். ஆகவே, தான் நீலகிரி நகரில் இருக்கும் வரையில் அந்தப்பணக்கார வியாபாரியின் வீட்டின்கண் அச்ச மின்றிப் பத்திரமாயிருக்கலாமென்று கருதினாள்; இன்னும் வேண்டுமானால், சந்திரன் ஊழியம் புரியும் எசமானரிடத்தில் சந்திரனுக்குள்ள உண்மையைப்பற்றி அவன் தான் ஐயுறவு கொள்ளுதலையும் எளிதிலே சொல்லக் கூடுமென்று எண்ணினாள்.

*இத்தகைய எண்ணங்களினாலே குமுதவல்லி உந்தப் பட்டு, உயர்ந்த இடத்தில் தொழும்பனாயிருக்கும் ஓர் இளைஞனிடத்தில் மிகவும் உயர்ந்த நிலையில் உள்ள ஒரு பெருமாட்டி எவ்வளவுக்கு முகங் கொடுத்து இன்சொற் பேசலாமோ அவ்வளவுக்குச் சந்திரனிடத்திற் பேச இசைவு கொண்டாள்; பிறகு அவன் தன் நிலைக்குவந்து அமைதி பெற்றவுடனே மிகவும் தாழ்மையோடு தன்னை வணங்கவே, அவள் மகிழ்ந்த குரலில், "சந்திரா, கடைசியாக யான் பத்திரமாய் இங்கு வந்துசேர்ந்தேன் பார்த்தனையா?" என்று மொழிந்தாள்.*

*இதற்குள் தனதுமுகத்தை முழுதும் அமைதிப்படுத்திக் கொண்டவனான சந்திரன் குமுதவல்லியை நோக்கிப், "பெருமாட்டி, தாங்கள் இப்படிச் சொல்வதற்குக் குறிப்பான காரணம் ஏதும் இல்லையென்று நம்புகின்றேன்." என்று கூறிக்கொண்டே, பெரியவாயிலின் கீழ்த் தாம் திருப்பி நுழைவித்த குதிரையினின்றும் அவ்வம்மையார் இறங்குதற்கு உதவி செய்தான்.*

*"சில சிறிய இடர்களை வழியில் அனுபவித்தேன் என்றாலும் கடந்துபோன அவைகளை இப்போது நினைப்பதிற் பயனில்லை என்று குமுதவல்லி மொழிந்தாள்."*

*என்று இங்ஙனம் விடைபகருகையிலேயே குமுதவல்லி தனது முக்காட்டை அப்புறம் எடுத்துவிட்டுச் சந்திரன் முகத்தைக் கள்ளமாய் ஒருபார்வை பார்த்தாள்; ஆனாலும் அவள் தனது மனத்திலிருக்கும் ஐயத்தை உறுதிப்படுத்தத்தக்கது ஏதும் அவளது பார்வையில் தோன்றவில்லை. அப்பெரிய வாயிலின் உள்ளே இருபுறத்தும் இருந்த வீட்டுவாசல்களின் உள்ளிருந்து ஆணும் பெண்ணுமாகிய ஊழியக்காரர் பலர் வெளியே வந்தனர்; சந்திரனோ அவ்விளையகங்கையும் அவள்தன் தோழிமாரும் உள்ளேபுகும்படி தான் மரியாதை யோடும் அப்பால் விலகி நின்றான். அவ்வீட்டின் ஊழியக் காரர்க்குத் தலைவியென்று காணப்பட்ட ஒருவயதுமிக்க பெண்பிள்ளை, குமுதவல்லியை வரவேற்க முற்பட்டுவந்தாள். வந்து, "பெருமாட்டி என் தலைவர் இல்லத்திற்கு உங்கள் வரவு நன்றாகுக!" என்று மொழிந்தாள்.*

*நாகநாட்டரசி தகுதியான இன்சொற்களால் மறுமொழி கூறினாள். பிறகு அகன்ற படிக்கட்டு களின்வழியே ஏறி மிகவும்*

அழகாக ஒழுங்கு படுத்தப்பட்டுள்ள அறைகளின் வரிசைக்கு அவ்வம்மையால் அழைத்துக்கொண்டு போய் விடப் பட்டாள்.

"இந்த அறைகள் தாங்கள் இருப்பதற்காகவே சித்தஞ் செய்யப்பட்டிருக்கின்றன. செல்வத்திற் சிறந்தவரும் விருந் தோம்பும் இயல்பினருமான என் தலைவர் மனோகர் அவசர காரியத்தின் பொருட்டு இரண்டொரு நாளைக்கு இங்கே இருக்கக்கூடாதவராயினார்: ஆயினும், அவர் வெளியே போகும் போது, தாங்கள் இதனைத் தங்கள் சொந்தவீடாகப்பாவித்து வேண்டியவெல்லாம் செய்துகொள்ளும்படி கற்பித்துப் போனார்." என்று அம்முதியோள் கூறினாள்.

குமுதவல்லி விரைவில் மறைந்த ஏமாற்றப் பார்வையோடு "அருமையுள்ள மனோகர் இங்கில்லாமை கேட்டு வருந்து கின்றேன்; என்றாலும், அவர் என் பொருட்டு இவ்வளவு அன்புகாட்டினமைக்கும், அவர் சொல்லியபடி நடத்தும் எனது அன்பான தன்மைக்கும் யான் நன்றி பாராட்டுகின்றேன்." என்று கூறினாள்.

"பெருமாட்டி, தங்கள் விருப்பம் சிறிதாயிருந்தாலும் அதனை முன்னரே தெரிந்துகொள்ளுவதும், தங்கள் கட்டளை களை நிறைவேற்றி வைப்பதும் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருவனவாகும். இது, தாங்கள் தங்கள் நாட்டின்கண் மேன்மை யுடன் வாழ்பவர்களென்று மாட்சிமைபொருந்திய எந்தலைவர் சொன்னதனால் மாத்திரமன்று, தங்கள் இளமையும் அழகும் தன்னை நெருங்கப்பெற்றவர் எல்லார்க்கும் தங்களிடத்து இயற்கையாகவே பற்றுண்டாகும்படி செய்வதனாலேயாம். தங்கள் பாங்கிமாரே தங்களுடன் இருக்க வேண்டுமோ? அன்றி இவ்வீட்டிலுள்ளவர்களும் அவர்களுடன் சேர்ந்திருக்க வேண்டுமோ? அதனை அருளிச்செய்யுங்கள்." என்று அம் முதியவர் கேட்டாள்.

"என்னுடைய தோழிப்பெண்களே எப்போதும் என்பக்கத் திலிருக்கவேண்டும்; உன்னுடைய தலைவர் வரும்வரையில் இயன்ற மட்டும் யாங்கள் தனித்திருக்கவேண்டும்; இதுதான் என்மனத்திற்கு இசைந்தது." என்ற குமுதவல்லி அதற்கு எதிர்மொழி கூறினாள்.

அதற்கு அம்முதியோள் "அப்படியே யாகட்டும், பெருமாட்டி, இந்த மாளிகையின் முதன்மையான வாயிலுக்குச் செல்லும் படிக்கட்டை தாங்கள் முன்னமே தெரிந்திருக்கிறீர்கள்; ஆகவே, தாங்கள் நகரத்தினுள்ள நடந்துசெல்ல எண்ணப் பட்டாள், வெளியே போவதற்குரிய வழியை நீங்கள் அறிவீர் கள். இந்த வரிசையின் கடைசியிலுள்ள அதோ அந்த அறையிலே, கீழுள்ள தோட்டத்திற்குச் செல்லும் மறைவான படிக்கட்டுக்கு நுழைவாயில் இருக்கிறது; அந்தத் தோட்டத் திலே, பெருமாட்டி, பிறரால் உற்றுப்பார்க்கப்படும் அச்சம் இன்றி எந்த நேரத்திலும் தாங்கள் உலாவலாம். அந்தத் தோட்டத்திலிருந்துங்கூட நகரத்திற்குப்போக ஒருவாயிலிருக் கிறது; அந்த மறைவான வாசற் கதவின் திறவுகோல் யான் சற்று முன் குறிப்பிட்ட அறையினுள் இருக்கின்றது. சில நாள் தாங்கள் தங்க வேண்டியிருப்பதும், தாங்கள் இருக்கும் வரையில் கூடியமட்டும் அது தங்களுக்கு இசைவாகவும் இனிதாகவும் செய்யப்படவேண்டியதுமான இவ்விடத்திலுள்ள ஏற்பாடு களையும் நிலைமைகளையும் தாங்கள் உடனே தெரிந்து கொள்ளும் பொருட்டாகவே இவைகளையெல்லாம் நான் சொல்லலானேன்" என்று இயம்பினாள்.

அவள்காட்டிய அன்பின் பலவகைகளுக்காகவும் குமுதவல்லி அம்முதியோளுக்கு நன்றியறிதல் கூறினாள்; அதன்பின் அம்முதியோள் அவர்களை விட்டுப்போயினாள்.

குமுதவல்லி முதன்முதல் தன் அறைகளைப்போய்த் தேர்ந்து பார்த்தாள். அவ்வரிசையில் நான்கறைகள் இருந்தன - முதலிலுள்ளது சொல்லாடுமிடம், அதனையடுத்த இரண்டு படுக்கையறைகள், கடைசியிலுள்ள குளியலுக்கும் உடுத்திக் கொள்வதற்கும் தகுதியாக்கப் பட்டதாகும். அங்கிருந்த தட்டு முட்டுகளெல்லாம் விலையுயர்ந்தனவாயும் நேர்த்தியாயும் இருந்தன; பொதுவான தளவாடங்களுங்கூடச் செலவேறப் பெற்றனவாயும், விலைமிகப் பெற்றனவாயும் இருந்தன. இப்போது தனது வருகையால் மலைநாட்டு வியாபாரியின் மாளிகைக்குப் பெருமையினை உண்டு பண்ணும் புகழ்பெற்ற அழகிய நங்கையின் வசதிக்கு வேண்டுவதொன்றும் குறைவு படவில்லை. குமுதவல்லி உடனே நீராடு வாளானாள்; பலரால் நெடுவழி வந்ததற்குப் பிறகு முக்கியமாய் இன்றைக்குப் புழுதிமிக்க

பாட்டை நெடுக வந்த களைப்பான பயணத்தின் பின்னர் அம்முழுக்கு மிகவும் இளைப்பாற்று வதாயிருந்தது. அவள் தன் றோழிமாரோடும் இருக்கும் அறைக்குத் திரும்பி வந்ததும், நேர்த்தியான உணவு கொண்டு வந்து மேசை மேற்பரப்பி வைக்கப் பட்டிருந்தது; இன்னும் ஏதேனும் வேண்டி யிருந்தால் அதனைக்கொண்டு வருவோரை அழைக்குங் கருவியாக ஒருசிறிய வெள்ளி மணியொன்று கைக்கருகே அம்மேசைமேல் இருந்தது. சுவைபல வாய்ந்த திறமான மெல்லிய உணவுப்பொருள்கள் மிக ஆழ்ந்த அறிவோடு அடுத்தடுத்து வைக்கப்பட்டிருந்த மையாலும், வாயூறச்செய்யவும் பழவகை களோடும், இளைப் பாற்று மிக்கும் பானகங்களோடும் உணவிற்குரிய ஒவ்வொன்றும் மிகுந்த கருத்தோடும் அமைக்கப் பட்டிருந்தமையாலும் சுவையை மிகக் கருதிப்பார்ப்பவர்க்கும் குறை சொல்லத்தக்கது ஏதுமேயில்லை. மேசையண்டை தன்னோடு கூட இருக்கும்படி குமுதவல்லி தன்றோழிமார்க்கும் கற்பித்தாள்; அவர்கள் தமக்கெதிரிலிருந்த மெல்லிய தின் பண்டங்களை எடுத்து அருந்தினார்கள். மனோகரர் ஊரில் இல்லாத விஷயம் மாத்திரம் கலவாவிட்டால், தான் சேர வேண்டிய இடத்திற்குப் பத்திரமாய் வந்து சேர்ந்த தைப்பற்றியும், தனதுமோதிரம் தன்னிடம் திரும்பவந்து பொருந்தி யதைப் பற்றியும் குமுதவல்லி முழுதும் மனஅமைதி பெற்றி ருப்பள்; ஏனென்றால், தனக்குரிய நாகநாட்டிலிருந்து மலை நாட்டின் தலைநகராகிய நீலகிரிக்கு அயர்ச்சியினையும் அபாயத்தினையும் தரும் நீண்ட பிரயாணத்தைத் தான் செய்யும் படி தூண்டப் பட்டது ஏதுக்காகவென்று தெரிந்துகொள்ள அவள் இயல் பாகவே ஆவலுற்றுக் கவன்றாள். மேலும், சில நாழிகை நேரங்களுக்குமுன்னே நேர்ந்த அல்லல்களை நினைக்கவே அவள் துயரம் அடையாதிருக்கக்கூட வில்லை; இன்னும் அத்தனை இளமையும் அழகும் அறிவும் வாய்ந்த நீல லோசனன் அவள்தான் நினைத்துக்கொண்டபடி அவ்வளவு பெருங்குற்றம் உடையவனானரைதத் துயரத்தோடும் உண்ணி வருந்தினாள்.

சாப்பாடு முடிந்ததும், குமுதவல்லி வசதிக்காகச் செய்த மைக்கப்பட்ட பலவகை ஏற்பாடுகளும் அவளுக்கு இசைவாக இருந்தனவாவென்று தெரிந்துகொள்ளும் பொருட்டு அவ் வீட்டுக்கார முதியோள் அவர்கள் முன்னேவந்தாள்; அவர்கள்

அவற்றின் இசைவினை மனமார மகிழ்ந்துரைப்பவே அவ்வம்மை போய்விட்டாள். அவ்வறை வரிசைகளின் வெளிக் கதவுகள் உடனே தாழிடப்பட்டன; குமுதவல்லியும் அவள் பாங்கிமாரும் துயில்கொள்ளப் போயினர்.

தடையின்றி அவர்கள் திளைத்த துயிலானது இனிதாகி அயர்வு தீர்ப்பதாயிற்று; விடியற்காலத்தில் அவர்கள் உறக்கம் நீங்கி எழுந்த போது, இடர்மிகுந்த அவ்வழிப்பயணத்தின் பிறகு பாதுகாவல் அமைந்த புகலிடம் தமக்கு வாய்த்ததைப் பற்றித் தமக்குள் மகிழ்ந்து பேசிக்கொண்டார்கள். வெளிக்கதவுகள் திறக்கப்பட்டவுடனே வீற்றிருக்கும் நேர்த்தியான சிற்றுணவு களைப்பரப்பினர்; சாப்பாடு முடிந்தவுடனே குமுதவல்லி நல்லகாற்று வாங்குவதற்காகத் தோட்டத்தினுள் இறங்கக் கருதினாள். அம்முதியோள் சொல்லியபடியே, மறைவான ஒரு படிக்கட்டுக் குளியறையிலிருந்து கீழேயுள்ள அகன்ற பூந்தோட்டத்திற்குச் சென்றது; அப்பூந்தோட்டத்தின் ஒருபக்க ஓரத்தில் சரக்கறைகளும் மாளிகையுஞ் சேர்ந்த நீண்ட ஒரு கட்டிடவரிசையும், மற்ற மூன்று பக்க ஓரங்களிலும் உயர்ந்த சுவர் களும் இருந்தன. மலர்ப்பாத்திகளும், பசுங்கொடிபடர்ந்த நிழலுள்ள வாயில்களும், கொடிப்பந்தர்களும், நீருற்றுகளும் உள்ளனவாக அத்தோட்டம் அழகாகப் பண்படுத்தப் பட்டிருந் தது; கடைக்கோடி யிலுள்ள சுவரிலே அவ்வம்மையாற் குறிப்பிக் கப்பட்டதும் நகரத்தில் ஒரு தெருவுக்கு வழியாயுள்ளதுமான மறைந்த நுழைவாயிலொன்று இருந்தது. முதலில்தாம் வந்து சேர்ந்தபோது தெருப்பக்கத்தேயுள்ள பகுதியைமாத்திரம் பார்த்து அவைசிற்றளவினவாக உறுதிப்படாமல் மதித்திருந்த குமுதவல்லியும் அவள்தோழிகளும் இப்போது மனோகரரின் கட்டிடங்களுடைய பேரளவினைக்கண்டு பெரிதும் வியப்புற்றார் கள். இப்போது அவர்கள் அக்கட்டிடங்களின் தன்மையையும் சாளரங்களின் அடுக்குகளையும் கண்டு அப்பெரிய மாளிகையின் பெரும்பகுதி செல்வத்திற்சிறந்த மனோகரர் தம்முடைய சரக்குகளை வைத்திருக்கும் பண்டக அறைகளை உடையதாகு மென்று சொல்லக்கூடிய தாயிருந்தது.

சில நாழிகைநேரம் குமுதவல்லியும் அவள் பாங்கிமாரும் அத் தோட்டத்தில் தங்கியிருந்தனர்; அழையாமல் வருவார் எவரும் அங்கில்லாமையால், நாகநாட்டின்கண் குமுதவல்லியின்

மாளிகையை அடுத்துள்ள இன்ப இளங்காக்களில் இருப்பது போல அவர்கள் ஒருசிறிதும் அச்சமும் தடையுமின்றி யிருக்கப் பெற்றதனை உணர்ந்தார்கள். திரும்பவும் அவர்கள் வீட்டினுட் புகுந்தபோது, மறுபடியும் மேசைமேல் உணவு கொண்டுவந்து வைக்கப்பட்டிருந்தது. அம்முதியோள் தனக்கெதிரே வரக் கண்டதும் குமுதவல்லி மனோகரர் திரும்பி வந்தனரா என்று வினவினாள். அவ்வம்மை அவர் வரவில்லையென்று விடை பகர்ந்து, ஆயினும் அவர் நாளைக்கு நீலகிரி வருவதாக உறுதிமொழிபுகன்று செய்தி அனுப்பியிருக்கிறார் என்றுரைத் தாள். தான் நாகநாட்டிலிருந்து அழைக்கப்பட்டதன் காரணத் தைப்பற்றிய ஐயுறவும் ஆவலும் விரைவில் நிறைவேறும் என்றெண்ணிக் குமுதவல்லி இச்செய்தியால் மன அமைதி பெற்றாள்.

மாலையில் ஐந்துநாழிகை ஆயிருக்கும் - குமுதவல்லி மறுபடியும் தன்றோழிமாரோடு தோட்டத்தில் உலவியிருந்து வீட்டுக்குள் திரும்பிவந்தாள் - அச்சமயத்தில் வீற்றிருக்கும் அறையில் அம்முதியோள் வந்து,

“பெருமாட்டி, தாங்கள் மனம் உவந்தால் ஒருபெண் பிள்ளை தங்களைக் காணவிரும்புகிறாள்.” என்று கூறினாள்.

“எந்தப்பெண்பிள்ளை? நீலகிரியில் இந்த இல்லத்திற்குப் புறத்தே எனக்குப் பழக்கமுள்ளவர்கள் எவரும் இல்லையே.” என்று நாகநாட்டரசி கேட்டனள்.

“பெருமாட்டி, திகழ்கலை என்னும் பெயரைமொழிந்தால் தன்னைப் பார்ப்பதற்கு நீங்கள் ஐயுறமாட்டீர்கள் என்று அவள் சொல்லுகிறாள்.” என்று அம்முதியோள் விடைகூறினாள்.

“ஆ, திகழ்கலையா!” என்று வியந்து கூறிக் குமுதவல்லி ஒரு நொடியில் முன்னாள் நடந்த இடரிற் சம்பந்தமுற்ற அறிவோளை நினைவுகூர்ந்து, “ஆம் - நான் அவளைப் பார்க்கிறேன். அவளை வரவிடு.” என மொழிந்தாள்.

அம்முதியவள் அங்ஙனமேபோய்ச் சிறிதுநேரத்தில் திகழ்கலையைக் குமுதவல்லியின் எதிரே அழைத்து வந்தாள். அவ்வறிவோள் முந்தியநாளில் உடுத்தியிருந்தபடியே இருந் தனள்; ஆனால் இச்சமயத்தில் அவள்கையில் மருந்துகளும் உறை மருந்துகளும் அடங்கிய பெட்டி கொண்டுவரவில்லை.

அவள்தான் அணிந்திருந்த முக்காட்டைப் பின்னே வாங்கியதும் அவள் முகத்தில் ஒரு துயர்க்குறிப்புத் தோன்றியது; அவள் மீனாம்பாளைப்பற்றிப் பேசவே வந்தனளென்று குமுதவல்லி இயற்கையாக நினைந்தாள். திகழ்கலைமிகுந்த பணிவோடும் நம் தலைவியை வாழ்த்தி, "அழகிய நங்கையே, தாங்கள் இத்தனை கருக்கில் என்னைக்காண நினைத்திருக்கமாட்டீர்கள்." என்று புகன்றாள்.

"என்ன காரியமாய் இங்கே வந்தாய்? என்னை எந்த இடத்திற் காண்பதென்பதை நீ எங்ஙனம் தெரிந்து கொண்டாய்?" என்று நாகநாட்டரசி வினவினாள்.

இரண்டாவதுகேட்ட கேள்வியை மெல்ல நழுவவிட்டுப், "பெருமாட்டி, புனிதமான புண்ணிய காரியத்தின்பொருட்டு யான் வந்திருக்கிறேன். யான் புத்தமதத்தைச் சேர்ந்தனவாயினும், மலைய நாட்டார்க்குரிய கொள்கைகளில் எனக்கு உடன்பாடு இல்லையாயினும், மலையநாட்டார்க்குரிய அவைகளிற் பெரும்பாலன பேதைமையின் பான்மையென எனக்குத் தென்பட்டனவாயினும் எல்லாச் சமயக்கொள்கைகளினும் எனக்குப் போதுமான நன்குமதிப்பு இருக்கின்றது; அதனாலேயே இந்தத்தடவை தங்களுக்குத் தூதாகவரும்படி தூண்டப் பட்டேன்." என்று திகழ்கலை விடைகூறினாள்.

குமுதவல்லி மறைபொருளான இச்சொற்களைக்கேட்டு வியப்பெய்தினவளாய், "நீ சொல்லுவதன் கருத்துயாது திகழ்கலை? எவரிடத்திருந்து தூதாக வருகின்றனை!?" என்று கேட்டாள்.

"இறந்தவரிடமிருந்து தூதாய் வருகின்றேன்!" என்று வெருக்கொள்ளத்தக்க விடைபகர்ந்தாள்.

குமுதவல்லியின் முகம் வெளிறினது - ஏனெனில், அம்மறுமொழியில் அச்சமும் திகிலும் கொள்ளத்தக்கது ஏதோ இருந்தது; ஆனாலும், அதற்கு உருவகப்பொருள் வேறிருக்க வேண்டுமென வினாவிற்கருதினவளாய்த், "திகழ்கலை, என்னிடத்தில் ஒட்டிவருவது உருவகத்திலாவது பேசாதிருக்கும் படி உன்னைக்கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன்; இயன்ற மட்டும் நீ சொல்ல வேண்டியதைத் தெளிவாக விளக்கிச்சொல்" என்று கூறினாள்.

"யான் இறந்தவர்களிடமிருந்து நேரேவராவிட்டாலும்" என்று திரும்பவுந் தொடர்ந்து "இறந்தவர்கள் பொருட்டாகயாக வந்திருக்கிறேன். அதனால்யான் இறந்தவர்களிடமிருந்து உண்மையாக வந்த தூதியே உயிரோடிருப்பவர் தமது பேதைமை யால் இறந்தவர்கள்மேல் ஏற்றிச்சொல்லும் ஆவிக்குக் கீழ்ப் படிந்து யான் தூதாக வந்திருக்கிறேன்!" என்று உரைத்துத், தன் கண்களைக் குமுதவல்லி மேல் வைத்து ஊடுருவப்பார்த்துக் கூறுவாள்: "பெருமாட்டி, கள்வர் தலைவனான நல்லானுக்கு நல்வினையற்ற மனைவியாய் இறந்துபோன மீனாம்பாள் தங்களுக்கு பகைவரான சிலரோடு கட்டுமானமாய்ச் சேர்ந்து சூழ்ச்சி செய்தாள்; அவன் இறக்குந்தறுவாயில் அவளது தலையைத் தங்கள் மார்பில் அணைத்துக்கொள்ளும்படி புத்தர் தங்களை அவள் செல்லும்வழியிற் செலுத்தின அதே சமயத்தில் அவள் உங்களுக்கு ஒரு பொல்லாங்கு இழைக்கக் கருத் துற்றிருந்தாள். அவளுடைய ஏவற்காரிகள் வாயிலிருந்து யான் பலவற்றைக் கேட்டுணர்ந்தேன்."

"நல்வினையற்ற மீனாம்பாள் என்னிடத்திற் தீய எண்ணங் கள் வைத்திருந்தனளாயின் யான் அவளை மன்னித்து விட்டே னே! ஓ! என் நெஞ்சார யான் அவளை மன்னித்துவிட்டேனே!" என்று குமுதவல்லி இடைப்புகுந்து கூறினாள்.

"பெருமாட்டி, நீங்கள் அவளோடு தனிமையாக விடப் பட்ட போது, யானும் அவள் தோழிமார் இருவரும் சிறிது சேய்மையிற் போயிருந்தபோது, நீங்கள் அவள்மேற் குனிந்திருந்த வகையினாலும் உங்கள் பார்வையினாலும் உங்கள் பயில்களி னாலும் உங்கள் முகத்தை அவள் ஏறிட்டு நோக்கியதனாலும் தாங்கள் அவளை மன்னித்ததை உறுதிப்படுத்திக் கொண்டிருந் தீர்களென்று யான் தீர்மானஞ் செய்யக்கூடியதாயிருந்தது. இந்தக்காரணம் பற்றியே யான் இப்போது இங்கிருக்கின்றேன். இந்தக்காரணம் பற்றியே தங்களுக்குரிய இனத்தவர்களும் அவர்களுக்கு இனமானவர்களும் எண்ணுகிறபடி அந்த மன்னிப்பைப் பின்னும் உறுதிப்படுத்தும்படி தங்களை ஆணையிட்டுக் கேட்டுக்கொள்ளப்போகிறேன். பெருமாட்டி, இறந்துபோகும் ஒருவருக்குச் சொல்லிய மன்னிப்பு இறந்து போன அவரது பிணத்தின் பக்கத்தேயிருந்து மேலும் மிகுந்த பரிசுத்தத்தோடும் பயபக்தியோடும் திரும்பவும் வற்புறுத்தப்

பட்டாலல்லாமல் அது பயன்படுவதில்லை யென்னும் ஒரு நம்பிக்கை உங்கள் காட்டில் எங்கள் சொந்த நாக நாட்டில் இருக்கிறதன்றோ?" என்று திகழ்கலை மறுமொழி கூறினாள்.

திகழ்கலை இப்பேச்சின் கடைசிப்பாகத்தைச் சொல்லிய போது குமுதவல்லியின் முகம் வணக்கமும் பயபத்திக்குறிப்பும் உடையதாயிற்று; இச்சொற்களைப் பயபக்தியோடு சேர்ந்த ஆவலுடன் உற்றுக் கேட்டுக் கொண்டிருந்த சுந்தராம்பாளும், மீனாம்பாளும் தம்முடைய தலைவி இப்போது தன் முகத்தில் காட்டிய குறிப்பைப் போலவே தமக்குள்ளுங் காட்டிக் கொண்டார்கள்.

தனது சமயக்கல்விகளின் இடையே இத்தகைய ஓர் ஆழ்ந்த நம்பிக்கையுடையவளான குமுதவல்லி இப்போது தானும் அதன் வயப்பட்டவளாகி மெல்லிய குரலில், "மேற்கணவாய் மலைப் பக்கத்திலுள்ளவர் அத்தனைபெயர்க்கும் மெய்யாக அந் நம்பிக்கை உண்டு தான் - ஆகவே, திகழ்கலை, இப்போது எண்ணிக் கொண்டிருப்பதின்னதென ஒரு சிறிதுணர்கின்றேன்." என்று மொழிந்தார்.

அதனைத்தொடர்ந்து திகழ்கலை கூறுவாள். நல்வினை யற்ற மீனாம்பாள் விட்டுப்போன இரண்டு ஏவற்காரிகளான மலைநாட்டுப் பணிப்பெண்ணும், காப்பிரிமாதும் தம் அன்புள்ள தலைவியின் பிணத்தை நீலகிரிக்கு எடுத்து வந்திருக்கிறார்கள்; இறந்துபோகுந் தறுவாயில் உயிரோடிருந்த பெண்மகளின் அருகிலிருந்த நீங்கள் சொல்லிய மன்னிப்பு உறுதிமொழியை மறுபடியும் பிணத்தின் பக்கத்தில் வந்து சொல்லும்படி தங்களிடம் போய்த் தன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுமாறு என்னை வேண்டினவள் அந்த மலைநாட்டுப் பணிப்பெண்ணே தான். எதன் பொருட்டுத் தங்கள் முன்னிலையில் யான் வந்திருக்கிறேனோ அந்தப் புதுமையான நம்பிக்கை எவ்வளவு தூரம் செல்லக்கூடுமென்பதைப், பெருமாட்டி என்னைவிடத் தாங்கள் நன்றாய் அறிவீர்கள். இறந்துபோன மீனாம்பாள் தங்களுக்கு எவ்வளவு தீங்கிழைத்தாலும் அல்லது இழைக்க நினைத்திருந்தாலும் அவற்றிற்காகத் தாங்கள் மொழிந்த மன்னிப்பு மொழிகள், உயிரற்ற அவள் பிணத்தருகேயிருந்து பயபக்தியோடு திரும்பவுஞ் சொல்லப்பட்டால் அல்லாமல்

அவளுயிர்க்கு அமைதியைத் தரப்போத மாட்டாவாகும் என்று எனக்குத் தெரிவிக்கப்பட்டது."

குமுதவல்லி ஆழ்ந்த சிந்திப்பாளானாள் - அவள் தோழிமார் இருவரும் தம் இளைய தலைவியின் முகத்தை திகிலோடும் ஐயுறவோடும் நோக்கிக் கொண்டிருந்தனர்.

கடைசியாகக் குமுதவல்லி திகழ்கலையின் முகத்தை ஏறிட்டுப் பார்த்துக் "கள்வர் தலைவனான நல்லானின் நல்வினையற்ற மனையாளது பிணம் எங்கே கிடக்கின்றது?" என்று கூறினாள்.

"பெருமாட்டி, இங்கிருந்து நெடுந்தூரமில்லை." என்று மறுமொழி தந்து, "அதோ அப்பக்கமாய் மூன்று அல்லது நான்கு தெருக்களுக்கு அப்பால்தான்" என்று அவ்வறிவோள் அவ்வீட்டின் பின்பகுதியை நோக்கிச் சுட்டிக் காட்டினாள்.

மறுபடியும் குமுதவல்லி சிந்திப்பாளானாள்; மறுபடியும் அவள் பாங்கிமாரின் கண்கள் ஆவல்கொண்ட ஐயுறவோடும் அவள்மேற் பதிந்தன.

நெடுநேரம் பேசாமலிருந்த பிறகு குமுதவல்லி திரும்பவும் வாயைத்திறந்து, "நீ கேட்டுக்கொண்டபடி நடப்பதற்கு என்னுள் ளம் என்னைத்தூண்டுகின்றது. நீ பேசிக்கொண்டிருந்த நம்பிக் கையில் உண்மையிருக்கிறதென்று யான் மெய்யாகவே கற்பிக்கப் பட்டிருக்கின்றேன்." என்றுரைத்துப் பின்னும் அந்த தயாள குணம் அமைந்த இளைய நங்கை, ஓ! இறந்துபோன அவ்வுயிர்க்கு அமைதியைத் தரத்தக்கதெதனையும் யான் முழு திருப்பத்தோடு செய்வேன்! ஆனாலும், இஃது என்னைப் பிடிப்பதற்கு விரித்த வலையன்றென்று யான்மனங் கொள்வதெப்படி? யாம் இங்ஙனம் விட்டுச் சொல்வதற்காகத் திகழ்கலை, என்மேல் குற்றஞ் சொல்லுதல் கூடாது. தீய எண்ணஞ் சிறிதும் இல்லா மலிருக்கக் கூடிய ஒருவர்மேல் யான் இங்ஙனம் ஐயுறுதல் பற்றி என்மேற் குற்றஞ் சொல்லுதல் கூடாது. உன்னுடைய நோக்கம் நல்லதாகவே யிருக்கலாம் - யானும் அஃது அப்படித்தான் என்று நம்புகிறேன் - என்றாலும் நீ அறியாமலும் உனது கண்சாடை இல்லாமலும் பிறர் கைக்கருவியாக்கப் பட்டிருக்கலாம்?"

அதுகேட்ட திகழ்கலை ஒடுக்கவணக்கம் மிக்க குரலில் பெரிதும் எண்மைதோன்றக் கூறுவாள்: "பெருமாட்டி யான்

புனிதமாக நினைத்தவை யெல்லாம் அறியப் புத்தரும் அவர் சாரணரும் அறிய ஆணையிட்டுக் கூறுகின்றேன். யான் உங்களுக்குப் பொய்யறுவேனானால் இறந்துபோன எம் பெற்றோர் பிழைத்தேனாவேன் ஆதலால் அவர்கள் அறிய, இல்லாதல் யானாவது மற்றையோராவது உங்களிடத்து ஒரு சிறிதுந் தீய எண்ணம் வைத்திலேம் என்று ஆணையிட்டுக் கூறுகின்றேன். உங்கள் செழுங்கூந்தலில் ஒரு மயிரேனுந் தீங்குற யான் காண்பேன் அல்லேன்! ஏழை அறிவாட்டியிடம் நீங்கள் அன்போடு பேசினீர்களன்றோ - அலைந்து திரியும் திகழ் கலையை நீங்கள் புன்சிரிப்புகளால் நீங்கள் ஊக்கப் படுத்தினீர் களன்றோ - தானே பெருமை பாராட்டிப்பேசிய அவளது திறமை தவறிப் போன அச்சமயத்தில் அவளைத் தாங்கள் அருவருத்துத் தள்ள வேண்டுவதாயிருக்க, அப்போதும் அவளுக்குத் தங்கள் பொற் பணம் கொடுத்தீர்களன்றோ, அதுவன்றியும், பெரு மாட்டி, உங்களுக்குத் தீதுசெய்யக் கனவில் எண்ணுவதாயினும் அது வானுலகத்துள்ள ஒரு கந்தருவ மாதினோடு சண்டை யிடுத லையே ஒக்கும்:!"

திகழ்கலையின் பார்வையிலும் அவள் நடந்துகொண்ட வரையிலும் களங்கின்மை காணப்பட்டது; அதனால் அவள் பேசிய சொற்களும் அந்தன்மை யுடையவாகவே யிருந்தன; குமுதவல்லி மறுபடியும் சிறிது நேரம் எண்ணமிட்டுக் கொண்டிருந்தமையின், தன் இருக்கையினின்றும் எழுந்து, "யான் உன்னுடனே வருகிறேன்." என்று மொழிந்தாள்.

"பெருமாட்டி - அன்பிற் சிறந்த பெருமாட்டி!" என்று சுந்தராம்பாள் சொல்லிக்கொண்டே தன் தலைவியின் காலடி களில் வீழ்ந்து, "கொடும்புலிவாழுங் குகைக்குள் தாங்கள் செல்லா திருக்கும்படி தங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன்!" என்று மொழிந்தாள்.

அங்ஙனமே துன்புற்றுத் திகில்கொண்ட ஞானாம்பாளும் மண்டிக்காலிட்டுப் "பரிசுத்தமான எல்லாப் பொருள்களும் சான்றாகப் பெருமாட்டி தாங்கள் இங்கேயேயிருக்கும்படி வேண்டிக் கொள்கின்றேன்! அலைந்து திரியும் ஒரு பௌத்தப் பெண்பிள்ளை தனக்கு உடன்பாடில்லாத சைவசமயக் கொள்

கைக் குரிய காரியங்களில் அத்தனை பிரயாசை யெடுத்துக் கொள்வளென்று தாங்கள் நினைக்கிறீர்களா-" என்று கூறுகையில்,

திகழ்கலை நடுவே புகுந்து, அலைந்து திரியும் ஏழைப் பௌத்தப் பெண் தன் மதத்தை இழித்துப்பேசுவோர் கொள்கை களையும் நன்கு மதிக்கின்றாள். என்று சினவாமல் அமைதி யோடும் துயரத்தோடுங் கூறினாள்.

"காரிகையீர் எழுந்திருங்கள், நீங்கள் எழுந்திடும்படி நான் கட்டளையிடுகின்றேன்! என் பொருட்டு நீங்கள் கவலை யுற்றதற்காக நான் நன்றியறிதலுடையவளா யிருக்கின்றேன்; என்றாலும் யான் உறுதிசெய்துவிட்டேன் - என் விருப்பத்திற்குக் குறுக்குச் சொல்ல லாகாது," என்று சொல்லுங் குமுதவல்லி ஏதோ ஒன்றைச் சடுதியில் நினைத்தவளாய்த் திகழ்கலையின் பக்கமாய்த்திரும்பி, "ஆ! தற்செயலாகவேனும் என் கண் எதிர்ப்படும் படி-" எனக்கூறப்போகையில், அல்லறிவோள் அடக்க வொடுக்கத்தோடும் அழுத்தமாய் பகருவாள்: பெரு மாட்டி,யான் சொல்வதை உற்றுக்கேளுங்கள்! யான் தங்களை அழைத்துப் போகக் கருதியிருக்கும் இடத்தில் என் வாயி லிருந்தல்லாமல் வேறெவர் வாயிலிருந்தும் ஓர் எழுத்துக் கூட உங்களை நோக்கிப் பேசப்படமாட்டாது! என் கையைத் தவிர வேறெவர் கையும் உங்கள் மேற்படமாட்டாது! யான் கூறும் இக் கட்டுரைகளுக்குக் கௌதமசாக்கியரையும் அவர் சாரணரையும் மறுபடியும் சான்றாக வைக்கின்றேன்!

"அங்ஙனமாயின் யான் உன்னுடன் வருகிறேன்." என்று கூறிய குமுதவல்லி அதன்பின் பாங்கிமாரை நோக்கி "மாதர்கள் நீங்கள் என்னுடன் வரவேண்டாம் என்று கேட்டுக் கொள்ளு கிறேன்-" என மொழிகையில்,

சுந்தராம்பாள், "ஆம், பெருமாட்டி, நாங்கள் தங்களோடு செல்வோம்! எங்களுக்காகவன்று நாங்கள் அச்சமுறுவது," என்று கூறினாள்.

"ஆண்டவன் தடைசெய்வானாக! ஏதேனும் இடர் நேருமாயின் எங்கள் அன்புள்ள பெருமாட்டியோடு நாங்களும் அதனைச் சேர்ந்து அனுபவிப்போம்!" என்று ஞானாம்பாள் உரைத்தாள்.

"தங்களுக்கு விருப்பமானால், பெருமாட்டி, இவர்கள் உங்களோடு வரலாம்" என்று திகழ்கலை மொழிந்தாள்.

அவ்வறிவோளின் உண்மை யொழுக்கத்தை மெய்ப் பித்தற்கு இது மற்றுமொரு சான்றாகத் தோன்றியது; ஆயினும் தன்தோழிமாரில் ஒருத்தியையே தன்னுடன் அழைத்துக் கொண்டு செல்லக் குமுதவல்லி தீர்மானித்தாள்; ஏனென்றால், உண்மையிலே ஏதேனும் இரண்டகமான ஏற்பாடு செய்யப் பட்டிருக்குமானால், தன் தலைவியும் மற்றைத்தோழியும் ஏமாற்றிக் கொண்டு போகப்பட்ட வகைகளை விரித்துக் கொள்வதற்கு ஒருத்தி தனக்குப்பின் இங்கேயிருக்க வேண்டு மென்று தீர்மானஞ்செய்தாள்.

அதற்கு இணங்கவே அவள், "சுந்தராம்பாள், நீ என்னோடு வா; ஞானாம்பாள், நீ நாங்கள் திரும்பிவருமளவும் இங்கேயே தங்கியிருக்க வேண்டும். இவ்விடுதியினின்றும் இதனைச்சேர்ந்த வீடுகளினின்றும் நாங்கள் யாரும் அறியாமற்போய் வருவதற்கு நல்லகாலமாய் எனக்கு வழிகிடைத்திருக்கிறது. ஞானாம்பாள், நீ இந்த அறையில் இரு. யான் இல்லாதபொழுது இவ்வீட்டு முதியோள் இங்கு வந்தால் யான் சிறிது நேரத்திற்கு என் அறையில் தனியே யிருக்கப் போனேன் என்று சொல் - சுந்தராம்பாள், என்னோடு வா! திகழ்கலை யான் ஆயத்த மாயிருக்கிறேன்!" எனப் பகர்ந்தாள்.

ஞானாம்பாள், தன் இளைய தலைவியின் கையைப் பிடித்துத் தன் விழிகளினின்றும் நீர் ஒழுக அதன்மேல் முத்தம் வைத்தாள்; ஏனென்றால், தான் குமுதவல்லியை இனி என்றுங் காணாதவாறு பிரிந்து போவதாகவே நம்பிக்கையும் அன்பும் வாய்ந்த அப்பெண் எண்ணினாள்.

"என் மாதே, மடமையால் வருந்தாதே." என்று நாக நாட்டரசி கூறினாள்; தன் சொற்கள் அவளைக் கடிந்து கொள்வது போற் காணப்பட்டாலும், அன்போடும் விருப்பத்தோடும் தன் கையால் அவளது கையைப்பிடித்து அணைத்துக் கொண்டாள்; தான் மிக்க மனத்திண்மை யோடிருந்தும் இவள் தன் கண்களி னின்றும் நீர் ததும்பாமல் தடை செய்யக் கூடவில்லை.

திகழ்கலை பின்னேவர இவள் அவ்வறையைவிட்டு விரைந்து போயினாள்; சுந்தராம்பாளோ தன்னுடன் றோழியாகிய

ஞானாம்பாளைத் தழுவிக்கொள்ளும் பொருட்டு ஒரு கணப் பொழுது பின்னே நீடித்து நின்றாள்.

திகழ்கலையைச் சில நிமிஷநேரம் அங்குள்ள படுக்கை யறைகளில் ஒன்றில் இருக்கும்படி கற்பித்துவிட்டுக், குமுதவல்லி குளியலறைக்குட் சென்றாள். அங்கே தான் அணிந்திருந்த அணிக்கலன்களையெல்லாம் கழற்றி ஓர் அலமாரியுள் பேணிவைத்தாள். விலைமதித்தற்கரிய அம்மந்திர மோதிரத் தையும் தனது பணப் பையையும் அவற்றோடு சேர்த்து அங்கே வைக்க அவள் மறந்து விடவில்லை; ஏனென்றால், கொள்ளைக் காரரின் ஆசையை எழுப்புதற்குரிய அணிகல னாவது நாணய மாவது சிறிதுத் தன்னிடத்தில் இருக்கலாகா தென்று அவள் தீர்மானித்தாள். அவள் அலமாரியை கருத்தாய்ப் பூட்டத் தான் திரும்பிவராவிடினும் சிறிது தேடிப்பார்த்தால் திண்ணமாய்க் கண்டுபிடித்ததற்கு இசைந்த ஓர் இடத்தில் அதன் சாவியை வைத்தாள். பின்னர் ஒரு துப்பட்டியினால் தன்னை மூடிக் கொண்டு, தோட்டத்தின் கடைசியிலுள்ள நுழை வாயிலைத் திறப்பதற்குரியதும் அவ்வீட்டு முதியோள் கூறியபடி அம் மஞ்சணச் சாலையிற் கண்டெடுக்கப்பட்டதுமான சாவியைக் கையிற் பற்றினவளாய்த் தான் புறப்படுதற்குச் சித்தமாயிருப்பதைத் திகழ்கலைக்குஞ் சுந்தராம்பாளுக்குங் குறிப்பித்தாள். அவ்வறி வோள் தன் கண்களை மாத்திரம் திறப்பாகவிட்டுத், தன் முகத்தையெல்லாம் சணல் நூற்றுணி யினால் முக்காடிட்டுக் கொண்டாள்; சுந்தராம்பாளும் தனது போர்வையினால் முக்காடிட்டுக் கொண்டாள். அம்மூவரும் மறைபடிக்கட்டின் வழியாய்த் தோட்டத்தினுள் இறங்கி னார்கள். விரைந்துசூழும் மசங்கல் மாலைப் பொழுதினிடையே அதிற் கடுகி நடந்தார்கள்; கடைசியில் சுவரிலுள்ள நுழை வாயிலண்டை வந்து சேர்ந்தார்கள். குமுதவல்லியினிடமிருந்த சாவியால் அதனைத் திறந்து அங்கு நின்றும் வெளிப் பட்டார்கள்; இப்போது திகழ்கலை அடுத்துள்ள தெருக்களி னூடே வழி காட்டிச் செல்ல லானாள்.

## அதிகாரம் - 13

## சமயச் சடங்கு

குமுதவல்லிக்கு உரிய நாட்டின் நிலைமையை எண்ணிப் பார்க்குங்கால், அவள் இயற்கையறிவும் சிறந்த கல்வி யுணர்ச்சியும் மிகுந்த தெளிவும் உடையவளாயிருந்தாள், அவளது உள்ளம் சைவசமய உண்மைகளால் ஆழ நிறைக்கப் பட்டிருந்தது. மேற்கணவாய் மலைப்பக்கங்களிலே அச்சமயத் தின் மிகச் சுத்தமான உண்மைகள் அவல நம்பிக்கைகள் பலவற்றோடுங் கலந்திருந்தமையால், குமுதவல்லியின் உள்ளமும் அந்நம்பிக்கை களிற் பிணைப்புண்டிருந்தது. இப்போது தான் மயக்குற்று நடக்கும் நம்பிக்கையைப்பற்றி அவளது இயற்கை நல்லறிவு ஆழ்ந்து நினைத்துப் பார்க்கும்படி தூண்டப்படு மானால், அஃதொரு மூடநம்பிக்கையேயல்லாமற் பிறிதில்லை யென்னும் ஒரு முடிபுக்கு அவள் வரக்கூடும். ஆனால் இதற்குமுன் அவள் அதனை எண்ணிப்பார்க்கும்படி தூண்டப்படவில்லை; இப்போதோ அவள் அதனை மன அமைதியோடிருந்து ஆய்ந்து பார்க்க ஒழிவில்லை. இன்னுந் தெளிந்த அறிவுள்ள நாடுகளில் மனவுரம் மிகுந்தோர் பலர் இத்தகைய அவல நம்பிக்கைகளுக்கு இணங்கியொழுகுமாறு போலவே, இவளும் இதற்கு ஒருப்பட்டு நடப்பாளாயினள். முந்தின நாளில் மீனாம்பாளைப்பற்றி சேர்ந்த துயரமான நிகழ்ச்சிகள் குமுதவல்லியின் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தன. தான் உண்மையில் குமுதவல்லிக்குச் செய்த அல்லது செய்ய நினைத்த தீங்குகளுக்குப் பரிகாரமாகத் தான் இறக்குந் தறுவாயிற் சொல்லவேண்டுவன வெல்லாஞ் சொல்லி யொழிக்க, அந்நல்வினையில்லா மங்கையினிடத்து அவள் அளவுகடந்து இரக்கப்பட்டாள். ஆகவே, அம்மங்கையின் உயிர் அமைதிபெறும் பொருட்டு தான் இப்போது செய்தற்கு மேற்கொண்டதனைச் செய்யும் வகையில் இதனைப்படிப்பவர் முன்னரே அறிந்த அளவுக்குமேல், குமுதவல்லி பொழுது நீட்டித்தலின்றி

இணங்கினாள். அதாவது: கொள்ளைக்காரன் மனைவிக்கு உயிர் இருக்கையிலேயே அவளுக்குச் சொன்ன மன்னிப்பு மொழியைத் திரும்பவும் அவளது பிணத்தண்டை யிலிருந்து சொல்லுவதே யாம். இந்த அவல நம்பிக்கை ஒரு சிறந்த கருத்துப்பற்றியே எழுந்ததென்பதில் ஐயம் இன்று வலிய சில உணர்வுகளின் வசப்பட்ட நிலையில் மன்னிப்பு மொழிகள் சொல்லப்படலாம்; தன் பகைவனாயினுந் தனக்குத் தீங்கிழைத் தோனாயினும் தன் கண்ணெதிரே அழிந்துபடுகையில் ஒரு நொடிப்பொழுது தயாளகுணத்தால் உந்தப்பட்டும் மன்னிப்பு மொழிகள் சொல்லப்படலாம்; என்றாலும் பிணத்தின் பக்கத்தேயிருந்து சீர்தூக்கி வணக்க ஒடுக்கத்தோடுஞ் சொல்லப்படும் மன்னிப்பு மொழியில் உண்மையில் மிக்கதும் உறுதியிற் சிறந்ததும் ஆனது ஏதோயிருக்கின்றது.

குமுதவல்லி தான் செய்து முடிக்க உடன்பட்டதும் குருக்கள் மாரால் சமயக் கொள்கையிற் சேர்த்து வைக்கப் பட்டதுமான சடங்கின் நோக்கமும் தோற்றமும் அவையே என்பதில் ஐயமின்று. ஆயினும், நாம் முன்னரே கூறியபடி இவ்விஷயத்தைப்பற்றி எண்ணிப்பார்க்கக் குமுதவல்லிக்கு நேரமில்லை. முதலில் அவள் தன்னை அகப்படுத்தச் செய்த சூழ்ச்சியாயிருக்கலாமோ என்று மாத்திரம் நினைந்தாள். ஆனால் திகழ்கலையின் சொற்களையும் உறுதிமொழிகளையுங் கேட்டு அந்நினைவு தீர்ந்தவுடன், இறந்துபோனவுயிர் அமைதி பெறற்பொருட்டுத் தான் செய்வதற்குக் கடமைப்பட்டதனைச் செய்வது பரிசுத்தமான கடனென்றெண்ணினாள்.

இப்போது கிட்டத்தட்ட ஆள் வழக்கம் அடங்கிய தெருக்களினூடு வழி காட்டிக்கொண்டே திகழ்கலை போயி னாள். அந்த இளவேனிற்காலத்திடையில் வழக்கமாய் இருப் பதைக் காட்டிலும் மிகுந்த புழுக்கம் வாய்ந்த ஒரு நாளின் பிறகு அம்மாலைக் காலமானது இருண்டு மங்கித் தோன்றியது. அங்ஙனம் அவர்கள் போய்க்கொண்டிருக்கையில் வானத்தி லிருந்து பளீரென ஒரு மின்னல் தோன்றியது. அவர்கள் தம்முகத்தை மறைத்திருந்த முக்காடுமாத்திரம் இல்லாதிருந்த தாயின் அஃது அவர்கள் கண்களைக் குருடுபடுத்தியிருக்கும்.

அந்த மினுமினுப்பானது சிறிதுநேரம் அவ்விடத்தை முற்றும் ஒளிமயமாக்கி, அத்தெருவின் இருமருங்கினும் உள்ள

கட்டிடங்களை நொடிப்பொழுதேனும் நன்கு புலப்படக் காட்டியது. அதே நேரத்தில் எதிர்ப்பக்கத்தே விரைந்து போய்க்கொண்டிருந்த ஒருவனுடைய முகம் குமுதவல்லி பார்வைக்குத் தென்பட்டது. உடனே அவள் திகில்கொண்ட ஓர் ஐயத்தினாற் பற்றப்பட்டுச் சடுதியில் நின்றாள்; ஏனெனில், அவள் அங்ஙனங் கண்டது நீலலோசனன் முகத்தையே யாம்!- அச்சமூட்டும் நல்லானை யன்றிப் பிறன் அல்லன் என இன்னும் அவன் பிழைபட நம்பின அவ்வழகிய பௌத்தஇளைஞனது முகத்தையேயாம்! சடுதியில் மறைந்த அம்மின்னொளிக்குப் பின்னர் அங்குத் தோன்றிய இருள் முன்னிலும் கருமையாய்த் தோன்றியது, ஆகவே, குமுதவல்லியும் சுந்தராம்பாளும் தன்னைப் பின் றொடர்ந்து வந்தில ரென்பதனைத் திகழ்கலை உடனே காணக்கூடவில்லை.

அம்மின்னொளியானது தன் தலைவியைக் குருடு படுத்தியதோ அன்றி ஏதேனும் பழுது செய்ததோ வென்னும் நடுக்கம் வாய்ந்தவளாய் "அன்புள்ள பெருமாட்டி, யாது நேர்ந்தது!" என்று சுந்தராம்பாள் கேட்டனள்,

"ஒன்றுமில்லை-ஒன்றுமில்லை சுந்தராம்பாள்!" என்று கலக்கம் பாதியும் திகைப்புப் பாதியும் உடையளாய்க் குமுதவல்லி விடை கூறினாள்.

"ஆ! மெய்யாகவே மின்னலானது திகில்தரத் தக்கதாய்த் தான் இருந்தது!" என்று சுந்தராம்பாள் நடுக்கத்தோடு கூறினாள்; ஏனென்றால், குமுதவல்லியை அங்ஙனங் கலங்கப்பண்ணின அதேபொருளை அவள் காணும்படி நேரவில்லை. இப்போது குமுதவல்லி தன்பாங்கியோடு நின்று விட்ட இடத்திற்குத் திகழ்கலை திரும்பிவந்து, "பெருமாட்டி, நீங்கள் ஏன் என்பின்னே வரவில்லை?" என்று வினவித் "தங்களை வெருளச் செய்ததற்கு மேல் அம்மின்னலால் வேறு ஏதுந் தீங்கு நேராமல் கௌதம சாக்கியர் காக்கட்டும்" என்று கூறினாள். அவ்விளைய பெருமாட்டி இப்போது தன்நிலைக்கு வந்தவளாகி, "அம்மின் னொளியானது ஒவ்வொரு பொருளையும் தெளிவாய்ப் புலனாக்கியது; ஆனால், கட்பார்வையின் ஒளியோ மக்கள் நெஞ்சில் அத்தகைய பயனைத் தரமாட்டாது. திகழ்கலை, எனக்குள் ஐயுறவு நிகழ்கின்றது-" என்று கூறுகையில்,

அவ்வறிவோள், "பெருமாட்டி, நாங்கள் இதுவரையில் துணிந்து வந்ததற்கு மேல் இனிவரவேண்டாமென்றும், நீங்கள் திரும்பிப்போகலாமென்றும் யான் சொல்லுவேன், ஆனால் அப்படிச் செய்வேனாயின் தங்களிடம் இப்போது பேசும் இவளைப்பற்றித் தாங்கள் கொண்ட ஐயம் அங்ஙனமே தங்கிவிடும் - அஃது அவ்வாறாகப்படாது! தங்களை வஞ்சித் தொழுக வல்லவள் அல்லேன் எனப்புத்தசாரணர் அறிய ஆணையிட்டுச் சொல்லுகிறேன்!இதோ, பெருமாட்டி, இந்தக் குத்துவாளை எடுத்துக் கொள்ளுங்கள்; தங்களைத் தீயோர்க்குக் காட்டிக் கொடுக்கிறேன் என்று நீங்கள் கண்ட அந்த நிமிஷமே, என் நெஞ்சில் இதனை அழுந்தப்பாய்ச்சுங்கள்!" என்றுரைத் தாள்.

"ஆம் - நான் இக்கருவியை வைத்துக்கொள்ளுகிறேன்" என்று சொல்லிக் குமுதவல்லி அதனைத் தன் அரையைச் சூழ்ந்த பட்டிகையில் செவ்வையாய் வைத்துக் கொண்டாள். "இப்போது யான் கேட்பதற்கு விடை சொல் திகழ்கலை! இப்போது என்னை அழைத்துக் கொண்டுபோக இருக்கும் இடத்தில், நம்மையும் இறந்துபோன அவ்வம்மையின் பாங்கி மாரையுந் தவிர வேறெவரேனும் வந்திருப்பரோ? வென்று நான் கேட்கிறேன்."

"ஆம், பெருமாட்டி - மற்றொருவரும் அங்கிருப்பர்." என்று திகழ்கலை விடைகூறினாள்: "ஆயினும், புத்தசாரணர் அறிய அவர் தங்களுக்குச் சிறிதும் தீங்கு இயற்றத் தக்கவர் அல்லர் என்று ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்! உங்களை நோக்கி ஒரு மாற்றங்கூட அவர் பேசமாட்டார்! தன் விரல்களில் ஒன்றே யேனும் அவர் உங்கள் மேல் வைப்பாரல்லர்! இப்போது தங்களுக்கு இசைவு தானா இன்னும் யான் யாது சொல்லக் கூடும்?"

"நல்லது வழிகாட்டிச் செல்" என்று குமுதவல்லி கூறினாள்.

தன் இளைய தலைவிக்கும் அவ்வறிவோளுக்கும் இடையிற் சுருக்கமாய் விரைந்து நிகழ்ந்த இப்பேச்சைச் சுந்தராம்பாள் மறுபடியும் எழுந்த கவலையோடும் ஐயுறவோடும் உற்றுக் கேட்டாள். இந்தத் தோழிப்பெண் தன் நாகநாட்டரசி திரும்பிவிடமாட்டாளா என்று தனக்குள் விரும்பினாள்; ஆயினும், அவள் முன்செல்லுதற்குத் தீர்மானங் கொண்டிருப் பதைக் கண்டு, நான் ஓரெழுத்தாலாவது தடுத்துப் பேசுவதற்குந்

துணிந்திலள். குமுதவல்லி திடீரென நின்ற காரணந் தெரியா மையால், வெருளத்தக்க மின்னலொளியைக் கண்டு அச்சுறுத்தப்பட்டவளாய் அவள் மெலிவுற்று நின்றாளெனவே சுந்தராம்பாள் தனக்குள் எண்ணிக் கொண்டாள்.

இப்போது குமுதவல்லி முற்றிலும் அச்சமும் ஐயுறவும் இல்லாமல் வழி நடக்க வில்லை. அவளுக்குத் திகழ்கலையைப் பற்றிச் சிறிது தான் தெரியும். மிகவுங் கொடுமையான ஒரு குற்றத்தைச் செய்யத் துணிந்த ஒருவர் தமது கருத்தை ஒளிக்கும் பொருட்டு நிரம்பிய அடக்க ஒடுக்கத்தோடும் சத்தியம் பண்ணப் பின் வாங்க மாட்டார் என்று அவள் எண்ணாமலிருக்க முடியவில்லை. என்றாலும், திகழ்கலையின் குரலிலும் மாதிரி யிலும் ஏதோ உண்மையிருந்தமையால், குமுதவல்லி முற்றிலும் ஐயப்பாட்டுக்கே இடங்கொடுத்து விடத் துணியவில்லை. இறந்துபோன மீனாம்பாளின் உயிருக்கு அமைதியைத் தருவதென்று நான் எண்ணிய ஒரு துணிவான செய்கையில் உறுதியாய் நிற்றல் வேண்டுமென்னுங் கடமையினால் அவள் தூண்டப்பட்டாள்; உள்ளபடியே ஏதும் சூழ்ச்சி நினைக்கப் பட்டிராவிட்டால்- ஏதும் வலை விரிக்கப்பட்டிராவிட்டால்- அக்கடமையை நிறைவேற்றாமல் தான் திரும்பிவந்ததைப் பற்றித் தன்னையே தான் கொடுமையாய் இகழ்ந்து கொள்ள வேண்டியிருக்கும், மேலும், அவள் அப்பெண்பிள்ளையின் குத்துவாளைத் தான் வாங்கிவைத்துக்கொண்டாள்; தண்டனைக் குள்ளாகாமல் அப்பெண் தனக்கு ஏதுந் தீங்கு செய்ய முயலக் கூடாதென்று அவள் தீர்மானித்தாள். சிறிது நேரத்திற்கு முன்னே நான் நல்லானையே கண்டதாகத் துணிபு கொண்டவளாய் இறந்து போன தன்மனைவி கிடந்த இடத்திற்கு அவன் வரவேண்டுவது இயற்கையே யென்று குமுதவல்லி எண்ணி னாள்; இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே “முடிவாக அக்கள்வர் தலைவன் அங்கு வந்திருப்பது எனக்கு ஏதுந் தீங்கு செய்ய வேண்டுமென்னும் நோக்கம் இல்லாமலும் இருக்க லாம்!” என்று அவள் தனக்குட் சொல்லிக்கொண்டாள்.

திகழ்கலையோடு சுருக்கமாகவும் விரைவாகவுந் தான் பேசியபொழுது கொள்ளைத் தலைவனான நல்லான் பெயரை அவள் மொழிந்திலள். ஏனென்றால், முதலாவது தன்றோழிப் பெண் சுந்தராம்பாளை அச்சுறுத்துவதற்கு அவள் விரும்ப

வில்லை; இரண்டாவது நடுத்தெருவுல அவன் பெயர் சொல்லப்படுமாயின் அதனை ஒட்டுக் கேட்டவர் நீலகிரி நகரத்துள்ளாரை யெல்லாம் சடுதியில் எழுப்புவித்து, அவனைப் பிடிப்பவர்க்குப் பரிசில் கிடைக்குமாதலால் அதனைத் தேடிப் பிடிக்கும்படி செய்துவிடுவாரென் றெண்ணியும், தான் மீனாம் பாளுக்குக் கூறிய உறுதிமொழிகளை களைந்தும் அதனைச் சொல்லாது விட்டனள்.

சிறிது நேரத்திலெல்லாந் திகழ்கலை ஒரு மதிற் கதவண்டை வந்துநின்று அதிலுள்ள புழை வாயிற் கதவைத் திறந்து, பின்னே குமுதவல்லியும், சுந்தராம்பாளும் வர உள் நுழைந்தாள். உள் வாயிற் படிமேல் காப்பிரிப்பெண் கையில் விளக்கேந்தி நின்றாள்; இந்தப்பெண் தாழ்மையோடுங் குமுதவல்லியை வணங்கி, ஆனால் ஒரு சொற்கூடப் பேசாமல் மேடைப்படிமேல் அழைத்துப் போனாள். தளத்தின்மேற் போய்ச் சேர்ந்தார்கள். குமுதவல்லி நான் வந்திருக்கும் அவ்வீடு பழையமாதிரியாயும் இடமகன்றதாயும் இருக்கக்கண்டாள். ஏனென்றால், இந்தத் தளத்திலிருந்து பலகிளைகளாய்ப் பிரியும் நீண்ட வழியுள்ள வாயில்கள் பல இருந்தன. ஆயினும், சுற்றிலுமுள்ள அவற்றைப் பார்க்கவும் ஆராயவும் அவளுக்கு நீண்ட நேரம் இல்லை; இதற்குள் அக்காப்பிரிமாது உயர்ந்த ஒரு சோடு மடக்குக் கதவுகளில் ஒன்றைத் திறந்தாள்.. அவள் அவ்வாயிலின் உள்ளே புகும் முன்னமே, வெளியே அத்தளத்தின் மேல் விளக்கை வைத்துவிட்டாள். கரியசூரியகாந்தப் பட்டுத்திரை ஒன்று அப்பால் இழுத்து விடப்பட்டது; குமுதவல்லியும் திகழ்கலையும் சுந்தராம்பாளும் உள் நுழைந்த அரையில் விளக்கு வெளிச்சம் மங்கலாய் மினுக்கு மினுக்கென்று வீசியது.

அவ்வறை இடம் அகன்றதாய் தான் இருந்தது: அங்குள்ள தளவாடங்களைப் பார்த்தால் அவை செவ்வையாகவே அமைக்கப்பட்டிருந்தன. ஆயினும், அரைவாசி இருளாய் இருந்தது; ஏனெனில், நடுவேயிருந்த மேசைமேல் இரண்டு மெழுகுத்திரிகள் மாத்திரமே எரிந்து கொண்டிருந்தன; சுவர்களின் மேல் கறுப்புத்துணி தொங்க விடப்பட்டிருந்தது. அவ்வறையில் அங்ஙனம் நிறைந்து நின்ற சிறுகிய சவஇருள் அச்சத்தையும் வணக்க வொடுக்கத்தையுந் தோற்றுவிப்பதா யிருந்தது - ஆனால்அஃது அப்போது உதவுகிற நோக்கத்திற்கே

இசைந்ததா யிருந்தது. அக்கறையில் கடைக்கோடியில் ஒரு கட்டிலிருந்தது, அது நிலமட்டத்திற்கு மேல் இரண்டுபடி உயர்த்தப்பட்டிருந்து ஒரு திண்ணைமேல் இடப்பட்டிருந்தது. கரியசூரியகாந்தப்பட்டாற் சமைத்த ஒரு பெரும் படங்கு அக்கட்டிலின்மேற் கட்டப்பட்டிருந்தது; அதேபட்டாற்செய்த தொங்கல்கள் அக்கட்டிலின் தலைமாட்டைச்சூழ நாற்றப் பட்டிருந்தன. அக்கட்டிலின்மேல் மீனாம்பாளின் உடம்பானது ஒரு வெள்ளைத் துப்பட்டியினாற் சுற்றி நீட்டப்பட்டிருந்தது; அவளது முகம் முக்காடிட்டு மறைக்கப்பட்டிருந்தது.

ஆனால், ஓர் அரசியையும் தனது செழுமையான வளர்ச்சியினாற் பொறாமை அடையச் செய்யும் அவளது கரிய கொழுங் கூந்தலின் நீண்ட பல மயிர்ச் சுருள்களானவை அம்முக்காட்டின் மடிப்புகளின் கீழே சிதறிக் கிடந்தன.

அவ்வறையிற் பரவியிருந்த அரைவாசி மங்கலிலும், அக்கட்டிற் கால்மாட்டில் நின்ற ஒருவனைக்குமுதவல்லியும் சுந்தராம்பாளும் உடனே தெரிந்து கொண்டார்கள். அவனது கரிய இயற்கையிலே மினுமினுப்பான மயிரின் மேலும், நேர்த்தியாய் வரைந்தாற் போன்ற மீசையின் மேலும். அழகிய முகத்தின் மேலும், அவள் அணிந்திருந்த சட்டையின் பூந்தையல்கள் மேலும், அவனது கத்திக் கைப்பிடியில் அழுத்திய மணிகளின் மேலும் அங்குள்ள அச்சிறிய வெளிச்சம் பட்டு மிளிர்ந்தது. அவன் கைகள் மார்பின் குறுக்கே மறைக்கப் பட்டிருந்தன. அவன் துயரமான பார்வையோடு அக்கட்டிலின் மேற் கிடந்த உருவத்தை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். இவன் இளைய நீலலோசனனே யன்றி வேறல்லன்.

அவனை அவ்விடத்திற் பார்ப்பதைக் குமுதவல்லி எதிர் பாராமல் இருக்கவில்லை; அவனைச் சிறிது பார்த்த அந்த நொடியே அவள் சுந்தராம்பாள் பக்கமாய்த் திருப்பிப் “பேசாதே! அச்சமுற்றுக் கூவாதே! தைரியமாய் இரு! இறந்து போன தன் மனைவியின் படுக்கையண்டையிருந்து கொண்டே அவன் நமக்கு ஒரு தீங்கு செய்யத்துணிவான் அல்லன்!” என குசுகுசுவென்று விரைந்து கூறினாள்.

குமுதவல்லி தன் தோழிப்பெண்ணை நல்ல நேரத்தில் எச்சரித்தது நன்றாயிற்று; ஏனெனில், பயங்கரனான நல்லா

னென்றே நீலலோசனனைத் தானும் பிழைபட எண்ணியிருந்த சுந்தராம்பாள் அவனைப்பார்த்தவுடனே வீரிடும் நிலைமையள் ஆனாள். அத்தோழிப்பெண் தனக்குள்ள மனவலிமையை யெல்லாம் தனக்குத் துணியாக ஒருங்கே வருவித்துக் கொண்டு தன் அன்புள்ள தலைவியின் கிட்ட மிக நெருங்கிநின்றாள். அவ்வறையின் கதவுக்கு மிகவும் எட்டியிருந்த பக்கமாய் அக்கட்டிலண்டை மீனாம்பாளின் தோழிகளில் ஒருத்தியான மலையநாட்டுப் பணிப்பெண் மண்டிக்காலிட்டிருந்தாள்; ஏனென்றால், மேடை நீண்டிருந்த அந்தக் கடைசியில் சுவருக்கு மூன்றடி விலகி அக்கட்டில் நின்றது.

அக்காப்பிரிப்பெண் சிறிது பின்னே வரக் குமுதவல்லி யையும் சுந்தராம்பாளையும் திகழ்கலை இப்போது அக்கட்டி லண்டை மெல்ல அழைத்துச் சென்றாள். இறந்தவர்க்குக் காட்டவேண்டும் வணக்கத்தை எண்ணிக் குமுதவல்லியும் சுந்தராம்பாளும் தமது முக்காட்டைப் பின்புறம் தள்ளினார்கள். தனக்கு முன்னே நீட்டப்பட்டிருந்த உருவத்தினின்றும் நீலலோசனன் தன் விழிகளை உயர எடுத்து அறைக்குள் நுழைந்தவர் எவரென்றுபார்க்க இப்போது தான் முதல் முதல் நோக்கினான். அழகிய குமுதவல்லியைஅவன் பார்த்ததும் கலந்து தோன்றிய வியப்பினாலும் களிப்பினாலும் சடுதியில் திடுக் கிட்டாள்; ஆனால், திகழ்கலையோ எச்சரிக்குங் குறிப் போடு உடனே தன்கையை உயரத்தூக்கி - மெதுவாயிருந்தாலும் காதுக்கு நன்றாய்க் கேட்கும்படி அத்தனை தெளிவாயுள்ள குரலில், "ஒரு சொற்கூட! ஓர் எழுத்துக் கூடப்பேச வேண்டாம்! இறந்தவர்கசு எதிரில் நீங்கள் இருக்கிறீர்களென்பதை நினையுங்கள்!" என்று பகர்ந்தாள்.

நீலலோசனன் இங்ஙனம் திடீரென்று நினைவுறுத்தப் பட்டவனாய் மறுபடியும் தன் கண்களைக் கீழ்நோக்கிக் கொண்டான்; என்றாலும் குமுதவல்லி தன் கண்கள் இவன் கண்களின் எதிர்நோக்குதலைக் கருத்தாய் விலக்கிக் கொண்டன ளென்றும், திகழ்கலை தீர்மானமாகவும் அழுத்தமாகவும் சுருக்கமாகவும் அச்சொற்களை மொழிந்தபோது அவளது முகத்தின்மேல் வெளிறின நிறம் ஒன்று பரவிற்றென்றும் கருதிப்பார்க்க அவன் தவறவில்லை.

குமுதவல்லியும் சுந்தராம்பாளும் அக்கட்டிலண்டை சென்ற தமக்குக் கிட்டஇருந்த பக்கத்தில் நின்றார்கள் - நீலலோசனனோ கால் மாட்டண்டையிலேயே இன்னும் நின்று கொண்டிருந்தான். மலைநாட்டுப் பணிப்பெண் எதிர்ப்பக்கத்தில் முழந்தாளிட்டிருந்தாள்.

திகழ்கலை வணக்க ஒடுக்கம்மிக்க மெல்லிய குரலில், “இறந்து போன இப்பெண்ணின் முகத்தைப் பாருங்கள்!” என்று சொல்லிக் கொண்டே மீனாம்பாள் முகத்தின்மேலிருந்து முக்காட்டை மெல்லெனத் தூக்கினாள். “பாருங்கள் இஃது எவ்வளவு அமைதியாயிருக்கின்றது! பெருமாட்டி, தன் முழு அமைதியை உறுதிப்படுத்தும்பொருட்டுத் தாங்கள் இப்போது இங்கேவந்திருப்பதற்குக் காரணமான அவ்வுயிர் நல்மெய்தியிருப்பதனை அறிவிக்கும் நற்குறியாக இவ்வமைதிக் குறிப்பை யாம் நினைப்பாமாக!”

இங்ஙனம் விளம்பிய பின்னர்த் தான் முதலிற்தூக்கிய படியே மெதுவாக அம்முக்காட்டினைத் திகழ்கலை கீழே இறக்கிவிட்டாள்; மீனாம்பாளின் முகமானது மறுபடியும் இவர்களது பார்வையினின்றும் மறைபட்டது ஒரு நிமிஷநேரம் எல்லாரும் வணக்க கொடுக்கத்தோடு வாய்பேசாதிருந்தனர்; அதன்பிறகு குமுதவல்லியின் குரலானது வெள்ளிமணியின் ஒலிபோன்று மெல்லிதாய்த் தெளிவாயிருந்தாலும் நடுக்கமுள்ளதாய்ப் பேசத்துவங்கியது.

“மீனாம்பாள்! நீங்கள் எவ்வகையான தீங்கு எனக்குச் செய்திருந்தாலும் அன்றிச் செய்யக் கருதியிருந்தாலும்--அத்தீங்கின் அளவும் அதன் தன்மையும் முன்னும் இன்னும் யான் அறியாதிருந்தாலும், அவற்றையெல்லாம் யான் மன்னித்துவிட்டதன் உறுதிமொழியை நீங்கள் உயிரோடிருந்தபோதே யான் எடுத்துக் கூறினேன். ஆனால் இப்போதும்,--இவ்விடத்தும், உயிர் அற்ற உங்கள் உடம்பு கிடக்கும் இக்கட்டிலண்டையிலும், இன்னும் புனிதமாகவும் வணக்கவொடுக்கத்தோடும் அம் மன்னிப்பு உறுதி மொழியைத் திருப்பிச் சொல்லுகின்றேன். ஓ மீனாம்பாள்! அழகு படுத்துவதற்கென்றே பிறந்தாலென்ன நீங்கள் தோன்றிய இந்நிலவுகத்தினின்றும் வீழ்ந்து போன வான்மீன் போலத் தோன்றிய சிறிதுகாலம் நீங்கள் மறைந்து சென்றாலும்,

இறைவன் திருவருளால் உங்கள் உயிர் இன்னும் உயர்ந்த இனியதோர் உலகத்திற்கு மேலெடுக்கப்பட்டு, அங்கே என்றும் விளங்கும் முதல்வனது அருளிருக்கையினின்றும் போதரும் அவ்வருளொளியின் நல்ல தூய விளக்கத்தின்கண் நீங்கள் திகழ்ந்திருக்கும்படி அவ்வையன் அருள் வழங்கு வானாக!" என்று அவ்விளைய நங்கை மொழிந்தாள்.

இதனைச் சொல்லியதுங் குமுதவல்லி நின்றுபோனாள்; அவள் இன்னுஞ்சிறிது பேசியிருப்பாள், ஆனால் இப்போது தன்னை மேற்கொண்டு எழுந்த உருக்கத்தினாற் பேசக் கூடாத வளானாள். இப்போது அழுதவள் அவள் மாத்திரம் அல்லள்; ஏனெனில், அரைவாசி அடக்கப்பட்ட தேம்பல் ஒலிகள் அவள் செவியிற் கேட்டன. சுந்தராம்பாளும், மலையநாட்டுப் பணிப்பெண்ணும், அந்தக்காப்பிரிப் பெண்ணும் அழுதனர்; அவ்விடத்திற்றோன்றிய வணக்க ஒடுக்கமும் இரக்கமும் வாய்ந்த இந்நிகழ்ச்சியினால் நீலலோசனன் உள்ளங் கலங்கினான்; திகழ்கலையின் கண்களும் நீரற்று இருக்கவில்லை. கடைசியாக, இன்னும் இந்நிலையிலிருக்கின்ற குமுதவல்லி பக்கமாய்த் திகழ்கலை திரும்பிப் "போதும், பெருமாட்டி! புத்தசமயத்திற் பற்றுடையவளான யானுங் கூட இந்தச் சடங்கானது தன் பயனைத் தராமற் போகாதென்று இப்போது நம்பத் தலைப்படுகின்றேன், மேலுலகத்துள்ள ஒரு தெய்வத்தின் வேண்டுகோள் மொழியை இந்நிலவுலகத்தில் வெளியிட்டுச் சொல்லும் ஒருயிரின் குரலொலி ஒன்று உண்டாயின் அஃது உங்களுடையதேயாகும்!" என்று மெல்லெனச் சொன்னாள்.

இவ்வாறு சொல்லிக் கொண்டே திகழ்கலை குமுத வல்லியின் கையைப் பிடித்து அவளை அப்பாற் கொண்டு போகலானாள். அச்சமயத்தில் நீலலோசனன் முன்னேறி வந்து நாகநாட்டரசியை நோக்கிப் பேசுங் குறிப்புடையனாதலைக் கண்டு திகழ்கலை துடுக்காகச் சைகை செய்து அவன் இருந்த இடத்திலேயே வாய்பேசாதிருக்கும்படி குறிப்பித்தாள். அவன் அவள் சொல்லுக்குச் கீழ்ப்படியாதிருக்கத் துணியவில்லை: ஏனென்றால் அத்துணை வணக்க வொடுக்கத்தையும் அச்சத் தையும் விளைவிக்கும் இயல்பு வாய்ந்த அந்நிகழ்ச்சியின் அடையே, அதனையெல்லாம் நடத்தும் உரிமையுடையவளாய்க் காணப்பட்ட முன் அறிமுகம் இல்லாத அப்பெண் காரண

மில்லாமலே அச்சமூட்டும் ஓரதிகாரத்தைச் செலுத்து வாளானாள்.

கொள்ளைக்கார நல்லானென்றே தான் கருதிவிட்ட நீலலோசனன் மேல் குமுதவல்லி ஒரு முறையேனும் தன் பார்வையைச் செலுத்தவேயில்லை. அப்பெருமாட்டி இங்ஙனம் தன்னிடத்து முற்றுங் கணிசக் குறைச்சலாய் நடந்ததைப் பற்றி நீலலோசனன் மிகுந்த வருத்தமும் அதைப் போலவே மிகுந்த வியப்புங் கொள்ளப் பெற்றான்--இத்தகைய நடக்கையின் காரணம் இன்னதென்று புலப்படாமையோடு, மலைநாட்டு வியாபாரியின் வீட்டின் கண் தோழமை கொண்டிருந்த தன்னை அவள் சடுதியிற் பிரிந்து போன மருமத்தையும் இது மிகுதிப் படுத்தியது. குமுதவல்லியையும் சுந்தராம்பாளையும் திகழ்கலை அவ்வறைக் கதவண்டை அழைத்துப் போனாள்; அவர்கள் ஒருமுறையேனும் பின்னே திரும்பிப் பார்க்கவில்லை: சூரிய காந்தப் பட்டுத்திரை அப்பால் இழுத்துவிடப்பட்டது--கதவு திறக்கப்பட்டது, அவர்கள்தளத்தின் மேல் வந்து நின்றார்கள்.

“இப்போது பெருமாட்டி, நீங்கள் தங்கியிருக்கும் விடுதியின் தோட்ட வாயிலுக்கு மறுபடியும் உங்களை அழைத்துச் செல்வேன். அவ்விடத்திற்கு நீங்கள் சென்றபின் அல்லாமல், சிறிது நேரமேனும் திகழ்கலைமேல் நீங்கள் அவநம்பிக்கையுற்றதைப் பற்றி உங்களுக்கு உண்டான வருத்தத்தை நீங்கள் அவளுக்குத் தெரிவிக்க வேண்டாம்.” என்று திகழ்கலை மொழிந்தனள்.

என்றாலும் குமுதவல்லி தனது வருத்தத்தை உடனே அவளுக்கு எடுத்துரைத்திருப்பாள்; ஆனால், அவ்வறிவினளோ அந்தக் காப்பிரிப்பெண் தளத்தின் மேல் வைத்து விட்டுப் போன விளக்கைக் கையிலெடுத்துக் கொண்டு, அவளை மெத்தைப் படியின் கீழ் மிகவுஞ் சுருக்கென வழி நடத்திக் கொண்டு சென்றாள். திகழ்கலை, குமுதவல்லி, சுந்தராம்பாள் என்னும் மூவர் முகங்களின் மேலுந் திரும்பவும் முக்காடு இழுத்துவிடப் பட்டன. தலைவாயிலின் உட்புறத்தே விளக்கு வைத்து விடப்பட்டது; பின்னுஞ் சிறிது நேரத்தில் அவர்கள் தெருவிற் சென்ற போது அவர்களுக்குப் பிறகே வாயிற்கதவு மூடிக் கொண்டது. வாய் பேசாமலும் பாதுகாப்போடும் அவர்கள் வழி தொடர்ந்து சென்றார்கள். மனோகரது விடுதியின் தோட்ட வாயிலண்டை வத்ததும் குமுதவல்லி திகழ்கலையை நோக்க, “யான் சிறிது

நேரம்வரையில் உன்னைப் பற்றி நினைக்க வேண்டியதாயிருந்த தீய ஐயுறவின் பொருட்டு என் அகத் துண்டான மிக்க துயரத்தைத் தெரிவிப்பதற்கு இதுதான் சமயமாயிற்று. உனது குத்து வாளைத் திரும்பவும் நீயே எடுத்துக் கொள்.'' என்று புகன்றாள்.

திகழ்கலை தனது குத்துவாளைக் குமுதவல்லியின் கையிலிருந்து வாங்குகையில், "பெருமாட்டி, இனியொருகால் திரும்பவும் நாம் எதிர்ப்படுகுவமாயின் இவ்வறிவோளிடத்துத் தாங்கள் நம்பிக்கை உடையவர்களாயிருப்பீர்கள். இப்போது விடை கொடுங்கள்!'' என்று கூறினாள்.

"ஒரு மொழி, திகழ்கலை--ஒரு மொழி!'' என்று குமுதவல்லி விரைந்துகூவிப் பின்னும், "சில செய்திகளைப் பற்றி நீ நிரம்பவுந் தெரிந்தவளாகக் காணப்படுகின்றாய்: உனக்கு அவற்றை நன்றாய் அறிவிக்கக் கூடியவர்களோடு நீ இருக்கின்றனை. எனக்குச் சொல், நான் உன்னைக் கெஞ்சுகின்றேன் - இறந்துபோன மீனாம்பாள் முன்னொருகால் எனக்குச்செய்ய நினைத்த தீது யாது?'' என்று வினவினாள்.

"பெருமாட்டி, எனக்குத் தெரியாது,'' என்று திகழ்கலை விரைந்து விடைகூறிக், கடிதிற்றிரும்பிச் சென்று ஒருநொடியிற் கட்புலனுக்கு எட்டாமற், சூழ்ந்திருந்த இருளில் மறைந்து போனாள்.

"அன்பிற்கினிய பெருமாட்டி, நாம் பத்திரமாய் வந்து சேர்ந்ததற்காக நம் பெருமானை வழுத்துவமாக!'' என்று சுந்தராம்பாள் களிப்புமிக்க குரலிற் கூறினாள்.

"ஆம்-நம் இறைவனை நாம் வாழ்த்துவமாக!'' என்று நாகநாட்டரசி இசைந்து கூறினாள்.

பின்னர் அவர்கள் மறைவு வாயிலின் வழியே உள் நுழைந்து, தோட்டத்தைக் கடந்து, தத்தம் அறைகட்குச் சென்றார்கள். அங்கே ஞானாம்பாள் அவர்களை வரவேற்கும் பொருட்டு மிகுந்த களிப்பாற் குதித்தோடி வந்தாள்; ஏனெனில், அவர்களது வருகையானது நம்பிக்கையுள்ள அப்பெண் கொண்டிருந்த அளவற்ற கவலையையும் திகிலையும் ஐயுறவையும் தீர்த்தது.

மறுநாட்காலையில் உணவருந்தியவுடனே குமுதவல்லி தோட்டத்திலே உலாவுவதற்காகக் கீழ் இறங்கினாள்-- இந்த வேளையில் அவள் பாங்கிமார் அவள் பின்னே வரவில்லை; ஏனென்றால் சிறிது நேரம் அவர்கள் தம் இருக்கையிற் செய்ய வேண்டிய அலுவல்மேல் நின்றார்கள். ஆகவே தனியிருந்த குமுதவல்லியின் உள்ளத்திற் பின்வருமாறு எண்ணங்கள் ஒன்றன் பின் ஒன்றாய் எழுந்தன. இன்றைக்குத்தான் மனோகரர் திரும்பி வர வேண்டிய நாள். நாகநாட்டின்கணுள்ள தனது மாளிகை யினின்றும் தான் வரவழைக்கப்பட்ட முதன்மையான காரணம் இன்னதென்று தனக்குத் தெரிவிக்கப்படுதற்கு அவள் எதிர் பார்த்திருந்த நாள் இன்று தான். இன்னும் முன்னாள் மாலையில் நேர்ந்த நிகழ்ச்சிகளையும் அவள் நினைத்தாள். அத்தனை இனிமையோடும் உருக்கத்தோடும் தான் எவளுடைய உயிரின் பொருட்டுக் கடவுளைத் தொழுதனளோ அவளை நினைத்து ஒரு பெருமூச் செறிந்தாள்.

இரண்டரை நாழிகை நேரத்திற்கு மேல் குமுதவல்லி அத்தோட்டத்திலே உலவிக் கொண்டிருந்தாள்; அப்போது தற்செயலாய் அவள் இதற்கு முன் தான் புகுந்திராத ஓர் ஒடுங்கிய சாலையினூடே செல்வாளானாள். அதன் இரு மருங்கும் பழந்தருமரங்கள் அடர்ந்து, அம்மரங்கள் மேற் படர் கொடிகள் சன்னல் பின்னலாய் வளர்ந்து கிடந்தமையால், குமுதவல்லி இப்போது இறங்கியிருக்கும் கட்டிடத்திற்கு எதிர் வரிசையாய் அமைந்த கட்டிடத்தை நோக்கிச் செல்லுங் கொடிப்பந்தர்ப் பாதையாய் அஃது அமைந்திருந்தது. குமுதவல்லி இவ்வெண்ணங் களின் வயப்பட்டவளாய்க் கீழ் நோக்கிய கட்பார்வையுடன் இச்சாலை வழியே சென்றாள். சடுதியிலே ஒரு சாளரத் தட்டிக் கதவு திறக்கப்பட்ட ஓசையும், அதே சமயத்தில் மகிழ்ச்சியும் வியப்புங் கலந்த ஒரு குரலொலியும் அவள் செவிக்கு எட்டின. உடனே அவள் நிமிர்ந்து நோக்கினாள்; அங்குமுதலடுக்கிலுள்ள ஒரு பலகணியண்டை யில் இளைய நீலலோசனன் நின்றனன்.

கொள்ளைக்கார நல்லானென்றே தான் பிழைபடக்கருதிய அவ்வாடவனைமனோகரரது மாளிகையின்கண்ணே--தனக்கும் புகலிடமாய் அமைந்த அவ்வீட்டின்கண்ணே அங்ஙனம் பார்த்தலும் குமுதவல்லி தன்னகத்து நடுக்கத்தால் எழுந்த கூக்குரலொலியை வருத்தத்தோடு தான் அடக்கக் கூடியதாயி

ருந்தது. பெருந்திகிலும் வியப்புமே அவள் வாயைத் திறவாதபடி திடீரெனப் பூட்டி விட்டன! உடனே விரைந்து முக்காட்டை இழுத்திட்டுக் கொண்டு திரும்பி அவ்விடத்தை விட்டுக் கடுகிச் சென்றாள். தன் காதிற்குச் சில சொற்கள் வந்து கிட்டின--அவளது பேரச்சத்திற்குக் காரணமாயிருந்த மனிதனின் வாயிலிருந்து மும்முரமாய்க் கத்திச் சொல்லப்பட்ட சொற்களே அவையாம். ஆயினும், அச்சொற்களின் பொருள் அல்லது கருத்து அவளுக்குப் பிடிபடவில்லை, அவளது மூளை அத் துணை குழம்பிப் போயிற்று, அவளுணர்வுகள் அத்துணை கலங்கிப் போயின. அவ்வீட்டுக்கார முதியோளை அழைத்துத் தன்னைத் தவிர அதே வீட்டின்கண் இன்னும் வேறு எவர் தங்கியிருக்கின்றா ரென்ப தனைக் கேட்டறியும் மனவுறுதி யோடுஅவள் விரைந்து தன் அறைக்குத் திரும்பினாள்,--ஆனால், தன் உணர்வு தன் நிலைக்கு வந்தவுடனே குமுதவல்லி தான் மீனாம்பாளுக்குச் சொல்லிய உறுதிமொழியைப் பாதுகாக்கவும் விலக்க முடியா நிகழ்ச்சி களால் வெளிவிட நேர்ந்தாலல்லாமல் தான் கொள்ளைக்கார நல்லானென்றே பிழைபட எண்ணிய அவ்வாண்மகனைக் காட்டிக் கொடுக்கலாகாதெனவுந் தீர்மானித்தாள்.

அவள் மெத்தைப் படிக்கட்டின் மேல் ஏறிச் சென்ற மாத்திரத்தே, குளியலறை வாயிலிற் சுந்தராம்பாளை எதிர்படச், சுந்தராம்பாளும் சொல்லுவாள் “பெருமாட்டி, தங்களைக் காணும் பொருட்டு இவ்வீட்டுக்கார முதியோள் காத்துக் கொண்டிருக்கின்றாள். அவள் தலைவரும் பெரிய வியாபாரியு மான மனோகரர் இப்போது தான் திரும்பி வந்திருக்கிறார்....”

“ஆ, அவர் திரும்பி வந்து விட்டனரா?” என்று கூறுகையிற் குமுதவல்லி சொல்லுதற்கரிய ஆறுதல் எய்தப் பெற்றவளாய்த் தான் கொண்ட களிப்புத் தன் கண்களில் ஒளிர “ஈசனே போற்றி!” என்று தன்னுள் மெல்லெனச் சொல்லிக் கொண்டாள்; ஏனெனில், தனக்கு மிகத் தெரிந்தவரும் மாட்சிமை நிறைந்தவருமான மனோகரர் தனக்கு நண்பரும் தன்னைப் பாதுகாப்பவருமாய் இருப்பரென அவள் இப்போது உறுதியாய் நம்பினாள்.

தனக்கு அச்சத்தையும், கலக்கத்தையும் விளைவித்த அக்கடைசியான நிகழ்ச்சியைப் பற்றி அவள் தன் பாங்கிமார்க்கு ஓர் எழுத்துக் கூடச் சொல்லவில்லை; ஏனென்றால், அவள் இயற்கையிலே பெருந்தன்மையான உள்ளமுடையோளாயிருத்

தலின் தன்னிடத்தே நிறைந்த பற்றுதலும் நன்றியும் வைத்திருக்கும் அவ்விளம் பெண்கள் அச்சுறுதற்குரிய செய்தி களைத் தன்னால் இயன்ற மட்டும் அவள் எப்போதும் விலக்கவே நினைந்தாள். செல்வத்திற் சிறந்த அவ்வியாபாரி முன்னிலையில் தகுந்தபடி செல்லல் வேண்டி விரைவில் அவளுடைகள் சிறிது மாற்றி உடுக்கப்பட்டன. அவள் மந்திர மோதிரத்தை விரலில் அணிந்து கொண்டவளாய்த், தன்னை அவ்வியாபாரி முன்னிலையில் அழைத்துக் கொண்டு போதற்கென்று அவ்வீட்டுக்கார முதியோள் வந்து காத்துக் கொண்டிருக்கும் இருக்கையறைக்குச் சென்றாள்.

இடம் அகன்ற அக்கட்டிடத்தின் நடுவில் அல்லது முதன்மையான இடத்தில் அமைந்த அறைக்குச் செல்லா நின்ற பாதையினூடே குமுதவல்லி அம்முதியோளைப் பின்றோடர்ந்தே கினாள்: அவ்வறைக் கதவை அம்முதியோள் பரக்கத் திறந்து விட்டாள்; குமுதவல்லியும் உள் நுழைந்தாள். அழகிய பொருள்களால் ஒப்பனை செய்யப்பட்டிருந்த அவ்வறையின் கடைக்கோடியில் சார்மணைக் கட்டிலின் மேல் உட்கார்ந்திருந்த மாட்சிமை மிக்க முதியோன் ஒருவனை முதன் முதற் கண்டாள்; கொள்ளைக்கார நல்லானென்றுதான் பிழைபடக் கருதிய அவ்வாடவன் முன்னிலையிலும் அங்ஙனமே தான் வந்திருப்பதைக் குமுதவல்லி அதன்பின் அடுத்துக் கண்டாள்.

## அதிகாரம் - 14

## மனோகரர்

மலையநாட்டிற் பெரிய வியாபாரியான மனோகரர் முன்னிலையிலே தம்முளிங்ஙனம் ஒருவரையொருவர் எதிர்ப் பட்டபோது நீலலோசனனுக்குங் குமுதவல்லிக்கும் உண்டான உள்ள நிகழ்ச்சிகள் வேறு வேறியல்பினவாய் இருந்தன. தான் முதன் முதற் கண்டநேரந்தொட்டுத் தன் நெஞ்சை விட்டுத் தவறாமல் அமர்ந்த அவ்வழகிய இள மங்கையின் வடிவைக் காண்டலும் அப்பௌத்த இளைஞன் மிகவுங் கிளர்ச்சியான களிப்புக் கொள்ளப் பெற்றான். தன்னிடத்து அவள் மிகவும் புதுமையாக நடந்து கொண்ட தனைப் பற்றி இவன் அடைந்த வியப்புங் கலக்கமும் ஒரு நொடிப் பொழுது இவள் இப்போத டைந்த பெரு மகிழ்ச்சியினால் விழுங்கப்பட்டிருந்தன. இனி மற்ற வகையிற் குமுதவல்லியோ தனக்கெதிரே கொள்ளைக்கார நல்லானையே தான் பார்ப்ப தாகக் கொண்ட மனத்துணிவின் வயப்பட்டவளாய் இருந்தாள். அவன் பெயரை வெளிவிட்டுச் சொல்லாமலிருந்ததும் , அல்லது தன் உள்ளத்திற் பட்டதை வெளியே திறப்பாக விடாமல் இயன்றமட்டும் விலக்க முயன்றதும் அவள் மீனாம்பாளுக்குக் கொடுத்த மொழியுறுதி யின்பால் வைத்த நன்கு மதிப்பினாலே யாம். இங்ஙனமாக நீலலோசனன் ஒரு பக்கத்தில் அவளை வியப்புங் களிப்புங் காதலுங் கலந்த பார்வையோடு நோக்கிக் கொண்டிருக்க, அவளோ மற்றைப் பக்கத்தில் கீழ் நோக்கிய பார்வையினளாயும், நாணமுடையளாயினும் விழுமிய ஒழுக்கம் பொருந்தின வளாயும் மனோகரர் தனக்குச் சொல்வதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

நாம் முன் சொல்லியபடியே இம்மலையநாட்டு வியாபாரி யானவர் பெரிதும் நன்கு மதிக்கப்படுந் தோற்றமுடைய வராயிருந்தார். அவருடைய வயது அறுபத்தெட்டு அல்லது

எழுபதுக்குக் குறைந்ததாய் இராது; தன்னுடைய மார்பின் மேற்றொங்கும் நீண்ட வெள்ளிய தாடிமயிர் உடையவராய் இருந்தார். வட்டவடிவமான கண்ணாடியினால் மாட்டுக் கொம்புச் சட்டத்தில் வைத்துச் செய்யப்பட்ட மூக்குக் கண்ணாடி யானது அவரது வளைந்த மூக்கின் நடுவே தொங்கிற்று; வெண்மையான மெல்லிய துணியைப் பாகையாகத் தலையிற் கட்டியிருந்தார்; முழங்கால் அளவுந் தொங்கும் நீண்ட சட்டையும் பூண்டிருந்தார். உறுப்புக்களின் உதவி கொண்டு மக்கள் மனப்பாங்கை மிகவும் மேற் பார்வையாய்ப் பார்த்துணர் வார்க்கும், இவரது முகத்தின் கண் அமைந்த ஏதோ ஒரு குறிப்பானது அலுவலிற் பழகிய நுண்ணறிவோடு இவரது ஈர நெஞ்சத்தின் இயல்பையும் புலப்படக் காட்டியது: முதலிற் சொன்ன இவரது குணத்திற்குரியதான தன்னய விருப்பமானது பிறர் நலங்கருதும் இவரது பெருந்தன்மைக்குமுன் எந்த நேரத்திலும் கீழ் அடங்கிப் போவதேயாம் என்பதை இவர் பார்வைகளிலிருந்து தெரிந்து கொள்வது எளிதாயிருந்தது.

அந்த அறையிற் றளவாடங்கள் நேர்த்தியாக ஒழுங்கு படுத்தப் பட்டிருந்தன. தட்டிக் கதவுகளுள்ள அதன் சாளரங்களில் துணிமறைப்புகள் தொங்கவிட்டு ஒப்பனை செய்திருந்தது; வண்ணம் பூசிய அதன் மச்சுகளைச் சலவைக் கல்லாற் செய்த தூண்கள் தாங்கி நின்றன; சுவர்களிலே ஓவியங்கள் தொங்க விடப்பட்டிருந்தன; சார்மணைக் கட்டில்கள் சூரியகாந்திப் பட்டினால் தைத்து ஓரங்களிற் பொற்சரிகை யினாலும் இடையிற் பொன்னுருக்களாலும் புனையப்பட்டிருந் தன. சிறிய மேசையின் மேலும், நிலத்தின் மேலும், பலதிறப்பட்ட உணாப் பொருள்கள் நிறைந்த பளுவான வெள்ளிக்கலன்கள் இருந்தன, பெரும்பனிக் கட்டிகளையிட்டுக் குளிரச் செய்த இனிப்பான பழங்களை ஒருவகைச் சாந்தினால் வனையப்பட்ட ஒரு பெருங்கலத்திலே நிரப்பி அதனை ஒரு தவிசின் மேல் வைத்திருந்தார்கள்; அம் மாளிகையைச் சூழ இருந்த வெளி நறுமணங் கமழ்ந்ததோடு, செயற்கை குழாய் ஊற்றுகளிலிருந்து குமிழிக்கும் பளிங்கொத்த தண்ணீரினாற் கடுங்குளிர்ச்சியும் ஓர் அளவான இனிய நிலையுடையதாகச் செய்யப்பட்டிருந்தது.

**நீலலோசனன்** நாம் முதன் முதற் காட்டியபடியே உடையணிந்திருந்தனன்: ஆனாற் குமுதவல்லியோ தான் குதிரை

மேற் சவாரி வந்தக்கால் அணிந்திருந்த செழுமையான ஆடையை விட இன்னும் மிகுதியான அழகோடு உடுத்திருந்தனள். நேர்த்தியான பொற்பூவிடைந்த கச்சினை அவள் முழங்கை வரையில் அணிந்திருந்தமையால், பால்போலும் வெண்மை யுடையதாய் அழகாக அமைக்கப்பட்ட அவளது முன் கையானது முழங்கைவரையிலும், அல்லது அதற்குச் சிறிது மேலுங் கட்புலனாயிற்று. அவளது ஆடையின் ஓரமெல்லாம் பட்டுப் பின்னல் உடையதாய்ப் பல திறப்பட்ட நிறங்கள் வாய்ந்ததாய்க் கச்சோடு கூட முழுதும் பூத்தொழில் உள்ளதாய் வயங்கிற்று. பொற்பட்டுக் கொட்டையுடைய நொய்ய ஆடை அவளது தலைக்கணியாய் விளங்கிற்று, அவள் சொல்லுதற்கரிய அழகோடுந் தோன்றினாள்; அவள் அங்கே எதிர்ப்பட்ட இளைய நீலலோசனனும் ஆண்டன்மைக்கேற்றபடி அங்ஙனமே வனப் புடன் திகழ்ந்தான்.

நீலலோசனன் முதலில் அவ்வறைக்குட் புகுந்தமையால், மாட்சிமை வாய்ந்த அவ்வியாபாரி அவ்விளம் பௌத்தனுடைய விழைவுதரும் முகத்தையும் அழகிய வடிவத்தையும் போதுமான அளவு ஏற்கெனவே பார்த்துக் கொண்டார். ஆதலால், அம்முதியோன் பார்வை முழுதும் இப்போது குமுதவல்லிமேற் பதிந்திருந்தன; ஒருவகை அன்பான உன்னிப்போடும் வியப் போடும் இறும்பூதோடும் அவர் அவளை முற்றும் நோக்கினார், இவ்வாறாக அவரது பார்வை அவள் மேல் நின்றமையால், நீலலோசனன் அவ்வழகிய வெண்மணியை முன் அறிந்த அறிமுகத்தோடும், களிப்பும் மகிழ்ச்சியும் கலந்த தோற்றத்தோடு அங்ஙனமே அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்ததனை அவர் காணாராயினர்.

அவள் முதலில் அவ்வறைக்குள் வந்தபோது அவளை வரவேற்றற் பொருட்டுச் சுருக்கமாகச் சொல்லிய சில சொற்களுக்குப் பின் சிறிது நேரம் வரையில் மனோகரர் ஏதொரு சொல்லுங் குமுதவல்லியை நோக்கிக் கூறாமல் இருந்தார். அவர் அவள் முகத்தை நோக்கிக் கொண்டிருந்தது. அவளுடைய அழகு அத்தனை கவர்ச்சி மிக்கதாய் இருந்தன் பொருட்டாக மாத்திரமன்று, அவள் இயல்பினையும் தெரிதற் பொருட்டாக வேயாம். ஏனென்றால் தன் மேற்பரப்பின்மேற் பிரதிபலனமாம் எதனையும் கண்டுணர வல்லார்க்குத் தான் உள்ளத்தின்

கண்ணாடி போன்று என்றும் இருப்பதாகிய முகத்தினையே ஒரு கருவியாகக் கொண்டு உயிரின் ஆழத்தையும் உள்ளத்தின் ஆழத்தையுந் துருவிக் காண்பதில் தம்மை மிகவுந் திறமை யுடையராகச் செய்தற் கிசைந்த அளவு அம்மலைய வியாபாரி நீண்டகாலம் உயிர் வாழ்ந்து வந்தனர், உலகினி யற்கையை வேண்டியவளவுக்குக் கண்டிருந்தனர்.

குமுதவல்லி முதலிற் புகுந்த போது, மனோகரர் எதிரே நீலலோசனன் வணக்கமான நிலையில் நின்று கொண்டிருக்கக் கண்டாள்: அவர் தம் முதுமைக்கும் அவர்தந் தோற்றத்திற்கும் அம்மாளிகையில் விருந்து புறந்தருந்தலைவராயிருக்கும் அவர் தம் நிலைமைக்கும் தக அதே வணக்கமான உணர்வோடு அவளும் அங்ஙனமே இப்போது நின்று கொண்டிருந்தாள். அவ்விருவரது நடத்தையும் அவருக்கு உவப்பினைத் தந்தது; கடைசியாக அவர் வாயைத் திறந்தது, “என் இளைய கேசர்களே--நாம் இப்போது தாம் முதன்முறையாக ஒன்று கூடினோ மாயினும் யான் உங்களிரு வரையும் அங்ஙனமே கருதுகின்றேன்-- நரை முதியோர்க்குரிய மதிப்பினை நீங்கள் அறியாமலிருக்க வில்லை. என் முன்னிலையில் நீங்கள் நின்று கொண்டிருக்கின்றீர்களே; மக்களுக்குரிய நிலைமைகளின்படி நம்முடைய நிலைமைகளைப் பார்த்தால் அம்முறையில் யான் உங்களிருவரையும் விட மிகத் தாழ்ந்த நிலையில் உள்ளேன். மாட்சிமை வாய்ந்த அரசி தங்களிருக் கையில் அருள் கூர்ந்து அமருங்கள்.” என்று குமுதவல்லிக் குரைத்துப் பின்னும் நீலலோசனன் பக்கமாய்த் திரும்பி “அரச, தாங்களும் இருக்கையில் அமரும்படி வேண்டிக் கொள்ளு கிறேன்.” என்று அவர் கூறினார்.

ஓர் அரசிக்குக் கீழ்ப்படாத நிலைமையினைக் குறிக்கும் மொழிகளால் குமுதவல்லி முன்னிலைப்பபடுத்திக் கூறப் படுதலைக் கேட்டதும் அவ்விளம் பௌத்தன் இறும்பூதுற்றுத் திடுக்கிட்டான்; இனிமற்ற வகையிற் குமுதவல்லியோ நானும் அங்ஙனமே திடுக்கிடாமல் இருக்கக்கூடவில்லை- ஏனென்றால், அரசியல்முறையில் எத்தகையோர்க்குரிய கோலத்தில் அக் கள்வர் தலைவன் தன்னை மறைத்து அம்மலைய வியாபாரி முன் வந்து சேர்ந்தானென்று அவள் வியப்புற்றாள்.

“என் இளைய நண்பர்காள்,” என்று மனோகரர் கூறுகையில், நீலலோசனன் தமது இடதுகைப்புறத்தும் குமுத

வல்லி தமது வலது கைப்புறத்தும் உள்ள இருக்கையில் அமர்தலைக்கண்டு அன்போடும் முறுவலித்து, “உங்கள் ஒவ்வொருவர்க்கும் ஏற்ற நிலைமைக்குத்தகயான் உங்களை முன்னிலைப்படுத்திப் பேசியபோது உங்கள் முகங்களின்மேல் வியப்புக்குறி தோன்றியதை யான் கண்டு கொண்டேன். ஆனாலும், இதற்குமுன் என்றும் நீங்கள் ஒருவரையொருவர் கண்டு பழகியதில்லாமையால், இப்போது உங்களை ஒருவரோடு ஒருவர் பழக்கப் படுத்தி வைக்கின்றேன். அதனோடுகூடக், கட்டாயமாய் இல்லாவிட்டாலுங் காரிய முறைக்காவது ஒரு வினையைச் செய்துமுடிக்கக் கடவேன். எனக்கு நம்பகமுள்ள ஏவலாளான **சந்திரன்** வாயிலாக யான்அனுப்பிய திருமுகமும் இலச்சினையும் பெற்றுக் கொண்ட நாகநாட்டரசி குமுதவல்லி உண்மையிற்றாங்களேயன்றி வேறு பிற அல்லர் என்பதனை யான் உறுதிப்படுத்திக்கொள்ளும் பொருட்டு அவ்வடை யாளத்தை எனக்குக்காட்டும்படி பெருமாட்டி, முதலிற்றங் களைக் கேட்டுக் கொள்ளுகின்றேன்.” என்றார்.

முன்னே பலதரமும் நம்மாற் குறிப்பிடப்பட்ட அம்மந்திர மோதிரத்தைக் குமுதவல்லி தன் விரல்களினிறுங் கழற்றி யெடுத்து, அதனை மாட்சிமிக்க மனோகரிடங் கொடுத்தாள்.

“இதோ என்னுடையது!” என்று நீலலோசனன் கூறிக் கொண்டே கத்தி மாட்டும் தனது அரைப்பட்டிகையை அவிழ்த் தான்; தன்னை மெய்ப்பிக்கும் தனது அடையாளத்தை எடுத்துக் காட்டும் அவசரத்தில் மணிகள் அழுத்தின தனது சுத்தியையும் கீழே மெதுவான கம்பளிமேல் விழும்படி விட்டுவிட்டான்; பிறகு தனதுருப்பாயத்தின் மார்பண்டையுள்ள ஒரு பையிலிருந்து அதனை யெடுத்தான்; பாட்டையிலே தான் வந்தபோது தனது பணப்பையிலுள்ளவை தற்செயலாய்க்கீழே விழுந்ததிலிருந்து, அதனிடத்துப் பெரிதுங் கருத்துள்ளவனா யிருந்தான்.

இவ்வாறு அவன் மனோகரிடம் கொடுத்த நம் ஒரு மோதிரமேதான் - குமுதவல்லி இப்போது கொடுத்தனையோ முழுதும் ஒத்திருந்தது இம்மோதிரம்- ஒரு கன்னஞ் செதுக்கப் பட்ட ஒரேயொரு செம்மணி குயிற்றிப் புதுமையான வேலைப் பாடு வாய்ந்ததாயிருந்தது இம்மோதிரம். இதனையும் மனோகரர் எடுத்துத் தொழிலாளிக்குரிய உன்னிப்போடும் அதனைச் சிறிதுநேரம் ஆராய்ந்து பார்த்தார். தனது மோதிரத்திற்கு

முற்றும் இணையான அக்கணையாழியை காண்டலும் குமுத வல்லிக் குண்டான குழப்பத்தையும் வியப்பையும் இதனைப் படிப்பவரே எண்ணிப்பார்த்துக் கொள்ளலாம்! இதன் கருத்து யாதாய் இருக்கக் கூடும்? அவ்விளம் பௌத்தனைப்பற்றித் தான் ஏதோ முழுதும் பிழைபாடான எண்ணங் கொண்டு வருந்து கின்றனவா? தான் கொண்ட ஐயங்களால் அவனுக்குப் பிழை செய்தனளா? சூழ நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சான்றாய் நின்று புதுமையாய்கூடி இவ்வினைவினைத் தோற்றுவித்தனவா? எது நினைப்பதென்று அவளுக்குப் புலனாகவில்லை - உண்மையிலே அவள் நினைவுகளெல்லாம் கடிதிற் கலக்கமடைவனவாயின.

"நல்லது உங்களிருவரையும் இங்கே வருவித்தற் பொருட்டுத் தனித்தனியே விடுத்த முடங்கலோடு அனுப்பிய மோதிரங்களே இவை. இந்தப் பெருமாட்டி" என்று மனோகரர் குமுதவல்லியைச் சுட்டினவாய் அவ்விளம் பௌத்தனை நோக்கி, "நாகநாட்டரசி யாவர்." என்று கூறிப் பின்னர் அவ்விளைஞனைச் சுட்டினவாய்க் குமுதவல்லியை நோக்கி, "இந்தப் பெருமான் மேற்கரைநாட்டு மன்னற்குச் சுவிகாரப் புதல்வனான நீலலோசனன் ஆவர்." என மொழிந்தார்.

"அன்பும் ஈசமும் வாய்ந்தமனோகரரே, யான் அரசனான நீலலோசனனை இதுதான் முதன்முறையாக எதிர்ப்பட்டேன் அல்லேன்; யான் அவருக்குச் செய்த சில பிழைகளுக்காக என் நெஞ்சார்ந்த மன்னிப்பு மொழிகளை, என் மிகவும் உண்மையான பிழைபொறுக்கு முரைகளைக் கூறுதற்கு ஒரு நொடிப்பொழுதுந் தாழேன்." என்று உருக்கத்தால் நடுங்கிய குரலோடும் குமுதவல்லி கூறினாள்.

மனோகரர் அவ்விளைஞர் இருவரையும் வியப்புடன் நோக்கி, "நீங்கள் இருவீரும் இதற்குமுன் எதிர்ப்பட்டீர்களா? இவ்வறையில் நீங்கள் ஒருவரையொருவர் தெரிந்திருக்க மாட்டீர்கள் என்று எண்ணினேன்." என்று கூவிச்சொன்னார்.

"என்றாலும் நாங்கள் முன்னமே எதிர்ப்பட்டிருக்கின் றோம்," என்று கூறுகையில் நாகநாட்டரசி நாணத்தால் தன்முகஞ் சிவப்பேறப் பெற்றவளாய், "ஆம், மாட்சிமைதங்கிய நீலலோசனன் மன்னற்கு யான் தீது செய்தவளானேன்; அதுவும் மிகப்பொல்லாத ஐயுறவினாலேதான். என்னுடைய கதையை

விரைவிற் சொல்லிவிடுகின்றேன். அருமையிற் சிறந்த மனோகரரே, யான் இடையிற்றங்கிய சத்திரத்தின்கண் என்னுடைய மோதிரத்தை - இப்போது தங்களிடம் யான் கொடுத்த இவ்விலை உயர்ந்த மந்திரமோதிரத்தைக் களவு கொடுத்து விட்டேன்; அடுத்த நாளில் இவ்விளம் பெருமானைத் தலைப்பட்டு இவரொடு தோழமை கொண்டேன். வழிக்கரை யிலுள்ள ஐயக்காரர் சிலர்க்குக் காசுதந்து உதவுகையில் இவர் தற்செயலாய்த் தமது பணப்பையிலிருந்தவற்றைக் கீழே வீழ்த்திவிட்டார்; வீழ்ந்தவற்றில் ஒரு மோதிரம் இருந்தது; அஃது என்னுடையதுதான் என்று நம்பிவிட்டேன். ஆனால் அந்த மறை பொருளின் வரலாறு இப்போது வேறுவகையாய்ப் புலப்படலாயிற்று; அந்த நேரத்திலோ யான் ஒரே எண்ணந்தான் கொள்ளக்கூடியமாய் இருந்தது - இதனால், கூடியமாட்டுங் காலந்தாழாமல் மாட்சிமை தங்கிய இவ்வரசிளைஞரை யான் பிரிந்து செல்லவேண்டுவது இயல்பாயிற்று. பிறகு ஒருவர்க்கு நேர்ந்த கழிவிரக்கத்தால் என்னுடைய மோதிரத்தைத் திரும்பப் பெறலானேன் - என்றாலும், அந்நிகழ்ச்சியிலுங்கூட யான் மாட்சிமை தங்கிய நீலலோசன மன்னரைப்பற்றிப் பொல்லாங் காகவே பின்னும் நினைக்கலானேன்.'' என்று தொடர்ந்து ரைத்தாள்.

"ஓ! புத்தன் வாழ்க!'' என்று அவ்விளம் பௌத்தன் ஓலமிட்டவனாய்,'' என் அறிவை கலக்கி என்னை மிகத் துன்புறுத்தி வந்த அந்த மறைபொருளானது கடைசியில் நன்கு புலனாயிற்று! இனி மன்னிப்புக் கேட்டலைப் பற்றியோ வென்றால், அழகிய அரசி, தங்கள் ஆம்பற் செவ்வாயினின்று பிறக்கும் ஒரு சொல்லே, மாட்சிமை மிக்க தாங்கள் என்னைப் பிழைபட நினைந்ததனால் உண்டான எனது மனத்துயரத்தை எனதுளத்திலிருந்து சுவடறத்துடைத்தற்குப் போதுமானதாகும்.'' என்று கூறினான்.

குமுதவல்லி தனது முகத்தை அழகாகச் சாய்ந்து இச்சொற்களை ஏற்றுக்கொண்டாள்; அப்போது நாணத்தால் உண்டான சிவப்பு அவள் கன்னங்களில் மறுபடியும் பரவிற்று; இவ்விளம் பௌத்தனும் கொள்ளைக்கார நல்லானும் ஒருவரே என்று இவள் பிறகுஒரு சிறிதும் நினையாவிட்டாலும் நீலலோச னனைப் பற்றிய மற்றொருவராய் இவளைத் திகைப்பித்தது, அஃது, அவன் முன்னாள் மனக்கலக்கத்தில் குமுதவல்லி தனது

மன்னிப்பை மீனாம்பாளுக்கு உறுதிப்படுத்திக் கூறின கட்டிலண்டையிற் காணப்பட்டதேயாம். அவ்விடத்திலே நானெதிர்ப்பட்டதைச் சுட்டி இப்போது அவன் சிறிதுந் குறிப்பிடத்தக்கது பற்றியும் அவள் திகைப்புற்றாள்: ஏதோ ஒரு காரணம் பற்றி அதனை மனோகரர் முன்னிலையில் அவன் தெரிவியாமல் மறைத்துடைக்கும்படி கற்பிக்கப்பட்டிருத்தல் வேண்டுமென்று நினைந்தவளாய் அவள் தனக்குள் இணக்கிக் கொண்டாள்.

“அங்ஙனம் நீங்கள் எதிர்பட்டீர்களா?” என்று அம்முதியோள் அவ்விருவர் இடையிலும் இருந்தபடியே அவ்வழகிய இளைஞனையும் எழில்மிக்க அந்நங்கையையும் இடைவிடாத ஆவலுடன் நோக்கிப் பின்னும், நீங்கள் அவ்வாறு எதிர்ப் பட்டதைப்பற்றி நான் கருதப்படவில்லை. அவர் தாங்கள் கூறிய அப்பொருந்தா நிகழ்ச்சி நேராவிடின், இவ்விளம் பெருமானைப் பற்றித் தவறாமல் நாங்கள் நல்லெண்ணங் கொள்ளுதலைத் தடைசெய்யத்தக்கது எதுவுந் நேர்ந்திராது: நீல்லோசன, தாங்களும், அரசி குமுதவல்லியொடு கொண்ட வழியிடை நட்புச் சடுதியிற் குலைந்துபோனபோது நிரம்பவும் வருத்தப்பட்டீர் களென்பதனைத் தங்கள் பார்வையினாலேயே நன்கு தெளியப் பெற்றேன்.” என்று உரைத்தார்.

நீலலோசனனது முகம் வெட்கத்தால் அனன்றது; என்றாலும் அதில் மகிழ்ச்சியும் கலந்து தோன்றியது; ஆனால், குமுதவல்லியினிடத்துத்தோன்றிய நாணமோ இன்னும் பெரிதாயிற்று - அங்ஙனமே அவள் முகத்திற் கனன்ற நாணச் சிவப்பினிடையே அருவருப்பிற்கு அடையாளமான ஒரு பார்வையுங் கலந்துதோன்றியது. அவள் நினைப்பாளானால் - அங்ஙனம் நினைப்பது இயல்புதான் - அம்முதியோன் பேசியதில், கொச்சைத்தனம் என்று கொள்ளத்தக்க, ஒரு பொருந்தாச் சிறு தன்மை இருந்தது. பெருந்தன்மை மிக்க பார்வையும் அத்தனை வயதும் உடைய அவர், தனது கண்ணிடை நாணத்திற்கு மதிப்புக் குறைச்சலான சொற்களை எண்ணாமற் சொல்லிய குற்றத்திற்கு ஆளானதைக் குறித்து அவள் வியப்பும் வருத்தமும் கொள்ளலானாள்.

ஆனால், அப்பெரியோர் புன்சிரிப்புற்றுப் பிழைபடாத அன்போடு, அவள் கொண்ட அருவருப்பைத் தடையின்றி

*நீக்கத்தக்க வகையாய்க் கூறுவார்: "அரசி, தங்கள் கண்ணிமை நாணத்திற்கு நான் பிழை செய்ய மாட்டுவேன் என்று ஒருபோதும் நினையாதீர்கள். நாகநாட்டரசி தமது பேரழகிற்குப்பெற்ற புகழினும் தமது நல்லொழுக்கத்திற்குப் பெற்ற புகழிற் சிறிதுங் குறைந்தவர் அல்லரென்பதும் - ஓர் அரசிக்குரிய மேன்மையால் தாங்கப்படுதலினும் கன்னிமைப் பெருமையால் தாங்கப்படுதலிற் சிறிதுங் குறைந்தவர் அல்லரென்பதும் நான் அறிவேன். சுருங்கிய பொழுதில் வழி நடந்து செல்லுதற்குத் தோழமையாய்க் கொண்ட அயலவனான ஓர் இளைஞனிடத்தில் தாங்கள் மையல் கொள்ளத்தக்கவர் களென்று, இனிய அரசி, அத்தனை பரும்படியான ஒரு நினைவை யான் கொள்ளத்துணிவேனென நீங்கள் நினைக்கி றீர்களா? இல்லை: என் சொற்களுக்கு வேறு பொருளுண்டு. இப்போது உண்மையைச் சொல்லிவிடுகின்றேன் - உங்களிருவர் கைகளும் நேசவுரிமையிற் பிணைக்கப்படுவனவாக! ஏனெனில், உங்கள் நரம்புக் குழாய்களில் ஒரே குடும்பத்திற்குரிய இரத்தம் புரண்டோடுகின்றது - நீங்கள் இருவரும் மைத்துனக் கிழமை உடையீர்கள்!"*

*நீலலோசனன் குமுதவல்லி என்னும் அவ்விருவர் வாய்களி னின்றும் உடனே வியப்பொலிகள் தோன்றின; சிறிது நேரம் மிகப்பெரிய திகைப்பின் வயப்பட்டவர்களாய் இருந்தமையால், அவர்கள் தமது இருக்கையினின்றும் எழுந்து நின்றனராயினும், தாம் கைதழுவவேண்டுமென்று கற்பிக்கப் பட்டபடிசெய்ய நினைவற்றவர்களாய் இருந்தனர்.*

*"என் இளையோர்களே, நீங்கள் இருவீரும் நாகநாட்டை ஒருகால் அரசாண்ட* ***கோச்செங்கண்மன்னற்குப்*** *பேரப் பிள்ளைகள் ஆவீர்கள் என்பது உண்மையேயாம்." என்று மனோகரர் வணக்கவொடுக்கத் தோடுங் கூறினார்.*

*பௌத்த சமயத்தவனான நான், நாகநாட்டில் அரசுபுரிந்த சைவசமய அரசன் கால்வழியில் வந்தவனாதல் எவ்வாறு கூடுமென்றெண்ணி நீலலோசனன் பெரிதுந்திகைப்புற்றனனா யினும், வியப்புங்களிப்பும் ஒருங்கு கிளரப்பெற்றவனாய், "மைத்துனி, என் கையை ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும்!" என்று உரத்துச் சொன்னான்.*

*குமுதவல்லியும் தான் கேட்டவைகளைப் பற்றித் திகைப் புற்றனளாயினும், போற்றத்தக்க தம் நண்பனான அம்முதியோள்*

வாயினின்று பிறக்கும் ஒவ்வொன்றும் உண்மையாகத்தான் இருக்க வேண்டுமென்று உணர்ந்தவளாய்த் தனது வெண்மை யான அழகிய கையை நீலலோசனன் கையில் வைத்தாள்.

உடனே, மனோகரர் தமது இருக்கையினின்றும் எழுந்து, அவ்விளைஞர் இருவரின் சென்னிமேற் றம்கைகளை நீட்டிக், "கடவுள் உங்களிருவர்க்கும் அருள் வழங்குவாராக! மற்றொ ருவர் பொருட்டாக யான் உங்களுக்கு விரைவில் கொடுப்பதாய் இருக்கும் புதுமையான பொருட்களுக்கு நீங்கள் தகுதியுடையவர் களாகும்படி நாம் வழிபடும் முதற்பெருந் கடவுள் அருள் புரிவாராக! ஓ, நீலலோசன, சைவ சமயத்தின் அருளொளி யானது நுமதுள்ளத்தின் ஊடுருவிச் சென்று விளங்குவதாக?" என்று வாழ்த்துரை கூறினார்.

இச்சொற்களைச் சொல்லிய வகையிலும் ஓசையிலும் வெளித்தோற்றமும் வணக்கவொடுக்கமும் வாய்ந்தது. ஏதோ இருந்தமையால், அப்பௌத்த இளைஞனும் அச்சைவ நங்கையும்அவர் காலடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள்; அவருடைய கைகளை எடுத்து முத்தம் வைத்தார்கள். ஆனால், அவ்விருவரும் ஒன்றுமேபேசவில்லை; அவர்கள் தம்மிடத் துண்டான மிகுந்த மனவுருக்கத்தால் பேசக்கூடாதவராய் இருந்தனர். ஆகவே சமயம் மாறுதலைப்பற்றி அம்முதியோன் சொல்லிய சொற்கள் எவ்வகையான எண்ணத்தை நீலலோசன னிடத்தில் எழுப்பினவென்பதை அங்ஙனங்கோரிய அம்முதி யோனே அஃது அங்ஙனமிருக்கலாமென்று திட்டமாய்த் துணிந்தறியக் கூடவில்லை.

"என் அன்பிற்கினிய இளைய நேசர்களே, எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! உங்கள் இருக்கைகளில் இருங்கள் - யான் சொல்லப்போகிற விளக்கங்களை உற்றுக்கேளுங்கள்." என்று மனோகரர் கூறினார்.

அங்ஙனமே குமுதவல்லியும் நீலலோசனனும் எழுந்து, வணக்கத்தக்க அவ்வியாபாரியின் வலது பக்கத்திலும் இடது பக்கத்திலும் முறையே உட்கார்ந்தனர். இவ்விருவரும் அவர்தம் முகத்தை மிகுந்த ஐயுறவோடும் உற்றுப்பார்த்தனர்; ஏனென் றால், முதன்மையான செய்திகளைத் தாம் இப்போது அறியப் போகுந்தறுவாயில் இருப்பதாக அவர்கள் உணர்ந்தார்கள்.

மனோகரர் அவ்வரசி பக்கமாய்த்திரும்பி, "மாட்சிமை நிறைந்த தங்களை நோக்கி மாத்திரம் யான் கூறுவதாயிருந்தால், தங்கள் பாட்டனார் **கோச்செங்கண் மன்னரைப்** பற்றித் தாங்கள் முன்னமே அறிந்து வைத்திருக்கும் பலசிறுவரலாறு களை யான் கூறாது விட்டுச் செல்லலாம். ஆனால், பெருமான் நீலலோசன, தாங்கள் அவ்வரலாறுகளைச் சிறிதும் உணர்தற்கு இடமில்லா திருத்தலினால், யான் அவற்றின் நுணுக்கங்களை எடுத்துச் சொல்லவேண்டுவது அகத்தியமாய் இருக்கின்றது. **கோச் செங்கண் மன்னர்** நாகநாட்டைத் தனியான ஆட்சி புரிந்தவ ரென்று தாங்கள் அறிதல் வேண்டும்; அவர் தமது நுண்ணறிவு முறையாலும், தாம் பிறழாது நடாத்திய செங்கோன்மையாலும், தாமாகவே ஆங்காங்கு நாட்டிய அறச் சாலைகளாலும் தம் குடிமக்களாற் பெரிதும் அன்பு பாராட்டிப்போற்றப்பட்டு வந்தார். நாகப்பூரிலுள்ள தமது அரண்மனையில் அவர் வழக்க மாய்த் தங்கியிருந்தனர் - அழகிற் சிறந்த குமுதவல்லி, தாங்கள் அவ்வரண்மனையிலிருந்து தான் சிறிது காலத்திற்கு முன் பயணம் புறப்பட்டு நீலகிரி நகரத்திற்கு வந்து சேர்ந்தீர்கள். நீங்கள் இருவரும் பிறப்பதற்குமுன் - அதாவது இருபத்தைந்து ஆண்டு களுக்கு முன் இருக்கலாம்- வணங்கத்தக்க முனிவரர் ஒருவர் ஒருநாள் அவ்வரண்மனை வாயிலில் வந்து நின்று, தாம் கோச்செங்கண் மன்னனோடு பேச விரும்புவதாகத் தெரிவித்தனர். தன்னைக் காண வருபவர்களெல்லார்க்கும் எப்போதும் எளியராயிருக்கும் அம்மன்னர் துயரமான அத்துறவியை எவ்வளவு விருப்பத்தோடு வரவேற்பாரென்பதை நாம் சொல்லல்வேண்டா; மேலும் உங்கள் பாட்டனார் சைவ சமய உண்மையில் மிகவும் மனம் அழுந்தி நின்றார்; தமது செல்வாக்குப் பரவிய இடங்களிலெல்லாம் அவர் அதனைத் தம்மாற் கூடிய மட்டும் வளர்த்து வந்தார். அம்முனிவரர் அவர் முன்னிலையிற் சென்று, தாமிருவரும் தனித்திருக்கும்படி கேட்டுக்கொண்டார். அம்மன்னரும் அதற்கிசைந்து தம்பரி வாரங்களை அப்புறப்படுத்திவிட்டார்; அவன் பின் அத்தூய முனிவரர் அவ்வரசர்செவியிற் படும்படி மிகவும் புதுமையான செய்திகளைக் கூறத்துவங்கினார். பின்வருகிறபடி அவ்வரசரை நோக்கிச் சில பல கூறுவாரானார்: என் அரசே, புதுமைமிக்க ஒரு மறைவான செய்திக்கு வைப்பிடமாய் உள்ளவர் இந் நேரத்தில் இவ்வுலகில் இரண்டு பெயரே இருக்கின்றனர். சில கிழமை

களுக்கு முன் அதனை யறிந்தவர் மூன்று பெயர் இருந்தனர்; ஆனால், ஒருவர் இறந்து போயினர்--இப்போது இம்மறை வினைத் தம் நெஞ்சத்தே பூட்டி வைத்திருப்பவர் இருவரே யிருக்கின்றனர். தொன்று தொட்டு வரும் ஒரு வழக்கத் தின் தூய கட்டுப்பாட்டின்படி, இப்போது அம் மறைபொருள் மூன்றாம் ஒருவர்க்கு அறிவிக்கப்பட வேண்டுவதாய் இருக்கின்றது; ஏனெனில், அம் மறைபொருள் முற்றுமே தெரியாமல் அழிந்து போதற்கு இடம் இல்லாதபடி இயன்ற மட்டும் அதனைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டாக அதனைத் தெரிந்த வர்கள் எப்போதுமே மூன்று பெயர் இருக்க வேண்டுமென்பது அகத்தியமாகக் கருதப்பட்டது. யான் இப்போது குறிப்பிட்டுச் சொன்ன தொன்று தொட்ட வழக்கும், அம் மறைபொருளின் இயற்கையும் போற்றத்தக்க அம்மறை வினைப் புதிய ஒருவர்க்கு அறிவிக்க வேண்டுவது அகத்தியமாம் பொழுது அதற்கு மிகவுந்தக்கவர் ஒருவரையே தெரிந்தெடுத்தல் வேண்டுமெனக் கற்பிக்கின்றன. அங்ஙனந் தக்கவராயுள்ளவர் இவ்வளவு வயசுடையவராயிருக்க வேண்டு மென்னும் வரை யறையில்லை: ஆனாற் சமயக் கொள்கையைப் பற்றியோ வென்றால் அப்படி யில்லை--ஏனென்றால், சைவ சமயத்தைத் தழுவினோ ரல்லாமற் பிறர் இப்பெரிய புதைபொருளை அறியும் மகிழ்ச்சியைப் பெறலாகாது. மாட்சிமை தங்கிய தங்கட்கு இப்போது தான் யான் தெரிவித்த வண்ணம், இம்மறைவினை அறிந்தவரில் ஒருவர் இதனினுஞ் சிறந்த மறுமை யுலகத்திற்குச் சில நாளுக்கு முன் ஏகிவிட்டமையால், அவரிருந்த இடத்திற்கு நிரம்பத் தகுதியான மற்றொருவரைத் தெரிந்தெடுக்குங் கடமை என்னைப் பொறுப்ப தாயிற்று. அறிவாலும் நீதியாலும் அரசர் எல்லாரினுஞ் சிறந்தவரும், அன்பொழுக்கத் தாற் சைவ சமயத்தார் எல்லாரினும் மேற்பட்டவருமான **கோச்செங்கண் மன்னரைத் தவிர** வேறு சிறந்தவரை யான் எங்ஙனந் தெரிந் தெடுக்கவல்லேன்? என்று இவ்வாறு மேற்கணவாய் மலை நடுவிலிருந்து வந்த அத்தூய முனிவரர் உங்கள் பாட்டனார்க்குச் சொல்லினார்.

போற்றத்தக்க மனோகரர் துவங்கிய கதையை மிகவும் மனங்கவிந்து கேட்டுக் கொண்டு வந்த அரசி குமுதவல்லியும் அரசிளைஞன் நீலலோசனனும் பின்னும் அதன் றொடர்ச்சி யாய் அவர் சொல்லப் போவதனைக் கேட்க எவ்வளவு ஆவல் கொண்டார் என்பதை அவர்களின் பார்வைகளே புலப் படுத்தின.

வணங்கத்தக்க அவ்வியாபாரி பின்னும் அதனைத் தொடர்ந்துரைப்பாரானார்: "மிகவும் போற்றத்தக்கதென்றுஞ் சிறந்ததென்றும் சொல்லப்பட்ட மறைபொருளை வைத்திருப் பவர்களில் ஒருவராகத் தம்மை தெரிந்தெடுத்ததனால் தமக்கு நயம்புரிந்த அத்தூய முனிவரருக்கு நுங்கள் பாட்டனாரான **அக்கோச்செங்கண் மன்னர்** தமது நன்றியறிதலைத் தெரிவித்தார்; பின்வருமாறு அம்முனிவரர் அம்மாட்சியை நிறைந்த மன்னர்க்கு உரைப்பாரானார்:-- எம்பெருமானே, இது காலகாலமாக உண்மையோடுங் கொடுக்கப்பட்டு வருகிற ஒரு புதைபொருளாகும்; மிகவுந் தாழ்ந்த நிலைமையிலுள்ள துறவி களினிடத்தும், மிகவும் வலிய நிலைமையிலுள்ள அரசர் களிடத்தும் இம்மறைபொருள் வைக்கப்பட்டு வந்திருக்கின்றது. இதனைத் தெரிந்து கொள்வ தானது உலகத்தில் நிரம்பவும் வியக்கப்படுகின்ற பயன்களைத் தாம் அனுபவிக்கத் தக்கவர்கள் என்று எண்ணுகின்றவர்களுக்கு ஒரு திறவுகோலா யிருக்கும். தனதறிவுக்குள் அகப்படும்படி இங்ஙனங்கொண்டு வரப்பட்ட வியப்பான பொருள்களை மிகு களிப்போடும் பேரின்ப வியப்போடும் உற்றுக் கேட்டுக் கொண்டு வந்த கோச்செங்கண் மன்னர்க்கு அம்முனிவர் அம்மறை பொருளை அதன் பின் வளக்கி வெளியிட்டார். அந்த மறைபொருள் யாதாயிருந்தது--அல்லது யாதாயிருக்கின்றது--என்பதை, என் அன்புள்ள இளைய நண்பர்களே, இப்போது யான் சொல்லுங் காரணங்களால், உங்களுக்கு இவ்வமயத்தில் சொல்லக் கூடாதவனாயிருக் கின்றேன். ஆனாலும், அழகிற் சிறந்த குமுதவல்லி தங்களுக்கு மாத்திரம் அது சுருக்கில் தெரிவிக்கப் படலாம்; நீலலோசனரே, தங்களுக்கு யான் அதே வகையான நம்பிக்கையை எப்போது காட்டப் பெறுவேனோ வென்றால் அது தங்களைத்தான் பொறுத்திருக்கின்றது."

மறுபடியும் மனோகரர் சிறிதுநேரம் பேசாமலிருந்தார்; அப்பெரிய மறைபொருளைத் தானும் அங்ஙனமே தெரிந்து கொள்ளத் தகுதியுடையவனாய்க் கருதப்படுவதெல்லாம், தான் பௌத்தசமயக் கொள்கையை அறவே விட்டொழிப்பதனையே பொறுத்திருக்க வேண்டுமென்பது தான் இது வரையிற் கேட்டு வந்தவற்றால் இனிது விளங்குகின்றதென நீலலோசனன் தனக்குள் நினைப்பானானான். இதைப் பற்றி அவன் மன நிலை எவ்வாறிந்ததென்பது பின்வருவனவற்றாற் புலனாகும்.

மனோகரர் பின்னுந் தொடர்ந்துரைப்பாரானார்: "யான் இப்போது குறிப்பிட்ட மறைபொருளைச் சிறிதும் வழுவாமல் முற்றுந் தெரிந்து கொள்ளும் பொருட்டுக் கோச்செங்கண் மன்னர் அத்துறவியோடுங் கூடப் பயணம் புறப்பட வேண்டுவது இன்றியமையாததாயிற்று. அப்பயணஞ் சென்று திரும்பு வதற்குச் சில நாட்கள் மேற் செல்லாது; ஆகவே, தாம் நாக நாட்டின் தலை நகரை விட்டு வெளியே சென்றிருப்பது தம்மைச் சூழ்ந்திருக்கும் நன்றியறிவுள்ள ஏவற்காரர் சிலர்க் கன்றிப் பிறர்க்குந் தெரியா திருக்கும் வண்ணம் அவ்வரசர் பெருந்தகை அதனை மறை வாகவே முடிக்கக் கூடியவரானார். என்றாலும், அவர் அத்தூய துறவியைத் தவிரப் பிறரெ வரையும் உடன் கூட்டிச் செல்ல வில்லை; அம்முனிவரர் எடுத்துச் சொன்ன உறுதி மொழியின் திறத்தில் அவர் ஏமாற்றம் அடையவில்லை. அவ்வியத்தகு மறைபொருட்களஞ்சியமாயும், அதனையறிந்த அறிவால் தாம் அனுபவிக்கக் கிடைத்த நிலையான பயன்களில் சிலவற்றைப் பெற்றவராயும் அவர் நாகப்பூருக்குத் திரும்பி வந்தார். இரண்டு ஆண்டுகள் கழிந்த பிறகு அப்புனிதமுனிவரர் நம்பிக்கை வாய்ந்த ஒரு தூதுவனைக் கோச்செங்கண் மன்னர் பால் அனுப்பித் தாம் இறக்குந் தறுவாயில் இருப்பதாகத் தெரிவித்தார். அவ்வரசர் பெருந்தகையும் அந்நல்லோர் தமது யிரை இறைவன்றிருவடிக்குச் செலுத்துந்தறுவாயில் இருந்த இடத்திற்கு ஒரு நொடிப் பொழுதுந்தாழாமற் சென்றார்; அவ்வரசரும் பிரிந்து போகும் அம்முனிவரரின் வாழ்த்துரைகளைப் பெற்றுக் கொண்டு பின்னர் அவரை அடக்கஞ் செய்ய வேண்டும் சடங்குகளை முடித்தார். அதன் பிறகு, அம்மறை பொருளை வைத்திருக்கத்தக்க மற்றொருவரைத் தேடிப்பிடிக்க வேண்டுவது அம்மன்னர் பெருந்தகையின் மேலதாயிற்று; தாம் செவ்வையாய் அறிந்த சைவசமய அன்பர்களை யெல்லாம் தமதுள்ளத்தில் அளவிட்டுப் பார்த்த பின்னர், அவர் முடிவாக என்னையே தெரிந்தெடுக்க லானார். ஆம் என்னிளைய நேசர்களே., தங்கள் சிறந்த பாட்ட னாரின் நெருங்கிய நட்பைப் பெற்று இன்புறும் செல்வத்தி னையும் பெருமையினையும் எய்தினேன். எனதுண்மைச் சிவபக்திக்கு அடையாளமாக யான் அப்போது காட்டிய ஒப்பனைகள் இப்போதெடுத்துச் சொல்வது எனக்குத்தகாது: ஆகையால், இறந்து போன அம்முனிவரருடைய நிலைமையை யான் அடையலானேன் என்று சொல்வது போதும். இங்ஙனமாக

அவ்வுயர்ந்த மறை பொருளை தெரிதற்கு அருள் பெற்ற மூவரில் யானும் ஒருவனானேன்."

பின்னுஞ் சிறிது நேரம் பேசாமலிருந்த பிறகு மனோகரர் மறுபடியும் பின்வருமாறு பேசப்புகுந்தார்-

"கோச்செங்கண் மன்னர்க்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். அவர்களிருவரும் மணஞ்செய்யப்பட்டவர்களே, அவர்க்கு விருப்பமிருந்தால் தம்புதல்வர்களில் ஒருவர்க்காயினும் தம்மருமக்களில் ஒருவர்க்காயினும் அம்மறைபொருளை அவர்தெரிவித்திருக்கலாம்; ஏனெனில், நான் முன்னமே தெரிவித்தபடி வயதைப்பற்றிய வரையறையில்லை - ஆண் பெண் என்னும் பால் வரையறையும் இல்லை யென்பதனை நீங்கள் முன்னமே தெரிந்திருக்கிறீர்கள். அவர்தம் புதல்வர்கள் கடமை யில் வழுகாமல் கீழ்ப்படிதலுள்ளவர்களாய் இருந்தாலும், அப்புதல்வர்களின் இளைய மனைவிமார் நற்குணமுடையராயும் மனத்துக்கினியராயும் இருந்தாலும், அவர்களெல்லாரும் உலகப்பற்று மிக்கவராயும் தமது உயர்ந்த நிலையின் ஆரவாரத்திலும் வெளிப்பகட்டிலும் அரசியலிலும் நினைவு அழுந்தினவராயும் இருந்தமையால், அவர் தமது மனமார அவர்களுள் எவரையும்தெரிந்தெடுத்து அப்பேரின்ப அனுபவத் திற்கு உரியராம்படி செய்ய இயலாதவரானார். அதுவல்லா மலும், அத்தகையதொரு மறைபொருளைத் தன் மனை யாளுக்குத் தெரியாமல் கணவன் தானே வைத்திருப்பது ஒவ்வாத தொன்றாம்-- இனிக்கணவனை விலக்கி அவன் மனைவிக்கு ஒருமறை பொருளைப் புலப்படுத்துவதும் நன்முறைக்கும் நல்லறிவுக்கும் பின்னும் இசையாததொன்றாம். ஆக எல்லா வற்றையும் எண்ணிப்பார்க்கையில் கோச்செங்கண் மன்னர் என்னையே தெரிந்தெடுக்கலானார். ஆனால், இப்போது யான் இக்கதையின் மற்றொரு பகுதியைப்பற்றிப் பேசப் போகின்றேன். கோச்செங்கண் மன்னர்க்கு மணஞ்செய்யப்பட்ட புதல்வர் இருவர் இருந்தனரென்று யான் முன்னமே சொல்லி யிருக் கின்றேன். நீலலோசன, அம்மன்னரின் இளைய புதல்வர்க்கும் அவர்தம் அழகிய மனைவியார்க்கும் தாங்கள் இருபத் தோராண்டுகளுக்குமுன் பிள்ளையாய்ப் பிறந்தீர்கள்!"

"என் பெற்றோர்கள்?" என்று நீலலோசனன் வியந்து வினவித் திரும்பவும் வருத்தம் மிக்க ஐயுறவினால் மனங்கலங்கி,

நடுங்கிய மெல்லியகுரலோடு "அவர்கள் இன்னும் உயிரோடிருக் கிறார்களா? ஓ! இல்லை! இல்லை! இந்த நம்பிக்கை வைக்க யான் துணியலாகாது - அப்படியிருந்தால் இத்தனை காலம் யான் அவர்களால், ஏற்றுக்கொள்ளப்படாமல் கைவிடப்பட்டிருந்தி ரேன்!" என்று சொல்லினான்.

"என் அரிய இளைய நேசரே, தாங்கள் மிகவும் திறமாய்க் கருதுகிறபடியே தான்." என்று மனோகரர் உருக்கத்தோடு கூறினர்; குமுதவல்லியின் இரக்கமான பார்வையும் தன் மைத்துனனின் பெற்றோர்கள் உயிரோடில்லை யென்று அவளும் அவனுக்குத் தெரிவிப்பனபோற் குறி காட்டினள்.

"அச்சோ, என் அரிய தாய் தந்தையரே!" என்று நீலலோசனன் முணுமுணுத்துரைக்கையில் கண்ணீர் அவன் கன்னங்களில் வடிந்தது. "வணங்கத்தக்க மனோகரரே, அவர்கள் எங்ஙனம் இறந்தார்களென்பதை எனக்குச் சொல்லுங்கள், சொல்லுங்கள்."

"தங்கள் இரக்கத்தக்க அன்னையர் தாங்கள் பிறந்த சிறிதுநேரத்திற்கெல்லாம் ஒருகாய்ச்சலாற் கொண்டு போகப் பட்டார்." என்று அம்மலைய வியாபாரி மறுமொழிந்தார். "தங்கள் தந்தையார் முடிவைப்பற்றி யான் இப்போது பேசப்போகிறேன். என் இளையநண்பரே, உங்கள் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, இந்த முடிவு துயரமான தொன்றென்பதைக் கேட்க ஆயத்தமாய் இருங்கள். மன்னரின் மூத்த மகளுக்குத் திருமணமாகிச் சில ஆண்டுகள் வரையில் பிள்ளை பிறந்திலது."

"இரங்கத்தக்க என் தந்தையார்!" என்று குமுதவல்லி முணுமுணுத்தாள்.

"இப்போது எனது கதையில் துயரமான பகுதியைப்பற்றிச் சொல்லப் போகிறேன்," என்றுரைத்து மனோகரர் பின்னுங் கூறுவார்: நீலலோசனரே, நீங்கள் முற்றுந்தெரிந்துகொள்ளும் பொருட்டு, முதலில் யான் சொல்லியபடி, இக்குடும்ப நிகழ்ச்சி களையும் வரலாற்றுக் குறிப்புகளையும் நெடுகச் சொல்ல வேண்டுவது எனக்கு அகத்தியமாய் இருக்கின்றது. நீங்கள் பிறந்து சில திங்கள் தாம் சென்றன - உங்களைச் சூழநடந்தவற்றை உணராத சிறுமகவாய் .இருந்தீர்கள் - அப்போது **அரிடமன்னன்** நாகநாட்டின்மேற் படையெடுத்து வந்தான். ஆண்டில் முதிர்ந்த

கோச்செங்கண் மன்னரும் தம்முடைய படைகளையெல்லாம் ஒருங்கு திரட்டினார்; அவரே தம் படைகளுக்குத் தலைவராய் நின்று, தம்மருமகனும் இளைய புதல்வருந் தம்மோடு கூட வரப் பகையரசனுடன் போர் புரியச் சென்றார். ஐயோ! அஞ்சாத பேராண்மையிருந்தாலும், அது பெருந் தொகையான படை மறவர்க்குமுன் யாது செய்யும்! கோச்செங்கண்ணார் படை யானதுதோல்வியடைந்து நாக நாட்டின் தலைநகரான நாகப் பூரினுள் அலங்கோலமாய்ப் பின்னிடைந்து ஓடிற்று. அந்நகரத்தி லிருந்த குடிமக்களோ தம்மரசனிடத்தில் மிகுந்த அன்புடையராய் இருந்தமையால், முற்றுகை செய்யும் பகைவரை எதிர்த்து நிற்றற்கு வேண்டும் ஏற்பாடுகளை மிக்க ஊக்கத்தோடும் செய்தார்கள். அரிட மன்னன் படைத்தலைவனோ கோட்டை மதிற்புறத்தே வந்து சேர்ந்து அந்நகரத்தாரை அழைத்துக் கோட்டையைத் தமக்கு ஒப்படைத்துவிடும்படி சொன்னான். நகரத்தாரோ அதனைக் கடுமையாக மறுத்துக்கூறினார்கள். முற்றுகை செய்தவர்களை மூன்று திங்கள்வரையில் அந்நகரத்தார் எதிர்த்து நின்றார்கள்; ஆனால், அது முற்றிலுஞ் சூழப்பட்டுச் சுற்றியுள்ள நாடுகளுடன் போக்குவரவுக்கு இடமில்லாதபடி வழியடை பட்டமை யினாலே, அது பஞ்சத்தின் கொடுமைகளாற் பற்றப்படு மென்னும் அச்சம் உண்டாயிற்று. பகைவர்படையின் தலைவன் ஓர் அறிவிப்பு விட்டு, அவ்வறிப்பிற்கண்ட மூன்று நாட்களுள் நாகப்பூர்க்கோட்டையை ஒப்படையாவிட்டால் இங்ஙனம் பிடிவாதமாய் எதிர்த்து நின்றதற்குக் காரணம் அரசனும் அவன் புதல்வர் இருவருமே என்று கருதப்படுவார் களெனவும், அதனால் அதனைப் பிடித்தபிறகு அம்மூவரையும் கோட்டைக் கொத்தளங்களின் மேல் இரக்கமின்றிக் கழுவேற்றுவேன் எனவும் தெரிவித்தான். சண்டையைப்பற்றிப் பேசித்தெளியும் பொருட்டு ஓர் அவை கூட்டப்பட்டது; தமது தலைநகர் எதிரியின் கைப்படுவது திண்ணமென்றுணர்ந்த அம்முதிய அரசர் தாம் கோட்டையைப் பகையரசனுக்கு ஒப்படைத்துவிடுங் கருத்துடைய ராதலை அவ்வவையில் தெரிவித்தார். ஆனால், அவர் மருமகனும் புதல்வரும் அதிகாரிகளும் எதிர்த்தே நிற்கும்படி அவரை வேண்டிக் கொண்டார்கள்; ஏனென்றால், சாளுவமன்னன் படை நாகநாட்டரசர்க்கு உதவியாய் வருவதாக ஓர் உறுதிமொழி இருந்தது. குடிமக்களோ அரண்மனையைச் சூழ்ந்துகொண்டு, தங்கள் முதிய அரசர்க்கு அங்ஙனம் சொல்லப்பட்ட யோச

னையைக் கிளர்ச்சி மிக்க சொற்களால் தாங்கிப் பேசினார்கள். அவரும் குடிமக்கள் கருத்துக்கு இணங்க வேண்டுவதாயிற்று; ஏனென்றால், பகைப்படைத்தலைவன் மிரட்டுதலுக்குந் தான் உடன்பட்டால் தன்னுயிர்க்கும் தன் மக்களுயிர்க்குமே தாம் கவலைப்படுவதாக நினைக்கக்கூடும் என்று அவர் அஞ்சினார். ஆகவே, நாகப்பூர் பின்னும் நீண்ட நாள் பாதுகாக்கப் படுவதாயிற்று; கோட்டைக்குள்ளிருந்தபடை சடுதியிற் பாய்ந்து தாக்கினமையால், அரிடமன்னன் படையில் ஒருபகுதி முற்றிலும் முறியடிக்கப்பட்டது; அப்படைத் தலைவனோ அதனாற் பெருஞ் சீற்றம் அடைந்தான்; ஆதலால், பீரங்கிவெடிவைத்து அடித்துக் கொண்டே போய்த் தன்படை வீரரெல்லாரும் தாக்கல் வேண்டுமென்று கட்டளையிட்டான். கோட்டையைக்காத்த படைமக்கள் உயிருக்குத் துணிந்து சண்டை செய்தார்கள்; என்றாலும், அளவுக்கு மிஞ்சின தொகையாயுள்ள பகைவர் படைகளின் முன்னே எத்தகைய ஆண்மையும் போதுமானது அன்று. சுருங்கச்சொல்லுங்கால், நாகப்பூர் பிடிபட்டுவிட்டது; அரசகுடும்பத்தாரைச் சிறைப் படுத்தும் பொருட்டுப் பகைவர் அரண்மனையிற் சென்று மொய்த்துக் கொண்டார்கள். அரசகுடும்பத்தார் தப்பிப் போதற்கான திட்டங்கள் சூழ்ந்து செய்யப்பட்டன! ஆயினும், உங்கள் தந்தையாரும், நீலலோச னரே, நீங்களும் -- அப்போது அவர்கையில் நீங்கள் ஒரு சிறு மகவாய் இருந்தீர்கள் -- நாகப்பூர் கோட்டையைத் தாண்டித் தப்பிப்போகலானீர்கள். முதிய அரசரும் அவர்தம் மூத்தமகளும், அம்மகளின் கணவரும் பலமுகமாய்த் தப்பியோடுகையில் கண்டுபிடிக்கப்பட்டுச் சிறை செய்யப்பட்டார்கள். நல்வினையற்ற குடிமக்களோ தெருக்கள் நெடுக நின்று கொண்டு, வெற்றிச் செருக்கோடுங் குதிரைமேற் சென்ற பகைவர் படைத்தலைவனைத் தாழ்மையோடும் வணங்கி, அவ்வரச குடும்பத்தாரை விட்டு விடும்படி இரந்து கேட்டார்கள். முதலில் அப்படைத்தலைவன் மனம் இரங்க வில்லை: ஆனால், கடைசியாகச் சிறிதளவு மனம் இரங்கினான். கோச்செங்கண் மன்னர் உடனே நாகப்பூரைவிட்டுப் போய்விடுதல் வேண்டு மென்றும், அவர் இந்த உலகவாழ்வை முற்றுந்துறந்து செல்வதாகப் புனிதமும் வணக்கவொடுக்கமும் மிகுந்த சூள் உரைக்கவேண்டுமென்றும், மறுபடியும் அவர் நாகநாட்டு மக்களிடை வருதலும், நாகநாட்டு அலுவல்களில் தலையிடுதலும் ஆகாவென்றும், -- சுருங்கச்சொல்லுமிடத்து,

இனி அவர் உயிர்துறந்தவர் போலாக வேண்டுமே யல்லாமல், நேராகவேனும் பிறர்வாயிலாகவேனும் வேறெவ்வழியாலும் எப்போதும் அவர் தம்குடும்பத்தவரோடு மறுபடியும் சிறிதுந் தொடர்புவைத்தல் கூடாதென்றும் கூறி அப்பொருத்தனைக்கு இசைவதாயிருந்தால் அவரை உயிரோடு விட்டுவிடுவதாகப் புகன்றான். ஆண்மைமிக்க அம்முதிய அரசர் மானக்கேடான அப்பொருத்தனைகளை எரிச்சலுடன் இகழ்ந்து, அதனால் நாம் கழுவேறவுந் துணிந்திருப்பார்; ஆனால், தம் மூத்தமகள் மருமகன் உயிரும் கூட அதனால் இடைஞ்சலுக்கு உள்ளாவதை எண்ணினார். ஆகவே, அப்பொருத்தனைக்கு இசைந்து வெளிப்புறப்பட்டார். அந்தப் படைத்தலைவன் அவர்தம் இளைய மகனை -- நீலலோசனரே உங்கள் தந்தையைப், பிடித்துத் தருபவர்களுக்குப் பரிசளிப்பதாகத் தெரிவித்தான்; ஆனால், நாட்கழிந்ததேயல்லாமல், உங்கள் தந்தையாரைப்பற்றி ஏதும் செய்திவரவில்லை. நாகப்பூரைப் பிடித்துக் கொண்டு, நாக நாட்டார்க்குள்ள பற்றுதலைத் தொலைத்துவிடலாமென்று அப்பகைவர் எண்ணினார்கள்; ஆனால், அவர்கள் எண்ணம் ஈடேறவில்லை. எங்கேபார்த்தாலும் கலகம் தலைகாட்டுவ தாயிற்று -- கடைசியாக அந்தக் காட்டிலுள்ளவர்களைத் தணிவுசெய்யும் பொருட்டு அப்பகைவர் தம் அரசாட்சியில் ஓர் ஒழுங்கு செய்வாராயினர். நாகநாட்டில் உள்ள மேலோரை யெல்லாம் அழைத்து ஒருசபை கூட்டப் பட்டது; இனிமேல் அந்தநாடு தனக்குரிய ஓர் அரசனாலேயே ஆளப்படுதல் வேண்டுமென்றும், முதன்மையான இரண்டு மூன்று நகரங்கள் மாத்திரம் அவர்கள் உறுதிப்மொழிப்படி அரிடமன்னற் குரியவர்கள் செய்யும் வாணிகத்தைக்காக்கும் பொருட்டு அம்மன்னவன் படைமறவராற் காவல்செய்யப்படுதல் வேண்டுமென்றும் அதில் தீர்மானஞ்செய்தார்கள். இதற்கேற்ப ஓர் உடன்படிக்கையும் செய்யப்பட்டது; கோச் செங்கண் மன்னரின் மருமகனார் -- எழில் மிக்க குமுதவல்லி தங்கள் தந்தையார் -- தம் மனைவியரோடும் இதுவரையில் நாகப்பூரி லேயே ஒருவாறு மேன்மையாகவே சிறைபிடித்து வைக்கப் பட்டிருந்தவர் அரசாட்சிக்கு உரியவராக்கப்பட்டார். அந் நிகழ்ச்சிக்கு இரண்டாண்டுகள் பிற்பட்டு -- அதாவது பதினேழு ஆண்டுகளுக்குமுன்னே, குமுதவல்லி, நீங்கள் பிறந்தீர்கள்;

இன்னும், நீலலோசனர் தெரிந்து கொள்ளும் பொருட்டுத், தங்கள் பெற்றோர் இருவரும் ஏறக்குறைய ஒரே வகையான நோயால் இரண்டு ஆண்டுகளின்முன் இறந்து போயின ரென்றும், அப்போது நாகநாட்டுக்குடிமக்களும் அரிட மன்னன் அரசியற்றலைவரும் தங்களையே அந்நாகநாட்டுக்குத் தனி அரசியாக ஏற்று அமைக்கலானார்களென்றும் கூட்டிச் சொல்லுகின்றேன்.

"இனி, என் தந்தையரின் முடிவு எப்படியாயிற்று?" என்று நீலலோசனன் தன்னைத் தோற்றுவித்த தந்தையின் முடிவை யறிய, நிறைந்தபின் யிளமை ஆத்திரத்தோடும் வினாயினான்.

"அவர் நாகப்பூரினின்றும் மறைந்து சென்ற நீண்ட காலத்திற்குப்பின், அவரும் அவர்தம் மகவும் மேற்கணவாய் மலைகளினிடையே செத்துக்கிடக்கக் காணப்பட்டார்களென்று எப்படியோ ஒரு பேச்சு ஊரெங்கும் பரவலாயிற்று; ஆகவே, அவர்கள் அப்படித்தான் அழிந்துபோனார்களென்ற நம்பிக்கை எங்கும் உண்டாயிற்று. ஆனால், உண்மை அங்ஙனமன்று என்பதை, இப்போது நீங்கள் விரைவிற்றெரிந்துகொள்வீர்கள். ஆயினும், முதன்முதல் யான் முதியோரான கோச்செங்கண் மன்னரைப்பற்றிப் பேசல்வேண்டும். அப்பகைத்தலைவனிடம் தாம் செய்து கொண்ட பொருத்தனையின் முறைப்படி அவர் நாகப்பூரைவிட்டுப் புறப்பட்டதும், மேற் கணவாய் மலைத் தொடரின் கண் உள்ள காடுகளில் உள்ளுருவிச் சென்றார்; அப் புனிதமாதவன் தமக்குத் தெரிவித்திருந்த அம்மறைபொருளை இப்போதவர் தமக்குப் பயன்படுத்திக் கொள்வாரானார்; அம்மறைப்பொருளைத் தாம் தெரியலானது பற்றி அவர் திருவருளுக்கு வாழ்த்துரை மொழிந்தார். ஏனென்றால்; இப்பெரிய மண்ணுலகின் குழப்பங்கள் நேராததும், போரிடும் இரைச்சல் நுழையாததும், சூறாவளியானது வானுலகத்தில் தோன்றாததுபோலத் தன்னய விருப்பங்கள் முட்டாததும் ஆன ஓர் இடத்தில் பத்திரமாகவும் இனிதாகவும் ஒதுங்கியிருத்தற்கு ஏற்ற வழியை அவருக்கு அது தந்தது." என்ற மனோகரர் மறு மொழி புகன்றார்.

இங்கே மனோகரர் சிறிதுநேரம் சும்மா இருந்தார்: குமுதவல்லி தன் உள்ளத்திற் பல்வேறுவகைப்பட்டுத் தோன்றிய

புதுமையான உணர்வுகளோடு எண்ணமிட்டுக் கொண்டிருந் தாள்; நீலலோசனனது முகமோ தன் தந்தையின் முடிவைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆத்திரத்தோடும் ஆவலுற்ற குறிப்பைப்புலப்படக்காட்டியது.

## அத்தியாயம் - 15

# செய்திவிளக்கத்தின் முடிவு

*ஆம், நாகநாட்டரசியின் எண்ணங்களும் உணர்வுகளும் புதுமையாகவே இருந்தன; ஏனெனில், மனோகரர் கடைசியாகச் சொல்லிய சொற்களானவை, தான் முன்னே கேள்வியுற்ற சிலவற்றோடு சேர்க்கையுடையவாதலை அவள் உள்ளத்தில் தடுக்கக் கூடாதபடி எழுப்பி விட்டன. தம் சொற்களைச் செவி மடுப்பவர்களுக்குப் பொழுதுபோக்காக இருத்தற் பொருட்டும், அவர்களுள்ளத்தைக் கவருதற் பொருட்டும் கதைசொல்லுவார் வழக்கமாய்ப் பிணைத்துச் சொல்லுகின்றகதைகளைப்போல் நுணுக்கமாய்ச் சூழ்ச்சிசெய்த புதிய கட்டுக்கதைகளைப்போல் அல்லாமல் திகழ்கலை தனக்கும் மீனாம்பாளுக்கும் எடுத்துரைத்த கதை திட்டமாய் நடந்ததனை அடியாகக்கொண்டு உண்மையாய் இருக்கலாமோ? என்று எண்ணினாள். திரும்பவும் மனோகரர் பேசப்புகுந்தமையால், குமுதவல்லி இங்ஙனம் நெடுநேரம் எண்ணமிட்டுக் கொண் டிருக்கக் கூடவில்லை.*

*“ஆம், அம்மாமறைப்பொருளை அவர் தெரியப்பெற்ற தற்காகத்திருவருளை வாழ்த்துதல் வேண்டும்; அம்மாட்சிமை மிக்க முதிய அரசர் மேற்கணவாய்மலைகளின் இடையே அமைதியும் காவலும் வாய்ந்த ஒரு புகலிடம் அடையப்பெற்றார். அங்கே அவரை நான் அவ்வப்போது போய்ப் பார்த்து வந்தேன். இரண்டுமூன்று ஆண்டுகள் கழித்து அவர்தமது நாகநாட்டரசி தம்மவர்க்கே திருப்பிக்கொடுக்கப்பட்ட தென்பதனைத் தெரிந்தபின், மனம் ஆறுதல் எய்தித் தாம் உலகைத் துறந்து வந்ததில் முற்றும் கருத்தொருப்பட்டு, நாகநாட்டலுவல்களில் இனித்தாம் தலையிடுவதில்லையென்று அப்பகைப்படைத் தலைவனுக்குத் தாங்கூறிய உறுதிமொழியை முன்னிலும் மிகுதியாக மதிப்பதற்குத் தீர்மானித்தார். என்னைப் போல்*

நம்பிக்கையுள்ள ஒரு நண்பன் வழியாகச் செய்தியனுப்பினாலுங் கூட ஒருகால் அரிடமன்னன் ஆட்களுக்கு அயிர்ப்பு உண்டாகு மானால் அரசுரிமை திரும்பப்பெற்ற தம்மவர்க்கு இடைஞ்சல் விளையுமாதலால், தம்மருமகன் - குமுதவல்லி தங்கள் தந்தையார் - தமது முடிவைப்பற்றி முழுதுந்தெரியாதிருக்கவேண்டு மென்று அவர் விரும்பினார். தம்மருமகன் நாகநாட்டரசுக்கு உயர்த்த மப்பட்டதுபற்றி அம்முதிய மன்னன் மகிழ்ச்சி அடைந்தன ராயினும், தம் ஒரே மகனையும் அவர் கையேந்திச் சென்ற சிறுமகவையும் பற்றி அளவிறந்ததகவலை யடைய லானார். யான் அம்மேற்கணவாய் மலைநாடுகள் எங்கணும் இயன்ற மட்டும் உசாவிப்பார்த்தேன், சிறிதும் பயன் படவில்லை. பின்னர்ச் சிறிது காலங்கழித்துக் காணாமற்போன இளவரசரும் அவர்தம் மகவும் மலைகளினிடையே மாண்டு போனார்க ளென்னும் செய்தி வந்து எட்டுவதாயிற்று; அப்போது அதனை நம்பிப், போற்றத்தக்க என் நண்பரான அம்முதிய கோச்செங்கண் மன்னருக்கு அதனை அறிவித்தேன். ஆண்டுகள்பல சென்றன -- அம்முதிய அரசர் தாம் கண்டறிந்த அமைதியான அம்மறை விடத்தை விட்டுவரச் சிறிதும் விருப்பம் இன்மையினால் அதன்கண்ணே தாம் இருந்துவர லானார். இன்றைக்குப் பதினெண்டிங்களுக்குமுன் கோச்செங்கண் மன்னர் கடுமையான ஒரு நோயாற் பற்றப்பட்டார்; அதனால் அவருக்கு மருந்து கொடுத்து உதவவேண்டுவது அகத்திய மென்று கண்டேன். அப்பொழுது நீலகிரிநகரத்தில் பல வியப்பான பரிகாரங்கள் செய்து வந்த ஒரு துருக்கப்பெண்பிள்ளை இருந்தனள்: அவளை அம்முதியமன்னர் இருக்குந்தனியிடத்திற்கு என்னோடு அழைத்துச்செல்லத் தீர்மானித்தேன். ஆண்பாலாருள் ஒருவரை விடப் பெண்பால் ஒருவரை இவ்வுதவிக்கு அமர்த்திக் கொள்வது எளிதெனக் கண்டேன்; ஏனென்றால், யான் கட்டாய மாகப் பின்பற்றவேண்டிய சில எச்சரிக்கைகளுக்கு இணங்கும்படி ஒருபெண்பாலைத் தூண்டுவது மிக எளிது. யான் சொல்லுகிற அந்தப்பெண்பாலோடுயான் வழிநடந்துசென்ற போது, தான் திரிந்து கண்ட பலநகரங்களைக் குறித்தும் அவள் அடுத்தடுத்துப் பேசிக்கொண்டுவந்தாள். அவ்விடங்களைப்பற்றிப் பல்வேறு சிறு கதைகளும் சொல்லிக்கொண்டுவந்தாள். இங்ஙனம் பேசிக் கொண்டு வருகையில் அப்போது மேற்கரையை ஆண்ட **சாக்கியதர்மன்** என்னும் அரசனைக் குறிப்பிட்டு பேசலானாள்; அவ்வரசரின் அன்பும் உருக்கமும்மிக்க தகைமைக்கு ஓர்

ஒப்பனையாக, அவர் தமது பாதுகாப்பிற் குழவிப்பருவத்தே விடப்பட்ட ஓரிளைஞனைத் தமக்கு மகனாக உரிமைப் படுத்திக்கொண்டதனை எடுத்து மொழிந்தாள். அவ்வறிவோள் மேலுஞ் சொல்லிய சில செய்திகளால் யான் ஓர் ஐயுறவு கொள்ளுதற்கு இடம் பெற்றேன்; ஆனாலும், அதனைக் கோச்செங்கண் மன்னர்க்குக் கூறிற்றிலேன்; ஏனெனில், ஒருகால் அதனை நம்பி அவர் பின்னே ஏமாற்றம் அடைந்தால் என்செய்வதென்று அஞ்சினேன். அப்பெண்மகள் செய்த பரிகாரத்திற்கு நன்றி செலுத்துதல் வேண்டும். அரசர் நோயினினின்றுந் தேறி எழுந்தார். அதன்பின் எனக்குச் சிறிது ஒழிவுநேரங் கிடைத்தவுடன், அம்மேற்கரைமன்னர்க்கு ஒரு திருமுகம் எழுதி அதனை ஒருவேவுகாரன்கையிற் கொடுத் தனுப்பித்தாம் உரிமைபடுத்திக்கொண்ட மகனைப்பற்றி அவர் அறிந்தவையெல்லாம் எனக்குத் தெரிவிக்கும்படி மன்றாடிக் கேட்டேன் -- அதனோடு, எம்மிருவர்க்குள்ளும் நடக்கும் இச்செய்தி பிறர் அறியாவாறு தம்முள்ளே மறைத்து வைக்க வேண்டுமென்றுங் கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன். யான் வேண்டிக்கேட்ட அவ்வரலாறுகளை எனக்குத் தெரியப் படுத்துவதில் அவ்வரசர் சிறிதுங்காலந்தாழ்க்கவில்லை; யான் முன்னமே கொண்டிருந்த ஐயுறவை அவை முற்றும் உறுதிப்படுத்தின. ஒருநாள் சாக்கியநர்மர் வேட்டம் ஆடவெளிச் சென்றார் -- இது நாகப்பூர்கோட்டை பிடிப்பட்ட சிலவாரங் களுக்குப் பின் நிகழ்ந்தது -- அப்போது அவர், வறுமையால் வாடிப்போனாலும் அழகிய தோற்றம் வாய்ந்த ஓர் இளைஞன் தன்கையில் ஓர் இளங்குழவியை வைத்துக்கொண்டு ஓர் யாற்றங் கரையில் அமர்ந்திருக்கக்கண்டார். நீங்கள்தாம் அக்குழந்தை நீலலோசனரே! அவ்வறிய ஆடவனே உங்கள் தந்தை!" என்று மனோகரர் தொடர்பாகச் சொல்லிவந்தார்.

"இவையெல்லாம் எனக்குப்புதியனவேயாகும்!" என்று நீலலோசனன் வியந்துரைக்கையில், அவன்கன்னங்களிற் கண்ணீர் பெருகிவடிந்தது. "ஐயோ! என் எளிய தந்தையே!"

மிகுந்த மனவுருக்கத்தோடும் இரக்கத்தோடும் கூடிய குரலுடனும் பார்வையுடனும் மனோகரர்பின்னுந் தொடர்ந் துரைப்பாரானார். "அந்தமேற்கரை மன்னர் தங்கள் தந்தை யாரின் துன்பமுடிவைத் தங்கட்கு இதுகாறுந் தெரியாமல் மறைத்து

வைத்தது நிரம்பவும் அன்பான எண்ணத்தினாலே தான். ஆயினும், இப்போது நீங்கள் ஒவ்வொன்றுந் தெரிந்து கொள்ள வேண்டுவது இன்றியமையாததாயிற்று. நீங்கள் நீலகிரி நகருக்கு வந்ததும், இவ்வரலாறுகளையெல்லாம் என் வாயினின்றுந் தெரியப்பெறுவீர்களென்பது **சாக்கியதர்மருக்குத்** தெரியும். ஆகவே, அக்கதையை முற்றுஞ் சொல்லி விடுகின்றேன். யான் கூறியபடியே,சாக்கிய தருமர் அந்த அழகிய தோற்றம் வாய்ந்த இளைஞன் தன் இளங்குழவியின் முகத்தைத் துயரத்தோடும் பார்த்துக்கொண்டு ஓர்யாற்றங்கரைமேல் அமர்ந்திருக்கக் கண்டார்: நிறைந்த இரக்கத்தோடும் வினா வினார். அப்போது, ஐயோ! -- நீலலோசனரே, ஒரு துயரமான அறிக்கையைக் கேட்டதற்கு ஆயத்தமாய் இருங்கள் -- அவ்விரங் கத்தக்கஉயிர் அறிவிழந்திருத்தலை அவ்வரசர் கண்டு கொண்டார்.''

இப்போது நீலலோசனன் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியோடிற்று; குமுதவல்லியும் அங்ஙனமே அழுதாள். வணங்கத்தக்க மனோகரரும் பெரிதும் மனம் உருகினார். திரும்பவும் அவர் கதையை துவங்குவதற்கு முன் சிலநேரஞ் சென்றன.

முடிவாக அவர் தொடர்ந்துரைப்பார், ''இரங்கத்தக்க அவ்விளைஞனையும் குழந்தையையும் மேற்கரையிலுள்ள தமது அரண்மனைக்குக்கொண்டு போகும்படி அவ்வரசர் கட்டளை யிட்டார்; புதியராய்வந்த அவ்விருவரையும் அங்கே எல்லா அன்போடும் நடத்தினார்கள். என்றாலும், நீலலோசனரே, தங்கள் தந்தையின் வாயிலிருந்து அவர் ஏதும் வெளிப்படுத்தக் கூடவில்லை: அவ்விளைஞர் தமதறிவை இழந்து வரவர உயிர் துறக்கும் நிலையை அடையலானார். பின்னுஞ் சிலநாட் கழித்துத் தாங்கள் பெற்றோர் அற்ற பிள்ளையாயினீர்கள்! உங்களிரு வரையும் இன்னா ரென்று அறிவிக்கத்தக்க அடை யாளம் ஏதும் உங்கள் தந்தையின் உடுப்புகளிற் காணப்பட வில்லை; நாகப்பூரில் நடந்தவை எல்லாம் நிலைவா மின்றிச் சிறுபேச்சாய் மேற்கரை நகரில் தெரிந்தமையால் சாக்கிய தர்மரது அரண்மனையில் இறந்தவர் நாக நாட்டின் இளவரசர் தாமோ என்னும் ஐயுறவுக்கும் இடம் உண்டாகாதிருந்தது. அங்ஙனமிருந்தாலும், அப்போது நீங்களும் உங்கள் தந்தையும் அணிந்திருந்த ஆடைகளை அவர் காப்பாற்றி வைத்திருந்தார்; அவ்வாடைகளோ இறந்துபோனவர்

தாழ்ந்த தரத்தில் உள்ளவரே என்று குறிப்பிட்டன. அவ்வரசர் தங்களை வளர்த்து வந்தார் -- எவ்வளவு நன்றாகவும் எவ்வளவு மென்மை யாகவும் என்பதனைத் தாங்களே மிகவும் நன்றாய் அறிவீர்கள்!"

"அவர் எனக்கு ஒரு தந்தை போலிருந்து வருகிறார்!" என்று நீலலோசனன் நன்றியறிவோடும் வியந்துரைத்தான். "என் பெற்றோர்கள் எனது குழவிப்பருவத்திலேயே இறந்து போயினார்களென்று அவர் எப்போதும் யானறியச் சொல்லி வந்தார்; அதைப்பற்றி நான் கேட்டபோதெல்லாம் அவர் என் அதனை நழுவவிட்டு வந்தார் என்பதை இப்போது நான் மிகவுஞ் செவ்வையாக அறியப்பெறுகின்றேன். ஆம் மிக்க அன்பினாலும் ஆழ்ந்து ஆராய்ந்த எண்ணங்களாலுமே அவர் அங்ஙனஞ் செய்யலானார்!"

"அவ்வரலாறுகளை யெல்லாம், பொதித்துவைத்த அவ்வாடைகளோடும் அம்மேற்கசையரசர் எனக்கு அனுப்பி வைத்தார்: இவைகளெல்லாவற்றையும் யான் கோச்செங்கண் மன்னர்க்குத் தெரியப்படுத்தினேன். போற்றத்தக்க எண்முதிய நண்பர் அவ்வாடைகளைப்பார்த்ததும் உடனே அவற்றை தெரிந்துகொண்டார்; பல ஆண்டுகளுக்குமுன்னே அரிட மன்னன் படைமறவர் எதிர்த்துச் சண்டை செய்தபோது நாகப் பூரிலிருந்து அவ்விளரசன் தங்களைக் கையிலெடுத்துக்கொண்டு தப்பிஓடுங்காற்பூண்டிருந்த இழிந்த ஆடைகளே அவை. இங்ஙனமாக, நீலலோசனரே தங்கள் பிறப்பைப்பற்றி இனி ஏதும் ஐயம் இல்லையாய் ஒழிந்தது; நீங்கள் பௌத்தராகவும் பௌத்த சமயத்திற்கு உரியராகவும் வளர்க்கப்பட்டு வந்தீர்கள். என்றா லும், உண்மையில் தாங்கள் நாகநாட்டின் இன அரசரேதாம்; தாங்கள் பிறந்தகாலத்தில் தங்கள் நெற்றியின்மேல் திருநீறு அணியப் பட்டிருந்ததும் உண்மையேதான். போற்றத்தக்க உங்கள் பாட்டனார் தங்களைத் தம்கைகளாற் றழுவிக்கொள்ள ஆவலித் தார்; ஆனாலுத், தாம் உயிரோடிருக்கும்போது தங்கள் பிறப்பைப்பற்றிய மறைபொருள் தங்களுக்கு வெளிப்படுத்தப் படுமாயின் நேராமல் தடுப்பதற்குத்தாம் எண்ணிய நிகழ்ச்சிகள் விளையவுங் கூடுமென அவர் அஞ்சினார். அரிட மன்னனைச் சேர்ந்தவர்களோ நீண்டநாட்கு முன்னே அவர் இறந்து போனாரென்று நம்பினார்கள்; அவர் உயிரோடிருக்கிறார்

என்பது அவர்களுக்குத் தெரிந்தால், அவருடைய செல்வாக்கு நாகப்பூர் அரண்மனையில் இன்னும் ஏதேனுந் தொல்லையை உண்டுபண்ணக் கூடுமென்று அவர்கள் எண்ணலாம்; அதனால் தன்பேர்த்தியின் -- அழகிய குமுதவல்லி தங்களின் -- ஆளுடனார் அத்தனை நீண்டகாலமாய் இருந்து வந்த அதே இன்பஉறையுளில் தாங்கள் போய் ஒதுங்கியிருக்கலா மன்றோ? நீலலோசன, தங்களைப்பற்றியே வென்றால், சைவசமயத்தைத் தழுவுதலாகிய அவ்வழி ஒன்றுமே தாங்கள் அப்பெரும்பேற்றைப் பெறுதற்குத்தக்கவராகச் செய்யுமாதலால், தாங்கள் அம்மறைப்பொருளைத் தெரியும் பொருட்டு அதற்கு ஏற்றபடியாக நடந்து கொள்வீர்களென்று அவர்நம்பிக்கை வைத்திருந்தார். தங்களுக்கு அணுக்கமாயும் நலந்தருவனவாயு முள்ள செய்திகளாயிருப்பதோடு, எழுத்தில் எழுதித் தொவிக்கக் கூடாத அத்துணைச்சிறந்த மறைபொருளாயும் இருந்தமை யாலே, இவைகளையெல்லாம் தாங்கள் என்வாயினின்றே கேட்டுத்தெளியும்படி தாங்கள் இருவருமே இந்நீலகிரிநகருக்கு வருகவென வேண்டி என்னுடைய ஆள் **சந்திரனி**டத்தில் திருமுகங்கட்கு கொடுத்தனுப்பினேன்." என்று மனோகரர் தொடர்ந்துரைத்தார்.

"மாட்சிமைமிக்க மனோகரரே, அம்மோதிரங்களையும் கூட அனுப்பியதேன்?" என்று குமுதவல்லி வினாவினாள்.

"ஒன்றை யொன்றொத்த மோதிரங்களைத் தங்களிருவர்க் குந் தனித்தனியே யான் அனுப்பியதன்நோக்கம் இரண்டுண்டு. முதலாக, என் ஏவலாள் சந்திரன் இவ்வழிப்பயணத்தினின்று திரும்பி வீட்டுக்குவரும்போது, தற்செயலாய் அவனுக்கு ஏதேனும் இடர்நேர்ந்தால், இம்மோதிரங்களைக் கொண்டு வந்து காண்பிப்பவர்களே என்னுடைய கடிதங்களைப் பெற்றவர் களாயிருக்க வேண்டுமென்னும் உண்மை என் உள்ளத்திற்கு இசைவாகக் காணப்படும்; அதனால், கரவாடமான மக்கள் செய்யும் சூழ்ச்சிகளில் அகப்பட்டு ஏமாறுதற்கும் இடம் உண்டாகாது. அம்மோதிரங்களை உங்களுக்கு யான் அனுப்பிய தற்குள்ள எனது இரண்டாவது காரணத்தை சிறிது விரித்துச் சொல்ல வேண்டுவதாயிருக்கின்றது. யான்முன்னமே கூறியபடி, கோச்செங்கண் மன்னர் இறந்தபின், அவ்வுயர்ந்த மறைப் பொருளை வைத்திருப்பவன் யான்ஒருவனே யானேன்:

ஆனாலும், அதனை முழுதும் நான்ஒருவனே வைத்திருப்பது எனக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை; ஏனெனின், எனக்கோ வாழ்நாள் முதிர்ந்துவிட்டது, என்னையும் எந்த நேரத்திலேனும் காலன்வந்து பற்றிக்கொண்டு போகக்கூடும். ஆனதனால், சிறிதுங் காலந்தாழாமல், அம்மறைப் பொருளைப் பற்றிய எல்லாக்குறிப்புகளையும் முற்றும் விரித்து ஏட்டில் வரைந்து வைத்தேன். மற்றொருமுறியில் யான் உயிரோடிருந்து என்வாயாற் சொல்லவேண்டுமென்று என் ஐயன் கொண்ட திருவுளப்பாங்கின்படியே அதனைப்பற்றிய நீண்டவரலாற்றி னைப் பொறித்து வைத்தேன். இம்முறிகளைச் செவ்வையாய் உறையிலிட்டு முத்திரை வைத்து, யான் இறந்த பிறகு என் குறிப்புகளைக் கொண்டுநடத்துவோரிடத்து, ஒரு குறிப்பான தன்மை வாய்ந்து ஒன்றையொன்றொத்த இரண்டுமோதிரங் களைக் கொண்டுவந்துகாட்டும். இருவர்மட்டுமே இக்கட்டைத் திறந்து பார்க்கவேண்டுமென்று அதன்மேற்கற்பித்தெழுதித் தனியேயுள்ள என் ஏடுகளினிடையே அதனை வைத்து விட்டேன். நீங்கள் வருவதற்குமுன்னமே என்னை இங்கிருந்தும் அழைத்துக் கொள்வது இறைவனுக்குத் திருவுளமானால், நான் சொல்லிக் கொண்டு வந்த உண்மைகளையேயன்றிச் சாலப் பெரிய அம்மறைப்பொருளினையும் உங்களுக்குத் தெரிய வைக்கும்படி செய்யவேண்டிய ஒவ்வோர் ஏற்பாட்டினையும் அங்ஙனம் முன்னதாகவே மிகவுங் கருத்தாய்ச் செய்து வைத்தேன். என்றாலும், நீலலோசனரே, அப்போதும் அம்மறை பொருள் உங்களுக்குத் தெரிவிக்கப்படமாட்டாது; நான் முன்னமே குறிப்பித்திருக்கிற வகைப்படி நீங்கள் அத்தூய மறைப்பொருளைப் பெறுதற்கேற்ற தகுதியைத் தங்களிடம் வருவித்துக் கொண்டாலன்றி, அத்தனித்த முறிச்சீட்டுக் குமுத வல்லி கண்களுக்கு மட்டுந்தெரியும்படி வரைசெய்து வைக்கப் பட்டது.'' என்று மனோகரர் விடை பகர்ந்தார்.

பின்னர்ச் சிறிது நேரம் மனோகரர் பேசாதிருந்தார் நீலலோசனனோ சிலநேரம் ஆழ நினைத்துப் பார்த்துப் பணிவான குரலிற் பேசலானானான். "போற்றத் தக்க என் நண்பரே, தமது குழவிப்பருவந்தொட்டப் பயிற்றப்பட்டு வந்தமையால் தமக்கு நன்றாய்த்தெரிந்தான். ஒருசமயத்தைக் கைவிட்டுத்தெரியாத மற்றொன்றைக் கைப்பற்றுவது எவர்க்கும் எளிதான செய்கை அன்று. ஆனதனால், எனக்குத் தெரியாத

தான இச்சமயக் கொள்கைகளை எனக்கு எடுத்து அறிவுறுத்துக. யான் குழந்தையாயிருந்த போது எனது நெற்றியின் மேல் இடப்பட்ட அடையாளத்திற்கு உரியதான அக்கொள்கை என் மனச்சான்றுக்குப்பொருத்தமாகக் காணப்படுமானால், என் பாட்டனார் விருப்பப்படியும், தகவுமிக்க மனோகரரே தங்கள் விருப்பப்படியும் அதனைத்தழுவிக்கொள்வேனென்று உறுதி யாய் நம்புங்கள்.''

"அரசி, நாங்கள் இருவேமும் சிறிதுநேரம் ஒருங்கு தனித்திருக்கும் படி விடை தாருங்கள். தங்கள் மைத்துனர் சொல்வது செவ்விதாய் இருக்கின்றது; அவர் முற்றிலுந் திரும்பிவிடுவாரென்பதில் யான் சிறிதும் ஐயமுறவில்லை. மாட்சிமைதங்கிய தாங்கள் இங்கே திரும்பிவரும்படி சிறிது நேரத்தில் கேட்டுக்கொள்ளப்படுவீர்கள்.'' என்று அம்மலைய வியாபாரி கூறினார்.

குமுதவல்லி அங்ஙனமே அவ்வறையைவிட்டுச்சென்று, தானிருக்கும் அறைவரிசைக்குள் தனித்திருக்கலானாள். தான் கேட்டவைகளைப் பற்றியெல்லாம் ஏதுந்தடையின்றித் தனியே யிருந்தது நினைத்துப்பார்ப்பதற்கு அவள் விரும்பினாள்; ஆகவே, கீழுள்ளதோட்டத்திற்கு இறங்கிப்போய் அங்கே அயர்வு தீர்ந்திருக்கும்படி அவன் தன்தோழிமார்க்குக் கற்பித்தாள். அங்ஙனமே அவர்கள் அவனை விட்டுப்போனபிறகு அவள் சாய்மனைக்கட்டில் ஒன்றன்மேல் அமர்ந்து எண்ணமிடு வாளானாள். முடிவாகப்பார்க்குங்கால், அவ்வறிவோள் சொல்லியகதை உண்மையோடு தெளிவாய்த் திட்டமாய் ஒத்திருந்தது; ஏனென்றால், இப்போதுதான் மனோகரர் வாயினின்று பிறந்த வரலாற்றின் ஒரு பகுதியோடு அது மிகவும் வியக்கத்தக்கவாறாய்ப் பொருந்தியிருந்தது. ஆம், திகழ்கலை என்பவள் கோச்செங்கண்மன்னர் முகத்தைப் பார்த்தவளே யாவள்! நாகநாட்டரசியலினின்று நீங்கிய அம்மன்னர் அத்தனை ஆண்டுகளாகத் தாம் புகலிடமாய்க்கொண்டிருந்த அவ்வின்ப நிலத்தினுள்ளே அவள் சென்றதுண்டு! தான் திகழ்கலையைத் தற்செயலாய் எதிர்ப்பட்டதும், இன்னும் மனோகரர் வாயினின்று முழுதுந் தனக்குத் தெரிவிக்கப்பட வேண்டுவதாய் உள்ள புதுமையான மறையின் உட்பொருளைத் தான் அங்ஙனமே முன்னறியலானதும் புதுமையல்லவோ வென்று குமுதவல்லி

தனக்குள் நினைப்பாளானாள். பின்பு குமுதவல்லியின் நினைவுகள் வேறொருமுகமாய்த்திரும்பவே, அவ்விளைஞனான நீலலோசனன் கள்வர் தலைவனான நல்லானின் வேறான ஒருவனாவன் என்பதை நினைத்துச் சொல்லுக்கடங்காக் களிப்படைந்தாள்; அவனைப்பற்றி அத்தனை பொல்லாங்கான முடிபுக்குத் தான் சடுதியில் வரலானதை நினைந்து அவள் துயரமுற்றாள். ஆனாலும், நேற்று மாலையில் மீனாம்பாள் படுக்கையின் அண்டையில் அவனைத் தான் காணலானது என்னையென்று அவள் மறுபடியும் வியப்புற்றாள்.

இவ்வாறு குமுதவல்லி எண்ணமிட்டுக்கொண்டிருக் கையில் அவ்வறைக்கதவை வந்து எவரோ தட்டுவாரானார்; அவ்வரசி அவ்வாளை உள்ளே வரும்படி கட்டளையிட்டாள்; இளையனான சந்திரன் அவளெதிரே சென்று நின்றான்.

## அதிகாரம் - 16

# குமுதவல்லியும் நீலலோசனனும்

கதவைத்தட்டி முன் அறிவித்துவந்தமையால் குமுத வல்லியிருக்கும் அறைக்குச் **சந்திரன்** இங்ஙனம் காணவந்ததில் மதிப்புக்குறைச்சலேனும் தகாததேனும் ஏதும் இல்லை; ஏனெனில் பௌத்தர்களில் உள்ளதுபோலப் பெண்மக்கள் தனித்திருக்க வேண்டுமென்னுங் கடுமையான வழக்கம் மேற்கணவாய் மலைநாடுகளில் உள்ள சைவசமயத்தவர்களில் இல்லை. என்றாலும், சந்திரன் அங்கேவந்து வழக்கத்திற்கு மாறானது போல் குமுதவல்லியினுள்ளத்திற் படுவதாயிற்று. என்னை யெனின், மாட்சிமை தங்கிய மனோகரர் தனக்குச் செய்தி அனுப்பியிருந்தால் அவ்வீட்டுமுதியோள் வாயிலாகவாவது அல்லது வேறோர் ஏவற்காரி வாயிலாகவாவது அனுப்பி யிருக்க வேண்டுமென்பது அவளுக்குடனே தோன்றுவதாயிற்று. மனோகரரோடு தாம்பேசிக்கொண்டிருந்த போது தான் சந்திரனைப்பற்றிக் கொண்ட ஐயுறவை உறுதிப் படுத்தத்தக்கது ஏதும்நேரவில்லை; அவனது நம்பிக்கைத் தனத்தைப் பற்றி மனோகரர் அவனைப் புகழ்ந்தே பேசியிருக்கின்றார். வேண்டி யழைத்த மனோகரரின் திருமுகங்களையும், மோதிரங்களையும் ஒவ்வொருவரிடமும் அவன் சேர்ப்பித்த காரணத்தாலே, தன்னை நோக்கியும் பெருமான் நீலலோசனனை நோக்கியும் அவர் அவளிடம் நம்பி ஒப்புவித்த செய்திகளை அவன் நேர்மையுடன் கொண்டுவந்து செலுத்தினானென்பதும் நன்கு விளங்கிற்று.

இவ்வெண்ணங்கள் குமுதவல்லியின் உள்ளத்தில் விரை விற் றோன்றிமறைந்ததும், அரசியாயிருக்கும் தனது உயர்ந்த நிலைமைக்கும், ஏவலனாயிருக்கும் அவனது நிலைமைக்கும் ஏற்றபடியாகச் சந்திரனிடம் இனிய நோக்கத்தோடு பேச வேண்டுமென அவள் முன்னிலையிலும் பார்க்கத் தீர்மானஞ்

செய்தாள். ஆனதனால், அந்தஒழுங்கின் அளவுக்கு, அவள் அவன் மிகவுந் தாழ்மையோடும் பணிவோடும் தொலைவிருந்தே செய்த வழிபாட்டை ஏற்றுக்கொண்டனள்; தான் பேசுதற்கு அவளுடைய கட்டளையை எதிர்பார்த்தவனாய்ப் பணிவோடும் அவன் சிறிது தொலைவில் நிற்கையில், "சந்திரா, நீ சொல்ல வேண்டியதைச்சொல். நீ இங்கேவந்த காரணம் யாது?" என்று அவள் வினவினாள்.

"அருள்நிறைந்த அரசி," என்று அவ்வேலவன் விடைபகர்வானாய் மறுபடியுந்தாழப்பணிந்து, "முதலாவது, பெருமாட்டியாரிடம் அடியேனது வணக்கத்தைத் தெரிவிப்பதற்கு ஏற்ற ஒரு நேரத்தை ஆவலோடு எதிர்பார்த்திருந்தேன்; இரண்டாவது, அடியேன் கேட்கவிரும்புஞ் சிலகேள்விகளுக்குப் பெருமாட்டியார் அருள்கூர்ந்து விடையளிப்பீர்களாயின் மனமகிழ்ந்தவன் ஆவேன்." என்றான்.

அவன்என்ன கேள்வி கேட்கக்கூடுமென்று வியப்புற்றவளாய், "நல்லதுசொல் சந்திரா." என்று கூறினாள் குமுதவல்லி.

"நாகப்பூரிலிருந்தபோது பெருமாட்டியார் அவர்களிடம் அடியேன் செய்தி கொண்டுவந்து சேர்ப்பித்தவகையைப்பற்றி என் உயர்குணத்தலைவரிடத்தில் அரசியார் உயர்த்தி நயப்பாய்ப் பேசியிருப்பீர்களென்று அடியேன் எண்ணிக்கொள்ளலாமா? நான்எடுத்துவந்த திருமுகத்தில குறித்த நாளையும், நான் நாகப்பூரிலுள்ள தங்கள் அரண்மனையில் வந்து சேர்ந்த நாளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வழியில் இடையேயான் தங்கியிருக்கக் கூடுமா என்பதைத் தாங்கள் தீர்மானம் பண்ணிக் கொண்டிருக்கலாம். தாங்கள் மலைநாட்டிற்குள் வரும்போது எவர்க்குந் தெரியாதபடி வரும்படிக்கும், எவரும் உறுத்துப் பாராத ஒருபாதையை தொடர்ந்துவரும்படிக்கும் யான் தங்களை வேண்டிக்கொண்டதெல்லாம் என்தலைவர் கற்பித்த வண்ணம் யான் செய்தனவேயாகும் என்பதை அரசியார் மாட்சிமைமிக்க என் தலைவர் வாயினின்றே வேண்டிய அளவுக்குக்கேட்டுத் தெளிந்திருப்பீர்கள்." என்று அவ்வேவற் காரன் கூறினான்.

"உன் தலைவரோடு சிறிது நேரத்திற்குமுன் யான் பேசிக்கொண்டிருந்தபோது இவைகளைக்குறித்து நாங்கள் உண்மையாகவே ஏதும்பேசவில்லை, சந்திரா; ஆனாலும்,

மாட்சிமிக்க மனோகரர் எனக்குத் தெரிவித்தவைகளிலிருந்து, யான் நீலகிரி நகரத்திற்கு வரும் பயணம் மிகவும் மறைவாக இருக்கவேண்டுமென்பதே முதலிலிருந்து அவரது விருப்பமாகு மென்பதை யான் ஐயமறத் தெரிந்துகொண்டேன். அதுவேயு மன்றி, யான் அரசியல்நிலைக்கு உரியவள் என்பது புலப்படாமல் செவ்வையாய் மறைக்கப்படவேண்டுமென்பதும் அவரெழுதிய திருமுகத்தில் அறிவுறுத்தப்பட்டிருந்ததை யான் நினைவு கூர்கின்றேன்." என்று நாகநாட்டரசி மறுமொழி புகன்றாள்.

"அப்படியானால், எல்லாவகையாலும் அரசியார் அவர்கள், என்னிடம் நம்பி ஒப்புவிக்கப்பட்ட சிறந்த செய்தியைத் தங்களிடம் கொண்டுவந்து யான் சேர்ப்பித்த வகையில் மனநிறைவடைந்திருக்கிறீர்கள்?" என்று சந்திரன் மொழிந்தான்.

"உனக்கு இகழ்ச்சி உண்டாகும்படி பேசுதற்கு ஏதும் காரணம் இல்லை என்பதைச் சந்திரா, உன் சொற்களிலிருந்தே நீ முன்னமே தெரிந்திருக்கலாமே. எனினும், என்னிடமிருந்து இவ்வுறுதிமொழிகளைக் கேட்கும் பொருட்டு நீ ஏன் இவ்வளவுகவலையுள்ளவனாய்த் தோன்றுகின்றாய்?" என்று அவ்வரசிவினாயினாள். ஓர் இமை கொட்டும் நேரம் குமுத வல்லி அவ்வேலவன் முகத்தை ஆராய்ந்து நோக்கினாள்: ஏனென்றால் அவனைப்பற்றி அவள் கொண்ட ஐயம் மறுபடியும் அவள் உள்ளத்தில் வலிவுற்றுத் தோன்றியது.

"அதன் விளக்கத்தை உடனே சொல்லிவிடுகின்றேன்." என்று முழுதுங்கரவற்றவெள்ளையுள்ளம் உடையவன்போல் அவ்விளைஞன் விடை கூறுவானானான்: முதலாவது, ஒவ்வொரு வரும் அரசியாரின் நல்லெண்ணத்தைப்பெறுதற்கு விரும்புவர்; இரண்டாவது, யான் பிறந்தது முதல் என்னை வளர்த்து, யான் தாய் தந்தையரை இழந்திருந்த காலத்திலும் என்னைப் பாதுகாத்துவரும் அருள் நிறைந்த என் தலைவர் மனோகரருக்கு என்னாலியன்ற எல்லாவகையிலும் இசைவாக நடந்துகொள்ள வேண்டுமென்பதே எனது பெருநோக்கம்; மூன்றாவது, பெருமூதாட்டி தாங்கள் இவ்விடத்தேவந்து சேர்ந்த நேரத்தில் தாங்கள் சொல்லிய சில சொற்களிலிருந்து, வரும் வழியில் தாங்கள் இடர் உற்றீர்களோ வென்று அச்சம் அடைந்தேன்."

"ஆ! இப்போது நினைவு கூர்கின்றேன்! யான் என் குதிரையிலிருந்து கீழ் இறங்குகையில், சில சிறு நிகழ்ச்சிகளைப் பற்றி யான் தற்செயலாய்ப் பேசினது உண்மைதான்; ஆனால், அவை கடந்து போய்விட்டமையால், இனி அவற்றைக்குறித்துப் பேசுவதிற் பயன் சிறிதுமில்லை." என்று குமுதவல்லி மொழிந்தாள்.

திரும்பவும் அவ் ஏவற்காரன் சொல்லுவான். "ஆம், பெருமாட்டி, தங்கள் திருவாயினின்று அப்போது தோன்றிய சொற்கள் அதுமுதல் என் நினைவைவிட்டு அகலாதிருந்தன; ஏனென்றால் யான் முன்னமே சொல்லியபடி அவை சில இடர்களைக் குறிப்பிட்டன வென்று அஞ்சினேன்; நாகப் பூரிலுள்ள தங்கள் அரண்மனையில் தங்கள் வரவுபார்த்து யான் காத்திருக்கப் பெற்றபோது, அரசியார்க்கு யான் தெரிவித்துக் கொண்ட குறிப்புகள் ஒவ்வொன்றிலும் அசட்டை யினாலாவது மறதியினாலாவது எதனையேனுஞ் சொல்லாமல் விட்டிருந்தே னாயின் அஃது என் மனத்தை நிரம்பவும் புண்படுத்துவதாகும்."

இங்ஙனம் **சந்திரன்** பேசியபோதெல்லாம், **குமுதவல்லி** சாய்மணைக் கட்டிலில் அழகியதாய் அரைவாசி சாய்ந்திருந்த படியே கீழ்நோக்கியபார்வையோடு இருப்பதுபோற் காணப் பட்டாள்; ஆனாலும், குற்றம் ஏதும் அறியாமையால் உண்மையான நெஞ்சத்தோடும் அவன் பேசினானோ, அல்லது குமுதவல்லி வழியில் அடைந்த இடர்களுக்கு இவன் உடந்தை யாயிருந்ததைப்பற்றி ஐயுறப்பட்டிருந்தால் அவ் ஐயத்தின் அளவை ஆழ்ந்தறியும் பொருட்டுக் கரவாயும் சூதாயும் நடந்துகொண்டானோ என்பதை அவ்விளைய ஏவற்காரன் முகத்தினின்று கூடுமானாற் கண்டறியும் வண்ணம் உண்மையில் அவள் கருத்தாய் நோக்கிக்கொண்டிருந்தாள். என்றாலும், அவனது பார்வையில் அவள் கொண்ட ஐயத்தை உறுதிப் படுத்தத்தக்கது ஏதுமில்லை -- எவரோ ஒருவரைப்பற்றி விழிப்பா யிருக்கும்படி இவளுக்குக் கற்பித்து மீனாம்பாள் மிகமெல்லச் சொல்லிய பெயர் மெய்யாக இவனுடைய பெயரேயாகு மென்னும் நம்பிக்கையைத் திண்ணமாக்குவதற்கு இவனது முகத்தில் ஏதொன்றுங் காணப்படவில்லை. மற்று அவனுடைய சொல்லிலும் குறிப்பிலும் உண்மையை உருக்கத் தோடுபேசுந் தன்மையே காணப்பட்டது. இன்னும், ஏவற் காரணயிருப்பவன்

ஒருவன் தன்கடமையைச் செவ்வனே செய்து முடித்ததைப் பற்றியும், நம்பிக்கைக்குரிய ஒரு செய்தியைக் கொண்டு போகும்படி அமர்த்தப்பட்டக்கால் தன்னை அங்ஙனம் அமர்த்திய அன்புள்ள தன்தலைவரும், அச்செய்தியைத் தான் நம்பிக்கையோடு கொண்டுபோய்ச்சேர்க்க அதனை ஏற்கும் அரசியாரும் முழுதும் மனம் உவக்கும்படி தான் நடந்து கொண்டதைப்பற்றியும் அவன் தான் உறுதியாகத் தெரிந்து கொள்ள விழைவது இயல்பேயன்றோ?

"வழியில் எத்தகைய இடர்கள் எனக்கு நேர்ந்தனவாயினும், முடிவாக அவை என்னுடைய அலுவல்களை பழுதாக்கத்தக்க தொன்றையும் உண்டாக்கவில்லை. ஆதலால், அவற்றால் மனத் திற்கு இசையாத அனைத்தையும் நான் மறந்துவிடுவதற்கு மிகவும் விருப்பம் உள்ளவளாய் இருக்கிறேன். சந்திரா, உன்னைச்சுட்டி யான் சொல்லக்கூடிய குற்றம் ஒன்றும் இல்லை. மேலும், உன் தலைவர் உனது நடக்கையைப்பற்றி மகிழ்ந்திருப்பதை நீ அறிந்தால், அஃது உனக்கு இன்பந் தருவதாயிருத்தலால், சிறிது நேரத்திற்குமுன்னே உன் பெயரைச் சொல்லுகையில் தமக்கு நம்பிக்கையுள்ள ஏவற்காரன் என்று உன்னைக் குறிப்பிட்டு உன்தலைவர் கூறியதை யான் உனக்குச்சொல்லக் கடமைப் பட்டிருக்கின்றேன்." என்று குமுதவல்லி விளம்பினாள்.

"அருள் மிக்க அரசி, தாங்கள் கூறிய இவ்வுறுதி மொழிக்காக எனது வணக்கத்தைச் செலுத்துகின்றேன். எனது வாழ்நாளில் யான் நிறைவேற்றக்கருதி யிருப்பது ஒரே ஒருநோக்கந்தான் - அஃதென்னென்றால், யான் தாழ்ந்த ஓர் ஆளாய் இருப்பினும், எனது கடமையைச் செவ்வனே செய்து, என்போல் மக்களாய்ப்பிறந்தவர்களின் நல்லெண்ணத்தை யான் பெற்றுக்கொள்ளுதலேயாம். பெருமாட்டி, மாட்சிமைதங்கிய மனோகரருக்காக எனது உயிரையுங்கொடுக்கச் சித்தமாயிருக் கின்றேன். இனித் தங்கள் பொருட்டும் எப்போதாயினும் யான் ஏதேனுஞ் செய்யும்படி ஏவப்பட்டால், அருள்மிகுந்த அரசி, தங்கள் அலுவல்களிலும் யான் உண்மையோடும் உள்ளக் கிளர்ச்சியோடும் அழுந்தி முயல்வேனென்பதை எடுத்துரைப்ப தற்கு இதனையே ஏற்ற நேரமாகக்கொண்டு தடுக்கமுடியாத மனவெழுச்சியோடுங் கூறும் எனது மனத்துணிவிற்காக அடியேனை மன்னித்தல்வேண்டும்!" என்று சந்திரன் கிளர்ச்சி யோடுங் கூறினான்.

அவ்விளைய ஏவலனுடைய சொல்லிலும் பார்வையிலும் செய்கையிலும் வெளித்தோன்றிய உண்மையினால், மக்களி யற்கையைப்பற்றி எப்போதும் மிகு நல்லெண்ணமேகொள்ளும் அருளியல்பு வாய்ந்த குமுதவல்லி தான்கொண்ட ஐய மெல்லாம் அகன்று போயினவென நினைத்தாள்; உடனே அவள் தனது விரலிலுள்ள விலையுயர்ந்த மோதிரம் ஒன்றைக் கழற்றிச், "சந்திரா, நாகப்பூரிலிருந்த என்னிடம் நீ செய்தி கொண்டுவந்த காலையில் நீ அதனை நம்பிக்கைக்குப் பழுதுவராமற் செலுத்திய தன்மையை யான் உவந்து கொண்டதற்கோர் அடையாளமாக இதனை நீ ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும்." என்று சொல்லிக் கொண்டே அதனை நீட்டினாள்.

சந்திரன் உடனே தாழ்ப்பணிந்து, "அருள்நிறைந்த அரசி, தாங்கள் இதற்கு நீட்டின இப்பரிசிலை யான் ஏற்றுக் கொள்ளாதது பற்றி அடியேனை மன்னித்தல் வேண்டும். நாகப்பூரில் அரசியார் அடியேனுக்குச் சிறந்த ஒரு பரிசில் அளித்தீர்கள்; தாங்கள் அடியேனை உவந்து ஈந்த அவ் அடையாளத்திற்காக யான்உள்ளங்குளிர்ந்தேன். இப்போது பின்னும் ஒருபரிசிலை யான் ஏற்றுக் கொள்வேனாயின், உண்மையில் ஒரு நன்கொடை பெறும் நோக்கத்தைமறைத்து வணக்கஞ் செலுத்தும்பொருட்டுத் தங்கள் முன்னேவந்தவன் போல் அரசியார்கருதவுங் கூடும். தங்கள் எண்ணத்தில் யான் நன்கு மதிக்கப்பட்டிருக்கின்றேனா என்பதையும், தாங்களும் மாட்சி நிறைந்த என் தலைவரும் ஆண்மைமிக்க பெருமான் நீலலோசனரும் யான் நாகப்பூருக்கும் மேற்கரைக்கும் செய்தி கொண்டு வந்து சேர்ப்பித்த வகையில் மனம் உவந்தனரா என்பதையும் உறுதியாகத் தெரிவதொன்றே எனது நோக்கமாகும்." என்று மறுமொழி பகர்ந்தான்.

இவ்வாறு சொல்லியதும், சந்திரன் நாகநாட்டரசி யினிடத்தில் மிகுந்தவணக்கம் உடையான்போற் பணிந்து, விரைவில் அவ்வறையை விட்டு வந்தான்.

அவன் தனக்குப் பின்னே கதவு சாத்திக்கொண்டு போனதும், குமுதவல்லி அம்மோதிரத்தைத் திரும்பவுந் தன் விரலில் இட்டுக்கொண்டவளாய்த் தன்னுள் எண்ணுவாள்: "உண்மையில் யான் இவ்விளைஞனுக்குப் பிழை செய்தவளா னேன். இவன் இழிந்த இரண்டகமான செய்கையைச்

செய்யமாட்டாதவனாய், மிக உயர்ந்த சிறந்த எண்ணங்கள் உடையவனாய்த் தோன்றுகின்றான். இவனுடைய எண்ணத் திற்கு மாறாகுமென்று நினைத்து இப்பரிசிலை இவன் வாங்கிக் கொள்ளும்படி இப்போது இவனை நானும் நெருக்க வில்லை. வேறுநேரம் பார்த்து இவனுக்குத்தக்க நன்கொடை அளிக்க வேண்டும். இறந்துபோகுந்தறுவாயில் மீனாம்பாள் வாயில் நிலைதடுமாறிப்பிறந்தபெயர் வேறொருவனுடைய தாகவே இருக்க வேண்டும்! மற்று அப்பெயர் யாதாயிருக்கலாம்? எவரைப்பற்றிநான் விழிப்பாய் இருக்கவேண்டும்? ஆ! அத் துணைச் சிறுகாரணத்தைக் கொண்டு யான் சந்திரனைப்பற்றித் தீதாய் நினைத்தது முற்றும் பிசகு! நீலலோசனனைப் பற்றி நினைத்ததில் எவ்வளவு புதுமையாக நான் ஏமாற்றம் அடைந் தேன்! ஆண்மையிற் சிறந்த என் மைத்துனனைப்பற்றி நான் பிழைபட நினைந்தது எவ்வளவு கொடுமையானது! இனி வெளித்தோற்றத்தைக்கண்டாவது, நிரம்பா மன ஐயுறவு கொண்டாவது எஞ்ஞான்றும் இத்தகைய முடிபுக்குத் திடுகூறாய்வரற்பாலேன் அல்லேன்.” இப்போது சுந்தராம் பாளும் ஞானாம்பாளும் இவளிருந்த அறைக்குத் திரும்பி வந்தார்கள்; குமுதவல்லியும் அவர்களை நோக்கி, “வாருங்கள், தோழிகாள், என்பக்கத்தில் இருங்கள்; யான் நுங்கட்குத் தெரிவிக்கவேண்டிய சில அறிவிப்புகள் இருக்கின்றன.” என்றாள்.

அழகும் நம்பிக்கையும் வாய்ந்த அப் பெண்களிருவரும் இளம் பெருமாட்டியின் அண்டையில் உடனே அடிமனைகளின் மேல் உட்கார்ந்தார்கள். அவ்வரசியார் தமக்கு எதனைத் தெரிவிக்கத் தாழ்ந்தருள்வரோ என்று அவர்கள் ஆவலோடும் எதிர்நோக்கியிருந்தார்கள்.

முதல்முதல் மங்கையீர் என்னுடைய தவறுதலால் உங்கள் உள்ளத்தில் உண்டான ஓர் எண்ணத்தை அங்கு நின்றும் அகற்றுவதற்கு ஒரு நொடிப் பொழுதுகூட யான் தாழத்த லாகாது. பெருமான் நீலலோச னரைக்குறித்துத் துவக்கத்தில் மிகவும் பாராட்டிப்பேசிய நீங்கள், அவரைப் பற்றி யான் கொடுமையாகவும், துயரப்படும் படியாகவும் பிழைபட எண்ணி நடந்தேன் என்பதை இப்போது தெரிந்து நிரம்பவுங் களிப்படைவீர்கள்; அவர் கொள்ளைக் கூட்டத் தலைவனான நல்லான் அல்லர்; அவர் இப்போது இளவரசுப்பட்டத்தில்

இருப்பவராயும், இன்னும் உயர்ந்த ஒருநிலையைப் பெறுதற்கு ஏற்ற மெய்யான உரிமை யுடையராயும் உள்ள மிக மாட்சிமைப் பட்ட ஓர் இளம் பெருமானே யாவர்! என்று குமுதவல்லி கூறினாள்.

இச்சொற்களைக் கேட்ட அளவில் சுந்தராம்பாள் ஞானாம்பாள் வாயினின்று களிப்புரைகள் வியப்புடன் எழுந்தன. முதலிற்சொன்ன பெண்ணின் மெல்லிய கரிய மடமான் விழிகளிலும், அங்ஙனமே அழகிய மற்றப் பெண்ணின் பழுப்புநிறக்கண்களிலும் அம்மகிழ்ச்சிக்குறிப்பு ஒளியுடன் கிளர்ந்தது; சிறிதுகாலத்திற்குமுன் எண்ணியதற்கு வேறாகத் தான் இப்போது நீலலோசனனைப்பற்றி எண்ணக் கூடிய வளானதை நினைந்து குமுதவல்லி தன் பட்டுப்போன்ற கன்னங்களில் ஒரு பொலிவுகொள்ளப் பெற்றாள்; இந்தப் பொலிவு மனக்குறை வினால் தோன்றியதன்று.

"இன்னும் நான் சொல்லவேண்டுவது மிகுதியாயிருக் கின்றது. மாதரீர்; எனினும், இப்பொழுதிற்கு யான் வெளி யிட்டுரைக்கப்போவது ஒரு மறைபொருளாகும; ஏனென்றால் மாட்சிமைமிக்க மனோகரர் இதனையடுத்து என்ன ஏற்பாடுகள் செய்ய எண்ணியிருக் கிறாரென்பது எனக்கு இன்னுந் தெரியாது. சுருங்கச் சொல்லுங்கால், உங்களுக்குப் பெரியவியப்பினைத் தரும் ஒரு செய்தியைச் சொல்லப்போகின்றேன்." என்று தொடர்ந்துரைத்த குமுதவல்லி சிறிது நின்று, பிறகு அழுத்த மாகவும் அடங்கிய மகிழ்ச்சியோடும், "நீலலோசனர் எனக்கு மிகநெருங்கிய உறவினர் -- அவர்கள் உரிமை மைத்துனர்!" என்று கூறினாள்.

அவ்விளந்தோழிப்பெண்கட்கு இச்செய்தி ஒரு வியப்பி னைத்தருவதாயிருந்தது. அத்தகைய உறவினரைத் தான் பெற்றதற்காகத் தன்னை பெருமைபாராட்டிக் கொள்ளலாம் நிலையிலுள்ள தம் தலைவியின்மேல் அவ்விருவரும் ஒருங்கே வாழ்த்துரை சொரிந்தார்கள்.

"ஆம் மகளிர்காள், இது மெய்ம்மைதான். சிறிது நேரத்திற்கு முன்னே தான் இஃதெல்லாம் அம்மலைய வியாபாரியின் வாயினின்று கேட்டுணர்ந்தேன். அவர் அன்பான நெஞ்சமும் அருட்குணமும் வாய்ந்த சிறந்த முதியவர். இதற்குமுன்

இதனைப்பற்றி யான் ஒன்றும் அறியேனாயினும், தாம் எனது குடும்ப நன்மைகளைக் கோரிய வலிய நண்பர் என்பதை மெய்ப்படுத்தி யிருக்கின்றார். என் மைத்துனர் நீலலோசனரைப் பற்றியோ வென்றால், எமக்குள் அவ்வுறவு எங்ஙனம் உண்டாயிற்று என்பதைத் தோழிகாள், நீங்கள் எண்ணிப் பார்க்கத்தவற மாட்டீர்கள்; ஏனெனில், இரங்கத்தக்க என் மாமனார் -- என் தாயோடு உடன்பிறந்த தம்பியார் -- தம் கையிற் குழந்தையோடு நாகப்பூரைவிட்டு அகன்றுபோன கதையை நீங்கள் அடுத்தடுத்துக்கேட்டிருக்கின்றீர்கள். அந்த மகவு பெரிய பிள்ளையாய் வளர்ந்தது -- மேற்கரைநாட்டின் அரசரான **சாக்கியதர்மர்** தமக்கு மருமகனாக எடுத்துக்கொண்ட அவ்விளைஞரே இன்றைக்கு என் மைத்துனனாயிருக்கக் கண்டேன்.” என அவள் தொடர்ந்தரைத்தாள்.

அங்ஙனங் கேட்ட வியப்பான செய்திகள் எல்லா வற்றையும் பற்றித் தாம் அடைந்த மகிழ்ச்சியையும் இறும் பூதினையும் தெரிவிக்கச் சுந்தராம்பாளும் ஞானாம்பாளும் போதுமான சொற்கள் காணாராயினர். இங்ஙனம் பேசிக் கொண்டிருக்கும் போது அவ்வீட்டு முதியோள் உள்ளே வந்தமையால் அது தடைபட்டது; வந்தவள், “பெருமாட் டியாரவர்கள் மறுபடியும் என் மாட்சிமைப்பட்ட தலைவரிடம் வந்தருளுதற்குத் திருவுளம் பற்றல் வேண்டும். முன்னே தாங்கள் கண்டு பேசிய அந்த அறை யிலேயே அவர் தங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்.” என்று சொன்னாள்.

மனோகரர் வரவேற்கும் அறைக்குக் குமுதவல்லி மறு படியுஞ் சென்று கொண்டிருக்கையில், அவளது உயர்ந்த நிலைமையானது அவ்வீட்டிலுள்ள ஏவற்காரர் எவர்க்கும் பெரும்பாலும் தெரிய மாட்டாதென்பதனைச் சொல்லி விடுகின்றோம். அதனை நிரம்பவும் மறைபொருளாய் வைத்தி ருக்க வேண்டுமெனச் சந்திரன் கற்பிக்கப்பட்டான்; தன் தலை வரின் கட்டளைகளுள் என்றான இதனை அவன் மீறி நடப்ப தற்கும் ஏதுவில்லை. நாகநாட்டரசி நீலகிரி நகரத்தில் வந்து தமது வீட்டில் தங்கியிருக்கின்றாள் என்பது எந்த வகையாலும் வெளியே தெரியாதபடி மறைவிடமாய் வைக்கப்பட வேண்டு மென அம்மலைய வியாபாரி எண்ணங் கொண்டிருந்தார்; ஏனெனில், அவர் அவளை அங்கு வரவழைக்கும்படி தூண்டின

முதன்மையான அலுவலல்கள் மிகவும் மறைவாகவே வைக்கற்பாலனவாயிருந்தன; மேலும் அவளை அவர் மேற்கணவாய் மலைக்காட்டுகளின் இடையே அழைத்துச் சென்று, அவள் ஏற்கெனவே ஒருவாறு உய்த்துணர்ந்திருக்கின்ற மிகப் பெரிய மறைபொருளை அவளுக்கு முற்றிலும் அறிவித்தற்கு அவர் கருதியிருந்தமையால்., நாக நாட்டரசி அவரது மாளிகையிற் றங்கியிருக்கின்றாள் என்பது வெளிப்புலப்படுமாயின், அஃது எதன் பொருட்டு என்று அறியப் புகுவதே வெளியார்க்கு இயற்கையாதலால் அவர்களுடைய இயக்கங்கள் உற்று ஆராயப்படாமல் மறைக்க வேண்டுவது இன்றியமையாததாக வேயிருந்தது. ஆனாலும், அப்போதைக்கு வேறொரு பெயரை வைத்துக் குமுதவல்லியின் பெயர் வெளியே தெரிய வொட்டாதபடி மறைக்குமளவுக்கு அம் முன் ஏற்பாடுகள் செய்யப்படவில்லை என்பது ஒரு புதுமையாகத் தோன்றலாம்; என்றாலும், அம்மேற்கணவாய் மலை நாடுகளில் உள்ள பெண்பாலரில் உயர்ந்த நிலையில் இருப்பவர்க்குக் குமுதவல்லி என்னும் பெயரிட்டு வழங்கல் சைவர் பௌத்தர் என்றும் இருதிறத்தினரிலும் வழக்கமல்லாததன்று ஆதலால், அவ்வளவு உன்னிப்பான ஏற்பாடு வேண்டப்படுவதில்லை, எனவே, குமுதவல்லிப் பெயரிய பெருமாட்டியே நாக நாட்டரசியாவள் போலும் என்று ஐயமுறுவார் எவருமில்லை.

குமுதவல்லி மறுபடியும் மனோகரர் இருந்த அறைக்கு வந்து சேர்ந்தாள்; அவ்வியாபாரி மாத்திரம் அங்கே தனித்திருக்கவும் நீலலோசனன் அவருடன் இல்லாதிருக்கக்கவுங் கண்டாள். முன் அறையில் அவர் அவளிடத்தில் நடந்து கொண்ட வண்ணமே நன்கு மதிப்பும் நட்புங் கலந்த ஒரு தன்மையோடு அவ்வரசியை அவர் வரவேற்றார், அவர்தம் முதுமையும் அவள் பாட்டனாரோடு தாம் கொண்ட நெருக்க உறவும் அவளைப் பெற்றோர்க்குரிய அன்புடன் பாராட்டத் தூண்டினாலும் அவர் அவளது அரசியல் நிலையை மறந்து போகவில்லை.

"எனக்கு இனிய நட்பான இளைய அரசி, தங்களுக்கு யான் நல்ல செய்தி தெரிவிக்கப் போகின்றேன். தங்கள் மைத்துனர் யான் எடுத்துவிளக்கிய அவ்வுண்மைகளை உண்மையென்றுணர்ந்து ஏற்றுக் கொண்டார்; அவர் சைவ சமயத்தைத் தழுவிக் கொள்வார்!" என்றுரைத்தார்.

இதனைக் கேட்டதும் குமுதவல்லியின் நெஞ்சம் இன்பத்தால் ஊடுருவப் பெற்றது. அவள் அவனிடத்துக் கொண்டிருக்கின்ற அன்புமிக்க நேசத்திற்குத் தன்னை அவன் தகுதியுடையவனாக்கிக் கொள்ளுகின்றானென உணர்ந்தாள்.

"ஆம், நாளை மாலையில் இவ்விடத்தே வணக்க வொடுக்கம் மிக்க ஒரு சடங்கு நடைபெறும். அப்போது தங்கள் மைத்துனனார் தூயகுருவினால் திருநீராட்டப்பட்டுத் தாம் பிறந்த சைவ சமயத்தைத் தழுவிக் கொள்வார். அவர்தம் பெற்றோர்களால் அவர்க்கு இடப்பட்டதும், தாங்கள் தெரிந்தவாறே தங்கள் குடும்பத்தில் எத்தனையோ எத்தனையோ தலைமுறையாகப் பேணப்பட்டு வந்ததும், தங்கள் பாட்டனாரும் அவர்க்குப் பாட்டனாரும் பூண்டிருந்ததும் ஆன கோச்செங் கண்ணன் என்னும் பெயரையும் அப்பொழுது அவர் சூடிக் கொள்வார்!" என்று மனோகரர் தொடர்ந்துரைத்தார்.

"மாட்சிமை மிக்க மனோகரரோ, என் மைத்துனர் சைவ சமயத்தில் திரும்பவும் வந்து சேர்வதை யான் காணும் அந்நேரம் எனக்கு ஒரு நன்னேரமாய் இருக்கும். நாகநாட்டரசாட்சியை அவருக்கு நான் மன மகிழ்வோடு ஒப்புவித்து விடுகிறேன்." ஆனாலும், அரிடமன்னன் ஆளுகைக்கு உள்ளடங்கி அரியணை மேல் முடிகவித்து வீற்றிருக்கும் ஓர் ஆவிவடிவைப் போல் யானிருக்குமாறு அந்நாட்டினரசியல் ஒரு நிழலின் தோற்றத்தை அடைந்திருக்கின்றதே!" என்று கூறினாள்.

"பெருமாட்டி, ஒரு குறிப்பிட்ட ஏற்பாட்டின் முடிவுப்படி அல்லாமல்--உங்களுக்குள் முன்னமேயுள்ள உறவின் பொருத்த மானது இன்னும் நெருக்கமான மற்றக்கட்டுகளால் உறுதிப் படுத்தப் பட்டால் அல்லாமல் இங்ஙனம் நடத்தலாகாது. அழகிய குமுதவல்லி, இங்ஙனம் உள்ளதை உள்ளபடியாக யான் திறந்து பேசுதல் பற்றி, இம்முதியோனைத் தாங்கள் மன்னித்தல் வேண்டும். என்றாலும், நீண்ட காலமாய்க் காணாது போன தம் பேரன் உயிரோடிருத்தலைப் போற்றத்தக்க தங்கள் மாமனார் தெரிந்து கொண்ட பிறகு, யான் கடைசியாக அவரைச் சென்று கண்ட சிலவேளைகளிலெல்லாம் அவர் எனக்கு அடிக்கடி சொல்லிய விருப்பத்தினையே யான் தங்கட்குத் தெரியச் சொல்ல லாயினேன். எழில் மிக்க குமுதவல்லி, தங்கள் மைத்துனனார் சைவ சமயத்தைத் தழுவிக் கொண்டு, அவ்வாற்றால் அம்மா

மறைப்பொருளைத் தெரிந்து கொள்ளு தற்கு மட்டுமன்று, தங்களை வேள்வித்தீமுன் மணந்து கொள்ளும் இன்பத்தைப் பெறுதற்குந் தம்மை தகுதியு டையராக்கிக் கொள்ளல் வேண்டுமென்பது மெய்யாகவே இறந்து போங்காலத்தும், அம்முதியகோச்செங்கண் மன்னர்க்கு விருப்பமாயிருந்தது. எனினும், உங்கள் உள்ளன்பு வேறொரு முகமாய் முன்னமே செலுத்தப்பட்டிருக்குமானால்--அல்லது இல்லறக்கடலைக் கடக்குந் திருமணக் கப்பலில் ஏறுவது தங்கட்கு வெறுப்பாக இருக்குமானால் தங்கள் அரசியலை அங்ஙனம் ஒப்புவிக்க வேண்டுவதில்லை. உரிமைப்படி அஃது உங்களுக்கே உரியது-- மூத்த கிளை வழியில் வந்த உங்களுக்கே அஃது உரியதாகும்-- நீங்களே அதனை வைத்திருக்கற்பாலீர்கள்!" என்று மனோகரர் மறுமொழி புகன்றார்.

மாட்சிமிக்க மனோகரர் நீள இவற்றைச் சொல்லுகையில் நாணங் கலந்த மனக் குழப்பத்தினால் குமுதவல்லி வாய்பேசக் கூடாமல் அடைபட்டிருந்தாள்--இவள் முகத்தின் கண் உள்ள நிறமோ புடைபெயர்ச்சி நன்கு புலனாகாதபடி வருவதும் போவதுமாய் இருந்தது; வாய் பேசாமல் இவள் இச்சொற்களை உற்றுக் கேட்கையில் இவளது மார்பகமோ மெல்லெனச் சிறிதே ஏறியிறங்கிக் கொண்டிருந்தது. முன்னமே இவள் நீலலோசனனி டத்துக் கொண்ட ஓர் உணர்ச்சியை இம்முதியோன் கூறிய சொற்கள் இவளது ஆழ்ந்த நினைவின்கண் எழுப்பி விட்டன. சிறு குழந்தையைப் போற் கள்ளம் அறியாதவளாயிருந்தும் இவள் இப்போது தான் காதல் என்பதன் முதல் எழுத்துக்களைப் பயிலத் தொடங்கினாள். அவளது நெஞ்சத்தினுள் அமைதியாய் மெல்லத் தோன்றிய ஒரு பதைப்பானது, மனோகரர் கூறிய சொற்கள் இன்பத்தைப்பிறப்பிக்கும் ஒரு நரம்பின் அசைவினை விளைவித்ததென்று அவளுக்கு அறிவிப்பதாயிற்று.

"என் அன்பிற்குகந்த, மாட்சிமை மிக்க மனோகரரே," என்று அவள் கடைசியாகத் தன் மெல்லிய இனிய குரலில், கீழ்க்கவிந்த விழிகளோடுங் கூறுவாள்: "என் உள்ளன்பானது இதற்குமுன் எங்குஞ் செலுத்தப்பட்டிலது-- என்னையெனின், இதற்குமுன் யான் என்றும் நினையாத ஒரு செய்தியைப் பற்றித் தாங்கள் குறிப்பிட்டீர்களே; புதிதாகக் கண்டு கொள்ளப்பட்ட என்மைத்துனரோடு யான் சிறிதும் பழகியிராவிடினும், அவர் தம்

அஞ்சா ஆண்மையினையும் வள்ளற்றன்மையினையும் உயர்ந்த அறிவினையும் நிலைநிறுத்தும் அடையாளங்களை யான் முன்னமே அறிந்திருக்கின்றேன்.”

“ஆம், குமுதவல்லி, நீங்கள் முதன் முதல் ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டபோது நிகழ்ந்தவற்றையும், ஒரு வேங்கைப் புலியினிடம் அகப்பட்டு மீண்டதையும் நீலலோசனர் தமது இளமைக்கு ஏற்ற நாணத்தோடும், எனக்கு விரித்துக் கூறினார்.” என்று மனோகரர் அதற்கிசைந்துரைத்தார்.

“அக்கொடிய விலங்கினாற் புண்படுத்தப்பட்ட மலை நாட்டார் இருவர்க்கு அவர் தாம் அன்போடு செய்த உதவி களையும் தமது பணப்பையிலிருந்து மிகுதியாய் எடுத்துக் கொடுத்த பரிசிலையுங்குறித்து அங்ஙனமே தங்கட்குத் தெரிவித் தனரா?” என்று வினவிப் பின்னும், “ஆ! அவரது ஆண்மைக்குத் தக்கவாறே அவரது வள்ளன்மையும் அதனையடுத்துத் தோன் றியது; அவரது அறிவின்றன்மையைப் பற்றியோவென்றால், அஃது எவ்வளவு நன்றாய்ப் பண்படுத்தப்பட்டிருக்கின்ற தென்பதனை அறியாமல் ஒரு நாழிகை நேரங்கூட அவருடன் இருக்க முடியாது,” என்று பேசினாள் குமுதவல்லி.

அங்ஙனம் பேசியவுடன் குமுதவல்லி நாணத்தால் முகம் மிகச் சிவக்கத் தன் தலையை வெட்கத்தோடுங் கீழே குனிந்து கொண்டாள்; ஏனென்றால், தன் மைத்துனன் செய்கையும் இயற்கையையும் பற்றித் தான் உண்மையோடு கரவடமின்றி வியந்துரைத்த சொற்கள், தனது கன்னிமை நாணத்திற்குத் தகாத அத்துணைக் கிளர்ச்சி வாய்ந்த புகழுரைகளைத் தான் பகரும்படி செய்து விட்டனவோ என்னும் நினைவு அவளுள்ளத்திற் சடுதியிற் றோன்றலாயிற்று. ஆனால் மனநிறைவுக்கு அடையாள மான ஒரு புன்சிரிப்புத் தோன்றப் பெற்றவராய் மனோகரர் அமைதியாகக் கூறுவார்: “என் அன்பிற்குரிய இளையநேசரே, இப்போது தங்கள் மைத்துனரே தமது வழக்கைத் தங்களிடம் எடுத்துப் பேசும்படி யான் விட்டு விடுவதில் தீங்கொன்றும் இல்லையென்று நினைக்கிறேன்.”

“இல்லை--இதற்குள் அல்ல! இதற்குள் அல்ல!” என்று, அத்தகைய செய்தியில் மிகவும் விரைவது போற் காணப்படும் ஒரு நிகழ்ச்சியிற் பின்வாங்குவாளாய்க் குமுதவல்லி முணு முணுத்து,

*“அவர்தம் உயர்ந்த தன்மைகளுக்கு அறிகுறியான வற்றை யான் அறிந்து கொண்டேனாயினும், அவர் என்னைப் பற்றி ஒன்றுமே தெரியாதவராய் இருக்கின்றார்!” என்று கூறினாள்.*

*மனோகரர், தாம் தம் புதல்வியொடு பேசுவது போல் அவ்வளவு அன்பான அக்கரையைப் புலப்படுத்தும் வகையுடன் இன்னும் அமைதியான குரலிலேயே “இளவரசி, தங்கள் இளைய உறவினர் தங்களிடத்துள்ள பல நல்லியல்புகளையும் பாராட்டக்கூடிய அளவு தங்களைப் போதுமானபடி முன்னமே கண்டறிந்திருக்கின்றார்: அவர் தங்களைக் காதலிக்கின்றார்!” என்று மொழிந்தார்.*

*தனக்குப் பாட்டனாய் இருக்கத்தக்க முதியோன் ஒருவன் வாயினின்று வந்தமையானும், கூட இராத மற்றொருவனுக்குச் சார்பாகப் பேசப் பட்டமையானும் இவ்வறிவிப்பில் மன வருத்தத்தைத் தரத் தக்கதேனும், குமுதவல்லியின் தூய உள்ளத்தை அல்லது அவள் மெல்லிய உணர்வை அதிரச் செய்வதேனும் ஏதும் இல்லை. மேலும், மேற்கணவாய் மலைக் காட்டுகளின் அடையேயுள்ள தமது இன்ப உறையுள் கண் வணங்கத்தக்க தன் பாட்டனாரான கோச்செங்கண் மன்னர் இறந்து போந்தறுவாயில் நிலை தடுமாறும் அவரது வாயிற் பிறந்த அவர்தங் கடைசியான விருப்பத்தையே, இப்போது நீலகிரிநகரின் கண் அவ்வறையிலே அம்மலைய வியாபாரியாகிய தக்கோன் மறுபடியுந் தெரிவிக்கலானான் என்று அவளுக்கு அது காணப்பட்டது. ஆகவே, தனக்கே உரிய தன் உறவினனால் தான் காதலிக்கப்பட்டாளென்னும் அவ்வறிவிப்புக் குமுதவல்லியின் அமைந்த நெஞ்சத்தில் மெல்லிய இனிமையுடன் சென்று ஆழ்ந்தது; நாணமானது தன் கன்னங்களிற் செந்நிறம் ஊட்ட அவள் மனோகரரை நோக்கி முணுமுணுப்போடு கூறுவாள்: “எல்லாவற்றிலுந் தங்கள் சொற்படியே நடக்கக் கடவேன்-- ஏனெனில், என் பாட்டனார் தங்கள் வாயிலாகப் பேசுவது போல் எனக்குத் தோன்றுகின்றது!”*

*“தங்கள் உறவினர் திரும்பவுஞ் சைவ சமயத்திற்கு வந்தபின் அல்லாமல், அவர் ஒரு சைவக் கன்னிப் பெண்ணின் செவிகளில் தங் காதலைச் சொல்லற்பாலார் அல்லர். குமுதவல்லி, இப் போது அம்மாமறைப் பொருளைப் பற்றி ஒரு சொற் சொல்லி விடுகின்றேன். நாளை மாலையில் தங்கள் மைத்துனர் நீல*

லோசனன் என்னும் பௌத்தப் பெயரை மாற்றிச் சைவப் பெயராகிய **இளங்கோச்செங்கண்ணன்** என்பதனைப் புனைந்து கொள்வர். யான் முன்னமே அவ்வளவுமிகுதியாகச் சொல்லியிருப்பதும், அதனையறிந்து கொள்ளுதற்கு நீங்கள் இருவீரும் ஏற்றுக் கொள்ளப்படுதல் வேண்டுமென நுங்கள் பாட்டனாரால் உருக்கத்தோடு எதிர்பார்க்கப்பட்டதுமான அம்மறைப் பொருள் அதன் பிறகு அவர்க்குத் தெரிவிக்கப் படலாம். ஆதலால், இருவீர்க்கும் ஒருங்கே அவ்வுண்மை முழுதும் எடுத்து விரித்து உரைக்கப்படும்; அதனையடுத்துச் சிறிதுங் காலந்தாழாது தாங்களும் தங்கள் மைத்துனரும் அம்மேற்கணவாய் மலைகளுக்கு என்னோடுகூடப் பயணம் புறப்படுவீர்கள். தங்கள் இன்றைக்குக் கண்டு கொண்ட தங்கள் உறவினரோடு கலந்து பேசும்படி தங்களை இப்போது சிறிது நேரம் விட்டு விட்டுப் போகின்றேன்." என்று அம்முதியோன் விளம்பினான்.

இவளுக்குத் தெரிந்திருக்கக் கூடுமென்று அம்முதியோனால் இது வரையில் நினைக்கப்படாவிடினும், மேற்கணவாய் மலைகளின் இடையேயுள்ள இந்நிலவுலகத்து இன்ப உறையுளைப் பற்றி இவள் தான் மிகுதியாக முன்னமே தெரிந்திருக்கும் வகைகளை விரித்துக்கூறி மனோகரரிடம் திகழ்கலையைக் குறித்துக் குமுதவல்லி பேச இருந்தாள். ஆனால், அவரோ தமது இருக்கையினின்றுஞ் சடுதியில் எழுந்து, பெற்றோர்க்குரிய உருக்கத்தோடும் அவள் கையை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டு, அவ்வறையினின்றும் வேறோர் உள் அறைக்குச் செல்லும் வாயில் வழியே விரைந்து சென்றார். எனினும், அவர் அவ்வாயிற் கதவை மூடவில்லை. நீலலோசனன் உடனே அவ்வாயிலிற் றோன்றினான். அவன் குமுதவல்லியின் எதிரே சென்று, "மைத்துனி, உங்களைப் போன்ற அத்துணை அழகிய ஓர் உறவினர் இருப்பதை யான் தெரியப் பெற்ற இந்நாள் ஒரு நன்னாளேயாகும்!" என மொழிந்தான்.

குமுதவல்லி நாணத்தால் முகஞ் சிவந்தாள்; ஏனென்றால், தன் மைத்துனன் தன்னை முன்னமே காதலித்திருக்கின்றான் என்னும் அறிவிப்பைப் போற்றத்தக்க மனோகரர் வாயினின்றுங் கேட்டதனால் உண்டான நினைவு இன்னும் அவன் உள்ளத்திற்

நிலையாமல் இருந்தது. ஆனாலும், கன்னிமைக்குரிய இறுமாப்பு அவளுக்கு உடனே உதவியாய்வந்து நின்றது; அவளும் தக்கவாறு சிறிது மறுமொழிந்தாள்.

"நாம் பேசவேண்டுவது மிகுதியாய் உள்ளது -- குமுதவல்லி, நீங்களும் நானும்" என்று நீலலோசனன் சொல்லிக் கொண்டே அவளுந்தானுமாய் ஒரு சார்மனைக் கட்டிலின்மேல் அமர்ந்தார்கள். "யான் காண்பதற்கு மிக விரும்பும் அந்த நாகநாட்டைப்பற்றி, யான் பிறந்த அவ்வூரைப்பற்றிச் சொல்ல வேண்டுவன வெல்லாம் நீங்கள் எனக்குச் சொல்லல்வேண்டும்: ஏனெனில், புத்த நாடுகளின் வடடத்திற்குள் அவ்வெல்லைக்கு அப்பாற்பட்ட இடங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகள் சிறிதும் தெரிவதில்லை. ஓ! குமுதவல்லி, நேற்றுமாலையிற் புதுமையான அவ்விடத்தில் நீங்கள் வந்திருந்ததன் கருத்து யாதெனமுதலில் யான் கேட்கின்றேன். அங்கே உங்களையான் பார்த்தபோது யான் அடைந்த வியப்பினைக் கருதிப்பாருங்கள்!"

"அங்ஙனமே தங்களைப் பார்த்த போது யானடைந்த வியப்பினைக் கருதிப்பாருங்கள்!" என்று குமுதவல்லி விடை பகர்ந்து, நாம் ஒருவரோடொருவர் எல்லாவற்றையும் விளக்கிச் சொல்லிக் கொள்ளவேண்டும் -- நானே முதலில் துவங்கு கின்றேன். தற்செயலாய் யான் அந்த நங்கையை வழியிற் காணலானேன்."

"கொள்ளைத் தலைவன் மனைவி மீனாம்பாள்," என்று நீலலோசனன் இடையே கூறுவான்; "அவளேதான் என்று நேற்று நான் சொல்லக்கேட்டேன்; குமுதவல்லி, உங்கள் பார்வையினால், நீங்களும் அதனை அறியாதிருக்கவில்லை எனத் தெரிகின்றேன்."

"ஆம். கொள்ளைத்தலைவன் மனைவி மீனாம்பாளே தான்." என்று அவ்வரசி விடை கூறுவாள்; "ஒரு பாம்பு தன் நச்சுப்பற்களை அவள் சதையில் ஊன்றிக்கடித்தபோது யானுங் கூட இருந்தேன்; அவள் என் கைகளிலேதான் உயிர் துறந்தாள். ஓர் அறிவோள், மணப்பொருள்களும் மருந்துகளும் விற்றுத் திரிவோள் -- ஒருத்தியும் அப்போது கூட இருந்தாள்."

"இறந்தோள் கிடந்த வீட்டிற்கு நேற்று மாலையில் என்னை அழைத்துச் சென்றவளும் அவளே தான்." என்ற நீலலோசனன் கிளந்தான்.

"நாங்கள் கண்டபடியே, என்னை அவ்விடத்திற்கு அழைத்துச் சென்றவளும் அவளே தான். இம்மாளிகைக்கு வந்து என்னைக்கண்டு தன் பின்னே வரும்படி மன்றாடிக்கேட்டாள். யானும் இசைந்தேன். மற்றைய தங்கட்குத் தெரியும்." என்று நாகநாட்டரசி கூறினாள்.

"என்னுடைய செய்தியும் இதனைப்போன்றதேயாம் -- ஆனால், ஒன்று; நேற்றுப் பிற்பகல் யான் இந்நகரத்தைப் பார்வையிட்டுக் கொண்டிருக்கையில் அவள் முதன்முதல் என்னைத் தெருவின்கண் எதிர்ப்பட்டாள்; எதோ ஒரு சாக்குச்சொல்லி என்னைத் தன்பின்னே வரும்படி வேண்டினாள். என்னை ஒரு குறிப்பான வழியே அழைத்துச்சென்று ஒரு வீட்டைச் சுட்டிக்காட்டி மாலை ஐந்து நாழிகைக்குமேல் ஏழரை நாழிகைக்குள் யான் அங்கேவரும்படி கடவுளறிய ஆணை யிட்டுக் கூறினாள். இஃது ஏதோஒரு சூழ்ச்சியாயிருக்கின்றதென அஞ்சி இதனை மறுத்திருப்பேன்; ஆனால், அவள் கூறிய சில உறுதிமொழிகள் என்னை இணங்கச்செய்தன." என்று நீலலோசனன் கூறினான்.

"அவ்விடத்திற்குச்செல்லும் பொருட்டுத் தாங்கள் அத்தெருவழியே செல்கையிற் றங்களைக் கண்டேன், அஞ்சத்தக்க வாறாய்ப் பளீரென வீசிய அம்மின்னல் ஒளி தங்கள் நினைவி லிருக்கின்றதா? அஃது உங்கள் முகத்தை எனக்கு விளங்கக் காட்டியது. ஆனால் அவ்வறிவோள் உங்களுக்குச் சொல்லிய அவ் உறுதிமொழிகள்?" என்று குமுதவல்லி வினாவினாள்.

"அவைகளை நீங்கள் அறியும்படி செய்தற்குக், குமுத வல்லி, யான் நீலகிரிக்கு வரும் வழியினிடையே உங்களிடம் வந்து சேரும்முன் எனக்கு நேர்ந்த இடரான நிகழ்ச்சிகளை விரித்துச் சொல்லல் வேண்டும்" என்று நீலலோசனன் மறுமொழி புகன்றான்.

அதன்பின் அவன் தான் கொள்ளைக்காரரோடு சண்டை செய்ததனையும், தெளிநீர்வேலியின்கண் தான் மீனாம்பாளைக் கண்டதனையும், கோபுரத்தினுள் அவள் இரண்டகமாகச் செய்த நடவடிக்கைகளையும் எடுத்து விரித்துரைத்தான்; ஆனாலும், மீனாம்பாளின் கிளரொளி வனப்பானது ஒருசிறிது நேரமேனுந் தனக்குக் கவர்ச்சியை விளைவித்ததென்று ஒருப்பட்டுக் கூறாமற் கருத்தாய் விட்டுவிட்டான்.

*"யான் உங்கள் பக்கத்தில் வழிப்பயணம் வரும்போது, குமுதவல்லி," என்று நீலலோசனன் தொடர்ந்துரைப்பானாய்க்: "கொள்ளைத் தலைவனான நல்லானது பெயர் பேச்சின் இடையே வந்தது. தங்கட்கு அச்சத்தை ஊட்டுமென் றஞ்சி அதனைப்பற்றிய குறிப்புகளைப் பேசாது விட்டேன்: யானும், ஆண்மைமிக்க என் ஆட்களிருவரும் உங்கட்கு வழித் துணையாய்ச் செல்லல் வேண்டுமென்றும், ஏதேனும் இடர் நேருமாயின் யாங்கள் சாகும்வரையில் உங்களைப் பாதுகாத்தல் வேண்டுமென்றுந் தீர்மானஞ் செய்தேன்: ஆனாலும், உங்கட்குப் பெருந்திகிலை மிகுதியாய்த் தரவல்ல ஒரு சொல்லைக் கூறுவது பயனற்றதெனவும் நினைந்துணர்ந்தேன். அதுகிடக்க, யான் இடையே விட்டுவிட்ட நிகழ்ச்சியை முடித்துச் சொல்லி விடுகின்றேன். நேற்றுப் பிற்பகல் திகழ்கலை என்னும் அவ் அறிவோள் என்னைத் தெருவின்கட் கண்டுபிடித்து, மாலைப் பொழுதிற்றனிமையாயும் மறைவாயும் என்னை வரும் படி வேண்டின வீட்டண்டை முதன்முதல் அழைத்துச் சென்ற போது எனக்குச்சில உறுதிமொழிகள் புகன்றாளென உங்கட்குச் சொல்லியிருக்கின்றேன். அவ்வுறுதிமொழிகள் பின்வருமாறு சொல்லப்பட்டன: 'தெளிநீர் வேலியில் நீங்கள் எவளைக் கண்டீர்களோ, கோபுரத்தின்கண் எவன் செய்த சூதுகளை நீங்கள் தப்பி வந்தீர்களோ அவள் இப்போது உயிரோடில்லை. ஒரு பாம்பின் நஞ்சு அவள் நரம்புகளில் எங்கும் ஓடி அவளை உயிர்துறக்கச் செய்தது. யான் உங்களுக்கு இப்போது சுட்டிக்காட்டும் அதோ இருக்கிற வீட்டினுள்ளே உயிரற்ற அவ்வுடம்பு கிடக்கின்றது. தான் உயிரோடிருந்தபோது அவள் தங்களுக்குத் தீங்கிழைக்கப்பார்த்தமையால், அவளது பிணத்தண்டையில் இருந்து அவள் குற்றங்களைத் தாங்கள் மன்னித்துக் கூறினா லல்லாமல் அவளது ஆவி அமைதிபெறாது. இது மலையநாட்டார் தமக்குள் உள்ள ஓர் அறிவற்ற நம்பிக்கையாகத்தான் என் உள்ளத்திற் காணப்படுகின்றது; என்றாலும், அஃது உண்மையான ஒரு கோட்பாடாயு மிருக்கலாம். யாரதன் மெய்ம்மையைச் சொல்லக்கூடும்? தாங்கள் எந்தவகையாலும் அருள் மிகுந்தவர்களாயிருத்தலால், மீனாம்பாள் மறுமையிற் பெறும் நன்மைக்கு அது பயன்படுவ தாயினும் இல்லை யாயினும் வருத்தமற்ற இச் சிறிய உதவிச்செய்கை புரிதலைத் தாங்கள் மறுக்கமாட்டீர்களென்று*

நம்புகின்றேன். பெருமான் நீலலோசன, யான் தங்கட்கு ஏதுந் தீங்கு செய்யேனென்று ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்! ஏனென்றால், தாங்கள் இன்னார் என்பது எனக்குத் தெரியும்! தாங்கள், மேற்கரை நாட்டு மன்னரால் மருமகனாக உரிமைசெய்து கொள்ளப்பட்டவர்கள் அல்லரோ! என்று அங்ஙனந் திகழ்கலை என்னை நோக்கிக் கூறினாள்; அதனால் நானுஞ் சென்றேன். குமுதவல்லி'" என்று அவன் பின்னுஞ் சொல்லுவான், "போற்றத்தக்க நம் நண்பர் மனோகரர் தாஞ் சொல்லிக்கொண்டு வந்த வரலாற்றிற் குறிப்பிட்ட அறிவோள் இந்தத்திகழ்கலையே யாவள் என்பதில் ஐயமில்லை; ஆனாலும், அவளை யான் அறிவேன் என்னும் அறிவிப்பை அப்போது இடையிற் கூறித் தடைசெய்ய விருப்பமின்றியிருந்தேன்; என்னையென்றால், அவர் அதனைப்பற்றி என்னைக் கேட்டிருப் பார், யானும் நேற்று மாலையில் நிகழ்ந்தவற்றையெல்லாம் விரித்துரைக்க வேண்டிய வளாயிருந்திருப்பேன்; யானோ அவைகளைப் புனிதமாகவும், அப்போதங்கே வந்திராத மற்றவர்களெல்லாரையும்பற்றிய அவை மறைவாக வைக்கப்பட வேண்டியன எனவும் எண்ணினேன்."

"தங்களுக்கு நேர்ந்த இடர்களைத் தாங்கள் சொல்லிக் கொண்டு வந்த வரலாற்றிலிருந்து, தாங்கள் முறையிட்டுச் சொல்லவேண்டியனவும், நல்வினையற்ற மீனாம்பாளை மன்னித்தற்கு வாயிலாவனவும் ஆன பிழைகள் தங்கட்குச் செய்யப்பட்டன வென்பது நன்கு புலனாகின்றது. ஆனால், எனக்கு எதிரிடையாய் அவள் யாது தீங்குசெய்து கொண்டிருந் தாள் அல்லது செய்யச் சூழ்ந்துகொண்டிருந்தாள் என்பதுதான் என்னால் எண்ணிப்பார்க்கக் கூடவில்லை." என்று நாகநாட்டரசி குமுதவல்லி கூறினாள்.

இந்த நேரத்தில் மனோகரர் அவ்வறைக்குத் திரும்பி வந்தார்; வந்தது, அவர்களுடைய கூட்டத்தைச் சிறப்பித்துக் கொண்டாடுதற்கும், அவர்களைப் பெருமைப் படுத்துதற்கும் அவர் திட்டம் பண்ணி வைத்த ஓர் உண்டாட்டுக்கு அவர்கள் வந்தருளும்படி தம் இளைய நண்பரான அவ் இருவரையும் வேண்டிக்கொள்ளுதற் பொருட்டே யாம்; ஆகவே, இனிப் பேச வேண்டிய ஒரு செய்திக்கு அவர்கள் பேசத்திரும்புந் தறுவாயில், விரும்பத்தக்க அம்மைத்துனர் இருவரின் பேச்சு திடீரென நின்றுபோயிற்று.

*அம்மலைய வியாபாரி மனைவியை இழந்தவர்: சிறிது காலத்திற்கு முன்றான் அவர்தம் மனைவியார் இறந்துபோனார்; ஆனாலும், அவர்கள் மணஞ்செய்து நீண்டகாலம் இன்புற்று ஒருங்குவாழ்ந்ததன் பயனாக அவரது குடும்ப திருவருளு தவியால் மிகப் பல்கியிருந்தது. அவர்தம் புதல்வரும் புதல்வியரு மெல்லாம் வளர்ந்து பெரியவராயிருந்தார்கள்; அவர்கட்குத் தக்கவாறு மணஞ் செய்யப்பட்டிருந்தது, மிகுதியான செல்வமுங் கொடுக்கப்பட்டிருந்தது, உண்மையிலே மனோகரர்தங் குடும்பம் நீண்டகாலமாகச் செல்வ வளத்தாற் புகழ்பெற்றிருந்தது; தமக்குள் திருமுருகப் போக்குவரவால் தம் வியாபார அலுவல் களை மிகுந்த ஊதியம் பெறுதற்கேற்றபடி நடத்திக் கொள்ளும் வகையாக இம்முதியோன்றன் புதல்வர்கள் கிழக்கே முதன்மை யான பல நகரங்களிலும் தம் இருப்பிடங்களை நிலைப்படுத்தி யிருந்தார்கள்.*

*மனோகருங், குமுதவல்லியும், நீலலோசனனும் அவ்வுண் டாட்டுக்கு வந்து அமர்ந்தார்கள்; அங்கே வேறொருவரும் வரவில்லை; ஏனெனில் முன்னமே சொல்லப்பட்ட எதுக்களால், தம் உயர்ந்தவிருந்தினரைத் தம்மால் இயன்றளவு மறை விடமாகவே வைத்திருப்பதற்குத் தக்கோனான அவ்வியாபாரி ஆவலுற்றிருந்தார்.*

**குமதவல்லி நாகநாட்டரசி**

- முற்றும் -

# அடிகளாரின் நாடகத் திறன்

*செயற்கு அரிய செய்வார் பெரியர் என்ற செம்மொழிக்கேற்ப மறைமலையடிகளார் தமிழுலகில் பற்பல புது நெறிகளை எதிர்கால மக்களுக்கு எடுத்துரைத்துச் சென்றுள்ளார். கட்டுரை உலகிலும், ஆராய்ச்சிக் கடலிலும் அவர் கண்டுணர்த்தாத பகுதிகள் மிகக் குறைவே. தாய்மொழிக்குச் செய்யவேண்டிய கடமையார்வமும், அக் கடமையைச் செவ்வனே ஆற்றுதற்குரிய அறிவின் ஆழமும் கொண்ட அடிகளார் கன்னித் தமிழின் படைப்பிலக்கியத் துறையில் புத்தொளி பாய்ச்சத் தலைப் பட்டார். அப் புதுநெறியில் பழைமையின் துணையும் மரபின் வளமும் கொண்டு ஆக்கப் படைப்பினைக் கலைத் துறைக்கு ஏற்ற வண்ணம் உருவாக்கினார்.*

*முன்னோர் நெறியைப் பின்பற்றும் சால்பு நெறியையே நாடகத் துறையில் அடிகளார் பின்பற்றினார். குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு ஆகிய இலக்கியங்களை ஆராய்ந்து உரை எழுதும்போது பழைய உரையாசிரியர்களிலிருந்து மாறு பட்டார்; தாமெடுத்த கொள்கையை நிலைநாட்டினார். அப் போக்கிலிருந்து மாறிய போக்கினை நாடகத்துறையில் அடிகளார் விதைத்துள்ளார். நாடகத் தமிழின் 'விடி வெள்ளி' கள் முளைத்த காலத்தில் அவ் வொளியின் துணையால் தம் பணியை மூன்று நெறிகளில் செய்து முடித்தார். அவை யாவன :*

*1. துணைமை நெறி, 2. ஆய்வு நெறி, 3. தன்னாக்க நெறி என்பவையாம்.*

## துணைமை நெறி

*மேனாட்டு உரைநடைக்கு வளமூட்டிய அடிசனாரின் ஆறு கட்டுரைகளைத் தமிழ் மக்கள் துய்க்கும் வண்ணம் மொழி*

பெயர்த்தார். அத்துடன் காளிதாசரின் சாகுந்தல நாடகத்தை தீந்தமிழில் வடித்துத் தந்தார். ஷேக்ஸ்பியருடன் காளிதாசனை ஒப்பிட இயலாது என அறிஞரொருவர் பேசினார். அதைக் கேட்ட அடிகளார் அதை ஏற்காமல் உண்மை காண முயன்றார். ஷேக்ஸ்பியருக்குத் தலைசிறந்த அறிஞர்களாம் உல்திசி, செர்விநசு, சுலேகல், சுவின்பர்ன், டௌடன், புரூக், பிராட்லே, சைமன், அட்சன், மோல்டன், நோர்கன், பிராண் டெசு போன்றவர்கள் எழுதிய விளக்கவுரைகளை எல்லாம் கற்றுணர்ந்து தாம் மொழிபெயர்த்த சாகுந்தலத்தின் பின்னிணைப்பாகத் தொண்ணூறு பக்க அளவில் விளக்கவுரையை இணைத்துள்ளார். இப்பார்வை, இளம்பூரணம், நச்சினார்க் கினியம், பேராசிரியம் சென்ற போக்கிலே யிருந்து மாறு பட்டது. மேலும் நாடக இலக்கியத்தைப் புதிய முறையில் பார்க்கும் நெறியைத் தெளிவாக உணர்த்தியது.

## ஆய்வு நெறி

விளக்கவுரையுடன் 'சாகுந்தல நாடக ஆராய்ச்சி' என்ற புத்தம் புதுத் திறனாய்வுச் செல்வத்தை அடிகளார் படைத்தார். தமிழிலக்கிய உலகில் இவ்வேடு ஈடு இணையற்றதாகும். 'சாகுந்தல நாடகம்' 1906இல் மொழிபெயர்க்கப் பெறினும் திறனாய்வு மலர 28 ஆண்டுக்காலம் இடைவெளி அமைந்த தென்றால் படைப்புக்குரிய பண்பு நலன்களை ஆராய அடிகளார் பட்டபாடு நன்கு புலனாகும்.

## தன்னாக்க நெறி

பிறமொழி இலக்கியங்களை வழிகாட்டியாகக் கொண்டு வளர்ச்சி பெற நினைப்போரில் மொழி பெயர்த்த நிலையி லேயே தன்னிறைவு பெற்று விடுவோரும் இருப்பர். இலக்கியம் எப்படி அமையவேண்டும் என இலக்கண முறையில் விதிமுறைகளைக் கூறிப் படைப்பிலக்கியத் துறையில் கால் வைக்காமலேயே நின்றுவிடுவோரும் இருப்பர். ஆனால், அடிகளாரோ தமிழ் நாடகத் துறை பின்பற்றுதற்குரிய இலக்கியத்தைச் சாகுந்தல மாகத் தந்ததுடன் அமையாமல் நாடக ஆராய்ச்சி முறையில்

*நாடகப் பண்புகள் பற்றிய தெளிந்த அறிவையும் ஊட்டினார். இத்துடன் தாமே 'அம்பிகாபதி அமராவதி' என்ற நாடகத்தையும் இயற்றியுள்ளார். இதற்குரிய தூண்டுதலைப் பெற்ற ஊற்றுக் கண்கள் வியப்பிற்குரியன.*

## நாடகத் தூண்டல்

*நாடகப் பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை அவர்கள் அடிகளார்க்குச் சான்றிதழ் நல்கும்போது 'தாய்மொழிப் பற்றுக் குறைந்த இக் காலத்தில் இவர் தமது நுண்ணறிவைத் தமிழ் நூல்களில் முற்றும் செலுத்தி நன்காராய்ந்துவருதல் பாராட்டுக்குரியது' என 2-12-1895இல் குறிப்பிட்டார். இதனை மெய்ப்பிக்கும் வகையில் அவர் தலைமையில் திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் 12-9-1896 அன்று 'நாடகத் தமிழ்' பற்றி விரிவுரையாற்றி மனோன்மணீயம் பாடிய வாயால் பாராட்டுரை பெற்றார் எனில் அடிகளார்க்கு அமைந்த நாடகப் புலமையைப் பாராட்டற்குரியவர் பாராட்டினார் எனலாம். மேலும் 'நாடக இயல்' நல்கிய பரிதிமாற் கலைஞருடன் தமிழ்ப் பணி புரியும் வாய்ப்பைப் பெற்ற அடிகளாரை அவ் வறிஞர் பெருமகன் 'உரைநடை கைவந்த வல்லாளார்' எனப் போற்றினார். இங்ஙனம் நாடக இலக்கண இலக்கியம் படைத்த நல்லறிஞர்களின் கூட்டுறவும் மதிப்பீடும் அடிகளாரைத் தமிழ்நாடகத் துறையிலும் பணிபுரியத் தூண்டின.*

## நாடகத் தலைப்பு

*நாடகத் தலைப்பும் தலைவன் தலைவிக்கு ஒத்துரிமை உடையதாக 'அம்பிகாபதி அமராவதி' என அமைந்துள்ளமை கூர்ந்து நோக்குதற்குரியது. அடிகளார்க்கு 'ரோமியோ சூலியட்டு' என்ற ஷேக்ஸ்பியரின் காதல் நாடகத்தின் மீது அளவு கடந்த பற்றுண்டு என்பதைச் 'சாகுந்தல நாடக ஆராய்ச்சி' வாயிலாக அறிகிறோம். எனவே அறிவில் சிறந்த அம்பிகாபதியும் பெண்மை நலத்தில் சிறந்த அமராவதியும் ஒருங்கே அடிகளார் உள்ளத்தில் இடம் பெற்றுள்ளமையால் அவர்கள் பெயரே நூற்பெயராக உருக்கொண்டு வெளி வந்துள்ளது.*

## காட்சிப் பெருக்கம்

இனி அடிகளாரின் நாடகத் திறனைக் காண்போம். அடிகளாரியற்றிய நாடகத்தை ஐந்து நிகழ்ச்சிகள் (ACTS) கொண்டதாக அமைத்துள்ளார். ஏழு நிகழ்ச்சிகள் கொண்ட அமைப்பை விட ஐந்து நிகழ்ச்சிகள் கொண்ட இவ்வமைப்பே நாடகக் கருவளர்ச்சிக்கு ஏற்றது என எண்ணிய எண்ணம் புலப்படுகிறது. நிகழ்ச்சிகளை மேலும் காட்சிகளாகப் பகுக்கும் போது நாடக ஆசிரியர் தாம் கைக் கொண்ட கதைக் கருவிக்கேற்ப எண்ணிக்கையைச் சுருக்கவோ பெருக்கவோ செய்வர். அதனால் கதைக் கருவின் வளர்ச்சி வடிவையும் அழுத்தத்தையும் அறிய இயலும். அம்பிகாபதி அமராவதியுள் காதல் விதை முளைத்துத் தளிர்த்துப் பல தடைகளுக்குத் தப்பி இறுதியாகக் காதல் மணம் கைகூடும் என்று ஆர்வத்தை மூட்டிப் பின் முற்றுப் பெறாமல் உதிர்ந்து விடுகிறது. இவ் வளர்ச்சி நிலைக்கு ஏற்ப

| செயல்நிலை | நிகழ்ச்சி | காட்சி |
|---|---|---|
| விதை | 1 | 2 |
| முறை | 2 | 2 |
| தளிர் | 3 | 10 |
| மலர் | 4 | 11 |
| கனி | 5 | 15 |

என அமைத்துள்ளார். இவ் வேறுமுக எண்ணிக்கையில் காட்சிகளைப் பெருக்கிக் கொண்டே செல்லும்போது பின்னிகழ்ச்சிகளின் செறிவையும் பரப்பையும் உணரமுடிகிறது.

## காதற் சிக்கல்

காதல், சங்ககாலச் சமுதாயத்திலிருந்து இடைக்கால நிலையில் வேறுபட்டுச் சாதியாலும் ஆட்சியாலும் நசுக்கப் பட்டது. அவை யிரண்டும் ஒப்புயர்வற்ற புலவர் கம்பரையே இராமாயணத்தை அரசவையில் அரங்கேற்றவிடவில்லை. உவச்சர் குலம் அரசகுலத்தை விடத் தாழ்ந்தது என்ற கருத்து தலைமக்களின் காதலுக்கத் தடையாக அமைந்தது. அதனைக்

'கூத்த மனம்' கொண்டவர்கள் கூடிய மட்டும் தன்னலத்திற்குப் பயன்படுத்திக் கொண்டனர் எனவும் தெரிகிறது. இச் சிக்கலின் அடிப் படையில் அம்பிகாபதி அமராவதி காதல் மாளிகை எழுந் தாலும் அடிகளாரின் கல்வி மணமே நாடகமெங்கும் வீசி விளங்குவதால் சாதியின் கொடுமையோ அதன் தீய செயல் களோ மேலோட்டமாகவே விளங்குகின்றன.

## உரையாடல்

படித்தற்குரிய நாடகத்தையே அடிகளார் படைத்துள்ளார். சாகுந்தல நாடகப் பதிப்புரையில், பதிப்புக்குப் பதிப்பு நடைச் செம்மை பெற்ற முறையை அடிகளார் கூட்டியுள்ளார். அடிகளாரின் முதிர்ந்த காலத்தில் முழு உருவத்தைப் பெறப் பலநாள் உருவெடுத்த இந்நாடகம் அடிகளாரின் முதிர்மொழிச் செம்மையினை நன்கு எடுத்துக் காட்டும் இடங்கள் பலப்பல. அதே காலத்து எளிய மக்களும் கோமாளியும், பேச்சு மொழியிலேயே உரையாடுகின்றனர். எனவே நாடகமாந்தர் தம் உரையாடல் அவர்தம் தகுதிக்கேற்ப அமைய வேண்டும் என்ற கொள்கையை அடிகளார் பின்பற்றியுள்ளார்.

## பாடல்கள்

நாடகம் உரைநடையில் அமைந்திருப்பினும் மொத்தம் 90 பாடல்களுக்கு மேலாக நாடகத்தின் அகத்தே காண்கிறோம். திருக்குறள், சிலப்பதிகாரம், கோவையார், தனிப்பாடல்கள் போன்றவையும் இடையிடையே 'பொன்போல்' ஒளி வீசுகின்றன. அடிகளாரின் சைவப் பற்றிற் கேற்ப முதலும் முடிவும் சிவன் வணக்கமாக அமைவதுடன் சிவ வாழ்த்தாக எண்ணற்ற பாடல்கள் விளங்குகின்றன. சிற்சில இடங்களில் உரையாடலும், மனோன்மணீய நெறியில், பாடல்களாக அமைந்துள்ளது.

## காட்சி விளக்கம்

உரையாடலில் இயற்கை விளக்கம் பெற்றுள்ள இடங்கள் எண்ணற்றன. காலைக் கதரவனின் தோற்றம் ஒவ்வொரு மாந்தர்க்கும் ஒவ்வொரு வகையான எண்ணத்தைத் தோற்று விக்கும். கதிரவன் தோற்றம் சோழ மன்னனுக்கு அரக்கரின்

மாயவலையினைக் கிழித்துக் கொண்டு புறப்படும் திருமாலின் திகிரிப் படையாகத் தெரிகிறது. பகையை வெல்ல நினைக்கும் அரசன் கண்ணுக்கு அப்படித் தெரிவது பொருத்தமே. அமைச்சர் கண்ணுக்குக் கதிரவனின் வட்ட வடிவம் தேனடை போலவும், கதிரொளி அடையிலிருந்து பாயும் தேன் போலவும், பறவைகள் காலையில் எழுந்து பறந்து செல்வது அத் தேன் ஒழுக்கினைப் பருகச் செல்வது போலவும் தெரிகிறது.. ஆட்சிப் பொறுப்பை ஆக்கப்பணிக்குப் பயன்படுத்தத் திட்டம் தீட்டும் அமைச்சர் கண்ணுக்கு அவ்வாறு தோன்றுவது ஏற்புடைத்து. அரசியின் கண்ணுக்கோ இயற்கை காட்சி மாறுபடுகிறது. கோபுரம் பூதம் போலவும், கோபுரம் கலசம் சிவனருட்பேரமிழ்தினைத் தாங்கி நிற்பது போலவும் தோன்றுகின்றன. தாய்மை உணர்வு இயற்கையில் இறைவனைக் காணுமாறு செய்கிறார் அடிகளார். இங்ஙனம் இயற்கைக் காட்சியை நாடக மாந்தர் தத்தம் இயல்புக்கேற்பக் காணுமாறு அடிகளார் படைத்துள்ளமை புலனாகிறது.

## நாடக மாந்தர்

நாடக மாந்தர்களின் படைப்பில் தான் நாடகம் சீர்மை பெறும். நாடகத்தின் தலைமை மாந்தனாம் அம்பிகாபதி புகழ் பெற்ற புலவர்களாம் கம்பர், கூத்தருடன் வருவதைக் காட்டி அவனுடைய தகுதியைக் கூறாமல் கூறுகிறார் அடிகளார். இரண்டாம் நிகழ்ச்சி முதற்காட்சியிலேயே அம்பிகாபதியின் அறிவு நும்பம் வெளிப்பட்டுத் தன்னிகரற்று விளங்குகிற்று. ‘புலவன்’ என்ற சொல்லுக்கு விளக்கம் கூறும்போதும்., மெய்ப்பொருள் அறிவை உரைக்கும்போதும் காப்பிய மாந்தர் கூற்றையும் காப்பியப் புலவன் கூற்றையும் பிரித்துணர்த்தும் போதும் அவனுடைய நுண்மாண் நுழைபுலம் வெளிப்படுகிறது. இராமாயண அரங்கேற்ற அவையில் அம்பிகாபதியை அடிகளாரின் ஆசிரியர் சண்டமாருத சோமசுந்தர நாயகரையே காண்கிறோம். அமராவதிக்கு அவன் பாடம் கூறும்பாங்கில் பொதுநிலைக் கழக ஆசிரியரையே காண்கிறோம். தொடக்கத்தில் காதல் என்பது கணவனுக்கும் மனைவிக்கும் உள்ளம் பிரியா நேசம் என்பதை நூல் வாயிலாக அறிந்த ஏட்டுப் புலவனாகவே

விளங்குகிறான் அம்பிகாபதி. தன் முதல் மனைவி இறந்தபோது பிரிவுக் காற்றாமல் துன்புற்றானே ஒழியக் காதல் என்ற அகவுணர்வின் உயர் வடிவைக் கண்டவன் அல்லன்.

ஆயினும் அம்பிகாபதி, அமராவதியைக் கண்டு ‘மயக்கம்’ கொண்ட நாள் முதல் பூங்கா மண்டபத்தில் காதல் புதுவிருந்து உண்ணும் காதலனாகி, விடியும் வரை புதிய ரோமியோவாக மாறியது வியக்கத் தக்கது. அத்துடன் அம்பிகாபதியின் வளர்ச்சி, கொடுமுடியை எட்டி விட்டது எனலாம்.

## வாழ்வாங்கு வாழ்ந்தவர்

**(வாழ்க்கைச் சுவடுகள்)**

"கற்றவர் பயிலும் நாகைக் காரோணம்" என்று இற்றைக்குச் சற்றேறத்தாழ 1300 ஆண்டுகட்கு முன்னரே செந்தமிழ்ச் சிவநெறிச் சான்றோர் ஆகிய திருநாவுக்கரசரால் புகழ்ந்தோதப் பெற்ற சிறப்புடையது நாகப்பட்டினம். "பொன்னிநாடு எனும் கற்பகப் பூங்கொடி மலர்போல் நன்மை சான்றது நாகப்பட்டினத் திரு நகரம்" என ஆசிரியர் **சேக்கிழார்** இதனைப் போற்றிப் பாராட்டியுள்ளார்.

இத்தகைய சிறப்புடைய நாகப்பட்டினத்தைச் சேர்ந்த, காடம்பாடி (காடவர்கோன்பாடி) என்று ஒரு பகுதி உள்ளது. பொழில்கள் பல சூழ்ந்து எழில் நிறைந்த தூய இனிய அந்தச் சிற்றூரில் சோழியச் சைவ வேளாளர் குலச் செம்மலாய் **சொக்கநாதபிள்ளை** வாழ்ந்து வந்தார். அவர், நாகப்பட்டினத்தில் அறுவை மருத்துவத் (Surgeon) தொழில் புரிந்து சிறந்து, செல்வராகத் திகழ்ந்தார். நாகப்பட்டினத்திலும் அவருக்கு ஒரு வீடு இருந்தது. அதன்கண் அவர் தம் காதற்கினிய அருமை மனைவியாராகிய சின்னம்மை என்பவருடன் நன்கினிது இல்லறம் நடாத்தி வந்தார். எல்லா நலங்களும் இனிதமையப் பெற்றிருந்த இவ் விருவருக்கும் மகப்பேறு வாய்க்காத ஒரு குறை மட்டும் இருந்தது.

மகப்பேறு எய்துதல் வேண்டி, அம்மையார் எத்துணையோ பல நோன்புகள் ஆற்றினார்; நேர்த்திக் கடன்கள் மேற்கொண்டார்; இறையருளை வேண்டிப் பாடுகிடந்தார். இவர் தம் இல்லத்திற்குச் சிறந்த சிவநெறித் துறவியார் ஒருவர் எழுந்தருளினார். அவர்தம் தூய ஏற்றமும் தோற்றமும் கண்ட இருவரும் அவரை இன்முகங்காட்டி, நல்லுரை கூறி வரவேற்றனர். அறுசுவை அமுதூட்டி விருந்தோம்பி மகிழ்ந்தனர்.

அது போழ்து, சிறந்த அத்துறவியார் சின்னம்மையாரின் மனக்கவலையை அறிந்தார்.

'தொண்டை நாட்டில்' பாடல் பெற்ற சிவத்திருவிடங்களுள் திருக்கழுக்குன்றம் என்பதொன்று சிறந்து திகழ்கின்றது. நீவிர் இருவரும் சென்று, சில காலம் தங்கி நோன்புகள் புரிந்து காலை மாலை இருவேளைகளிலும், முறைப்படி மலைவலம் வந்து இறைவனை (வேதாசலப் பெருமானை) வழிபாடு செய்யுங்கள். அப்பெருமானின் அருளால்,'பிள்ளையினோடு உள்ளம் நினைவு ஆயினவே வரம் பெறுவீர். ஐயுறல் வேண்டா; உங்கள் இருவருக்கும் விரைவில் ஓர் ஆண் மகப்பேறு வாய்க்கும்' என்று அருளிச் செய்து போயினார்.

அவ் அருட்பெருஞ் சான்றோர் அறிவுறுத்தியருளியபடியே, சொக்கநாத பிள்ளையும் சின்னம்மையாரும் திருக்கழுக்குன்றம் போந்து ஒரு மண்டல காலம் (40 நாட்கள்) தங்கி அன்புடன் வழிபட்டனர். இறைவனின் இன்னருளால் சின்னம்மையாரின் மணி வயிற்றில் கரு வாய்த்தது.

செந்தமிழும் சிவநெறியும் செய்த தவப்பயன்போல, "அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல", திருஞானசம்பந்தப் பெருமானையும் மெய்கண்ட தேவரையும் நினைப்பிக்கும் வகையில், தனித்தமிழ் இயக்கத்தின் தந்தையும் - சைவ சித்தாந்தக் கோட்பாட்டுப் பெருஞ்சான்றோரும் - **மும்மொழிப் புலமைச் செம்மலாரும்** - பல்கலைக் குரிசிலும் ஆகப் பிற்றை நாளில் சிறந்தினிது திகழ்ந்து பிறங்க இருக்கும் அழகியதோர் ஆண் குழந்தை ஒன்றைச் சின்னம்மையார் திருவள்ளுவர் ஆண்டு 1907 ஆடித் திங்கள் முதல்நாள் (15-7-1876) இல் பெற்றெடுத்தார்.

திருக்கழுக்குன்றத்தில் உள்ள வேதாசலப் பெருமானின் அருளாற் பிறந்த தமது ஆருயிர்க் குழந்தைக்கு **வேதாசலம்** எனவே பெற்றோர்கள் பெயரிட்டு வழங்கி மகிழ்ந்தனர். வேதாசலம் எனும் இப் பெயரே, பின்னாளில் துறவறம் பூண்டபொழுது **'சுவாமி வேதாசலம்'** எனவும், தனித்தமிழ் இயக்கம் தோற்றி நடத்தும் சால்பும் குறிக்கோளும் நேர்ந்த பொழுது 'மறைமலை அடிகள்' எனவும் வழங்குவதாயிற்று.

மறைமலையடிகள், தமது இளமைப் பருவத்தில் நாகப்பட்டினத்தில் செவ்விதின் நடைபெற்று வந்த வெசுலியன் கிறித்தவ உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து பயின்று வந்தார். பள்ளியில் அளிக்கப் பெற்று வந்த கல்வியின் அளவு இவர் எல்லையற்ற அறிவு வேட்கையைத் தணிப்பதாக இல்லை. அதனால் அடிகளார் இடைவிடாது பலநூல்களைத் தாமாகவும், தக்கார் சிலரிடத்தும் பயின்றுவர முற்பட்டார்.

நாகப்பட்டினத்தில் அந்நாளில் **திரு.வே. நாராயணசாமி பிள்ளை** என்னும் நல்லறிஞர் ஒருவர் இருந்தார். அவர் புலவரேறு **மீனாட்சிசுந்தரம் பிள்ளை** அவர்களின் மாணவர்; மனோன் மணியம் **பெ. சுந்தரம் பிள்ளை** அவர்களுக்கு ஆசிரியராய்த் தமிழ் கற்பித்தவர். புத்தகக்கடை வாணிகம் புரிந்து வந்த அவ் வித்தகரை அடுத்து, நமது அடிகளார் தமிழ் நூல்கள் பலவற்றைப் பாடம்கேட்டுப் பயின்று பயன் பெறலானார். பதினைந்தாம் அகவையில் முறைப்படி துவங்கப்பெற்ற தமிழ்ப் பயிற்சியானது அடிகளார்க்கு அவர்தம் 21ஆம் அகவையில் பெரும்பாலும் நிறைவுற்றது. குறிப்பிடத்தக்க பழந்தமிழ் நூல்களிற்பெரிதும் அழுந்தி நின்று, செழும்புலமை சிறந்த இனிய விழுமிய செந்தமிழ் நடையில் உரையும் செய்யுளும் பொருள்பொதுள இயற்றும் திறம் அடிகளார்க்கு மிக இளமைப் பருவத்திலேயே வாய்ப்பதாயிற்று. அதுபோல நாகையில் வாழ்ந்த சைவத்திறன் வல்லார் **சொ. வீரப்பச் செட்டியார்**பால் சைவ சமயக் கோட்பாட்டடிப் படைகளை உணர்ந்தார்.

அடிகளார் 16ஆம் அகவையினராக இருந்தபொழுதே தம்மொடு ஒத்த இளைஞர்களுக்குத் தமிழறிவும் சமய உணர்வும் ஊட்டும் நோக்கத்துடன் 'இந்துமத அபிமான சங்கம்' என ஒரு சங்கத்தினைத் தோற்றுவித்து, மிக்க ஆர்வத்துடன் நடத்திவந்தார். காரைக்காலினின்று வெளிவந்த **'திராவிட மந்திரி'** நாகப்பட்டினத்தில் நடைபெற்ற **'நாகை நீலலோசனி'** என்னும் கிழமை இதழ்களுக்குத் தொடர்ந்து கட்டுரைகள் பல அடிகளாரால் எழுதப்பெற்று வந்தன.

அடிகள் தம் பன்னிரண்டாம் அகவையில் தந்தையாரை இழந்தார். ஒரேபிள்ளை யாதலால் அன்னையாரால் அன்பாகவும் கண்டிப்பாகவும் வளர்க்கப்பட்டார். அடிகளார் செந்தாமரையன்ன சிவந்த ஒளிநிற உடம்பும், பொருத்தமான உறுப்பமைப்பும், உடல்

வளமும், பீடு நடையும், திருமுகப் பொலிவும், தோற்றத்தின் ஏற்றமும் கண்டாரெல்லாரும் தம்மை மறந்து வியப்பும் மகிழ்வுங் கொள்ளுமாறு விளங்கினார்.

இத்தகு சிறந்த இளைஞராம் அடிகட்குச் சின்னம்மை திருமணம் முடிக்க எண்ணினார். பெண்ணைத் தேர்ந்து கொள்ளும் உரிமையை மகனுக்கே வழங்கினார். குழந்தைப் பருவம் முதல் குறும்பு செய்து கூடி விளையாடிய ஒன்றுவிட்ட மாமன் மகள் **சவுந்தரத்தைத்** தம் வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்ள அடிகள் உளங் கொண்டார். அடிகளாரது உளப்படியே தி.பி. 1924 (கி.பி. 1893) இல் திருமணம் மிகச் சிறப்பாக நிகழ்ந்தது. அதுபோது அடிகளாருக்கு அகவை -17.

அடிகள் தம் பதினெட்டாம் அகவையில் ஒரு பெண் மகவுக்குத் தந்தையாயினர். அக்காலை ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான சீவகசிந்தாமணியில் அடிகள் உள்ளம் தோய்ந்திருந்தார். அவ்வுளப் பாங்கோடு தம் மகளுக்குச் **சிந்தாமணி** எனப்பெயரிட்டு மகிழ்ந்தார். அடுத்தடுத்துச் சில குழந்தைகள் பிறந்திறந்தன. சென்னை வாழ்க்கையின் போது பிறந்த பெண்குழந்தைக்கு நாகப்பட்டினத்திறைவியின் பெயரை நினைவு கூர்ந்து **நீலாம்பிகை** எனப் பெயரிட்டு உவந்தார் அடிகள். அடிகளாருக்குத் தனித்தமிழ் இயக்க எண்ணம் தோன்றக் காரணமாக இந்நீலாம்பிகையாரே அமைந்தார்கள். நான்கு ஆண் மக்களைப் பெற்ற அடிகளார் சைவ சமயக் குரவர் பால் கொண்ட ஆழ்ந்த பற்றின் வெளிப்பாடாய்த் **திருஞானசம்பந்தம், மாணிக்க வாசகம், திருநாவுக்கரசு, சுந்தரமூர்த்தி** எனப் பெயரிட்டார்கள்.

தமது இயற்றமிழ் ஆசிரியராகிய புத்தகக்கடை வே. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் வாயிலாக அடிகளார் பேராசிரியர் மனோன்மணீயம் பெ. சுந்தரம் பிள்ளை அவர்களைப் பற்றிக் கேள்வியுற்று அறிந்தார். அகவற்பாவில் அவருக்கு அழகிய முடங்கல் விடுத்தார். அது கண்டு மகிழ்ந்த பிள்ளையவர்கள் விரும்பியவாறு, தாமும் தம் ஆசிரியருமாகத் திருவனந்தபுரம் சென்று (நவம்பர் 1895) அவரைக்கண்டு அளவளாவி மகிழ்ந்தார்.

பின்னர் ஒருமுறை தி.பி. 1927 (கி.பி. 1896) ஆம் ஆண்டில் சுந்தரம் பிள்ளை அவர்கள் அடிகளார்க்கு எழுதி, அவரைத்

திருவனந்தபுரத்திற்கு வருமாறு அழைத்தார். அந்நகரில் மார்த்தாண்டன்தம்பி என்பவர் நடத்திவந்த ஓர் ஆங்கிலப் பள்ளியில், தமிழாசிரியப் பணிபுரியும் வாய்ப்பினை அடிகளார்க்குப் பெற்றுத் தந்தார். தமது உடல் நலத்திற்கு ஏற்றதாகத் திருவனந்தபுரம் இல்லாமையினால் அடிகளார் இரண்டரைத் திங்களிலேயே அப்பணியை விடுக்க நேர்ந்தது.

அடிகள் நாகையில் மாணவராக இருந்தபோது நாகை வெளிப்பாளையம் சைவசித்தாந்த சபைக்கும், நாகைக் காரோணர் கோயிலுக்கும், சென்னையிலிருந்து போந்து **‘சைவசித்தாந்த சண்ட மாருதம்’ சீலத்திரு சோமசுந்தர நாயகர்** என்னும் சைவப் பெருஞ் சான்றோர் ஆற்றிய அரும்பெரும் சொற் பொழிவுகளை அடிகளார் அவ்வப்போது கேட்டு மகிழ்ந்து பயன்பெற்று வந்தார். அதனால் அடிகளார்க்கு நாயகர் அவர்கள் பால் இயல்பாகவே பேரன்பும் பெரு மதிப்பும் ஏற்பட்டுப் பெருகி வந்தன. அந்நிலையில் தி.பி. 1928 (கி.பி. 1897) ஆம் ஆண்டில் நாகையில் நடைபெற்று வந்த **‘சற்சனர் பத்திரிகை’** எனப் பெயரிய இதழ் ஒன்றில், ஒருவர் நாயகரின் சைவக் கோட்பாட்டுக் கருத்துக்களை மறுத்துப் பழித்து எழுதி வந்தார். அதனைக் கண்ட அடிகளார், அவரின் கொள்கையும் கூற்றும் சிறிதும் பொருத்த மற்றன என எடுத்துக் காட்டி **‘நீலலோசனி’** என்னும் இதழில், **‘முருகவேள்’** என்ற புனை பெயரில் தொடர்ச்சியாகப் பல கட்டுரைகள் எழுதினார். அதனைக்கண்டு வியந்து மகிழ்ந்த சோமசுந்தர நாயகர், தம்பால் மிக்க அன்பும் பற்றும் தோன்ற அக்கட்டுரைகளை எழுதியவர் யாவர், என வினவி யறிந்து, அடிகளாரை நேரிற்காண விழைந்தார். நாயகர் விழைந்தபடியே, அவர்கள் சில திங்கள் கழித்து நாகப்பட்டினத்திற்கு வந்தபோது, **மதுரை நாயகம் பிள்ளை** என்பவர், அடிகளாரை நாயகரிடம், அழைத்துச் சென்று அறிமுகம் செய்து வைத்தார். அடிகளாரின் அறிவும் அழகும் அன்பும் பண்பும் கண்டு, நாயகர் பெரிதும் வியந்து மகிழ்ந்தார். ஒப்புயர்வற்ற ஆசிரியரும் மாணவரும் தம்முள் ஒருங்கு கூடி உயிர்போலப் பிரிவரிய தொடர்பு கொண்டு, உள்ளம் களிதுளும்பினர். அடிகளார் பால், சீர்காழிச் சிற்றம் பல நாடிகள் இயற்றிய ‘துகளறுபோதம்’ என்னும் நூலை அளித்து, ‘இதற்கு இனியதோர் உரைவரைக’ எனப் பணித்தார். அவர் பணித்தபடியே சின்னாளில் அந்நூற்குச் சொற்சுவை

பொருட்சுவை துளும்பவும், சைவக் கோட்பாட்டு நுட்பங்கள் மிளிரவும், அடிகளார் ஓர் அரிய உரை வகுத்து நாயகருக்கு அனுப்பினார். அதன் அருமை பெருமைகளை ஆராய்ந்து கண்டு அகமகிழ்ந்த நாயகர், 'இது சிவஞான முனிவரின் சீரிய உரையோடு ஒப்பது ' என்று பாராட்டி, அதனைத் தம் செலவிலேயே அச்சிட்டு வெளிப்படுத்தினார்.

அம்மட்டோ! ஒரு கால் நாயகர் நாகைக்கு வந்தபோது, அடிகளார்பால் 'நின்னை விரைவில் சென்னைக்கு வருவிப்போம். நீ அப்பக்கங்களில் இருந்தாற்றான் நலம் விளையும்' என அன்புரை கூறிச் சென்றார். தாம் கூறிச் சென்றவாறே, ஒரு சில நாட்களில் அடிகளாரைச் சென்னைக்கு வருவித்தார். தம்பாற் பயின்றவரும், ஆந்திரநாட்டிற் சித்தூரில் மாவட்ட நடுவராக இருந்தவரும் ஆகிய **சே.எம். நல்லசாமிப் பிள்ளைக்கு**, அடிகளாரை அறிமுகம் செய்துவைத்தார். அவர், தாம் ஆங்கிலத்திலும் தமிழிலுமாகச் சித்தூரில் தொடங்க இருந்த **'சித்தாந்த தீபிகை'** என்னும் திங்கள் இதழை நடத்தும் அறிவுப் பணியில் அமர்த்தினார். சித்தாந்த தீபிகைத் தமிழ்ப் பதிப்பின் முதலைந்து இதழ்கள் வரையில் ஆசிரியராக இருந்து அடிகளார் அரிய பல கட்டுரைகள் வரைந்து வந்தார். ஆயினும், தமது குடும்பச் சூழ்நிலை கருதி, ஒரு சில திங்களுக்குப் பின்னர் அடிகளார் சித்தூரினின்று நாகைக்குத் திரும்ப நேர்ந்தது.

சென்னைக் கிறித்துவக் கல்லூரிக்கு ஒரு தமிழாசிரியர் வேண்டியிருந்தது. அச்செய்தி அறிந்த நாயகர், உடனே நாகையில் இருந்த அடிகளார்க்கு எழுதி, அவரைச் சென்னைக்கு வருமாறு பணித்தார். அப்பதவிக்கு அக்காலத்து இருந்த பெரும்புலவர்கள் பலர் போட்டியிட்டனர். ஆயினும், அவர்களுள் எல்லாம் மிக இளைஞராக இருந்தும், புலமையிற் சிறந்திருந்த அடிகளாரையே அக்கல்லூரியின் தலைவராக விளங்கியிருந்த **வில்லியம் மில்லர்** என்பவர், திறம் தெரிந்து தேர்ந்தெடுத்தார். அதுபோது அடிகளாருக்கு அகவை 22.

சென்னைக் கிறித்தவக் கல்லூரி, அந்நாளில் உயர் நடுவர் மன்றத்திற்கு அண்மையில் அதன் எதிரில் இருந்தது. அடிகளார் இலிங்கிச் செட்டித் தெரு முதலிய இடங்களிற் குடியிருந்து வந்தார். அந்நாளில், கல்லூரிகளில் தமிழுக்கும் தமிழாசிரியருக்கும்

போதிய மதிப்பு இருந்ததில்லை. அந்நிலை அடிகளாரால் அறவே ஒழிந்தது. அடிகளார் வழங்கும் தமிழ் அமிழ்தத்தைப் பருகி மாணவர்கள் அனைவரும் மகிழ்ந்தனர். பிற கல்லூரி மாணவர்களும், அடிகளாரின் தமிழ் வகுப்புக்களுக்குப் பெரு விருப்புடன் போந்து அமர்ந்து பாடங் கேட்டுப் பயின்று பெருங் களிப்பு எய்தினர்.

அந்நாட்களில் அடிகளார் அவ்வப் போது திருவொற்றியூர் சிவபிரான் கோயிலுக்குச் சென்று வழிபட்டு வரும் பழக்க முடையவராக இருந்தார். அக்கோயிலிலுள்ள முருகப் பிரான்பால் அடிகளார் பேரன்பு கொண்டிருந்தார். ஒரு கால் தமக்கு உற்ற உடற்பிணி தீரும் பொருட்டுச் செய்துகொண்ட நேர்த்திக் கடனை ஒட்டி அடிகளார் 'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை' என்னும் சிறந்த நூலை அம் முருகன் மீது இயற்றி மகிழ்ந்தார்.

சென்னையில் கிறித்தவக் கல்லூரியில் பணியாற்றத் தொடங்கிய நாள் முதல் அடிகளார்க்குத் தம் ஆசிரியர் நாயகர் அவர்களிடம் மிகவும் நெருங்கிப் பழகி மகிழும் பெருவாய்ப்புக் கிடைத்தது. அடிகளார் நாயகர் அவர்கள்பால் 'சிவஞான போதம்' முதலிய சைவக் கோட்பாட்டுப் பெரு நூல்களைப் பாடங் கேட்டுத் தெளிந்து பயன் பெற்றார். தந்தையும் மைந்தனும் போல, இவ்விருவரும் ஒருவரை ஒருவர் இன்றியமையாதவராக விரும்பிப் பழகி, அறிவுப் பணிகள் பல புரிந்து, சைவமும் தமிழும் பரப்பி வந்தனர். இந் நிலையில் 22-2-1901 இல், சோமசுந்தர நாயகர் அவர்களின் மறைவு நேர்ந்தது. அதனால் அடிகளார் எய்திய துயரத்திற்கு அளவே யில்லை. தமது ஆசிரியரின் மறைவு குறித்து நிகழ்ந்த இறுதிச் சடங்கில், சென்னைத் தமிழ் பெரும்புலவர்கள் பலரும் கூடியிருந்த பேரவையில் அடிகளார் தாம் இயற்றிய **'சோமசுந்தரக் காஞ்சி'** என்னும் கையறு நிலைச் செய்யுள் நூலை, மிகவும் உருக்கமாகப் படித்து விளக்கி அரங்கேற்றினார். அதன் அருமை பெருமைகளை **அரசஞ் சண்முகனார்** போன்ற புலவர் அனைவரும் வியந்து பாராட்டினர். எனினும், ஒரு சில புலவர்கள், அழுக்காறு காரணமாக அடிகளார் இயற்றிய **'சோம சுந்தரக் காஞ்சி'** என்னும் அச்செய்யுள் நூலுக்குப் போலி மறுப்பு ஒன்று எழுதினர். அதற்கு விடைகூறித் தமது நூலின் சிறப்பினை விளக்கிக் காட்டும் முறையில், **'சோமசுந்தரக் காஞ்சி ஆக்கம்'**

*என்னும் அரும்பெரும் நூலினை அடிகள் இயற்றி வெளியிட்டனர்.* **‘சோமசுந்தர நாயகர் வரலாறு’** *என்னும் ஒரு நூலையும், அடிகளார் எழுதியுள்ளார்.*

*திருவாளர்கள் நாவலர்* **ச. சோமசுந்தர பாரதியார், தணிகைமணி இராவ்பகதூர் வ.சு. செங்கல்வராய பிள்ளை, திருப்புகழ் மணி டி.எம். கிருட்டினசாமி ஐயர்,** *மைய அரசின் முன்னாள் அமைச்சர்* **பி. சுப்பராயன், திவான்பகதூர் ஆர்.வி. கிருட்டின ஐயர், இரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார், பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளை,** *இந்திய விடுதலை இயக்கச் சான்றோர்* **சி. என். முத்துரங்க முதலியார், பேராசிரியர் மணி திருநாவுக்கரசு முதலியார், ஆசிரியர் இளவழகனார் நாரண துரைக்கண்ணனார்** *முதலிய எத்துணையோ பலர், அடிகளிடம் தமிழ் பயின்று சிறந்த பெருமக்களாவர்.*

*தமிழை வளர்க்கும் தொண்டில் தலை நின்ற அடிகளார், தமிழகத்திற்கே தனிச் சிறப்பாக உரிய சைவசித்தாந்தக் கொள்கையினைப் பரப்பி வளர்க்கவும், மிக விரும்பி முற்பட்டு முயன்றார். அதன் பயனாக 7-7-1905 அன்று, திருப்பாதிரிப்புலியூர் சிவத்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்களின் திருமடத்தில் அவர்களின் திருமுன்னிலையில்,* **‘சைவ சித்தாந்த மகாசமாசம்’** *என்னும் சமயப் பெரு நிறுவனம் ஒன்றைத் தோற்றுவித்து, அதன் வளர்ச்சி குறித்துச் சிறந்த முறையில் பெருந்தொண்டு ஆற்றினார். இன்று அது கடல் கடந்த வெளிநாடுகளிலும் பரவிப் புகழ்பெற்றுப் பல அரும்பெரும் பணிகளை ஆற்றி விளங்கி வருகின்றது.*

*அடிகளார் தம்முடைய 27ஆம் அகவையில்* **‘ஞானசாகரம்’ அல்லது ‘அறிவுக்கடல்’** *என்னும் பெயரில், ஒரு சிறந்த தமிழ் இதழைத் தொடங்கி நடத்த முற்பட்டார். அதன்கண் வெளிவந்த அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள், தமிழறிஞர்களுக்குப் பெரு விருந்தாக இருந்தன. உறங்கிக் கிடந்த தமிழ் மக்களைப் பல்லாற்றானும் தட்டி எழுப்பின. அடிகளாரின் பல நூல்கள் முதன் முதலில், அவ்விதழிற் கட்டுரைகளாக வெளிவந்தனவே யாகும். அதன்கண் வெளிவந்த* **‘கோகிலாம்பாள் கடிதங்கள்’ ‘குமுதவல்லி அல்லது நாகநாட்டரசி’** *என்னும் நூல்களைத் தம்முடைய இளமைக் காலத்திற் படிக்க நேர்ந்ததன் பயனாக, பிற்காலத்தில் புதினங்களும், சிறுகதைகளும் எழுதும் அறிவும்*

ஆர்வமும் ஏற்பட்டன என்று 'கல்கி' அவர்கள் குறிப்பிட்டுள்ளார் எனின், 'அறிவுக்கடல்' இதழின் அருமை பெருமைகளை யாம் என்னென்போம்! இவ்வாறே 'கீழைநாட்டுச் சித்தநெறிக்குயில்' (The Oriental Mystic Myna) என்னும் ஓர் ஆங்கில இதழையும் அடிகளார் சிலகாலம் தொடங்கி நடத்தி வந்தார்கள். பின்னர் சில ஆண்டுகள் 'அறிவுக்கடல்' (The Ocean of Wisdom) எனும் ஓர் ஆங்கில இதழை, அடிகளார் நடத்தினார்கள். இவற்றில் வெளிவந்த ஆங்கிலக் கட்டுரைகள் மேனாட்டு அறிஞர்கள் பலரின் பாராட்டுதலையும் பெற்றன. 'சைவசித்தாந்தம் ஒரு நடைமுறையறிவுக் கோட்பாட்டுக் கொள்கை' (Saiva Siddhantha as a Philosophy of Practical Knowledge) என்னும் அடிகளாரின் அரும்பெறல் ஆராய்ச்சி ஆங்கில நூலுக்கு, 'ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் கோட்பாட்டுப் பேராசிரியராகப் புகழோங்கி விளங்கியிருந்த **எப்.சி. எஃச் சில்லர்** (F.C.S. Schiller) என்னும் பேரறிஞர் அணிந்துரை அளித்துள்ளார். எனின், அடிகளாரின் அளப்பரும் அறிவாற்றல் நலங்களை ஓரளவேனும் நாம் உணர்ந்துகொள்ளுதல் கூடும்.

அடிகளார் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில், ஏறத்தாழ 13 ஆண்டுகள் பணியாற்றினார். கல்லூரியில், உயர்வகுப்பு மாணவர்களுக்குத் தாய்மொழிப்பாடம் ஆங்கிலம்போல் இன்றியமையாத ஒன்றன்று என, அந்நாளில் இருந்த பல்கலைக்கழக உறுப்பினர்கள் முடிவு செய்தனர். அதன் விளைவாகப் பல தமிழறிஞர்கள் வேலைவாய்ப்பு இழந்தனர். அவர்களள் நமது அடிகளாரும் ஒருவர். அந்நிலையில் தமிழ், வடமொழி, ஆங்கிலம் என்னும் மூன்றிலும் பெரும் புலமை பெற்றிருந்த அடிகளார்க்கு எத்துணையோ பல துறைகளில் இருந்த பெரிய பதவிகளும் வேலை வாய்ப்புக்களும் தேடிவந்தன. எனினும் வெறும் பொருள் வருவாய் ஆகிய ஊதியம் மட்டுமே கருதி, அவைகளை ஏற்க அடிகளார் மறுத்து விட்டனர். இனி "எமது வாழ்க்கையை இறைபணிக்கே ஒப்படைப்பேம்" என உறுதி பூண்ட அடிகளார் தி.ஆ. 1942 (27-7-1911) இல் துறவுநெறி வாழ்க்கையை மேற்கொண்டு, (மறைமலையடிகள்) எனப் பெயர் தாங்கினார்.

அடிகளாரின் பல்லவபுரம் மாளிகைக்கு தி.பி. 1942 கார்த்திகை -16 (1-12-1911) இல் அடிப்படை இடப்பட்டது. மாளிகை

பகுதி பகுதியாகக் கட்டப்பெற்றது. தி.பி.1950 வைகாசி-6 ((19-5-1919) அன்று அது முழுவதும் நிறைவெய்தி 'மனைபுகும் மங்கல விழா'வும் சிறப்புற நிகழ்ந்தது. இதற்கு முன்பே அங்கே தி.பி.1947 கார்த்திகை 27 (12-12-1916) இல் அடிகளாரின் 'திருமுருகன் அச்சுக் கூடம்' அமைக்கப்பெற்று இயங்கி வந்தது.

கல்லூரிப் பணியை விடுத்த பின்னர், அடிகளார் நூலாராய்வதிலும், நூல் எழுதுவதிலும், அங்கங்கே சென்று சொற்பொழிவுகள் ஆற்றுதலிலுமே தமது வாழ்க்கையை ஈடுபடுத்திக் கொள்ளலாயினார். தமிழகத்தில் மட்டுமன்றி, இந்தியா, இலங்கை முழுவதிலும் அடிகளார் சுற்றுப்பயணம் செய்துள்ளார்.

1937 ஆம் ஆண்டில் நிகழ்ந்த இந்தி எதிர்ப்பு மாநாட்டிற்கு அடிகளார் தலைமைத்தாங்கி ஆற்றிய சொற்பொழிவே 'இந்தி பொதுமொழியா?' என்னும் அரிய சிறு நூலாக வெளி வந்துள்ளது.

அடிகளார் தனித்தமிழ் இயக்கம்கண்ட தனிப்பெருந் தலைவர். தனித்தமிழிலேயே எழுதவும் பேசவும் இயலுமா? என்று பலர் எள்ளி நகையாடிய நிலையை மாற்றி அதனைத் தமது எழுத்தாலும் பேச்சாலும் வாழ்வாலும் செய்து காட்டி நிறுவியவர் அடிகளார்! தமிழில் இதற்கு முன்பு தெளிவாக ஏற்படாதிருந்த ஒரு பெரும் புதிய திருப்பத்தினை ஏற்படுத்தியவர் அடிகளார்! இஃதொன்றனாலேயே தமிழ் உள்ளளவும் அடிகளாரின் புகழும் செயலும் நிலைபெறும் என்பதுஉறுதி. இத்துறையில் அடிகளார் காட்டிய தமிழ் வீரம் சாலப்பெரிது; தன்னிகர் அற்றது!

அடிகளார் எழுதிய **'மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்'** ஓர் அரிய ஆராய்ச்சிக் கருவூலம். 1300 பக்கங்கள் கொண்ட அந்நூல் ஒன்றனைப் படித்தாலே, தமிழ் அறிவும் புலமையும் பெரிதும் வளர்ந்து வளம்பெறும் என்பது திண்ணம்.

இங்ஙனமே, அடிகளாரின் அளப்பரிய வடமொழிப் புலமைக்கு மிகப் பெரிய எடுத்துக்காட்டு என விளங்குவது **'சாகுந்தல நாடகம்'** என்னும் தமிழாக்கம்.

அடிகளார் கொள்கைக்காக வாழ்ந்தார்; எதிர்ப்புக்கு அஞ்சாதவர்; முற்போக்குணர்வு கொண்ட மூதறிஞர்; பரந்த

*மனப்பான்மையுடைய பண்பாளர்; சீர்திருத்தச் செம்மல்; செந்தமிழ்ச் சிவநெறித் தலைவர்; சைவ சித்தாந்தச் சான்றோர்; தொல்காப்பியரும் திருவள்ளுவரும் நக்கீரரும் இளங்கோவடிகளும் சிவஞான முனிவரும் போன்ற சான்றோர்கள் பலரும் ஒருங்கு திரண்டு வந்த ஓருருவ மாயினாற் போன்ற பெருந் தகையார். தமிழ் இனிமையான மொழி என்பதை அவர் தம் தமிழ் நடையின் வாயிலாக எவருமே உணரலாம்.*

*இன்றையத் தமிழ்நாடு அரசு, மறைமலை அடிகளாரின் கொள்கைகளையும் கருத்துக்களையும், மிகப் பெரும் அளவில், நன்முறையிற் செயற்படுத்தி வருகின்றது. இன்று எல்லாத் துறைகளிலும் தமிழ் வளர்ச்சியுற்றுத் தலை நிமிர்ந்து நிற்கின்றது. அறமன்றங்களிலும் மிக விரைவில் தமிழ்மணம் கமழ இருக்கின்றது.*

*இவற்றிற்காக எல்லாம் பல ஆண்டுகட்கு முன்னரே, அடிப்படை வித்திட்டுப் பெரிதும் உழைத்தவர் ஆசிரியர்* ***மறைமலையடிகள்!*** *அப் பெருந்தகையார் தி.பி.1981 - ஆவணி -3 (15-9-1950) ஆம் நாளில், இவ்வுலகை விட்டு மறைந்தார். எனினும் அவருடைய தொண்டும், நூல்களும், புகழும் என்றுமே தமிழர்களின் உள்ளத்தில் மறையாத பெருநிலையைப் பெற்றுவிட்டன.*

- புலவர் ந. இரா. முருகவேள்
மறைமலை அடிகள் நினைவு மலர்
பக். 9 - 16

# தமிழ் எண்

| | | |
|---|---|---|
| க | ஒன்று | 1 |
| உ | இரண்டு | 2 |
| ஙு | மூன்று | 3 |
| ச | நான்கு | 4 |
| ரு | ஐந்து | 5 |
| சுு | ஆறு | 6 |
| எ | ஏழு | 7 |
| அ | எட்டு | 8 |
| கூ | ஒன்பது | 9 |
| க0 | பத்து | 10 |
| க00 | நூறு | 100 |
| உ00 | இருநூறு | 200 |
| ஙு00 | முந்நூறு | 300 |
| ச00 | நாநூறு | 400 |
| ரு00 | ஐந்நூறு | 500 |
| சுு00 | அறுநூறு | 600 |
| எ00 | எழுநூறு | 700 |
| அ00 | எண்ணூறு | 800 |
| கூ00 | தொள்ளாயிரம் | 900 |
| க000 | ஆயிரம் | 1000 |

**பொழுதுகள் :** பெரும்பொழுது, சிறுபொழுது

**பெரும்பொழுது :** 6 பருவங்கள்

| பருவங்கள் | | மாதங்கள் |
|---|---|---|
| 1. கார் காலம் | : | மடங்கல் (ஆவணி), கன்னி (புரட்டாசி). |
| 2. கூதிர்காலம் | : | துலை (ஐப்பசி), நளி (கார்த்திகை). |
| 3. முன்பனிக் காலம் | : | சிலை (மார்கழி), சுறவம் (தை). |
| 4. பின்பனிக் காலம் | : | கும்பம் (மாசி), மீனம் (பங்குனி). |
| 5. இளவேனில் காலம் | : | மேழம் (சித்திரை), விடை (வைகாசி). |
| 6. முதிர்வேனில் காலம் | : | ஆடவை (ஆனி), கடகம் (ஆடி). |

**சிறுபொழுது**

| | | |
|---|---|---|
| வைகறை (நள்ளிரவு) | : | 2-6 |
| காலை | : | 6 -10 |
| நண்பகல் | : | 10 - 2 |
| எற்பாடு (சாயுங்காலம்) | : | 2-6 |
| மாலை | : | 6-10 |
| இரவு (யாமம்) | : | 10-2 |

## தமிழில் மாதங்கள்

| | | |
|---|---|---|
| தை | - | சுறவம் |
| மாசி | - | கும்பம் |
| பங்குனி | - | மீனம் |
| சித்திரை | - | மேழம் |
| வைகாசி | - | விடை |
| ஆனி | - | ஆடவை |
| ஆடி | - | கடகம் |
| ஆவணி | - | மடங்கல் |
| புரட்டாசி | - | கன்னி |
| ஐப்பசி | - | துலை (துலாம்) |
| கார்த்திகை | - | நளி |
| மார்கழி | - | சிலை |

## தமிழ்க் கிழமைகள்

| | | |
|---|---|---|
| திங்கள் | - | திங்கள்கிழமை |
| செவ்வாய் | - | செவ்வாய்க்கிழமை |
| புதன் | - | அறிவன் கிழமை |
| வியாழன் | - | வியாழக்கிழமை |
| வெள்ளி | - | வெள்ளிக்கிழமை |
| சனி | - | காரிக்கிழமை |
| ஞாயிறு | - | ஞாயிற்றுக்கிழமை |

## பிழைதிருத்தக் குறியீடுகள்

| | |
|---|---|
| தொடர்ச்சியாக வரச் செய் | ⤳ |
| திருப்பிப்போடு | ൭ |
| இடநிரப்பியை அழுத்து | ⊥ |
| மொக்கை எழுத்தை மாற்று | X |
| நீக்கி விடு | d/ |
| விட்டுப்போனதைச் சேர் | ∧ |
| இடம் விடு | # |
| இடவெளியை ஒன்றுபோல் செய் | |
| சிறிய இட நிரப்பியைப் போடு | ‿ |
| சொற்களை இணை | ⁀‿ |
| இறங்கியிருப்பதைத் தூக்கு | ⌐ |
| தூக்கியிருப்பதை இறக்கு | ⌙ |
| வரியை நேர்செய் | /// |
| புள்ளியைப் போடு | ȯ |
| காற்புள்ளியைப் போடு | , |
| அரைப்புள்ளியைப் போடு | : |
| முக்காற் புள்ளியைப் போடு | ; / |
| ஒற்றை மேற்கோள்குறி போடு | ’ V |

| | |
|---|---|
| இரட்டை மேற்கோள் குறி போடு | |
| இணைப்புக் குறியைச் சேர் | ⊖ |
| இட அல்லது வலப்புறம் நகர்த்து | [ or ] |
| ஆசிரியரின் விளக்கம் தேவை | ? |
| ஓர் 'எம்' இடநிரப்பி போடு | □ |
| ஓர் 'எம்' கோட்டைப் போடு | 1 |
| இரண்டு 'எம்' கோட்டைப் போடு | 2 |
| புதிய பத்தி பிரி | ¶ |
| பத்தி வேண்டியதில்லை | no ¶ |
| தவறான எழுத்து | wf |
| அப்படியே இருக்கட்டும் | stet |
| மாற்றி அமை | trs |
| பெரிய தலைப்பெழுத்தைப் போடு | caps |
| சிறிய தலைப்பெழுத்தைப் போடு | sc |
| கீழ்வகுப்பு எழுத்தைப்போடு | lc |
| சாய்வெழுத்தைப் போடு | itals |
| ரோமன் எழுத்தைப் போடு | rom |
| புரட்டிப் போடு | t.o |

# மறைமலையடிகள் எழுதிய நூல்கள் (காலமுறைப்படி)

1. முதற் குறள் வாத நிராகரணம் 1898
2. சித்தாந்த ஞானபோதம்- சதமணிக் கோவை 1898
3. துகளறு போதம் 1898
4. முனிமொழிப் பிரகாசிகை 1899
5. வேதாந்த மத விசாரம் 1899
6. வேத சிவாகமப் பிரமாண்யம் 1900
7. திருவொற்றியூர் முருகர் மும்மணிக்கோவை 1900
8. சோமசுந்தரக் காஞ்சியும், காஞ்சியாக்கமும் 1901
9. ஞானசாகரம் 1902
10. முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை 1903
11. பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை 1906
12. சைவசித்தாந்த ஞானபோதம் 1906
13. பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும் 1906
14. முன்பனிக்கால உபந்நியாசம் 1906
15. சாகுந்தல நாடகம் 1907
16. சிந்தனைக் கட்டுரைகள் 1908
17. மரணத்தின் பின் மனிதர்நிலை 1911
18. குமுதவல்லி நாகநாட்டரசி 1911
19. சாதிவேற்றுமையும் போலிச்சைவரும் 1913
20. கோகிலாம்பாள் கடிதங்கள் 1921
21. பொருந்தும் உணவும் பொருந்தா உணவும் 1921

| | | |
|---|---|---|
| 22. | அறிவுரைக் கொத்து | 1921 |
| 23. | யோக நித்திரை அல்லது அறிதுயில் | 1922 |
| 24. | வேளாளர் நாகரிகம் | 1923 |
| 25. | மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் | 1930 |
| 26. | மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை | 1933 |
| 27. | சாகுந்தல நாடக ஆராய்ச்சி | 1934 |
| 28. | சிறுவர்க்கான செந்தமிழ் | 1934 |
| 29. | தொலைவிலுணர்தல் | 1935 |
| 30. | மாணிக்கவாசகர் மாட்சி | 1935 |
| 31. | முற்காலப் பிற்காலத் தமிழ்ப்புலவர் | 1936 |
| 32. | தமிழ்நாட்டவரும் மேல்நாட்டவரும் | 1936 |
| 33. | இந்தி பொது மொழியா? | 1937 |
| 34. | மனிதவசியம் (அ) மனக்கவர்ச்சி | 1937 |
| 35. | பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம் | 1938 |
| 36. | திருவாசக விரிவுரை | 1940 |
| 37. | தமிழர் மதம் | 1941 |
| 38. | கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா | 1948 |
| 39. | திருக்குறள் ஆராய்ச்சி | 1951 |
| 40. | மாணிக்கவாசகர் வரலாறு | 1952 |
| 41. | அம்பிகாபதி அமராபதி | 1954 |
| 42. | இளைஞர்க்கான இன்றமிழ் | 1957 |
| 43. | மறைமலையடிகளார் கடிதங்கள் | 1957 |
| 44. | சோமசுந்தர நாயகர் வரலாறு | 1957 |
| 45. | சிவஞான போத ஆராய்ச்சி | 1958 |
| 46. | அறிவுரைக்கோவை | 1971 |
| 47. | உரைமணிக் கோவை | 1972 |
| 48. | கருத்தோவியம் | 1976 |
| 49. | மறைமலையடிகள் பாமணிக்கோவை | 1977 |

**ஆங்கில நூல்கள்:**

| | | |
|---|---|---|
| 50. | Oriental Mystic Myna bi Monthly | 1908 |
| 51. | Ocean of Wisdom' bi Monthly | 1935 |
| 52. | The Concemption of God Rudhra | 1935 |
| 53. | The Tamilian and Aryan Forms of Marriage | 1936 |
| 54. | Ancient and Modern Tamil poets | 1937 |
| 55. | Can Hindi be the Lingu franca of India? | 1937 |
| 56. | Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge | 1940 |

மேலே கண்ட வரிசை எண் 1இல் முதற் குறள் வாத நிராகரணம், 2இல் சித்தாந்த ஞானபோதம் சதமணிக் கோவைஉரை, 3இல் துகளறு போதம், 6இல் வேதசிவாகமப் பிரமாண்யம் இந் நான்கு நூல்களும் பல இடங்களில் தேடியும் கிடைக்கவில்லை. ஆதலான், இத் தலைப்புள்ள நூல்கள் மறைமலையம் தொகுப்பில் இடம்பெறவில்லை.